# புனித ரமளான் மஜ்லிஸ்

முஹம்மத் பின் ஸாலிஹ் – அல் உஸைமீன்

தமிழில் :

மௌலவி கே.ஜே. மஸ்தான் அலி பாகவி, உமரி
(அபூ காலித்)



# مجالس شهر رمضان

لفضيلة الشيخ محمد بن صالح العثيمين رحمه الله

المترجم :
علي أبو خالد العمري

المراجع
سيد محمد بن صالح





المجلس الاول -في فضل شهر رمضان

1-வது மஜ்லிஸ்

# ரமளான் மாதத்தின் சிறப்பு

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் படைத்தவன். நீரையும் நிலத்தையும் படைத்தான். ஒவ்வொன்றையும் படைத்து அழகாய் வடிவமைத்தான். இரவின் இருளில் ஊர்ந்து செல்லும் சிற்றெரும்புகூட அவனது பார்வையைவிட்டும் தப்பாது.வானத்திலும் சரி பூமிலும் சரி அணுஅளவு பொருள்கூட அவனது அறிவு ஞானத்தைவிட்டும் மறைந்துபோகாது. மண்ணிலும் விண்ணிலும் உள்ள அனைத்திற்கும் மண்ணுக்கடியில் உள்ளவற்றிற்கும்அவனே உரிமையாளன்.

உங்கள் சொற்களை நீங்கள் உரக்கக்கூறினால் (தான் அல்லாஹ் கேட்பான் என்பதில்லை) திண்ணமாக அவன் ரகசியத்தையும் பரமரகசியத்தையும் அறிகிறான். வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத்தவிர வேறில்லை அழகிய திருநாமங்கள் அனைத்தும் அவனுக்கே சொந்தம்!

அவனே ஆதம் நபியைப் படைத்தான். அவர்களைச் சோதனைக்குள்ளாக்கினான். பிறகு அவர்களை நபியாகத்தேர்ந்தெடுத்துக் கொண்டான். அவர்களது பாவமன்னிப்புக் கோரிக்கையை ஏற்று அவர்கள்மீது கருணை பொழிந்து நேர்வழி காட்டினான். அவனே நூஹை நபியாக அனுப்பினான்.அவர்கள் கப்பல் செய்தார்கள். அல்லாஹ்வின் கட்டளை கொண்டுஅது சென்றது.அவனே இப்றாஹீம் நபியை நெருப்பில் இருந்து காப்பாற்றினான்.அதன் வெப்பம் அவர்களுக்குக் குளுமையாகவும் சாந்தமாகவும் மாறியது!சகோதரர்களே! நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகளிலிருந்து பாடம்பெறுங்கள்.

அவனே மூஸா நபிக்கு ஒன்பது சான்றுகளை வழங்கினான்.ஆனாலும் ஃபிர்அவ்ன் படிப்பினை பெறவில்லை. பாவச்செயல்களில் இருந்து விலகவில்லை!மனிதர்களையெல்லாம் திகைக்செய்

யும் சான்றுகளைக்கொடுத்து அவனே ஈஸா நபிக்கு உதவினான். அவனே முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மீது – தெளிவான அறிவுரைகளும் நேர்வழியும் உடையவேதத்தை இறக்கியருளினான்.

அல்லாஹ்வை புகழ்கிறேன். தொடர்ச்சியாகப் பொழிந்து கொண்டிருக்கும் அவனுடைய அருட்கொடைகளின் பேரில் புகழ்கிறேன்! மேலும் தலைநகர் மக்காவில் இறைத்தூதராக அனுப்பட்ட முஹம்மத் பியவர்களின் மீது ஸலாத்தும் ஸலாமும் கூறுகிறேன்.

நபியவர்களின் மீது அல்லாஹ் ஸலாத் எனும் கருணை பொழிவானாக! அவர்களின் (ஹிரா) குகைத் தோழரான அபூ பக்ர் மீதும் – அல்லாஹ்வின் ஒளியைக்கொண்டு பார்ப்பவராகவும் உள்ளுதிப்பால் சீரான கருத்துகள் வழங்கியவராகவும் திகழ்ந்த உமர் மீதும் – நபியவர்களின் இருபுதல்விகளை(ஒருவர் இறந்தபின் மற்றொருவராய்) மணம்புரிந்த உஸ்மான் மீதும் – அறிவுக் கடலாகவும் குகையினுள் சிங்கமாகவும் விளங்கிய அவர்களின் பெரியதந்தை மகன் அலீ மீதும் அல்லாஹ் ஸலாத் எனும் கருணை பொழிவானாக!

நபியவர்களின் குடும்பத்தினர்– பார்புகழ் பெற்ற அவர்களின் தோழர்கள் அனைவர் மீதும் அல்லாஹ் ஸலாதும் ஸலாமும் பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

என் அன்புச் சகோதரர்களே! சிறப்புமிக்கதொரு மாதம் நம்மிடம் வந்துள்ளது. இது ஓர் உன்னதமான பருவ காலமாகும்! இம்மாதத்தில் அல்லாஹ் பெருமளவு கூலிகளை வழங்குகிறான். ஏராளமான அருட்கொடைகளை அளிக்கிறான். ஆர்வமுள்ள ஒவ்வொருவருக்கும் இம்மாதத்தில் நன்மையின் வாயில்களைத் திறந்து விடுகிறான்.

இது நன்மைகள் மற்றும் அருட் பேறுகளின் மாதம்!வெகுமதிகள் மற்றும் அன்பளிப்புகளின் மாதம்!

ரமளான் மாதம் எத்தகையதெனில் அதில்தான் மனிதர் களுக்கு (முழுமையான) வழிகாட்டியாகவும் நேர்வழியின் தெளிவான அறிவுரைகளைக் கொண்டதாகவும் சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்துக் காட்டக்கூடியதாகவும் உள்ள குர்ஆன் இறக்கியருளப்பட்டது.

இறையருளும் பாவமன்னிப்பும் நரகத்திலிருந்து விடுதலையும் சூழ்ந்திருக்கும் மாதம்! ஆம்! இம்மாதத்தின் ஆரம்பம் அருள்மிக்கதாகவும் நடுப்பகுதி பாவமன்னிப்பாகவும் இறுதிப் பகுதி நரகில் இருந்து விடுதலையாகவும் உள்ளது. இம்மாதத்தின் சிறப்பு குறித்து பிரபலமான நபிமொழிகளும் நம்பகமான அறிவிப்புகளும் வந்துள்ளன. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

في الصحيحين عن أبي هريرة رضى ا لله عنه ان النبي صلي ا لله عليه وسلم قال: اذا جاء رمضان فتحت ابواب الجنة و غلقت ابواب النار وصفدت الشياطين

“ ரமளான் மாதம் வந்துவிட்டால் சொர்க்கத்தின் வாயில்கள் திறக்கப்படுகின்றன. நரகத்தின் வாயில்கள் அடைக்கப்படுகின்றன. மேலும் சைத்தான்களுக்கு விலங்கிடப்படுகின்றது” நூல்: புகாரி, முஸ்லிம்

இம்மாதத்தில் சுவனத்தின் வாயில்கள் திறக்கப்படுவது– நல்லமல்கள் பெருகுவதற்காகவும் அமல் செய்கிறவர்களுக்கு ஆர்வமூட்டுவதற்காகவும்தான்! இதேபோன்று நரகத்தின் வாயில்கள் அடைக்கப்படுவது – இறைநம்பிக்கையாளர்களுடைய பாவங்கள் குறைவதற்காகத்தான்! ஷைத்தான்கள் விலங்கிடப்பட்டு சங்கிலிகளால் பிணைக்கப் படுகிறார்கள். ஆதலால் வேறு மாதங்களில் தீமைகள் புரியுமாறு மனிதர்களைத் தூண்டுவதுபோல் இம்மாதத்தில் அவர்களால் தூண்டமுடியாது!

மேலும் அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

عن ابي هريره ﷺ ان النبيﷺ قال : اعطيت امتي خمس خصال في رمضان لم تعطهن ا مة من الأمم قبلها خلوف فم الصائم اطيب عند ا الله من ريح المسك وتستغفر لهم الملآئكة حتي يفطروا ويزين ا الله كل يوم جنته و يقول يوشك عبادي الصالحون ان يلقوا عنهم المؤونة والاذي ويصيروا اليك و تصفد فيه مردة الشياطين فلايخلصون الي ماكانوا يخلصون في غيره ويغفر لهم في اخر ليلة قيل يا رسول ا الله ا هي ليلة القدر ؟ قال : لا, ولكن العامل انما يوفي اجره اذا قضي عمله

,, எனது சமுதாயத்திற்கு ரமலான் மாதத்தில் ஐந்து சிறப்பு அம்சங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. முன்னர் வாழ்ந்த எந்தச் சமுதா யத்திற்கும் இவை கொடுக்கப்படவில்லை. நோன்பு நோற்பவரின் வாயிலிருந்து எழும் வாடை அல்லாஹ்விடத்தில் கஸ்தூரியை விட அதிக மணம் கமழுவதாக உள்ளது.

மேலும் மலக்குகள் நோன்பாளிகளுக்காக –அவர்கள் நோன்பு திறக்கும் வரையில் பாவமன்னிப்புக்கோருகிறார்கள்.மேலும் தினமும் அல்லாஹ் தனது சுவனத்தைஅலங்கரிக்கிறான்.மேலும் கூறுகிறான்:

என் சுவனமே!என் நல்லடியார்கள் தங்களுடைய சிரமத்தை யும் துன்பத்தையும் களைந்துவிட்டு உன்னிடம் வந்துசேரஇதோ! நெருங்கிவிட்டார்கள்,, என்று! மேலும் மூர்க்கத்தனம் கொண்ட ஷைத்தான்கள் இந்த மாதத்தில் விலங்கிடப்படுகிறார்கள். ரமலான் அல்லாத மாதத்தில் தீமைகள் புரியத்தூண்டுவதுபோல் ரமளானில் அவர்களால் முடியாது. மேலும் இம்மாதத்தின் கடைசி இரவில் அல்லாஹ் அவர்களுக்குப்பாவமன்னிப்பு வழங்குகிறான்.–அப்போது கேட்கப் பட்டது: அல்லாஹ்வின் தூதரே! அது லைலதுல் கத்ர் இரவா? என்று! நபி (ஸல்) அவர்கள், – இல்லை,, பணி செய்தவருக்குக் கூலி வழங்கப்படுவது அவன் தன் பணியைச்

செய்து முடிக்கும் போதுதானே![1] என்றார்கள்,, நூல்: அஹ்மத், பஸ்ஸார்

என் அன்புச் சகோதரர்களே! இந்த ஐந்து சிறப்பம்சங்களை யும் அல்லாஹ் உங்களுக்காகவே தயார் செய்து வைத்துள்ளான்,, ஏனைய சமுதாயங்களுக்கு மத்தியில் இவற்றை உங்களுக்கு மட் டும் வழங்கியுள்ளான்! இவற்றின் மூலம் தன் அருட்கொடைகளை உங்கள் மீது நிறைவாக்குவதே அவனது நோக்கமாகும்.

ஆக! அல்லாஹ் உங்கள் மீது எத்தனை எத்தனை அருட் கொடைகளைப் பொழிந்துள்ளான். எவ்வளவு சிறப்புகளை வழங் கியுள்ளான்! சிந்தித்தீர்களா?

மனித இனத் (தினைச்சீர்படுத்துவதற்) காகத் தோற்றுவிக் கப்பட்டிருக்கும் மிகச்சிறந்த சமூகத்தவராய் நீங்கள் இருக்கிறீர்கள் நீங்கள் நன்மை செய்யும்படி ஏவுகிறீர்கள். தீமையைவிட்டு தடுக் கிறீர்கள். மேலும் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கறீர்கள்,, (ஆலு இம்ரான்)

## முதல் சிறப்பு :-

நோன்பாளியின் வாயிலிருந்து எழும் வாடை அல்லாஹ்விடம் கஸ்தூரி வாசனையைவிட மணம் நிறைந்தது என்பதாகும்! இந்த நபிமொழியில் கலூஃப் (خلوف) எனும் சொல்லின் பொருள் சிறுகுடல் இரைப்பை- உணவின்றி காலியாக இருக்கும் போது வாயின் இயல்பான வாடை வித்தியாசப்படுதல் என்பதாகும். இது மனிதர்களிடத்தில் வெறுக்கப்படுகிற ஒன்றுதான். ஆயினும் அல் லாஹ்விடத்தில் இது கஸ்தூரி[2] வாசனையைவிட மணம் நிறைந்

---

[1] இதனை பஸ்ஸார், பைஹகியும் அறிவித்துள்ளார். அபுஸ் ஷைக் அவர்கள் இதனை நன்மை எனும் பகுதியில் அறிவித்துள்ளார். இதன் அறிவிப்புத் தொடர் மிகவும் பலவீன மாகும். ஆயினும் இதில் சிலவற்றிற்கு ஆதாரப்பூர்வமான அறிவிப்புச் சான்றுகள் உள்ளன.

[2] இதனை இமாம் புகாரியும் முஸ்லிமும் - இந்தச் சமுதாயத்திற்குச் சொந்தமாக்குதல் எனும் வாசகமின்றி அறிவித்துள்ளார்கள்.

ததாக இருக்கிறது. ஏனெனில் இது, அல்லாஹ்வை வழிபடுவதாலும் அவனுக்குக் கீழ்ப்படிவதாலும் ஏற்பபட்ட மாறுதலாகும். அல்லாஹ்வை வழிபடுவதால் ஏற்படும் (மாறுதல்) ஒவ்வொன்றும் அல்லாஹ்வுக்கு விருப்பமானதே! அவற்றை மேற்கொள்ளும் மனிதனுக்கு மிக உன்னதமான – சிறப்புமிக்க கூலியை அல்லாஹ் வழங்குகிறான். அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்படும் உயிர்த்தியாகியை நீங்கள்பார்க்கவில்லையா? அல்லாஹ்வின் மார்க்கம் மேலோங்வேண்டும் என்பதே அவரது எண்ணம்! அந்தத் தியாகி மறுமை நாளில் வருவார்., அவரது காயத்திலிருந்து இரத்தம் வடிந்து கொண்டிருக்கும். அதன் நிறம் இரத்தத்தின் நிறமாக இருந்தாலும் மணம் கஸ்தூரியைவிட வாசனையாக இருக்கும்!

ஹஜ் பற்றி வருகிறது : அர.:.பா மைதானத்தில் தங்கியிருப்பவர்கள் பற்றி அல்லாஹ் மலக்குகளிடம் இவ்வாறு பெருமைபடக் கூறுவான்: – பாருங்கள்! என்னுடைய இந்த அடியார்களை! இவர்கள் தலைவிரி கோலமாகவும் புழுதிபடிந்தவர்களாகவும் என்னிடம் வந்துள்ளார்கள் என்று!„ நூல்: அஹ்மது, இப்னுஹிப்பான்[3]

தலைவிரிகோலம் – இந்த இடத்தில் அல்லாஹ்வுக்குப் பிரியமாக இருப்பதற்குக் காரணம் அது அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்ததனால் ஏற்பட்டது என்பதேயாகும். இஹ்ராமினால் தடைசெய்யப் பட்டவற்றைவிட்டு விலகியதாலும் இயல்பான சுகவாழ்வை விட்டதாலும் ஏற்பட்டதாகும் .

## இரண்டாவது சிறப்பு :–

மலக்குகள் நோன்பாளிகளுக்காக – நோன்பு திறக்கும் வரை பாவமன்னிப்பு கோரிக் கொண்டிருக்கிறார்கள் என்பதாகும்! மலக்குகள் அல்லாஹ்விடத்தில் மரியாதைக்குரிய அடியார்கள் ஆவர். அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறுசெய்யமாட்டார்கள். தங்களுக்கு இடப்படும் பணிகளைச் செய்துகொண்டே இருப்பார்கள்! இப்படிப்பட்ட மலக்குகள் நோன்பாளிகளுக்காகச் செய்யும் பிரார்த்த

[3] வேறு அறிவிப்புச் சான்றுகளின் மூலம் ஸஹீஹ் தரத்திலானது.

னையை அல்லாஹ் ஏற்றுக்கொள்கிறான். அவர்களின் பிரார்த்தனை (இறைவனால்) ஏற்கத்தகுதி பெற்றிருப்பதற்குக் காரணம் – அப் படிப் பிரார்த்தனை செய்ய அல்லாஹ் அவர்களுக்கு அனுமதித்தி திருப்பதே ஆகும். நோன்பு நோற்கிற இந்தச் சமுதாய மக்களுக் காகப் பாவமன்னிப்பு கோரிட அல்லாஹ் மலக்குகளுக்கு அனுமதி கொடுத்ததன் நோக்கம், நோன்பாளிகளின் அந்தஸ்தைப் பிரகடனப் படுத்துவதும் அவர்களின் புகழை உயர்த்துவதும் அவர்கள் நோற்ற நோன்பின் சிறப்பை விளக்குவதுமேயாகும்.

அல்– இஸ்தி∴பார் என்பதன் பொருள் பாவமன்னிப்புக் கோரு தல் என்பதாகும். பாவமன்னிப்புக் கோருதல் என்றால் இவ்வுலகி லும் மறுவுலகிலும் பாவங்களை மறைப்பதும் பொறுப்பதுமாகும்.. இவ்வாறு பாவமன்னிப்புக் கோருவது கோரிக்கைகளிலேயே மிக வும் உயர்வானது! மனிதர்கள் அனைவரும் தவறிழைப்பவர்க ளாய் – வரம்புமீறி நடப்பவர்களாய் – தங்களுக்குத் தாங்களே அநீதி புரிபவர்களாய் பிறகு இறைவனது மன்னிப்பின் பால் புகலி டம் தேடியே ஆக வேண்டியவர்களாய் இருக்கிறார்கள்!

## மூன்றாவது சிறப்பு :–

அல்லாஹ் ஒவ்வோரு நாளும் தனது சுவனத்தை அலங்க ரித்துக் கொண்டிருக்கிறான், மேலும் கூறுகிறான் : –(சுவனமே,) என் நல்லடியார்கள் கஷ்டத்தையும் சிரமத்தையும் பொருட்படுத்தா மல் உன் பக்கம் வருவதற்கு மிகவும் நெருங்கிவிட்டார்கள். ஒவ்வொரு நாளும் அல்லாஹ் தனது சுவனத்தை அலங்கரிப்பதன் நோக்கம், அவனுடைய நல்லடியார்களை உற்சாகப்படுத்துவதும் சுவனம் புகுவதில் அவர்களுக்கு ஆர்வமூட்டுவதுமாகும்.

கஷ்டத்தையும் நோவையும் தங்களை விட்டும் தூரப்படுத்து வது ..... என்றால் உலகத்தின் கஷ்டத்தையும் அதன் களைப்பை

யும் பொருட்படுத்தாமல் அவற்றைத் தூக்கியெறிந்துவிட்டு நல்ல மல்களில் அவர்கள் முனைப்புடன் ஈடுபடுவதாகும்.

அந்த நல்லமல் களில்தான் அவர்களின் இம்மை -மறுமைக் கான நற்பேறுகள் அடைங்கியுள்ளன என்பதுமாகும். சாந்தியும் கண்ணியமும் உள்ள சுவனத்தில் அவர்கள் பிரவேசிப்பதும் அந்த நல்லமல்களைப் பொறுத்தே அமையும்.

நான்காவது சிறப்பு:- மூர்க்கத்தனமான ஷைத்தான் கள் சங்கிலிகளாலும் விலங்குகளாலும் பிணைக்கப்படுகிறார்கள்.[4] ஆதலால் அவர்களிள் வருப்பப்படி நல்லடியார்களைச சத்தியத்தில் இருந்து வழிகெடுக்கவோ நல்லவை செய்யவிடாமல்அவர்களைத் தாமிதப்படுத்தவோ ஷைத்தான்களால் முடியாது. இது நல்லடியார் களுக்கு அல்லாஹ் செய்யும் உதவியாகும்.அவர்களின் விரோதியை விட்டும் அவர்களைத்தடுத்துவிட்டான். எப்படிப்பட்ட விரோதியை யெனில், தன்னுடைய கட்சிக்காரர்களை நரகில் கொண்டு சேர்ப்ப தற்காக அழைக்கக்கூடிய விரோதியை!-அல்லாஹ் செய்யும் இந்த நல்லுதவியால்தான் நல்லோர்கள் ஏனைய நாட்களைவிட அதிகமாக இம்மாத்தில் நல்லமல்கள் செய்வதிலும் தீமைகளைவிட்டு விலகு வதிலும் அதிக ஆர்வம் காட்டுவதை நீங்கள் காண்கிறீர்கள்.

## ஐந்தாவது சிறப்பு :-

இம்மாத்தின் கடைசி இரவில்[5] முஹம்மத் நபியவர்களின் சமுதா யத்தினருக்கு அல்லாஹ் மன்னிப்பு வழங்குகிறான் என்பதாகும். இது நோன்பையும் தொழுகையையும் அவர்கள் முறையாக நிறை

---

[4] இதனை புகாரி அறிவித்துள்ளார்கள். ஸஹீஹ் முஸ்லிமில்-ஷைத்தான்கள் விலங்கிடப்படு கிறார்கள் என உள்ளது. இப்னு ஹுஸைமாவில் - ஜின்களில் மூர்க்கத்தனம் கொண்ட ஷைத்தான்கள் என உள்ளது. நஸாயிமில் - மூர்க்கத்தனம் கொண்ட ஷைத்தான்கள் என உள்ளது. இவை யாவும் அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் அறிவிப்புதான்! இந்தச் சமுதாயத்திற்குச் சொந்தமாக்குதல் எனும் வாசகமின்றி!

[5] இதேபோன்று பைஹகியும் ஜாபிர்(ரலி) அவர்களிள் ஹதீஸை அறிவித்துள்ளார்கள். முன்திரி சொல்கிறார்கள்: இதன் அறிவிப்புத் தொடர் அசலில் உள்ள அபூ ஹுரைரா(ரலி) அவர்களின் அறிவிப்பைவிடவும் ஏற்றமானது.. நெருக்கமானது!

வேற்றியிருக்கும் பட்சட்த்தில்தான்! அமல்செய்து முடித்தவுடன் அதற்கான கூலியை இந்தச் சமுதாயத்தினருக்கு அல்லாஹ் முழு மையாக வழங்குவதென்பது அல்லாஹ்வின் பெரும் அருட் கொடையாகும். அமல் செய்தவருக்கு—அதனைச் செய்து முடித்த வுடன் முழுமையாகக் கூலி வழங்குவதுதான் சரியாக இருக்கும்.

அல்லாஹ் தன் அடியார்களுக்கு இத்தகைய கூலியை வழங்கிச் சிறப்பித்திருப்பது மூன்று வகைகளிலாகும்.

ஒன்று: பாவமன்னிப்புக்கும் அந்தஸ்துகளின் உயர்வுக்கும் கார ணமாகத் திகழும் நல்லமல்களை இறைமார்க்கத்தின் நடைமுறை களாய் தன் அடியார்களுக்கு அல்லாஹ் வகுத்துத் தந்துள்ளான். இந்த நல்லமல்களைச் செய்வதற்கு இறைமார்க்கத்தில் அனுமதி இல்லையெனில் இவற்றின் மூலமாக அல்லாஹ்வை —நல்லடியார் கள் வழிபட்டிருக்க முடியாது. ஏனெனில் அல்லாஹ், தன்னுடைய தூதர்களுக்கு அனுப்பும் வஹி எனும் இறையருட்செய்தியின் மூலமாக மட்டுமெ வழிபாட்டு நெறிமுறைகளைப் பெறமுடியும்.. இதனால்தான் இறை மார்க்கத்தின் நடைமுறைகளை — இறைவ னது வழிகாட்டலின்றி சுயமாக வகுக்கக்கூடிய மனிதர்களைக் குறித்து அல்லாஹ் மறுத்துரைக்கின்றான். அப்படிமார்க்க நடை முறைகளைச் சுயமாக ஏற்படுத்துவது ஷிர்க் எனும் இணைகற் பித்தலின் ஒருவகையாகும் எனக் கூறுகின்றான் :

ام لهم شركاء شرعوا لهم من الدين ما لم يأ ذن به ا لله

“ அல்லாஹ் அனுமதி அளிக்காதவற்றை— (தீனின்) இறைமார்க் கத்தின் நெறிமுறைகள் என அவர்களுக்கு வகுத்துக் கொடுக்கும் இணைக்கடவுளர்கள் அவர்களுக்கு உண்டா ?” அல்குர்ஆன்: (42: 21 )

இரண்டு: நல்ல அமல்கள் புரிவதற்கான உதவியை அல்லாஹ் நல்லடியார்களுக்குஅளித்துள்ளான். பெரும்பாலான மக்களோ அந்த நல்லமல்களைக் கைவிட்டுவிட்டநிலையில்! (அப்படிச் செய்துள் ளான்.) அல்லாஹ்அவர்களுக்கு நல்லுதவியும் அருளும் புரிந்திருக் காவிடில் இந்த அமல்களை அவர்களால் செயல்படுத்தியிருக்க

முடியாது! எனவே இந்த உதவியை நல்கிய அல்லாஹ்வுக்கே சிறப்பனைத்தும்!

அல்லாஹ் கூறுகிறான் : –

يمنون عليك ان اسلموا قل لا تمنوا علي اسلامكم بل الله يمن عليكم ان هدي كم للايمان ان كنتم صادقين

"அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதை உமக்குச் செய்த பேருதவியாகச் சொல்லிக்காட்டுகிறார்கள். இவர்களிடம் (நபியே) நீர்கூறும் :– நீங்கள் இஸ்லாத்தைத் ஏற்றுக்கொண்டதை எனக்குச் செய்த பேருதவியாகச் சொல்லிக்காட்டாதீர்கள்! உண்மையாதெனில், நம்பிக்கை கொள்வதற்கான வழிகாட்டலை உங்களுக்கு அருளியதன்மூலம் அல்லாஹ்தான் உங்களுக்குப் பேருதவி செய்துள்ளான். (நம்பிக்கை கொண்டதாக வாதிடுவதில்) நீங்கள் வாய்மையாளர்களாக இருந்தால்!" (49 : 17)

மூன்று :– அல்லாஹ் ஏராளமான கூலியைத் தாராளமாக வழங்கியிருப்பதாகும். ஒரு நன்மைக்குப் பத்து நன்மைகள் எனும் வகையில் – எழுநூறு வரையில் ஏன், அதைவிட பன்மடங்கு இரட் டிப்பாகக் கூலி வழங்குகிறான்! அல்லாஹ் நம்மை நல்ல அமல்கள் புரியவைத்து அதற்குக் கூலியும் வழங்குகிறான் எனில் அந்தச்சிறப்பு அல்லாஹ்வையே சாரும். அகில உலகத்தையும் படைத்துப் பரிபாலிக்கும் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!

என் அன்புச் சகோதரர்களே! ரமலான் மாதம் வந்திருப்பது பெரும் அருட்கொடை ஏன்பது யாருக்கு? யார் அம்மாதத்தை அடைந்து அதில் செய்ய வேண்டிய கடமைகளை நிறைவேற்றி னார்களோ அவர்களுக்குத்தான்! இரட்சகனுக்கு மாறுசெய்வதிலிருந்து விலகி அவனுக்கு வழிபடுவதும் அவனை மறந்துவிடாமல் நினைவுகூர்வதும் அவனை விட்டுத் தூரமாகாமல் அவன் பக்கம் திரும்பிச்செல்வதும்தான் ரமலான் மாதத்துக்குச் செய்யும் கடமையாகும்..

ரஜபில் செய்த பாவம் போதாதென்று
ஷஅபானிலும் தன் இறைவனுக்கு
மாறுசெய்தவனே!
அவ்விருமாதங்களுக்குப் பின்
நோன்பு மாதம் வந்துள்ளதே
இதனையுமா நீ
பாவத்திற்குரிய மாதமாய்
மாற்றிவிடப் பார்க்கிறாய்?
இதில் நன்முயற்சியுடன்
ஓதிடு நீ குர்ஆனை,
துதி பாடிடு உன் இறையோனை!
திண்ணமாக இது
துதிபாடிடும் மாதம்
மறையோதிடும் காலம்!

சான்றோர் பலரும் – நோன்பு நோற்ற
ஆன்றோர் பலரும்
உன் உற்றார் உறவினராக
அண்டை வீட்டாராக

அன்பு உடன் பிறப்புகளாக

வாழ்ந்ததை நீ அறிவாயே!

மரணம் அவர்களை விட்டுவைத்ததா? என்ன?

அவர்களுக்குப் பின் நீ உயிர் வாழ்கிறாய் ,

உன்னை மரணம் விட்டுவைத்திருக்கிறது!

என்ன தூரம்?

நேற்று வாழ்ந்த அவர்களுக்கும் ,

இன்று வாழ்ந்து கொண்டிருக்கும் உனக்கும்?

யா அல்லாஹ்! மறதி எனும் உறக்கத்தில் இருந்து எங்களை விழித்தெழச் செய்வாயாக!(மரணம் எனும்)பயயணத்திற்கு முன்பே இறையச்சம் எனும் கட்டமுது பெற எங்களுக்கு அருள்புரிவா யாக! அவசரப்படாமல் – கிடைத்த நேரத்தை அரிதாகக்கருதிச் செயல்பட எங்களுக்குஅருள்பரிவாயாக! கணையாளர்களிலெல்லாம் கருணையாளனே! உனது கருணை கொண்டு– எங்களையும் எங்கள் பெற்றோரையும் எல்லா முஸ்லிம்களையும் மன்னித்தருள் வாயாக!

# المجلس الثا ني - في فضل الصيام

2-வது மஜ்லிஸ்

# நோன்பின் சிறப்பு

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! நுட்பமானவனும் பரிவுமிக் மிக்கவனும் பேருபகாரியும் அவனே! தன்னிறைவுடையவனும் ஆற்றல்மிக்க அரசனும் மென்மையான இயல்புடையவனும் அளவி லாக் கருணையும் நிகரிலாக்கிருபையும் உடையவனும் அவனே! ஆதியும் அவனே- அவனுக்கு முன்பு எதுவுமில்லை! அந்தமும் அவனே - எல்லாம் அழிந்த பின்பு அவன் மட்டுமே எஞ்சியிருப் பான்! அவனே வெளிரங்கமானவன் - எதுவும் அவனை மிகைத் ததல்ல! அவனே அந்தரங்கமானவன் - அவனுக்கு அப்பால் எது வும் அந்தரங்கமானதல்ல!

நிகழ்ந்தவை, நிகழவிருப்பவை அனைத்தையும் தனது அறிவு ஞானத்தால் சூழ்ந்திருப்பவன்., அவனே கண்ணியம் அளிப்பவன்., இழிவுபடுத்துபவன்., செல்வத்தை வழங்குபவன்., வறுமையில் ஆழ்த்துபவன்., தான் நாடுகின்றவற்றைத் தனது நுண்ணறிவுத் திறனுடன் செய்துகொண்டிருப்பவன்., ஒவ்வொருதினமும் ஒரு புதிய மாட்சியில் இருப்பவன்!

பூமியின் பல பகுதிகளில் மலைகளை ஊன்றினான். நிலத்துக்கு உயிரூட்டக்கூடிய நீருடன் மேகங்களை அனுப்பினான்! உலகில் வாழும் அனைத்து மனிதர்கள் மீதும் மரணத்தை விதித்தான். அதன் நோக்கம், தீமைசெய்தவர்களுக்கு - அவர்களின் தீமைக் குப் பகரமாகத் தண்டனையும் நன்மைசெய்தோருக்கு-நல்லமுறை யில் கூலியும் வழங்கவேண்டும் என்பதே!

அழகும் நிறைவும் கொண்ட ஆற்றல்களுக்காக அல்லாஹ்வை நான் புகழ்கிறேன். அவனுடைய முழுமையான அருட்கொடை

களுக்காக அவனுக்கு நான் நன்றிசெலுத்துகிறேன். – நன்றி செலுத்துவதன் மூலமே அருட்கொடையும் உபகாரமும் மேலும் மேலும் அதிகரிக்கும்! வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் வைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவனுக்கு யாதொரு இணைதுணை இல்லை! அவனே ஆற்றல்மிக்க அரசன்! முஹம்மத் நபி, அவனுடைய அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள் மனித – ஜின் இனத்தினர் அனைவருக்கும் தூதராக அனுப்பப்பட்டவர்கள்!

நபியவர்கள் மீதும் அவர்கள் குடும்பத்தினர் மீதும் நபித்தோழர்கள் மீதும் அவர்களுக்குப் பின்னர் தோன்றிய வாய்மைமிக்க சானறோர்கள் மீதும் காலமெல்லாம் அல்லாஹ் ஸலாத்எனும் கருணை பொழிந்துகொண்டிருப்பானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக !

சகோதரர்களே! அறிந்துகொள்ளுங்கள்! நிச்சயமாக நோன்பு மிகச் சிறந்த வணக்கமாகும். மிக உன்னதமான வழிபாடாகும். நோன்பின் சிறப்பு குறித்து பல நபிமொழிகள் வந்துள்ளன. அது பற்றி மக்களிடையே பல செய்திகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன!

நோன்பின் சிறப்புகளில் ஒன்று, அல்லாஹ் அதனை முற்காலச் சமுதாயங்கள் அனைத்தின் மீதும் விதித்திருப்பதும் அனைத்து மக்கள் மீதும் அதனை கடமையாக்கியிருப்பதுமாகும்.

يا ايها الذين آمنوا كتب عليكم الصيام كما كتب علي الذين من قبلكم لعلكم تتقون

குர்ஆன் கூறுகிறது : „இறைநம்பிக்கை கொண்டோரே! உங்களுக்கு முன்னிருந்த (நபிமார்களைப் பின்பற்றிய) வர்களின் மீது கடமையாக்கப்பட்டதுபோல் உங்கள் மீதும் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது„ அதன் முலம் நீங்கள் இறையச்சமுள்ளோராய்த் திகழக்கூடும்„ அல்குர்ஆன் : (2 : 183)

நோன்பு ஒரு மகத்தான வழிபாடில்லை என்றிருந்தால் மேலும் அதனைக் கடைப்பிடித்தொழுகி அல்லாஹ்வுக்கு அடிபணிவதும் அதன்முலம் நன்மைபெறுவதும் மனித குலத்துக்குத் தேவை

யில்லை என்றிருக்குமானால் அனைத்துச் சமுதாயங்கள் மீதும் அல்லாஹ் நோன்பைக் கடமையாக்கியிருக்க மாட்டான்!

ரமலான் நோன்பின் மற்றொரு சிறப்பு என்னவெனில் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்கும் தீமைகள் மறைக்கப்படுவதற்கும் இந்த நோன்பு காரணமாக அமைந்திருப்பதாகும். அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : من صام رمضان ايمانا و احتسابا غفر لـه ما تقدم من ذنبه

,,யார் (உறுதியான) நம்பிக்கையுடனும் நற்கூலியை எதிர்பார்த்தும் ரமலான் மாதத்தில் நோன்பு நோற்கிறாரோ அவருடைய முந்தைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுகின்றன,, நூல் : புகாரி, முஸ்லிம்

அதாவது, அல்லாஹ்வின் மீது உறுதியான நம்பிக்கை கொண்டவராகவும் தன் மீது நோன்பு கடமையாக்கப்பட்டதைத் திருப்திப்பட்டவராகவும் - அதற்கான நன்மையை - நற்கூலியை எதிர்பார்த்தவராகவும் யார் நோன்பு நோற்றாரோ மேலும் அது கடமையாக்கப்பட்டதை வெறுக்காமலும் அதன் நற்கூலியில் சந்தேகம் கொள்ளாமலும் யார் நோன்பு நோற்றாரோ அவருடைய முந்தைய பாவங்கள் அனைத்தையும் அல்லாஹ் மன்னித்து விடுகிறான்!

மேலும் அண்ணல் நபி (ஸல்)அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

وفي صحيح مسلم عن ابي هريرة ﷺ ايضا ان النبي ﷺ قال : الصلوات الخمس والجمعة الي الجمعة و رمضان الي رمضان مكفرات ما بينهن اذا اجتنبت الكبائر

,,ஐங்காலத் தொழுகைகளும் ஜும்ஆத் தொழுகைகளும் ரமலான் மாத நோன்புகளும் -அவ்வப்போதைய காலத்தின் பாவங்

களைப் போக்கிவிடுகின்றன., பெரிய பாவங்கள் தவிர்க்கப்படும் பட்சத்தில்!,,நூல்: முஸ்லிம்

நோன்பின் இன்னொரு சிறப்புயாதெனில், அதன் நன்மையை இவ்வளவுதான் என ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கைக்குள் கட்டுப் படுத்தமுடியாது. மாறாக நோன்புநோற்பவருக்குக் கணக்கின்றி கூலி வழங்கப்படுகிறது! மேலும் அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கி றார்கள்: நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் கூறுகிறான்:

عن ابي هريرة ﷺ قال قال رسول الله ﷺ : قال الله : كل عمل ابن آدم له الا الصوم فانه لي وأنا اجزي به والصيام جنة فاذا كان يوم صوم أحدكم فلا يرفث ولا يصخب فان سابه احد أو قاتله فليقل اني صائم والذي نفس محمد بيده لخلوف فم الصائم أطيب عند الله من ريح المسك للصائم فرحتان يفرحهما اذا افطر فرح بفطره واذا لقي ربه ربه فرح بصومه

,,மனிதனின் எல்லா அமல்களும் அவனுக்குரியனவாகவே உள் ளன! ஆனால் நோன்பைத் தவிர! நிச்சயமாக அது எனக்குரியது., அதற்கு நானே கூலி வழங்குகறேன்.-நோன்பு என்பது ஒருகேடய மாகும். உங்களில் யாரும் நோன்பு வேளையில் பாலியல் தொடர் பான பேச்சுகள் பேசவேண்டாம்., கூச்சலிட்டுப்பேசவேண்டாம்! யாரா வது அவரை ஏசினால் அல்லது சண்டைக்கு வந்தால் - நான் நோன்பு நோற்றிருக்கிறேன் என்று கூறிவிடட்டும். முஹம்மதின் உயிர் எந்த இறைவனின் கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தி யமாக! நோன்பாளியின் வாயிலில் இருந்து எழும் வாடை அல் லாஹ்விடத்தில் கஸ்தூரியைவிட அதிகவாசனை கொண்டதாகும்! நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சிகள் உள்ளன., ஒன்று: நோன்பு திறக்கும்போது பேறும் மகிழ்ச்சி! இரண்டு : தன் இறைவனைச் சந்திக்கும்போது பெறும் மகிழ்ச்சி!,,

முஸ்லிமில் உள்ள மற்றோர் அறிவிப்பில்-மனிதனின் ஒவ் வொரு அமலுக்கும் கூலி இரட்டிப்பாக வழங்கப்படுகிறது., ஒரு நன்மைக்குப் பத்து மடங்கு முதல் எழுநூறு மடங்குவரை கூலி வழங்கப்படுகிறது! இறைவன் சொல்கிறான் : நோன்பைத்தவிர! ஏனெனில் நிச்சயமாக அது எனக்குரியது. நானே அதற்குக் கூலி வழங்குகிறேன்!-காரணம் தனது ஆசையையும் உணவையும்

எனக்காக விட்டுவிடுகிறான்!, – இந்த மகத்தான நபிமொழி நோன் பின் சிறப்புகளைப் பல்வேறு வகையில் எடுத்துரைக்கிறது.

**முதலாவது சிறப்பு :** ஏனைய அமல்களுக்கு மத்தியில் நோன்பை மட்டும் தனக்குரியதென்று அல்லாஹ் கூறியிருப்பதாகும் அவனிடத்தில் நோன்புக்குரிய சிறப்பும் அதன்மீது அவனுக்குள்ள பிரியமும்தான் இதற்குக்காரணம். அது மட்டுமல்ல அவனுக்காக மட்டுமே நோற்கப்படும் வழிபாடு எனும் முகஸ்துதியற்ற பேணுதல் என்பது நோன்பில் எடுப்பாக இருப்பதும் ஒரு காரணமாகும்.

ஏனெனில் நோன்பு மனிதனுக்கும் இறைவனுக்கும் இடையே உள்ள ஒரு ரகசியமாகும். அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் அதனை அறிந்திட முடியாது. நோன்பின் மூலம் அல்லாஹ் விலக் கியவற்றை–வேறுயாரும் இல்லாத தனி இடத்தில், நோன்பு நோற்ப வரால் உட்கொள்ள முடியம்., ஆனால் எதையும்அவர் உட்கொள் வதில்லை! ஏனெனில் இறைவன் ஒருவன் இருக்கிறான்., தனிமை யில்கூட – அவன் பார்த்துக்கொண்டிருக்கிறான் என நோன்பாளி உறுதியாக நம்புகிறார்! இவற்றை உட்கொள்ளக்கூடாதென அந்த இறைவனே விலக்கியுள்ளான். எனவே அந்த இறைவனுக்காக இவற்றையெல்லாம் நோன்பாளி விட்டுவிடுகிறார்., அவனது தண்ட னைக்கு அஞ்சி – அவனது நற்கூலியிலும் நன்மையிலும் ஆசை கொண்டு விட்டுவிடுகிறார் !

இதனால்தான் அடியானுடைய இந்த நேரிய எண்ணத்தை – இந்த வாய்மையை அல்லாஹ் மதிக்கிறான். அவன் நோற்கும் நோன்பை மட்டும் – அவனுடைய ஏனைய அமல்களுக்கு மத்தி யில் இறைவன் தனக்கெனச் சொந்தமாக்கிச் சொல்கிறான்.மேலும் கூறுகிறான்: அவன் (நோன்பாளி) தனது ஆசையை – தனது உணவுண்ணும்பழக்கத்தை எனக்காக விட்டுவிடுகிறான் என்று!

இவ்வாறு நோன்பை மட்டும் இறைவன் தனக்கெனச் சொந்த மாக்கிக் கூறுவதன் பயன்கள்யாவும்–ஸுஃப்யான் இப்னு உயைனா அவர்கள் சொன்னது போன்று – மறுமைநாளில் வெளிப்படும்! மறுமை நாளில் அல்லாஹ் தன் அடியானிடம் கணக்கு கேட்பான். அவன் செய்துவந்த அநீதிகளுக்கு, அவனுடைய எல்லா அமல் களிலிருக்தும் ஈடுசெலுத்துவான். இறுதியில் நோன்பு மட்டுமே மிஞ்சிவிடும்போது ஈடுசெலுத்தப்படாமலிருக்கும் ஏனைய அநீதி

களை அல்லாஹ் மன்னித்துவிடுவான். பிறகு அந்த நோன்பின் பொருட்டு அவனைச் சொர்க்கத்தில் புகுத்துவான்!

**இரண்டாவது சிறப்பு:** நானே இதற்குக் கூலி வழங்கு வேன் என்று அல்லாஹ் நோன்பு குறித்து சொல்லியிருப்பதாகும்.

நோன்புக்குக் கூலி வழங்குவதைத் தன்னோடு சேர்த்து அல்லாஹ் சொல்லியிருப்பதன் காரணம், ஏனைய அமல்களுக்குரிய கூலி பல மடங்கு இரட்டிப்பாக்கப்படுகிறது., ஒரு நன்மைக்கு - அதுபோன்ற பத்து நன்மைகளுக்குரிய கூலி வழங்கப்பட்டு—எழு நூறு மடங்குவரை— இன்னும் ஏராளமான கூலி இரட்டிப்பாக்கப் படுகிறது! ஆனால் நோன்புக்கோ—எண்ணிக்கை எவ்வளவு எனப் பாராமல் தாமே கூலி வழங்குவதாக அல்லாஹ் சொல்கிறான். அல் லாஹ்வோ கொடைவள்ளல்களிலெல்லாம் மாபெரிய கொடையளன்! தர்மம் செய்கிறவர்களிலெல்லாம் மாபெரிய தர்மகர்த்தா! கொடை என்பது வழங்குபவனின் அந்தஸ்தைப் பொறுத்து அமைகிறது. எனவே நோன்பு நோற்பவரின் கூலி கணக்கன்றி ஏராளமாக—தாராள மாக கிடைக்கிறது!

நோன்பு என்பது இறைவழிபாட்டின் மீது பொறுமையாய் இருப்பதும் இறைவன் விலக்கியவற்றை விட்டுவிடுவதன் மீது பொறுமையாய் இருப்பதுமாகும்.மேலும் பசி, தாகம், உடல் பலவீ னம், மனச்சோர்வு எனப் பல துன்பங்களைத் தாங்கிடும் வகையில் இறைவன் ஏற்படுத்திய விதியின் மீதும் பொறுமையய் இருப்பது மாகும். இவ்வாறு மூன்று வகையான பொறுமைகள் நோன்பில் ஒருங்கிணைகின்றன! எனவே நோன்புநோற்பவர் பொறுமையாளர் களின் கூட்டத்தைச் சேர்ந்தவராகிறார்!- (பொறுமையாளர்களுக்கு, அவர்களின் கூலி அளவின்றியே வழங்கப்படும்!) - (39 : 10)

**மூன்றாவது சிறப்பு:** நோன்பு ஒரு கேடயமாகத் திகழ்வதா கும். அதாவது, வீணானவற்றை விட்டும் கெட்ட பேச்சகளை விட்டும் நோன்பாளியைத் தடுக்கக்கூடிய—பாதுகாக்கக்கூடிய பாது காப்புக் கவசமாக நோன்பு விழங்குகிறது! எனவேதான் நபி(ஸல்) அவர்கள், உங்களில் ஒருவர் நோன்பு வைத்திருக்கும் போது அசிங்கமான கெட்ட பேச்சுகள் பேசவேண்டாம். கூச்சலிடவேண் டாம்,, என்று கூறினார்கள்!

அது மட்டுமல்ல நோன்பு நரகத்தைவிட்டும் அவனைப் பாதுகாக்கிறது. இதனடிப்படையில் தான் மற்றொரு தடவை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن جابر ﷺ ان ا لنبي ﷺ قال : الصيام جنة يستجن بها العبد من النار

"நோன்பு ஒரு கேடயமாகும். அதனைக்கொண்டு மனிதன் நரகத திலிருந்து தன்னைத் தற்காத்துக்கொள்கிறான்!" அறிவிப்பு : ஜாபிர் (ரலி) நூல் : முஸ்னத் அஹ்மத்

**நான்காவது சிறப்பு:** நோன்பாளியின் வாயிலிருந்து எழும் வாடை அல்லாஹ்விடத்தில் கஸ்தூரியைவிட மணமானது என்பதாகும். ஏனெனில் அது நோன்பினால் ஏற்பட்ட விளைவாகும். ஆகவே அது அல்லாஹ்விடத்தில் மணம்கமழுவதாகவும் அவனுடைய பிரியத்திற்குரியதாகவும் உள்ளது. நோன்பு அல்லாஹ் விடத்தில் மகத்தானஅந்தஸ்தை பெற்றுள்ளது என்பதற்கு இதுவும் ஓர் ஆதாரமாகும். எந்த அளவுக்கெனில், மக்களிடத்தில் அருவருக்கத் தக்க ஒன்று அல்லாஹ்விடத்தில் பிரியமானதாக- மணம் கமழுவதாக ஆகிறது !

**ஐந்தாவது சிறப்பு :** நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சிகள் உள்ளன என்பதாகும். முதல் மகிழ்ச்சி, நோன்பு திறக்கும்போது! இரண்டாவது மகிழ்ச்சி, இறைவனை அவன் சந்திக்கும் போது!

நோன்பு திறக்கும் போது அவன் அடையும் மகிழ்ச்சி என்பது -எல்லா அமல்களிலும் சிறப்புமிக்கதாக இருக்கின்ற நோன்பினைக் கடைப்பிடிக்கும் பேரருளை இறைவன் அவன் மீது பொழிந்தான் என்றெண்ணி அடையும் மகிழ்ச்சியாகும்.. எத்தனையோ மக்கள் இந்த அருட்பேற்றைப் பெறாமல் நோன்பைக் கைவிட்டுவிடுகின்றனர்! நோன்பு திறந்த பிறகு உண்ணவும் பருகவும் உடலுறவு கொள்ளவும் அல்லாஹ் அவனுக்கு அனுமதித்ததை எண்ணி மகிழ்ச்சி அடைவதும் இதில்சேரும். இவையாவும் (நோன்புதிறப்பதற்கு முன்பு) அவன் மீது தடுக்கப்பட்டிருந்தன!

இறைவனைச் சந்திக்கும் போது அவன் அடையும் மகிழ்ச்சி என்பதுஅவன் நோற்றுவந்த நோன்புக்காக மறுமையில் அல்லாஹ் விடம் கூலி பெறும் போது அவன் அடையும் மகிழ்ச்சியாகும்! இப்போது அதற்கான கூலியை நிறைவாகப் பெற்றுக்கொள்கிறான் அந்தக் கூலியின் பால் அந்நாளில் அவன் அதிகத் தேவையுடையவனாக இருப்பான். நோன்பாளிகள் எங்கே என்று, ரய்யான் எனும்

வாசல் வழியாகச் சுவனத்தில் பிரவேசிப்பதற்காக அழைக்கப்படு வார்கள். அவர்களல்லாத வேறு யாறும் அந்த வாசல்வழியாகப் பிரவேசிக்கமாட்டார்கள்!

இந்த நபிமொழியில் நோன்பாளிக்கு ஓர் அறிவுரையும் வழங்கப்பட்டுள்ளது. அதாவது யாராவது அவனைத் திட்டினால் அல்லது அவனுடன் சண்டைக்குப்போனால் பதிலுக்குப் பதில் என்கிற முறையில் அவனை அவன் எதிர்கொள்ளக் கூடாது! – இந்த அறிவுரை வழங்கப்பட்டது – ஏச்சும் பேச்சும் சண்டையும் அதிகரிக்கக்கூடாது என்பதற்காகத்தானே தவிர ஏசுபவனின் முன் மௌனமாகிப்போக வேண்டும் என்பதற்காக அல்ல! தான் ஒரு நோன்பாளி என்பதை அவனுக்கு அறிவித்துவிட வேண்டும்., பதிலுக்குப்பதில் என்கிற மோதல் போக்கினை அவனுடன் நாம் மேற்கொள்ளாதது நேன்பின் கண்ணியம் கருதியே தவிர பழிக்குப் பழி வாங்கிட நம்மால் முடியவில்லை என்பதனால் அல்ல! அல்லாஹ் கூறுகிறான் :

ادفع با لتي هي احسـن فـاذا الـذي بينـك وبينـه عـداوة كانـه ولي حميـم وما يلقيها الا الذين صبروا و ما يلقيها الا ذو حظ عظيم

„(நபியே,) நன்மையும் தீமையும் சமமாக மாட்டா! மிகச் சிறந்த நன்யைக் கொண்டு தீமையைத் தடுப்பீராக! அப்போது உம்முடன் கடும்பகை கொண்டிருந்தவர்கூட உற்ற நண்பராய் ஆகிவடுவார். பொறுமை கொள்வோரைத் தவிர வேறெவருக்கும் இந்தக் குணம் வாய்க்கப்பெறுவதில்லை. பெரும் பேறுபெற்றவர்களைத் தவிர வேறெவருக்கும் இந்த உயர்த்தகுதி கிட்டுவதில்லை!„ (41 : 34–36)

நோன்பு நோற்றவருக்காக அவரது நோன்பு மறுமைநாளில் சிபாரிசு செய்யும் என்பதும் நோன்பின் பல சிறப்புகளில் ஒன்றாகும். அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

فعن عبد الله بن عمرو ﷺ ان النبي ﷺ قال : الصيام والقرآن يشفعان للعبد يوم القيامة يقول الصيام : أي رب منعته الطعام والشهوة فشفعني فيـه ويقـول القـرآن منعته النوم بالليل فشفعني فيه فيشفعان رواه احمد

"நோன்பும் குர்ஆனும் மறுமை நாளில் மனிதனுக்காக சிபாரிசு செய்யும். நோன்பு சொல்லும் : என் இறைவா! நான் இவனை உணவை விட்டும் மனஇச்சையை நிறைவேற்றுவதைவிட்டும் தடுத்துவைத்திருந்தேன்! எனவே இவன் விஷயத்தில் எனது சிபாரிசை ஏற்றுக்கொள்வாயாக! குர்ஆன் சொல்லும்: நான் இவனை இரவில் நித்திரை கொள்ளவிடாமல் தடுத்திருந்தேன்! எனவே இவன் விஷயத்தில் எனது சிபாரிசை ஏற்றுக்கொள்வாயாக!—இவ்வாறு இவ்விரண்டும் சிபாரிசு செய்யும்!" நூல் : அஹ்மது[6]

அன்புச் சகோதரர்களே! நோன்பின் இத்தகைய சிறப்புகளை நோன்பாளி அடைந்திட வேண்டுமாயின் அதன் ஒழுங்குமுறைகளை அவன் பேணியாகவேண்டும். எனவே உங்களது நோன்பை உறுதியாக்கிடவும் அதனுடைய வரம்புகளைப் பேணிக்காத்திடவும் முயற்சி செய்யுங்கள்! மேலும் இது விஷயத்தில் நீங்கள் ஏதேனும் குறைபாடு செய்திருப்பின் உங்கள் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரி மீளுங்கள்!

யா அல்லாஹ்! எங்களுடைய நோன்புகளைப் பாதுகாப்பாயாக! எங்களுக்காகப் பரிந்துரைசெய்யக்கூடியதாக அவற்றை ஆக்கியருள்வாயாக! மேலும் எங்கள் பாவங்களையும் எங்கள் பெற்றோரின் பாவங்களையும் அனைத்து முஸ்லிம்களின் பாவங்களையும் மன்னித்தருள்வாயாக!

---

[6] தபரானியும் ஹாகிமும் இதனைஅறிவித்துள்ளார்கள்.ஹாகிம் சொன்னார்கள்:இது முஸ்லிமின் நிபந்தனைப்படி ஸஹீஹ் ஆகும். முன்திரி சொல்லியுள்ளார்கள் : இதன் அறிவிப்பாளர்கள் ஸஹீஹ் ஹதீஸீக்குச் சான்றாகத் திகழ்பவர்கள்.

## المجلس الثالث في حكم صيام رمضان

3 வது மஜ்லிஸ்

# நோன்பின் சட்டநிலை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் கொடுத்ததைத் தடுப்பார் யாருமில்லை., அவன் தடுத்ததைக் கொடுப்பார் யாரு மில்லை! அவனைவழிபடுவது, அமல் புரிவோர்க்குச் சிறந்ததொரு சம்பாத்தியமாகும். அவனுக்கு அஞ்சுவது பயபக்தியாளர்களின் உ.ன்னதப் பாரம்பரியமாகும்.

தன்னுடைய நேசர்களின் உள்ளங்களை - விசுவாசத்திற்கென தயார் படுத்தியவன் அவனே! அவ்வாறே அவர்களின் விதியிலும் எழுதினான்! இறைவழிபாட்டில் எல்லாக் களைப்பையும் கஸ்டத் தையும் அவர்களுக்கு இலகுவாக்கினான். ஆகையால் அவர்கள், இறைப்பணி செய்யும் வழியில் எவ்விதச் சோர்வையும் உணர வில்லை!

துர்ப்பாக்கியமுடையவர்கள் மீது-அவர்கள் வழிபிறந்து சென்றபோது - துர்ப்பாகியத்தை விதித்தான். அவர்கள் அல்லாஹ் வைப் புறக்கணித்தார்கள்., அவனை நிராகரித்தார்கள்! ஆகையால் கொழுந்துவிட்டெரியும் நரகநெருப்பில் அவர்களைப் புகுத்தினான்.

அல்லாஹ்வை-அவன் வழங்கிய அருட்கொடைகளுக்காக நான் புகழ்கிறேன். நான் சாட்சி சொல்கிறேன்: வணக்கத்திற்குரிய இறை வன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை., அவன் தனித்தவன்., அவனுக்கு யாரும் - எதுவும் நிகரில்லை! எதிரிப்படைகளைத் தோல்வியுறச் செய்தான்! அவனே வென்றான்! மேலும் நான் சாட்சி சொல்கிறேன்: முஹம்மது நபி, அவனுடைய அடியாரும் பிரத்தி யேகமாகத் தேர்வுசெய்யப்பட்ட தூதரும் ஆவார்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! சிறப்பு களிலும் அந்தஸ்துகளிலும் மிகைத்தவரான நபித்தோழர் அபூ பக்ர் மீதும்-எவரைக் குறித்து ஷைத்தான் பயந்துவிரண்டோடினானோ அப்படிப்பட்ட உமர் மீதும் - பயபக்தியாளரும் தூய்மையாளரு மான குலச்சிறப்புக்குரிய உஸ்மான் மீதும் - நபியின் மருகனும் பெரியதந்தையின் மகனுமாகிய அலீ மீதும் அல்லாஹ் ஸலவாத்

பொழிவானாக! மேலும் இறைமார்க்கத்தில் உன்னதப் பெருமை யையும் லாபத்தையும் சம்பாதித்கொண்டவர்களான நபித்தோழர்கள் அனைவர் மீதும்—வாய்மையுடன் அவர்களைப் பின்பற்றியவர்கள் மீதும்—தாரகைகள் உதித்து மறைந்துகொண்டிருக்கும் காலமெல் லாம் அல்லாஹ் ஸலவாத் எனும்அருட்கொடைகளைப் பொழிந்து கொண்டிருப்பானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

அன்புச் சகோதரர்களே! திண்ணமாக ரமலான் மாத நோன்பு இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் ஒன்றாகவும் அதன் முக்கியமான அடித்தளமாகவும் உள்ளது!

يا ايها الذين آمنوا كتب عليكم الصيام كما كتب علي الذين من قبلكم لعلكم تتقون اياما معدودات فمن كان منكم مريضا او علي سفر فعدة من ايام اخر وعلي الذين يطيقونه فدية طعام مسكين فمن تطوع خيرا فهو خير له وان تصوموا خير لكم ان كنتم تعلمون شهر رمضان الذي انزل فيه القرآن هدي للناس وبينات من الهدي والفرقان فمن شهد منكم الشهر فليصمه و من كان مريضا او علي سفر فعدة من ايام اخر يريد الله بكم اليسر ولا يريد بكم العسر ولتكملوا العدة ولتكبروا الله علي ما هديكم ولعلكم تشكرون

இறைவன் கூறுகிறான் : „இறைநம்பிக்கையாளர்களே! உங்க ளுக்கு முன்னிருந்த (நபிமார்களைப் பின்பற்றிய) வர்கள் மீது கடமையாக்கப்பட்டது போன்று உங்கள் மீதும் நோன்பு கடமை யாக்கப்பட்டுள்ளது. (அதன் மூலம்) நீங்கள் இறையச்சம் உள்ள வர்களாய்த் திகழக்கூடும்! (நோன்பு நோற்பது) குறிப்பிட்ட சில நாட்களிலேயாகும். ஆனால் அந்நாட்களில் உங்களில் எவரேனும் நோயாளியாகவோ பயணத்திலோ இருந்தால் அவர் (அந்நாட்களில் நோன்பு நோற்காமல்) மற்ற நாட்களில் கணக்கிட்டு நோற்றுக் கொள்ள வேண்டும். நோன்பு நோற்க சக்தி பெற்றிருப்பவர்கள் (நோற்காமல் விட்டுவிட்டால் **அவர்கள்**) மீது ஃபித்யா – பரிகாரம் கடமை. (ஒரு நாளைக்குரிய) அந்தப் பரிகாரம், ஓர் ஏழைக்கு உணவளிப்பதாகும். ஆனால் எவரேனும் விரும்பி அதிக நன்மை செய்தால் அது அவருக்கே சிறந்ததாகும். ஆனால் நீங்கள் அறிவு டையோராய் இருப்பின் நோன்பு நோற்பதே சிறந்தது„

„ரமலான் மாதம் எத்தகையதெனில், அதில்தான் குர்ஆன் இறக்கிய ருளப்பட்டது„ அது மனிதர்களுக்குத் முழுமையான வழிகாட்டியா கவும் நேர்வழியின் தெளிவான அறிவுரைகளைக் கொண்டதாகவும் சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்துக் காட்டக்கூடியதாகவும் உள்ளது! எனவே இனி உங்களில் எவர் அம்மாதத்தை அடைகி றாரோ அவர் அம்மாதம் முழுவதும் நோன்பு நோற்றிட வேண்டும் ஆனால் எவரேனும் நோயாளியாகவோ பயணத்திலோ இருந்தால், அவர் மற்ற நாட்களில் கணக்கிட்டு நோன்பு நோற்றிட வேண்டும். அல்லாஹ் உங்களுக்கு இலகுவை விரும்புகிறான்„ அவன் உங்க ளுக்குக் கஷ்டம் தர விரும்பவில்லை! (நோன்பின்) எண்ணிக் கைகயை நீங்கள் பூர்த்தி செய்வதற்காகவும் அல்லாஹ் உங்களை நேரிய வழியில் செலுத்தியதற்காக நீங்கள் அவனது மேன்மையைப் போற்றி நன்றி செலுத்துவதற்காகவுமே (இவ்வழி உங்களுக்குக் காண்பிக்கப்படுகிறது.)„ அல் குர்ஆன் (2 : 183– 185 ) மேலும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

قال النبي ﷺ بني الاسلام علي خمس شهادة ان لا اله الا الله و ان محمدا رسول الله واقام الصلاة وايتاء الزكاة و حج البيت صوم رمضان متفق عليه – ولمسلم : وصوم رمضان وحج البيت

„இஸ்லாம் ஐந்து அடித்தளங்களின் மீது அமைக்கப்பட்டுள்ளது : வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை„ முஹம்மத் நபி, அல்லாஹ்வின் தூதர் என்று சாட்சி சொல்வது. தொழுகையை நிலைநாட்டுவது„ ஜகாத் கொடுப்பது„ கஅபாவை ஹஜ் செய்வது. ரமலான் நோன்பு நோற்பது„– நூல்: புகாரி – முஸ்லிம்– ஸஹீஹ் முஸ்லிமின் மற்றொறு அறிவிப்பில்: ரமலான் நோன்பு நோற்பது, கஅபாவை ஹஜ் செய்வது என்று உள்ளது.

ரமளான் நோன்பு கடமை என்பதன் மீது முஸ்லிம்கள் அனைவரும் உறுதியான, ஏகொபித்த கருத்து கொண்டுள்ளார்கள்!அது இஸ்லாமிய மார்க்க நடைமுறைகளில் தெளிவாக அறியப்பட்ட விஷயமாகவும் உள்ளது.

எனவே யார் இதன் கடமையை மறுக்கிறாரோ அவர் நிராகரிப் பவாகிவிடுகிறார்! அதிலிருந்து பாவமன்னிப்புக் கோரி திருந்திவிடு மாறு அவரிடம் சொல்லப்படவேண்டும். அப்படிப் பாவமன்னிப்புத் தேடி அதன் கடமையை ஒப்புக்கொண்டாரெனில் சரி! இல்லை யெனில் இஸ்லாத்தை விட்டும் விலகிச் சென்றவர் – நம்பிக்கை கொண்டபின் நிராகரித்தவர்எனும் முறையில் அவரைக் கொன்றிட வேண்டும்., பிறகு அவரைக் குளிப்பாட்டவோ க.ஃபன் – துணி பொதியவோ மய்யித்து தொழுகை நடத்தவோ கூடாது! இறைவ னிடம் அருள் வேண்டி அவருக்காகப் பிரார்த்தனையும் செய்யக் கூடாது! முஸ்லிம்களின் கப்றுஸ்தானில் அடக்கம் செய்யவும் கூடாது! காரணம், அவரது துர்வாடையினால் மக்களுக்குத் துன்பம் ஏற்படக்கூடாது., அவரைப் பார்த்து அவருடைய குடும் பத்தினர் சிரமப்படக்கூடாது என்பதற்காக!

ரமலான் மாத நோன்பு ஹிஜ்ரி 2 ஆம் ஆண்டு கடமையாக் கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் ஒன்பது ஆண்டுகள் நோன்பு நோற்றார்கள்.

இந்நோன்பு இரண்டு கட்டங்களாகக் கடமையாக்கப்பட்டது. ஒன்று: விரும்பினால் நோன்பு நோற்கலாம். இல்லையெனில் அதற் குப் பதில் உணவளித்துக்கொள்ளலாம். ஆனால் உணவு அளிப்ப தைவிட நோன்பு நோற்பதே சிறந்தது.

இரண்டு : இந்த விருப்பநிலை மாற்றப்பட்டுப் கட்டாயமாக நோன்பு நோற்கவேண்டுமென கட்டளையிடப்பட்டது! நபித்தோழர் ஸலம் பின் அக்வ.ஃ(ரலி)அவர்கள் சொல்கிறார்கள்: நோன்பு நோற்க சக்தியுள்ளவர்கள் (நோற்காமல் விட்டுவிட்டால் அவர்கள்) மீது .ஃபித்யா–அபராதம் கடமை. அது ஏழைக்கு உணவு அளிப்ப தாகும்., – என்கிற வசனம் இறக்கியருளப்பட்ட போது, நோன்பு நோற்க விருப்பமில்லாதவர் அதற்கான பரிகாரம் செய்து கொண்டி ருந்தார். இந்த வசனத்திற்குப் பின்னுள்ள வசனம் இறங்கும் வரை இந்நிலை நீடித்தது. அந்த வசனம் இறங்கியதும் அது, இந்தச் சட்டத்தை மாற்றிவிட்டது! பின்னுள்ள வசனம் இதுவே : இனி உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அம் மாதம் முழுவதும் நோன்பு நோற்றிட வேண்டும். ஆனால் எவரே

னும் நோயாளிகவோ பயணத்திலோ இருந்தால் அவர் மற்ற நாட்களில் கணக்கிட்டு நோன்பு நோற்றுக் கொள்ளட்டும்,,

– இதன் பிறகு – விரும்பினால் என்றில்லாமல் ஒவ்வொரு வரும் கட்டாயம் நோற்கவேண்டுமென அல்லாஹ் கட்டளையிட் டான்!

ரமலான் மாதம் வந்துவிட்டதென உறுதியானாலே தவிர நோன்பு கடமையாகாது. எனவே அதற்கு முன் யாரும் நோன்பு நோற்கக்கூடாது! ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் சொல்லியுள்ளார்கள்

لقول ا لنبيﷺ : لايتقدمن احدكم بصوم يوم او يومين الا ان يكون رجلا كان يصوم صومه فليصم ذالك ا ليوم – البخاري

,,ரமலானுக்கு ஒருநாள் அல்லது இரண்டு நாட்களுக்கு முன்ன தாக உங்களில் யாரும் நோன்பு நோற்க வேண்டாம். ஆனால் ஒருவர் வழமையாக நோன்புநோற்று வந்தாலே தவிர! அவர் அந் நாளில் நோன்பு நோற்றுக் கொள்ளட்டும்!,, நூல் : புகாரி

ரமலான் மாதம் வந்துவிட்டதாக – இரண்டு விஷயங்களில் ஒன்றைக் கொண்டுத் தீர்ப்பளிக்கப்படும்.

ஒன்று : அம்மாதத்தின் பிறையைப் பார்ப்பது! ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான் :

لقوله تعالي : .. فمن شهد منكم الشهر فليصمه

,, இனி உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அவர் அம்மாதம் முழுவதும் நோன்பு நோற்க வேண்டும்,,

மேலும் நபி (ஸல் ) அவர்கள் சொன்னார்கள் :

قال النبي ﷺ : اذا رأيتم الهلال فصوموا متفق عليه

„நீங்கள் பிறை பார்த்தீர்களாயின் நோன்பு வையுங்கள்„ (புகாரி)

ஒவ்வொருவரும் பிறை பார்த்தாகவேண்டும் என்று நிபந்தனை இல்ல. எவரது சாட்சியத்தின் மூலம் ரமலானின் வருகை உறுதி யாகுமோ அவர் ஒருவர் பார்த்தாலே எல்லோர் மீதும் நோன்பு கடமையாகிவிடும்!

பிறை பார்த்ததாகச் சொல்லும் சாட்சியம் ஏற்றுக் கொள்ளப் படுவதற்கு நிபந்தனை : பார்த்தவர் பருவ வயதுடையவராகவும் புத்தி சீரநிலை உடையவராகவும் முஸ்லிமாகவும் இருக்க வேண் டும். அவர் சொல்லும் செய்தியில் நம்பிக்கை ஏற்படும் அளவு நம்பிகைக்கு உரியவராகவும் பார்வை உள்ளவராகவும் இருக்க வேண்டும்.

எனவே சிறுவர் சொல்லும் சாட்சியத்தைக்கொண்டு ரமலானின் வருகை உறுதி செய்யப்படமாட்டாது. ஏனெனில் சிறுவனின் செய்தியில் நம்பிக்கை கொள்ள முடியாது. பைத்தியக் காரனின் பேச்சை ஏற்க முடியாது என்பதைச் சொல்லவேண்டியதில்லை!

இறைநிராகரிப்பாளனின் சாட்சியத்தைக்கொண்டும் ரமலான் மாதம் உறுதியாகாது. ஏனெனில், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்க ளின் ஓர் அறிவிப்பு உள்ளது :

لحديث ابن عباس ﷺ : جآء اعرابي الي النبي ﷺ فقال: اني رأيت الهلال يعني رمضان فقال ا تشهد ان لااله الا الله ؟ قال: نعم قال: ا تشهد ان محمدا رسول الله ؟ قال : نعم قال يا بلال اذن في الناس فليصوموا غدا اخرجه الخمسة الا احمد

„ஒரு கிராமப்புற மனிதர் நபி(ஸல்)அவர்களிடம் வந்து சொன் னார் : நான் ( ரமலான் ) பிறை பார்த்தேன். நபியவர்கள்– வணக் கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என்று நீ சாட்சி சொல்கிறாயா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்,ஆம் என்றார், மேலும் நபியவர்கள் கேட்டார்கள் : முஹம்மத், அல்லாஹ் வின் தூதர் என்றும் சாட்சியம் சொல்கிறாயா?„ அதற்கும் அவர், ஆம்„ என்றார். உடனே நபி(ஸல்)அவர்கள்: பிலாலே! மக்களுக்கு

அறிவிப்புச் செய்வீராக! அவர்கள் நாளை நோன்பு நோற்கட்டும் என்றார்கள்,. நூல்: புகாரி. முஸ்லிம், திர்மதி, அபூ தாவூத், நஸஈ, இப்னு மாஜா[7]

ஒருவர் பொய் சொல்பவர் அல்லது எதையும் அவசரப்பட்டு முடிவுசெய்கிறவர் என்று மக்களிடையே அறியப்பட்டிருந்தால் அல்லது பிறையைப் பார்க்க முடியாத அளவுக்குப் பார்வை குன்றியவராக இருந்தால் இந்நிலைகளில் அவருடைய சாட்சியத்தைக் கொண்டு ரமலானின் வருகை உறுதி செய்யப்படமாட்டாது. ஏனெனில் அவர் சொல்வது உண்மையா என்பதில் சந்தேகம் உள்ளது மேலும் அவரது சொல் பொய்த்துவிடலாம் என்கிறநிலை மேலோங்கியுள்ளது!

ரமலானின் வருகை மட்டும்தான் ஓரேஒரு மனிதனின் சாட்சி கொண்டு உறுதி செய்யப்படும்! ஏனெனில் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் :

لقول ابن عمر ﷺ : ترآءي الناس الهلال فأخبرت النبي ﷺ اني رأيته فصام وامر بصيامه
رواه ابو داوّد وحاكم وقال : علي شرط مسلم

,, மக்கள் அனைவரும் பிறை பார்ப்பதில் ஈடுபட்டிருந்தார்கள். அது எனக்குத் தென்பட்டது. நபி (ஸல்) அவர்களிடம் அறிவித்தேன். அதன்படி நபியவர்களும் நோன்பு வைத்தார்கள் மக்களையும் நோன்பு நோற்க ஏவினார்கள்,, நூல் : அபூ தாவூத் ஹாகிம்

பிறைபார்த்த ஒருவர் அதில் உறுதியாக இருக்கிறார் எனில் அதிகாரிகளிடம் அதனைத் தெரிவிப்பது அவர் மீது கடமையாகும். ஏனெனில் அவருடைய செய்தியைக் கொண்டே நோன்பைத் தொடங்குதல், நோன்பை முடித்துவைத்தல், ஹஜ் கடமைகளைத் தொடங்குதல் – யாவும் தீர்மானிக்கப்படுகின்றன! ஒருகடமையான

---

[7] இப்னு ஹுஸைமாவும் இப்னு ஹிப்பானும் இதனை ஸஹீஹ் என்று சொல்லியுள்ளார்கள். ஆயினும் ஸஹாபியின் பெயர் விடுபட்டது என்று குறைசொல்லப்பட்டுள்ளது.

காரியம் நிறைவு பெற எது துணையாக இருக்கிறதோ அதுவும் கடமையேயாகும்.

தூரமான ஓர் இடத்தில் ஒருமனிதர் மட்டும் பிறையைப் பார்த்தார் என்றால் – அதிகாரத்திலுள்ளவர்களிடம் அறிவிப்பது அவரால் இயலாதிருந்தால் அவர்மட்டும் நோன்புவைப்பார். மேலும் அவரால் முடிந்த அளவு அச்செய்தியை அதிகாரத்திலுள்ளவர்களி டம் சேர்த்திட முயற்சி செய்வார்!

மாதத்தின் வருகை உறுதியாகிவிட்டதாக அரசாங்கத்தின் சார்பில், டிவி, ரேடியோ போன்ற சாதனங் கள் மூலம் அறிவிப்புச் செய்யப்பட்டால் அதன்படி அமல் செய்வது கடமையாகும்., மாதத் தின் வருகை பற்றிய அல்லது பறப்பாடு பற்றிய அறிவிப்பானாலும் சரி ரமலான் அல்லது இதரமாதங்கள் பற்றிய அறிவிப்னாலும் சரி! ஏனெனில் அரசாங்கத்தின் சார்பில் இப்படி அறிவிப்புச் செய்வது சட்டரீதியிலான சான்றாகிவிடும். அதன்படி அமல் செய்வது கடமையே!

இதனால்தான் நபி(ஸல்)அவர்கள் ரமலான் மாதத்தின் வருகை உறுதியாகி விட்டதென எல்லோருக்கும் தெரியப்படுத்தும் வகை யில் மக்களிடையே பொது அறிவிப்புச் செய்யுமாறு பிலாலை ஏவினர்கள். மாதத்தின் வருகை நபி(ஸல்)அவர்களிடத்தில் உறுதி யாகிவிட்டிருந்தது. ஆகையால்தான் நோன்பைக் கடைப்பிடிக்கும் படி மக்களை வற்புறுத்துவதாக அந்த அறிவிப்பு அமைந்தது!

மாதத்தின் வருகை சட்டரீதியில் உறுதியாகிவிடும்போது சந்தி ரனின் (தேய்தல் – வளர்தலின்) நிலைகளுக்கு எந்த முக்கியத்து வமும் இல்லை. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் நோன்பு கடமை எனும் சட்டத்தைப் பிறை பார்ப்பதுடன் இணைத்தார்களே தவிர அதன் தோற்ற நிலைகளுடன் இணைக்கவில்லை! நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் :

فقال ﷺ : اذا رايتم الهلال فصوموا واذا رأيتموه فافطروا – متفق عليه

"நீங்கள் பிறை பார்த்தீர்களானால் நோன்பைத் தொடங்குங்கள். பிறை பார்த்தீர்களானால் நோன்பை விட்டுவிடுங்கள்" நூல்: புகாரி, முஸ்லிம்

மேலும் சொன்னார்கள்: முஸ்லிம்கள் இருவர் சாட்சியம் அளித்தால் நோன்பைத் தொடருங்கள்–நோன்பை விட்டுவிடுங்கள்" நூல்: முஸ்லிம், அஹ்மது[8]

இரண்டாவது : மாதம் தொடங்கிவிட்டதெனத் தீர்ப்பளிப்பதற் கான இரண்டாவது காரணம் முந்தைய மாதத்தை 30 நாட்களாகப் பூர்த்தியாக்குவதாகும்.

ஏனெனில் சந்திரனை அடிப்படையாகக் கொண்ட ஒருமாதம் என்பது 30 நாட்களாகவோ 29 நாட்களாகவோதான் இருக்கமுடியும். 30 ஐ விடஅதிகமாகவோ 29 ஐ விடகுறைவாகவோ இருக்க முடியாது. சில சமயம் இரண்டு அல்லது மூன்று மாதங்கள் தொடர்ந்து 30 நாட்களாக இருக்கும். சிலசமயம் இரண்டு மூன்று மாதங்கள் தொடர்ந்து 29 நாட்களாகவும் இருக்கும். ஆனாலும் பெரும்பாலும் ஓரிரு மாதங்கள் 30 நாட்கள் பூர்த்தியாக இருக்கும் மூன்றாவது மாதம் குறைவாகவே இருக்கும்.

எனவே எப்போது முந்தைய மாதம் 30 நாட்களாகப் பூர்த்தியாகிறதோ அப்போது புதிய மாதம் பிறந்துவிட்டதாகச் சட்டப்படித் தீர்மானிக்கப்படும்" பிறை காணப்படவில்லையானாலும் சரியே! ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

لقول النبيﷺ: صوموا لرؤيته و افطروا لرؤيته فان غمي عليكم الشهر فعدوا ثلاثين
– رواه مسلم

[8] இதன் அறிவிப்புத் தொடர் பரவாயில்லாதது.. அதில் கருத்து வேறுபாடு இருப்பதுடனேயே! அபூ தாவூது, தாரகுத்னி ஆகியோரிடம் – சான்று அறிவிப்புகள் இதற்கு உண்டு. தாரகுத்னி சொல்லியுள்ளார்கள்: இதன் அறிவிப்புத் தொடர் தடைபடாதது.. ஆதரப்பூர்வமானது.

"பிறை பார்த்து நோன்பைத் தொடங்குங்கள். பிறை பார்த்து நோன்பை முடியுங்கள். அந்த மாதம் உங்களால் பிறை காணமுடியாத அளவுக்கு மேகமூட்டமாக இருந்தால் 30 நாட்களை எண்ணுங்கள்" நூல் : முஸ்லிம்

மேக மூட்டமாக இருந்தால் எனும் வார்த்தைக்குப் பதிலாக ஸஹீஹ் முஸ்லிமின் மற்றோர் அறிவிப்பில் ( ان غبي ) என்று உள்ளது. இரண்டும் ஒரே பொருள் கொண்டவைதான்.

فان غبي عليكم فاكملوا عدة شعبان ثلاثين

"வானம் உங்களுக்கு மந்தாரமாக இருந்தால் ஷஅபான் மாதத்தை 30 நாட்களாகப் பூர்த்தியாக்குங்கள்"

ஆயிஷா (ரலி) அவர்களின் அறிவிப்பில், "நபி (ஸல்) அவர்கள் ஷஅபான் மாதத்தின் நாட்களை ஏனையமாதங்களைவிடச் சரியாக நினைவில் வைத்துக்கொள்பவர்களாய் இருந்தார்கள், பிறகு ரமலானின் பிறையைப் பார்த்து நோன்பு நோளற்பார்கள். அம்மாதம் அவர்களுக்கு மேகமூட்ட மாக இருந்தால் 30 நாட்களைப் பூர்த்தியாக்குவார்கள்," பிறகு நோன்பு நோற்பார்கள்" நூல் : இப்னு ஹுஸைமா, அபூ தாவூது, தார குத்னி.

இந்த நபிமொழி அறிவிப்புகளின் மூலம் தெரியவருகிறது : பிறைகாணும் முன்பு ரமலான் நோன்பு தொடங்கப்படமாட்டாது. பிறை தெரியவில்லையெனில், ஷஅபான் மாதம் 30 நாட்களாகப் பூர்த்தியாக்கப்படும். ஷஅபான் 30 வது நாளில் நோன்பு நோற்கப் படமாட்டாது. அந்த இரவு தெளிவாக இருந்தாலும் சரி மந்தாரமாக இருந்தாலும் சரியே! ஏனெனில் அம்மார் இப்னு யாஸிர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் :

لقول عمار بن ياسر ﷺ : من صام اليوم يشك فيه فقد عصى ابا القاسم ﷺ

"எந்நாள் குறித்து (அது ரமலானைச் சேர்ந்ததா, ஷஅபானை சேர்ந்ததா என்று சந்தேகம் உள்ளதோ அந்நாளில் நோன்பு நோற்ப

வன் நபி (ஸல்) அவர்களின் கட்டளையை மீறியவன் ஆவான்„ நூல் : அபூ தாவூத், திர்மிதி, நஸஈ – இமாம் புகாரி அவர்கள் இதனை ஸனது இன்றி கூறியுள்ளார்கள்.

யா அல்லாஹ், நேர்வழியைப் பின்பற்றி வாழ்ந்திட எங்களுக்கு நல்லுதவி செய்வாயாக! அழிவு மற்றும் துர்ப்பாக்கியத்தின் காரணி களை எங்களைவிட்டும் அகற்றுவாயாக! எங்களின் இம்மாதத்தை – நன்மை மற்றும் பாக்கியத்தின் மாதமாக ஆக்குவாயாக! இம் மாதத்தில் உனக்குக் கீழ்ப்படிந்து வழிபட எங்களுக்கு உதவி புரி வாயாக! உனது கட்டனையை மீறிச்செயல்படும் வழிகளை எங் களை விட்டும் அகற்றுவாயாக! எங்களின் குற்றங்களையும் எங்கள் பெற்றோரின் குற்றங்களையும் அனைத்து முஸ்லிம்களின் குற்றங்களையும் மன்னித்தருள்வாயாக!

## المجلس الرابع في حكم قيام رمضان

4 வது மஜ்லிஸ்

## ரமலான் மாதமும் இரவுத்தொழுகையும்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே இறைவழிபாட்டில் நடைபோட்டவர்களுக்கு தனது கிருபையினால் உதவி புரிந்தான். அழிவுக்குள்ளான ஆன்மாக்களுக்குத் தனது கருணையினால் ஈடேற்றம் அளித்தான். தான் நாடியவர்களுக்கு இலகுவான வழியில் (அதாவது மனித இயல்புக்கு ஏற்றவழியில்) செல்ல வழிவகை செய்தான்., மறுமைக்காக வாழ ஆர்வமூட்டினான்!

இன்பமான மற்றும் சிரமமான விஷயங்களுக்காக அவனை நான் புகழ்கிறேன். மேலும் சாட்சியம் சொல்கிறேன் : வணக்கத் திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என்று! அவன் தனித்தவன்., அவனுக்கு இணைதுணை இல்லை., கண் ணியமும் அடக்கியாளும் ஆற்றலும் உடையவன்., அவன் முன் னிலையில் ஒவ்வொரு ஆன்மாவும் அடங்கிப்பணியக்கூடியதாக உள்ளன!—மேலும் சாட்சியம் சொல்கிறேன்: முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடிமையும் தூதருமாவார்கள் என்று! அவர்கள் தம் இறைவனின் கட்டளையை அகத்திலும் புறத்திலும் கடைப்பிடிப்பவர்களாய்த் திகழ்ந்தார்கள்!

அவர்களின் மீது அல்லாஹ் ஸலவாத்—அருள்வானாக! அவர்களின் தோழர் அபூ பக்ர் மீதும் அருள்பொழிவானாக. பொய் வாதம் புரிந்த பிரிவினர் அவர்களுக்கு எதிராகத்தான் அணிசேர்ந்த னர்! உமர் மீதும் அருள்பொழிவானாக! தமது மனததைத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் கொண்டவர்களாக அவர்கள் திகழ்ந் தார்கள். ஏராளமான செல்வங்களைத் தர்மம் வழங்கிய உஸ்மான் மீதும் அல்லாஹ் அருள் பொழிவானாக! மேலும் அடர்ந்து வரும்

கூட்டங்களிலே வீரர்களைச் சிதரடிக்கச் செய்யும் தீரரான அலீ மீதும் அருள் பொழிவானாக! ஏனைய நபித்தோழர்கள் அனைவர் மீதும் அவர்களை வாய்மையுடன் பின்பற்றிய தாபிஈன்கள் மீதும் – வழிபாடு செலுத்தும் மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கும் காலமெல்லாம் அல்லாஹ் அருள்பொழிந்துகொண்டிருப்பானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! அல்லாஹ் தன் அடியார்களுக்கு வணக்க வழிபாடுகளை வகுத்துத் தந்துள்ளான்., அவற்றைப் பற்பல வகைகளாக அமைத்தான்! ஏனெனில் ஒவ்வொரு வகைவழிபாட்டையும் அவர்கள் செய்யவேண்டும்., ஒரே வகையான வழிபாட்டை மட்டும் செய்து அவர்கள் சோர்வடைந்து அமல் செய்வதை விட்டுவிடக் கூடாது என்பதற்காக! அப்படி விட்டுவிட்டால் துர்ப்பாக்கியத்திற்கும் ஏமாற்றத்திற்கும் அவர்கள் ஆளாக நேரிடும்!

மேலும் அல்லாஹ் வணக்கவழிபாடுகளில் சிலவற்றைக் கடமையாக்கினான்., அவற்றைக் குறைக்கவோ சிதைக்கவோ கூடாது. மேலும் சில வழிபாடுகளை நஃபில்–எனும் விருப்பத்தின் அடிப்படையில் நிறைவேற்றும் வகையில் ஆக்கினான். இவற்றின் மூலம் பூரண நிலையையும் அல்லாஹ்வின் பக்கம் நெருக்கத்தையும் மனிதன் பெறுகிறான்.

இத்தகைய வழிபாடுகளில் ஒன்றுதான் தொழுகை! அல்லாஹ் நாளொன்றுக்கு ஐவேளைத் தொழுகைகளைத் தன் அடியார்கள் மீது கடமையாக்கினான். இவை– செயலைப் பொறுத்து ஐந்தாக இருந்தாலும் மதிப்பீட்டில் ஐம்பது தொழுகைகளுக்குச் சமமாகும்.

மேலும் விருப்பத்தின் அடிப்படையிலான தொழுகைகளையும் அல்லாஹ் கூடுதலாக வழங்கினான். அதன் நோக்கம், கடமையான தொழுகைகளில் ஏற்படும் குறைபாடுகளை நிறைவு செய்ய வேண்டும் என்பதும் அல்லாஹ்வின் பக்கம் அதிக நெருக்கம் ஏற்பட வேண்டும் என்பதுமாகும் .

விருப்பத்தின் அடிப்படையிலான தொழுகைகளில், றவாத்திப் எனும்– கடமையான தொழுகைகளுக்கு முன்னம் பின்னும் நிறை

றேற்றப்படும் ஸுன்னத் தொழுகைகள் அடங்கும். அவை வருமாறு : ஃபஜ்ர் தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத், ளுஹர் தொழுகைக்கு முன் நான்கு ரக்அத், அதற்குப் பின் இரண்டு ரக்அத், மஃக்ரிப் தொழுகைக்குப் பின் இரண்டு ரக்அத், இஷா தொழு கைக்குப் பின் இரண்டு ரக்அத் !

விருப்ப அடிப்படையிலான தொழுகைகளில் ஒன்றுதான் இரவுத் தொழுகை! இவற்றை நிலைநாட்டும் அடியார்களை அல்லாஹ் குர்ஆனில் புகழ்ந்து கூறியுள்ளான் :

والذين يبيتون لربهم سجدا وقياما

“மேலும் அவர்கள் தங்கள் இறைவனுக்காக (அவன் முன்பு) ஸுஜூது செய்தும் நின்றும் – வணங்கியவாறு இரவைக் கழிப்பார்கள்„ குர்ஆன் : (25: 64 ) மற்றோரிடத்தில்,

وقال تعالي : تتجافي جنوبهم عن المضاجع يدعون ربهم خوفا وطمعا و مما رزقناهم ينفقون فلا تعلم نفس ما اخفي لهم من قرة اعين جزاء بما كانوا يعملون

“அவர்களின் விலாப்புறங்கள் படுக்கைகளைவிட்டும் விலகி விடுகின்றன. (அதாவது வழிபாட்டிற்காக படுக்கைகளைவிட்டும் எழுந்துவிடுகிறார்கள்) மேலும் அச்சத்துடனும் ஆவலுடனும் தம் இறைவனிடம் பிரார்த்தனை செய்கிறார்கள். மேலும் நாம் அவர்களுக்கு வழங்கியிருக்கும் செல்வத்திலிருந்து செலவும் செய்கிறார்கள். கண்களுக்குக் குளிர்ச்சியூட்டும் எத்தகைய இன்பங்கள் அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டுள்ளன என்பதை யாரும். அறியார்„ அவர்கள் செய்து கொண்டிருந்த அமல்களுக்குக் கூலியாக!„ அல்குர்ஆன்: (32 : 16 – 17)

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள் :

கடமையான தொழுகைக்குப்பின் சிறந்த தொழுகை இரவுத் தொழுகையாகும்„ நூல் : முஸ்லிம்

மேலும் சொன்னார்கள் :„மக்களே! ஸலாமை (முகமன் கூறு வதைப்) பரப்புங்கள்„ உணவளியுங்கள்„ இரத்த பந்துக்களுடன் இணைந்துவாழுங்கள்„ மக்கள் நித்தரையில் இருக்கும் நேரத்தில் – இரவில் தொழுங்கள்.. சுவனம் செல்வீர்கள்„ நிம்மதியாக!„நூல்: திர்மிதி, ஹாகிம்

இரவுத் தொழுகையில் வித்ரும் அடங்கும். இதனைக் குறைந்த பட்சம் ஒரு ரக்அத்– ஆகவும் அதிக பட்சம் பதினோரு ரக்அத்– ஆகவும் தொழலாம்.

வித்ரை தனியொரு ரக்அத்–ஆகத் தொழுவதற்கு ஆதாரம்„ நபி (ஸல்) அவர்கள் கூறியதாகும்: எவரேனும் ஒரேயொரு ரக்அத் மட்டும் வித்ரு தொழவிரும்பினால் அவ்வாறு செய்யட்டும்„„ நூல்: அபூ தாவூது, நஸாஈ

மூன்று ரக்அத்–தாகவும் தொழலாம். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் : ஒருவர் மூன்று ரக்அத்–ஆக வித்ரு தொழவிரும்பினால் அப்படிச் செய்யட்டும்,. நூல் : அபூ தாவூது, நஸாஈ

விரும்பினால் அந்த மூன்று ரக்அத்–களையும் மொத்தமாகத் தொழுது சலாம் கொடுக்கலாம். ஏனெனில் உமர் (ரலி) அவர்கள் மூன்று ரக்அத் – வித்ரு தொழுதார்கள். கடைசி ரக்அத் – தில் மட்டும் ஸலாம் கொடுத்தார்கள் .

விரும்பினால் இரண்டு ரகஅத் தொழுது ஸலாம் கொடுத்து, பிறகு மூன்றாவது ரக்அத் தனியாகத் தொழலாம். இதற்கு ஆதாரம் : இப்னு உமர் (ரலி) அவர்கள் வித்ரு தொழுகையில் இரண்டாம் ரக்அத்தை முடித்துவிட்டு ஸலாம் கொடுப்பார்கள். பிறகு மூன்றாம் ரக்அத்துக்கும் ஸலாம் கொடுப்பார்கள். எந்த அளவுக்கெனில், அந்த நேரத்தில் தங்களது சில தேவைகள் குறித்து கட்டளையிடுபவர்களாயும் இருந்தார்கள்.

ஐந்து ரக்அத்–தாகவும் வித்ரு தொழலாம். இடையே எந்த ரக்அத்திலும் உட்காராமல் தொடர்ந்து தொழுது கடைசி –

ஐந்தாம் ரக்அத்தில் ஸலாம் கொடுக்கலாம். ஏனெனில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சொல்லியுள்ளார்கள் : „ஐந்து ரக்அத் – தாக வித்ரு தொழவிரும்புகிறவர் அப்படித் தொழலாம்„ நூல் : அபூ தாவூது, நஸஈ

மேலும் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் : „நபி (ஸல்) அவர்கள் இரவில் பதிமூன்று ரக்அத் தொழுவார்கள். அவற்றில் ஐந்து ரக்அத்தைக் கொண்டு வித்ரு தொழுவார்கள். இடையில் எந்த ரக்திலும் உட்காரமாட்டார்கள்., கடைசி ரக்அத் தவிர!„ நூல்: அஹ்மத், நஸஈ, இப்னு மாஜா

ஒரேயடியாக ஒன்பது ரக்அத் – தாகவும் வித்ரு தொழலாம். எட்டாவது ரக்அத்தில் மட்டும் அமரவேண்டும். அப்போது –அத் தஹிய்யாத்து ஓதவேண்டும். துஆ கேட்கவேண்டும். பிறகு ஸலாம் கொடுக்காமல் எழுந்து ஒன்பதாவது ரக்அத் தொழ வேண்டும். பிறகு அத்தஹிய்யாத் ஓத வேண்டும். துஆ கேட்க வேண்டும். ஸலாம் கொடுக்கவேண்டும். ஏனெனில், ஆயிஷா (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் வித்ரு தொழுகை பற்றி இவ் வாறு அறிவித்துள்ளர்கள்: „நபி (ஸல்) அவர்கள் ஒன்பது ரக்அத் வித்ரு தொழுவார்கள். எட்டாவது ரக்அத் – தில் மட்டும் அமரு வார்கள். அதில் அல்லாஹ்வை திக்ர் செய்வார்கள். அவனைப் புகழ்வார்கள். துஆவும் கேட்பார்கள். பிறகு ஸலாம் கொடுக்காமல் எழுந்து ஒன்பதாவது ரக்அத் தொழுவார்கள் பிறகு அமர்ந்து அல்லாஹ்வை திக்ர் செய்வார்கள். அவனைப் பகழ்வார்கள். துஆ கேட்பார்கள். பிறகு ஸலாம் கொடுப்பார்கள், – அது நாங்கள் கேட்கும் அளவு சப்தமாக இருக்கும்„ நூல்: அஹ்மது, முஸ்லிம்

பதினோரு ரக்அத் – தாகவும் தொழலாம். விரும்பினால் ஒவ் வொரு இரண்டு ரக்அத்திலும் ஸலாம் கொடுக்கலாம். கடைசியில் ஒரு ரக்அத் தொழலாம். ஏனெனில் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் : „நபி (ஸல்) அவர்கள் இஷா தொழுது முடித்த பிறகிலிருந்து ஃபஜ்ர் தொழுகை வரை உள்ள நேரத்தில் பதினொன்று ரக்அத் தொழுபவர்களாய் இருந்தார்கள். ஒவ்வொரு இரண்டு ரக்அத்திலும் ஸலாம் கொடுப்பார்கள். கடைசியில் ஒரு

ரக்அத் தொழுவார்கள். நூல்: அபூ தாவூது, நஸாஈ, இப்னு மாஜா: அஹ்மத்

விரும்பினால் 4–4–3 ரக்அத்–தாகவும் தொழலாம். ஏனெனில் ஆயஷா (ரலி) அவர்களில் பிறிதோர் அறிவிப்பில் உள்ளது : நபி (ஸல்) அவர்கள் நான்கு ரக்அத் தொழுவார்கள். அவற்றின் அழகு பற்றியோ நீளம் பற்றியோ நீ கேட்காதே! பிறகு நான்கு ரக்அத்[1] தொழுவார்கள்., அவற்றின் அழகு – நீளம் பற்றி நீ கேட்காதே! பிறகு மூன்று ரகஅத் தொழுவார்கள்! நூல் : புகாரி, முஸ்லிம்

ஐந்து அல்லது ஏழு அல்லது ஒன்பது ரக்அத்–தை ஒரே ஸலாமுடன் தொழுவதென்பது தனியாகத் தொழுதால் மட்டும்தான்! அல்லது குறிப்பட்ட எண்ணிக்கையிலான மக்களுக்கு இமாமாக நின்று தொழுகை நடத்தும் நிலையில் அவர்கள் அதை விரும்பி ஏற்றிருந்தால் மட்டும்தான்! ஆனால் பொது மஸ்ஜித்கள் என்றால் ஒவ்வொரு இரண்டு ரக்அத்திலும் ஸலாம் கொடுத்து தொழுகை நடத்துவதுதான் இமாமுக்கு ஏற்றதாகும் ஏனெனில் அதனால் மக்களுக்கு சிரமம் ஏற்படாமல் இருக்கவேண்டும். அவர்களின் நிய்யத் –எண்ணம் சிதறாமல் இருக்கவேண்டும். மட்டுமல்ல ஒவ் வொரு இரண்டுரக்அத்திலும் ஸலாம் கொடுப்பதுதான் மக்களுக்கு இலகுவானதாகும். நபி (ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள்: உங்களில் ஒருவர் மக்களுக்குத் தொழுகை நடத்துவாராயின் சுருக்கமாக நடத்தவும். ஏனெனில் அவரைப் பின்பற்றித் தொழுபவர்களில் வயது

---

[1] நான்கு ரக்அத்தையும் ஒரே ஸலாமுடன் தொழுதிருக்கலாம் என்று அர்த்தம் கொள்வதற்கும் இடமுண்டு. ஹதீஸின் வாக்கியத்தில் இருந்து வெளிப்படையாகத் தெரிவது இதுதான்! இவ்வாறும் அர்த்தம் கொடுக்க இடமுள்ளது : அதாவது, நபியவர்கள் ஒவ் வொரு இரண்டு ரக்அத்திலும் ஸலாம் கொடுத்தார்கள். ஆயினும் அவர்கள் நான்கு ரக்அத் தொழுது முடித்து சற்று நேரம் இடைவெளி விடுவார்கள்.பிறகு அவ்வாறே நான்கு ரக்அத் தொழுவார்கள் !,,---- இப்படி அர்த்தம் கொடுப்பதே, இரவுத் தொழுகை இரண்டிரண்டு ரக்அத் ஆகும், எனும் நபி மொழிக்கு உடன்பாடாக உள்ளது, முன்னர் சென்ற– ஆயிஷா (ரலி)அவர்களின் அறிவிப்புக்கும் ஏற்றதாக உள்ளது, அதில் – நபயவர்கள் ஒவ்வொரு இரண்டு ரக்அத்திலும் ஸலாம் கொடுப்பார்கள் என்று ஆயிஷா அவர்கள் விளக்கியுள் ளார்கள்!

முதிர்ந்தவர் பலகீனமானவர், தேவையுடையவர் எனப் பலரும் உள்ளனர்.

மற்றோர் அறிவப்பில்– அவர் தனியாகத் தொழுதால் அவரது விருப்படித் தொழுது கொள்ளட்டும்! என உள்ளது!

ரமலானின் இரவுத் தொழுகைக்கு ஏனைய நாட்களின் இரவுத் தொழுகையைவிட சிறப்பும் உயர்வும் உள்ளன! ஏனெனில் நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்:

لقول النبي ﷺ : من قام رمضان ايمانا واحتسابا غفر له ما تقدم من ذنبه

متفق عليه

ரமலான் இரவில் – (உறுதியான) நம்பிக்கையுடனும் இஹ்திஸாப் எனும் எதிர்பார்ப்புடனும் யார் தொழுகிறாரோ அவருடைய முந்தைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப் படுகின்றன!„ நூல்: முஸ்லிம், புகாரி

உறுதியான நம்பிக்கையுடனும், என்பதன் பொருள்– அல்லாஹ் வின் மீது உறுதியான நம்பிக்கை கொண்டும்– இரவில் தொழுப வர்களுக்கு அவன் வழங்கவிருக்கும் நற்கூலி மீது நம்பிக்கை கொண்டும் . . . என்பதாகும். இஹ்திஸாப் –எதர்பார்ப்புடன். என்ப தன் பொருள், அல்லாஹ்விடம் பிரதி பலனை எதிர்பார்த்து . . . என்பதாகும். அந்த எதிர்பார்ப்புதான் அத்தொழுகையை நிறை வேற்றுமாறு அவனைத் தூண்டியிருக்க வேண்டுமே தவிர புக ழாசையோ பணம்– பதவி ஆசையோ அல்ல!

ரமலானின் இரவுத் தொழுகை என்பது இரவின் முன்னேரத் தின் தொழுகையையும் பின்னேரத்தின் தொழுகையையும் உள்ள டக்கும். அதன்படி தராவீஹ் தொழுகையானது ரமளான் இரவுத் தொழுகைகளில் சேர்ந்ததாகும்! எனவே தராவீஹ் தொழுகையில் ஆர்வம் கொள்வதும் அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதும் அவசியம். அத்தொழுகைக்காக அல்லாஹ்விடமே நன்மையையும் நற்கூலியையும் எதிர்பார்த்திடவும் வேண்டும். இவை குறிப்பிட்ட

சில இரவுகள்தாம்! அறிவிற்சிறந்த இறைவிசுவாசி இந்தக் காலம் கழிந்து போவதற்கு முன்பே இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வான்!

இந்தத் தொழுகைக்கு தராவீஹ் – இடையிடையே ஓய்வெடுக் கும் தொழுகை– என்று சொல்லப்பட்டதற்குக் காரணம், மக்கள் இத்தொழுகையை வெகுநேரம் நீட்டித் தொழுபவர்களாய் இருந் தார்கள். ஒவ்வொரு நான்கு ரக்அத்–திற்குப் பிறகு சற்று ஓய் வெடுப்பது அவர்களின் வழக்கமாய் இருந்தது!

தராவீஹ் தொழுகைக்குப் பள்ளிவாசலில் ஜமாஅத்துடன் கூட் டாகத் தொழும்முறையை முதன்முதலில் ஏற்படுத்தியவர்கள் நபி (ஸல்) அவர்கள்தாம்! பிறகு தம்சமுதாயத்தின் மீதுஅது கடமை யாக்கப்பட்டுவிடுமோ என அஞ்சி அதனை விட்டுவிட்டார்கள்!

ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர் கள் ஓரிரவில் மஸ்ஜிதில் தொழுதார்கள். தோழர்கள் சிலரும் நபி யவர்களின் தொழுகையில் சேர்ந்துகொண்டார்கள். பிறகு மறுநாள் இரவும் நபியவர்கள் தொழுதார்கள். உடன் தொழுபவர்களும் அதி கமானார்கள். பிறகு மூன்றாம் இரவும் நான்காம் இரவும் மக்கள் குழுமினார்கள். ஆனால் அவர்களுடன் தொழுவதற்கு நபியவர்கள் வரவில்லை! காலையில் நபியவர்கள் சொன்னார்கள் : நீங்கள் செய் ததைநான் பார்த்துக்கொண்டேன். (தொழுகைக்காக) உங்களுடன் வருவதைவிட்டு என்னைத் தடுத்தது எதுவெனில், உங்கள் மீது இந்தத் தொழுகை கடமையாக்கப்பட்டுவிடுமோ என்று நான் அஞ் சியதுதான்!„ அறிவிப்பாளர் கூறுகிறார்: இது ரமலானில் நடந்தது. நூல் : புகாரி. முஸ்லிம்

அபூ தர்ரு (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :„நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் நோன்பு வைத்திருந்தோம், பிறை 23 வரை இரவில் எங்களுக்கு அவர்கள் தொழுகை நடத்தவில்லை. 23 ம் இரவில் எங்களுக்கு அவர்கள் தொழுகை நடத்தியது, இரவில் மூன்றில் ஒரு பகுதி நேரம்! பிறகு 24 ஆம் இரவில் எங்களுக்கு அவர்கள் தொழுகை நடத்தவில்லை! 25 ஆம் இரவில் பாதி இரவு வரை எங்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். நாங்கள்

சொன்னோம்: இரவின் மீதிநேரமும் எங்களுக்கு நீங்கள் தொழுகை நடத்தலாமே! அதற்கு நபியவர்கள் சொன்னார்கள்: இமாம் (வீடு) திரும்பும் வரை யார் தொழுதாரோ அவருக்கு அந்த இரவு முழு வதும் தொழுத கூலி பதிவு செய்யப்படும்„ நூல் : அபூ தாவூத், திர்மதி, இப்னு மாஜா, தாரமி

வித்ருடன் சேர்த்து தராவீஹ் தொழுகையின் ரக்அத் எத்தனை என்பதில் ஸல∴புஸ் ஸாலிஹீன் எனும் முற்கால் சான்றோர்கள் பல கருத்துகள் கொண்டிருந்தார்கள். 41– ரக்அத் 39– ரக்அத் 29 – ரக்அத் 23 –ரக்அத் 19– ரக்அத் 13– ரக்அத் 11– ரக்அத் என்று சொல்லப்படுகிது.

– இவற்றில் ஏற்றமான கருத்து 11 ரக்அத்கள் என்பதாகும். ஏனெனில் ஆயிஷா (ரலி) அவர்களிடம்– ரமலானில் நபியவர்களின் தொழுகை எப்படி இருந்தது? என்று கேட்கப் பட்டது. அதற்கு, ரமலானிலும் பிற மாதங்களிலும் 11 ரக்அத்தை விடக் கூடுதலாக அவர்கள் தொழுததில்லை! என்று பதிலளித்தார்கள்„ நூல்: புகாரி, முஸ்லிம்

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்: நபி (ஸல்) அவர்களின் தொழுகை 13 ரக்அத் ஆகும்„ நூல் : புகாரி

ஸாயிப் பின் யஜீத் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் : உபை பின் கஅப் – தமீமுத் தாரி (ரலி) ஆகிய இருவரும் 11 ரக்அத்[10] தாக மக்களுக்கு இரவில் தொழுகை நடத்துமாறு உமர் (ரலி) அவர்கள் கட்டளையிட்டார்கள்!„ நூல் : முஅத்தா

ஸல∴புஸ் ஸாலிஹீன் எனும் சான்றோர்கள் தராவீஹ் தொழு கையினை வெகுநேரம் நீட்டித் தொழுபவர்களாய் இருந்தார்கள். ஸாயிப் பின் யஜீத் (ரலி) அவர்களின் அறிவிப்பில் வந்துள்ளது: இமாம் நூற்றுக்கணக்கில் வசனங்கள் ஓதுவார். வெகுநெரம் நிற்க

---

[10] முஅத்தாவில் இமாம் மாலிக் (ரஹ்) அவர்கள் மிகவும் ஸஹீஹான வரிசைத் தொடர் கொண்டு இதனை அறிவித்துள்ளார்கள்.

வேண்டியிருந்தால் நாங்கள் கைத் தடிகளை ஊன்றிக்கொண்டு நிற்போம்!

இது, இக்காலத்து மக்களின் வழக்கத்திற்கு மாற்றமான ஒரு முறையாகும். இன்று இவர்கள் தராவீஹ் தொழுகையைச் சீக்கிரம் சீக்கிரமாகத் தொழுகிறார்கள். தொழுகையின் அடிப்படைக் கடமை என – அவை இன்றித் தொழுகை நிறைவேறாது எனும் அளவு முக்கியத்துவம் வாய்ந்த–அமைதி, அடக்கம் எனும் அம்சங்களை தொழுகையில் இவர்கள் கடைப்பிடிப்பதே இல்லை! இந்த அடிப் படை அம்சத்தை வீணடித்து விடுகிறார்கள். தங்களுக்குப் பின் னால் தொழுகிற – பலவீனமானோர், நோயாளிகள், முதியோர் ஆகி யோரைச் சிரமப்படுத்துகிறார்கள். தொழுகை நடத்தும் இத்தகைய இமாம்கள் தங்களுக்கும் தவறிழைக்கின்றனர்., பிறருக்கும் தவறி ழைக்கின்றனர்!

மார்க்க அறிஞர்கள் கூறியுள்ளர்கள்: பின்பற்றித் தொழுபவர்கள், ஸுன்னத்தான செயல்களைச் செய்ய விடாமல் தடுக்கும் அளவுக் குத் தொழுகையில் விரைவாகச் செல்வது இமாமுக்கு மக்ரூஹ் (வெறுக்கத்தக்கது) ஆகும்., – அப்படியானால் கடமையைச் செய்யவிடாமல் தடுக்கும் அளவு வேகமாகச் செல்லும் இமாமை என்னவென்று சொல்வது? அல்லாஹ்தான் காப்பாற்றவேண்டும்!

தராவீஹ் தொழகைக்குச் செல்லாமல் தங்கிவிடுவது எவருக் கும் அழகானதல்ல! அதன் நன்மையையும் நற்கூலியையும் தாம் அடைவதையே லட்சியமாகக் கருதவேண்டும். தராவீஹ் மற்றும் வித்ரு தொழுகைகளை இமாம் தொழுது முடிக்காத வரையில் யாரும் வீடுதிரும்புவது முறையல்ல! இரவு முழுவதும் நின்று தொழுத கூலி தமக்குக் கிடைக்க வேண்டும் என்பதை லட்சிய மாகக் கருதவேண்டும்!

மஸ்ஜித்களில் தராவீஹ் தொழுகையில் கலந்து கொள்வது பெண்களுக்குக் கூடும்., குழப்பம்–அவர்களிடமிருந்தும், அவர்களி னாலும் – ஏற்படுமோ எனும் அச்சம் இல்லாதிருக்கும் பட்சத்தில்! ஏனெனில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் :

قال النبي ﷺ : لاتمنعوا اماء الله مساجد الله

அல்லாஹ்வின் அடிமைகளை—அதாவது பெண்களை அல்லாஹ் வின் மஸ்ஜித்களைவிட்டும் தடுக்காதீர்கள்!„ ¹¹

மேலும் இது ஸல.:.புகள் எனும் சான்றோரின் செயல்முறை யாகவும் உள்ளது. ஆனால், பர்தா, அணிந்து கொண்டு அழகை மறைத்த வண்ணம், அடக்கமாக வருவது கடமை! மிடுக்கு நடை போடாதவர்களாய், நறுமணம் பூசாதவர்களாய், அழகை வெளிப்படுத்தாதவர்களாய் இருப்பது கட்டாய நிபந்தனையாகும். ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : ولا يبدين زينتهن الا ماظهر منها

„மேலும் அவர்கள் தங்களுடைய அழகை வெளிக்காட்டா திருக்கட்டும்„ இயல்பாக வெளியே தெரியும் அழகைத்தவிர!„ (24: 31)—அதாவது எதனை மறைப்பது சாத்திய மில்லையோ அதைத் தவிர! அது பர்தா — துப்பட்டி, முக்காடு போன்றவை! மேலும் நபி(ஸல்) அவர்கள் பெருநாள் அன்று தொழுகைக்குப் பெண்கள் வரவேண்டும் எனக் கட்டளையிட்ட போது உம்மு அதிய்யா (ரலி) என்கிற பெண்மணி கேட்டார்கள்: அல்லாஹ்வின் தூதரே! எங்களில் சிலருக்குத் துப்பட்டி இல்லையே!„ என்று! அதற்கு நபி (ஸல்)அவர்கள் சொன்னார்கள்: அவருடைய சகோதரி தனது துப்பட்டியை அவருக்குக் கொடுத்துதவட்டும்!„ நூல் : புகாரி, முஸ்லிம்

பெண்களுக்கு நபியவர்கள் போதித்த ஸுன்னத்தான முறை என்னவெனில், அவர்கள் ஆண்களை விட்டும் பின்னால் விலகித் தூரமாக நிற்க வேண்டும். கடைசி ஸ.:ப் — அணியிலிருந்து அவர்கள் நிற்கத் தொடங்கவேண்டும். இவ்வாறே அணிகள் தொடங்கவேண்டும்„ ஆண்களுக்கு நேர்மாறாக! ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஆண்களின் அணிகளில் சிறந்தது முதல் அணிாகும், அவற்றில் கெட்டது கடைசி அணியாகும்.

¹¹ புகாரி, முஸ்லிம்

பெண்களின் அணிகளில் சிறந்தது கடைசி அணியாகும். அவற்றில் கெட்டது முதல் அணியாகும்.„ நூல் : முஸ்லிம்

இமாம் ஸலாம் கொடுத்த உடனே மஸ்ஜிதிலிருந்து பெண்கள் திரும்பிவிடுவார்கள், தக்க காரணம் இருந்தாலே தவிர தாமதிக்க மாட்டார்கள். நபியவர்களின் மனைவி உம்மு ஸல்மா(ரலி)அறிவித்துள்ளார்கள்:« நபி(ஸல்)அவர்கள் ஸலாம் கொடுத்ததும் பெண்கள் எழுந்துவிடுவார்கள். ஆனால் நபியவர்களோ தாங்கள் எழுவதற்கு முன்னர் தங்களது இடத்தில் சிறிது நேரம் காத்திருப்பார்கள். அறிவிப்பாளராகிய உம்மு ஸல்மா (ரலி) அவர்கள் சொல்கிறார்கள்: இப்படி நபி(ஸல்)அவர்கள் தாமதிப்பதற்குக் காரணம், பெண்களை – ஆண்கள் வந்தடைவதற்கு முன்பாக பெண்கள் திரும்பிச்சென்றிட வேண்டும் என்பதுதான்! என்று நாங்கள் கருதுகிறோம் – அல்லாஹ்வே மிக அறிந்தவன்!„ நூல் : புகாரி

யா அல்லாஹ்!ஆரம்ப கால மக்களுக்குகாட்டிய நேர் வழியை எங்களுக்கும் காட்டுவாயாக!எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும்– கருணைமிக்க இறைவனே! உனது கருணையால் – மன்னிப்பு வழங்குவாயாக!

---

12 முஹ்கம் : தெளிவான மொழிநடையிலுள்ள, பொருள் கொள்வதில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லாத வசனம். முதஷாபிஹ் : தெளிவான பொருள் கொள்வதில் ஐயப்பாடுகளுக்கு இடமளிக்கும் வசனம். ( மொழிபெயர்த்தோன்)

# المجلس الخا مس في فضل تلاوة القرآن وانواعها

5 வது மஜ்லிஸ்

# குர்ஆன் ஓதுவதன் சிறப்பு

எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே! அவன், தனது வழியில் (மக்களுக்கு) அழைப்பு விடுப்பவனாகவும் தான் நாடியவர்களுக்கு நேர்வழி நடக்க அருள்பாலிப்பவனாகவும் இருக்கிறான். வேத நூலை (குர்ஆனை) இறக்கியருளி பேருபகாரம் செய்தான்.அதில் முஹ்கம்[12] - முதஷாபிஹ் என இரு வகை வசனங்கள் உள்ளன. எவர்களுடைய இதயங்களில் கோளாறு உள்ளதோ அவர்கள் முதஷாபிஹ் வசனங்களைத் தேடித்திரிந்து கொண்டிருக்கிறார்கள். அறிவுஞானத்தில் ஆழமான ஆற்றல் பெற்றவர்கள் இவற்றின் மீது நாங்கள் நம்பிக்கை கொண்டோம், என்று கூறுகிறார்கள்.

நேர்வழிகாட்டியதற்காக—அதன் காரணிகளை எளிமைப்படுத்தித் தந்ததற்காக அல்லாஹ்வை நான் புகழ்கிறேன். வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை., அவன் தனித்தவன்., அவனுக்கு இணைதுணை இல்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். இந்தச் சாட்சியத்தின் துணையால் அவனது தண்டனையில் இருந்து ஈடேற்றம் பெறலாமென எதிர் பார்க்கிறேன்!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடியார், தூதர் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள் அமல் செய்வதில் மக்கள் அனைவரினும் பரிபூரணமானவர்களாய் - வரும்போதும் பேகும்போதும் எல்லா நிலைகளிலும் அமல் புரிகிறவர்களாய்த் திகழ்ந்தார்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலாத் எனும் அருள் பொழிவானாக! அவர்களின் தோழரான அபூ பக்ர் மீதும் - எவர்களைக் கொண்டு தீன் - இறைமார்க்கத்திற்கு அல்லாஹ் கண்ணியம்

அளித்தானோ – இவ்வுலகம் சீர்பெற எவர் துணைநின்றாரோ அத்தகைய உமர் மீதும் – தம் வீட்டில், தொழும் இடத்தில் உயிர்த்தியாகம் செய்த உஸ்மான் மீதும் – அறிவுஞானங்களில் சிக்கலானவற்றிற்குத் தீர்வு காண்பதில் – அவற்றின் திரையை அகற்றுவதில் புகழ்பெற்ற அலீ மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழி வானாக! நபியவர்களின் குடும்பத்தினர் மீதும் அவர்களுடன் மிக நெருக்கமானவர்கள் மீதும் அல்லாஹ் அருள்பாலிப்பானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! அல்லாஹ் கூறுகிறான் :

ان الذين يتلون كتاب الله و اقامو الصلاة و انفقوا مما رزقنا هم سرا وعلانية يرجون تجارة لن تبور ليوفيهم اجورهم ويزيد هم من فضله انه غفور شكور

எவர்கள் அல்லாஹ்வின் வேதத்தை ஓதுகிறார்களே மேலும் தொழுகையை நிலைநாட்டு கிறார்களோ – நாம் வழங்கியவற்றிலி ருந்து மறைவாகவும் வெளிப்படையாகவும் செலவுசெய்கிறார் களோ அவர்கள் திண்ணமாக என்றைக்கும் நஷ்டமடையாத ஒரு விபயாபாரத்தை எதிர் பார்த்திருக்கிறார்கள். (இந்த விபாரத்தில் அவர்கள் முதலீடு செய்வது) எதற்காகவெனில், அவர்ளுக்குரிய கூலியை அல்லாஹ் அவர்களுக்கு முழுமையாகக்கொடுக்க வேண் டும் என்பதற்காகவும் தனது அருளிலிருந்து அதிகமாக அவர்க ளுக்கு அவன் வழங்கவேண்டும் என்பதற்காகவும்தான்! திண்ண மாக அல்லாஹ் அதிகம் மன்னிப்பவனானவும் உரிய மதிப் பளிப்பவனாகவும் இருக்கிறான்!. (35 : 29–30)

குர்ஆனை ஓதுவதென்பது இரண்டு வகைகளாகும் ஒன்று: திலாவா ஹுக்மிய்யா. இதன் கருத்து, குர்ஆனின் செய்திகளை உண்மையென ஏற்பதும் அதன் சட்டங்களை அமுல் படுத்துவ துமாகும். அதன் ஏவல்களைச் செய்வதன் மூலமும் அதன் விலக்கல்களைவிட்டு விலகுவதன் மூலமும்!

இரண்டாவது : திலாவா லஃப்ளிய்யா, இதுதான், கிராஅதுல் குர்ஆன், என்கிற ஓதுதலாகும். இதன் சிறப்பு குறித்து குர்ஆன்

வசனங்களும் நபிமொழிகளும் ஏராளம் உள்ளன. குர்ஆன் முழு வதையும் ஓதவதன் சிறப்பு குறித்தும் குறிப்பிட்ட அத்தியாயங்க ளையும் வசனங்களையும் ஓதுவதன் சிறப்பு குறித்தும் அவை பேசுகின்றன!

உஸ்மான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள் : தாமும் குர்ஆனை கற்று மற்றவர் களுக்கும் அதைக் க்ற்றுத் தருபவர்தாம் உங்களில் சிறந்தவர் ஆவார்!„ நூல் : புகாரி

ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

وفي الصحيحين عن عائشة رضي ا الله عنها ان ا لنبي ﷺ قال : الما هر با لقرآن مع السفرة الكرام ا لبررة فا لذي يقرأ القرآن ويتتعتع فيه و هو عليه شاق له اجران

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : குர்ஆனை திறமையாகக் கற்றுத் தேர்ந்தவர், நல்ல–கண்ணியமிக்க எழுத்தர் (மலக்கு)களு டன் இருப்பார். எவர் குர்ஆனை திக்கித் திக்கி ஓதுகிறாரோ மேலும் அது அவருக்குக் கடினமாகவும் இருக்கறதோ அவ ருக்கு இரட்டைக் கூலி உண்டு„ நூல்: புகாரி .முஸ்லிம் – ஒரு கூலி ஓதியதற்காக. இன்னொரு கூலி கஷ்டத்துடனே அதை ஓதியதற்காக!

அபூ மூஸா–அல் அஷ்அரி (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

وفي الصحيحين ايضا عن ابي موسي الاشعري ﷺ ان النبي ﷺ قال : مثل المؤمن الذي يقرأ القرآن مثل الاترجة ريحها طيب و طعمها طيب ومثل المؤمن الذي لا يقرأ القرآن كمثل التمرة لاريح لها وطعمها حلو

குர்ஆனை ஓதுகிற இறைவிசுவாசிக்கு உவமை பம்ளிமாஸ் பழத்தைப் போன்றது. அதன் மணமும் இதமானது„ அதன் சுவையும் இதமானது! குர்ஆனை ஓதாத இறைவிசவாசிக்கு

உவமை பேரீத்தம் பழம் போன்றது., அதற்கு மணமே இல்லை., அதன் சுவை இனிமையானது!„ நூல் : புகாரி. முஸ்லிம்

அபூ உமாமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறாகள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

وفي صحيح مسلم عن ابي أمامة ﷺ ان النبي ﷺ قال: اقرؤا القـرآن فانـه يـأتي يـوم القيامة شفيعا لاصحابه

‚‚குர்ஆனை ஓதுங்கள்., நிச்சயமாக அது தன்னை ஓதக்கூடிய வர்களுக்கு மறுமை நாளில் பரிந்துரை செய்யக்கூடிதாக வரும்!„ நூல் : முஸ்லிம்

உக்பா இப்னு ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் :

وفي صحيح مسلم عن عقبة بن عامر ﷺ ان النبي ﷺ قال: أفلا يغـدو أحدكـم الي المسجد فيتعلم أو يقرأ آيتين من كتاب الله غز وجل خير له من ناقتين وثلاث خير له من ثلاث وأربع خير له من أربع و من اعداد هن من الابل

‚‚உங்களில் ஒருவர் குர்ஆனிலிருந்து இரண்டு வசனங்களைக் கற்பதற்காக அல்லது ஓதுவதற்காகப் பள்ளிவாசலுக்குச் செல்ல வேண்டாமா? இது அவருக்கு இரண்டு ஒட்டகங்களைவிடமும் சிறந்ததாகும். மூன்று வசனங்கள் எனில் மூன்று ஒட்டகங்களை விடவும் சிறந்ததாகும். நான்கு எனில் நான்கைவிட! (இவ்வாறே) அவற்றின் எண்ணிக்கையிலுள்ள ஒட்டகங்களைவிடச் சிறந்ததா கும்„ நூல் : முஸ்லிம்

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள் :

وفي صحيح مسلم عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : ما اجتمع قوم في بيت من بيوت الله يتلون كتاب الله و يتدارسونه بينهم الا نزلـت عليهـم السـكينة وغشـيتهم الرحمة وحفتهم الملائكة وذكر هم الله فيمن عنده

“எந்த ஒரு குழுவினர் அல்லாஹ்வுடைய ஒரு பள்ளிவாசலில் ஒன்றுகூடி குர்ஆனை ஓதுகிறார்களோ மேலும் தங்களுக்கிடையே அதனை ஆய்வு செய்கிறார்களோ அவர்கள்மீது நிச்சயம் அமைதி இறங்குகிறது. அவர்களைக் கருணை சூழ்கிறது. மேலும் அவர்களை மலக்குகள் வளைந்துகொள்கிறார்கள். மேலும் அல்லாஹ் அவர்களைப் பற்றி – தன்னிடம் உள்ளவர்களிடம் எடுத்துரைக்கிறான்!„ நூல் : முஸ்லிம்

மேலும் நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

وقال ﷺ : تعا هدوا القرآن فو الذي نفسي بيده لهو أشد تفتلا من الابـل في عقلهـا متفق عليه

“குர்ஆனை தொடர்ந்து ஓதிவாருங்கள். எனது உயிர் யார் கைவசம் உள்ளதோ அந்த இறைவன் மீது சத்தியமாக! இந்தக் குர்ஆன் (தொழுவத்தில்) கட்டப்பட்டுள்ள ஒட்டகத்தைவிட வேகமாக பிய்த்துக்கொண்டு ஓடக்கூடியதாக இருக்கிறது!„ நூல் : புகாரி, முஸ்லிம்

மேலும் நபியவர்கள் சென்னார்கள் :

قال ﷺ : لايقل احدكم نسيت آيت كيت وكيت بل هو نسي

“உங்களில் எவரும், இன்ன இன்ன ஆயத்– வசனத்தை நான் மறந்துவிட்டேன், என்று சொல்லவேண்டாம். உண்மையில் அவர் தாம் மறக்கடிக்கப்பட்டார்!„ நூல் : முஸ்லிம்

–அதற்குக் காரணம், நான்மறந்துவிட்டேன் என்கிற வார்த்தை, குர்ஆனில் அவர் மனனம் செய்திருந்தவை குறித்து அவர் பொடு

போக்காக இருந்தார்„அதை மறந்துவிடும் அளவுஅலட்சியம் செய்தார் எனக் காட்டுகிறது!

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவிக்கிறார்கள் :

عن عبد الله ابن مسعود ﷺ ان النبي ﷺ قال : من قرأ حرفا من كتاب الله فله به حسنة والحسنة بعشر امثالها لا اقول الم حرف ولكن ألف حرف و لام حرف وميم حرف رواه الترمذي

„எவர் குர்ஆனிலிருந்து ஓரேஒரு எழுத்தை ஓதுகிறாரோ அதற்காக அவருக்கு ஒரு நன்மை கிடைக்கிறது. அந்தஒரு நன்மை அதைப் போன்ற பத்து நன்மைகளாக இரட்டிக்கப்படுகிறது. அலி:.ப்–லாம்–மீம் என்பதை ஓர் எழுத்து என்று நான் சொல்ல மாட்டேன்„ ஆனால் அலி:.ப் ஓர் எழுத்து„ லாம் ஓர் எழுத்து„ மீம் ஓர் எழுத்து!„ நூல் : திர்மிதி[13]

இப்னு மஸ்வூது (ரலி ) அவர்கள் கூறுகிறார்கள் :

و عنه ﷺ قال : ان هذا القرآن مأدبة الله فاقبلوا مأدبته ما استطعتم ان هذا القرآن حبل الله المتين و النور المبين والشفاء النافع عصمة لمن تمسك به ونجاة لمن اتبعه لا يزيغ فيستعتب و لا يعوج فيقوم و لا تنقضي عجائبه و لا يخلق من كثرة الترداد , اتلوه فان الله يأجركم علي تلاوته كل حرف عشر حسنات اما اني لا اقول الم حرف ولكن ألف حرف و لام حرف و ميم حرف رواه الحاكم

---

[13] திர்மிதி இமாம் சொல்லியுள்ளார்கள்: இது ஹஸன் ஸஹீஹ் தரத்திலானது. இதே வகையில் :.கரீப்(அறிவிப்புத் தொடரில் ஓரேஓர் அறிப்பாளரும் வரும்) ஹதீஸுமாகும். பின்னோர்களில் சிலர் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களே அறிவித்துள்ள ஸஹீஹ் என்றும் சொல்லியுள்ளார்கள்.

நிச்சயமாக இந்த குர்ஆன் அல்லாஹ்வின் விருந்துபசாரமாகும். அவனது விருந்துபசாரத்தை உங்களால் முடிந்த அளவு ஏற்றுக் கொள்ளுங்கள். திண்ணமாக இந்தகுர்ஆன் அல்லாஹவின் உறுதியான கயிறு! தெளிவான ஒளி., பயனுள்ள நிவாரணி ஆகும் இந்த குர்ஆன்— அதை யார் பற்றிப்பிடித்து நிற்கிறாரோ அவருக்குப் பாதுகாப்பாகவும் அதைப்பின்பற்றி வாழ்பவர்களுக்கு ஈடேற்றமாகவும் திகழ்கிறது! அதில் சருக்கல் இல்லை., இருந்தாலன்றோ அதன் சார்பாக மன்னிப்பு கேட்பதற்கு! அதில் கோணல்லை., இருந்தாலன்றோ அதைச்சரிப்படுத்துவதற்கு! அதன் ஆச்சரியங்கள் முடிவடையாது. திரும்பத் திரும்ப ஓதுவதால் அது புளித்துப் போகாது!

(மக்களே!) குர்ஆன் ஓதுங்கள். அதை ஓதுவதன் மூலம் ஓர் எழுத்துக்குப் பத்து நன்மை வீதம் அல்லாஹ் உங்களுக்குக் கூலி வழங்குவான். அறிந்து கொள்ளுங்கள் : நிச்சயமாக நான், அலி∴ப்— லாம்— மீம் என்பது ஓர் எழுத்து என்று சொல்ல மாட்டேன்! மாறாக அலி∴ப் ஓர் எழுத்து., லாம் ஓர் எழுத்து.. மீம் ஓர் எழுத்து!„நூல் : ஹாகிம்

சகோதரர்களே, இதுதான் குர்ஆன் ஓதுவதன்சிறப்பு! அல்லாஹ்விடம் கூலியையும் அவனது உவப்பையும் எதிர்பார்த்து யார் ஓதினாலும் அவர்களின் கூலியாகும் இது. குறைவான அமல்களுக்கு ஏராளமான கூலிகள்! யார் இதில் குறைபாடு செய்தானோ அவன் தான் ஏமாற்றத்திற்குள்ளானவன். நிவர்த்திசெய்யமுடியாத அந்த (மறுமை) நாளில் லாபம் ஈட்டிடத் தவறியவன் யாரோ அவன்தான் நஷ்டம் அடைந்தான்!

இந்தச் சிறப்புகள் பொதுவாக குர்ஆன் முழுவதையும் உள்ளடக்கியவை ஆகும். சில குறிப்பிட்ட—பிரத்தியேக அத்தியாங்களின் சிறப்புகள் குறித்தும் நபிமொழிகள் வந்துள்ளன!

☐ அத்தகைய அத்தியாயங்களுள் ஒன்றுதான் அல்∴பாத்திஹா அத்தியாயம். அபூ ஸயீத் பின் அல் – முஅல்லா (ரல்) அவர்கள் அறிவிக்கிறர்ர்கள் : நபி(ஸல்) அவர்கள் என்னிடம் சொன்னார்கள்:

في صحيح ا لبخار ي عن أبي سعيد بن المعلي ﷺ ان النبي ﷺ قال لـه لأعلمنـك أعظم سورة في القرآن ( الحمد لله رب العالمين ) هي السبع المثاني و القرآن العظيـم الذي أوتيته

„குர்ஆனிலுள்ள ஒரு மகத்தான அத்தியாயத்தை உமக்கு நான் கற்றுத் தருகிறேன். அதுதான், அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் (ஒவ்வொரு ரக்அத்திலும் ) திரும்பத்திரும்ப ஓதப்படும் ஏழு வசனங்களாகும் இது! எனக்கு வழங்கப்பட்ட மகத்தான குர்ஆன் இதுவே!„ நூல்: புகாரி

இந்தஅத்தியாயத்தின் சிறப்பு காரணமாகவே இதனை ஓதுவது தொழுகையில் முக்கிய கடமையாக்கப்பட்டுள்ளது. இதனை ஓத வில்லையாயின் தொழுகை நிறைவேறாது.

அண்ணல் நபி (ஸல் ) அவர்கள் கூறினார்கள் :

قال النبي ﷺ : لاصلاة لمن لم يقرأ بفاتحة الكتاب متفق عليه

„குர்ஆனின் தோற்றுவாய் எனும் இந்த ஃபாத்திஹா அத்தியா யத்தை யார் ஓதவில்லையோ அவருக்குத் தொழுகை இல்லை!„ நூல் : புகாரி . முஸ்லிம்

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن ابي هريرة ﷺ قال قال رسول ا لله ﷺ : من صلـي صـلاة لم يقـرأ فيهـا بفاتحـة الكتاب فهي خداج يقوله ثلاثـا فقيـل لأبـي هريـرة انـا نكـون وراء الامـام فقـال اقرأبها في نفسك - روره مسلم

„எவரேனும் ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதாமல் தொழுதால் அவரது தொழுகை குறைபாடு உடையதாகும் - இதனை நபி (ஸல்) மூன்று தடவை சொன்னார்கள். இந்த நபிமொழியின்

அறிவிப்பாளராகிய அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது : நாங்கள் இமாமுக்குப் பின்னால் நின்று தொழுகிறோமெனில்?„ அதற்கு அவர்கள் பதிலளித்தார்கள் : இதனை உனது மனதிற்குள் ஓதுவாயாக! நூல் : முஸ்லிம்

அத்தகைய சிறப்புக்குரிய அத்தியாயங்களில் அல்பகரா – ஆலு இம்ரான் இரு அத்தியாயங்களும் அடங்கும். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

قال النبي ﷺ : اقرؤا الزهراوين البقرة وآل عمران فانهما يأتيان يوم القيامة كأنهما غمامتان أو غيايتان أو كأنهما فرقان من طير صوآف تحاجان عن أصحابهما اقرؤا سورة البقرة فان أخدها بركة و تركها حسرة و لايستطيعها البطلة يعني السحرة رواه مسلم

“அல் பகரா– ஆலு இம்ரான் எனும் பிரகாசமான இரு அத்தியாயங்களை ஓதுங்கள். அவை மறுமை நாளில் இரண்டு மேகங்களைப் போன்று அல்லது நிழல்தரக்கூடியவை போன்று வரும். அல்லது சிறகடித்துப் பறக்கும் பறவைக் கூட்டங்கள் போல் வரும்„ தம்மை ஓதியவருக்காக வாதாடும். அல்பகரா அத்தியாயத்தை ஓதுங்கள். அதனை ஓதுவது அருட்பாக்கியம். அதனை ஓதாமல் விடுவது துயரம். சூனியக்காரர்களால் அதனை எதுவும் செய்யமுடியாது!„ நூல் : முஸ்லிம்

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : ان البيت الذي تقرأ فيه سورة البقرة لا يدخله الشيطان رواه مسلم

“எந்த வீட்டில் அல்பகரா அத்தியாயம் ஓதப்படுகிறதோ அந்த வீட்டினுள் ஷைத்தான் வரமாட்டான்„ நூல் : முஸ்லிம்

அதற்குக் காரணம், அதில் ஆயதுல்குர்ஸி எனும் ஒருவசனம் உள்ளது. அது குறித்து நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: (இது ஆதாரப்பூர்வமாய் பதிவாகியுள்ளது) யார் ஆயதுல் குர்ஸி–யை இரவில் ஓதுகிராரோ அவர் மீது அல்லாஹ்வின் புறத்திலிருந்து ஒரு பாதுகாவலர் இருந்துகொண்டே இருக்கிறார்„ அதிகாலை வரை ஷைத்தான் அவரை நெருங்கமாட்டான்!„

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஜிப்ரீல் சொன்னார்கள்: (அப்போது இப்னு அப்பாஸ்அவர்கள், நபியவர்களிடம் இருந்தார்கள்) வானத்தில் இருந்து திறக்கப்பட்ட வாசலாகும் இது. இதற்கு முன் எப்போதும் இது திறக்கப்பட்டதே இல்லை! (இப்னு அப்பாஸ் சொல்கிறார்கள்:) அந்த வாசலில் இருந்து ஒரு மலக்கு இறங்கி நபி(ஸல்)அவர்களிடம் வந்து சென்னார் : நபியே! உமக்கு வழங்கப்பட்ட இரு பேரொளிகளைக்கொண்டு சந்தோசம் அடைவீராக! உமக்கு முன் எந்த நபிக்கும் அவை வழங்கப்படவில்லை! அவைதாம் அல் ∴பாத்திஹா அத்தியாயமும் அல்பகராவின் இறுதி வசனங்களாகும். அவ்விரண்டில் எந்தஓர் எழுத்தை நீர் ஓதினாலும் அது உமக்கு வழங்கப்படாமல் போகாது!„ நூல்: முஸ்லிம்

சிறப்புக்குரிய அந்த குறிப்பட்ட அத்தியாயங்களில் குல் ஹுவல்லாஹு . . . வும் ஒன்று. ஆபூ ஸயீதுல் குத்ரி (ரலி) அறிவிக்கிறார்கள் : நபி(ஸல்) அவர்கள் இந்தஅத்தியாயம் குறித்து சொன்னார்கள் :„எனது உயிர் எவனது கை வசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! இந்த அத்தியாயம் குர்ஆனில் மூன்றில் ஒரு பகுதிக் குச் சமம்!„ நூல் : புகாரி

இந்தச் சமத்துவம் சிறப்பில் தானே தவிர– இதனை ஓதுவது குர்ஆனின் மூன்றில் ஒருபகுதியை ஓதுவதற்குச் சமம் என்பது இதன் பொருளல்ல! இதனால்தான் தொழுகையில் மூன்று தடவை இதனை ஓதுவது ∴பாத்திஹா அத்தியாயத்தை ஓதுவதற்குப் பகரமாகிவிடாது! மேலும் ஒரு பொருள் மற்றொரு பொருளுக்குச் சிறப்பில் நிகராக இருப்பதனால் அதற்குப் பகரமாக இது போதுமாகும் என்றாகிவிடாது!

அபூ அய்யூப் - அல் அன்சாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

في الصحيحين عن ابي ايوب الانصاري ﷺ ان النبي ﷺ قال : من قال لااله الا الله وحده لاشريك له الملك و له الحمد عشر مرات كان كمن أعتق اربعة أنفس من ولد اسماعيل

"(லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீகலஹு லஹுல் முல்கு வ லஹுல் ஹம்து) எனும் திக்ரை யார் 10 தடவை ஓதினாரோ அவர், இஸ்மாயீல் நபியின் சந்ததிகளில் நான்கு பேரை அடிமைத் தளையிலிருந்து விடுதலை செய்தவர் போன்றாவார்,, நூல்: புகாரி, முஸ்லிம்–இப்போது ஒருவர் குற்றப்பரிகாரத்திற்காக நான்கு அடிமைகளை விடுதலை செய்யக் கடமைப்பட்டவராக உள்ளார் என்று வைத்துக்கொள்வோம்,, அவர் இந்ததிக்ரை ஓதுவது நான்கு அடிமைகளை விடுதலை செய்வதற்குப் பகரமாக ஆகிவிடாது. இந்த திக்ர், சிறப்பில் அதற்கு நிகராக இருந்தாலும் சரியே!

☐ சிறப்புக்குரிய குறிப்பிட்ட அந்த அத்தியாயங்களில் குல் அவூது பிரப்பில் ∴பலக், குல் அவூது பிரப்பன் நாஸ், என்கிற இரண்டு அத்தியாங்களும் உண்டு.

உக்பா இப்னு ஆமிர் (ரலி)அவர்கள் அறிவிக்கிறர்கள் : நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள் :

عن عقبة بن عامر ﷺ ان النبي ﷺ قال : الم تر آيات أنزلت الليلة لم ير مثلهن قل أعوذ برب الفلق وقل أعوذ برب الناس

"இன்றைய இரவில் இறக்கியருளப்பட்ட அத்தியாயங்களை நீர் காணவில்லையா? இவைபோன்ற வேறு வசனங்களைக் காணவே முடியாது. அவைதாம்: குல்அவூது பிறப்பில் ∴பலக், குல்அவூது பிரப்பின் நாஸ்,, நூல்: முஸ்லிம்

மற்றோர் அறிவிப்பில், நபி (ஸல்) அவர்கள், இந்த இரண்டு அத்தியாயங்களையும் ஓதுமாறு உக்பா (ரலி) அவர்களை ஏவி னார்கள். பிறகு சொன்னார்கள் : இவற்றைப் போன்ற வேறு அத்தி யாயத்தை ஓதி எவரும் பிரார்த்தனை செய்ததில்லை. மேலும் இவற்றைப் போன்ற வேறெந்த அத்தியாயத்தையும் ஓதி எவரும் பாதுகாப்புத் தேடியதில்லை!„ நூல் : நஸஈ

சகோதரர்களே! திருக்குர்ஆனை அதிகம் அதிகம் ஓதுவதற்கு முயற்சி செய்யுங்கள். குறிப்பாக குர்ஆன் இறக்கியருளப்பட்ட இந்த மாதத்தில்! இந்த மாதத்தில் குர்ஆனை அதிகம் ஓதுவதற் குத் தனிச் சிறப்பு உண்டு. ஜிப்ரீல் அவர்கள் நபி (ஸல்) அவர்க ளுக்கு குர்ஆனை ஒவ்வொரு ஆண்டும் ஒரு தடவை ஓதிக் காட்ட நபியவர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் எந்த ஆண்டு நபி (ஸல்) அவர்கள் மரணம் அடைந்தார்களோ அந்த ஆண்டில் – மனத்தில் நன்கு பதியவைப்பதற்காகவும் உறுதிப் படுத்துவதற்காகவும் – இரண்டு தடவை ஓதிக்காட்டினார்கள்.

நல்லோர்களான நம்முன்னோர்கள் ரமலான் மாதத்தில் தொழுகை யிலும் வெளியிலும் குர்ஆனை அதிகம் அதிகமாக ஓதக்கூடியவர் களாய் இருந்தார்கள்.

ஜுஹ்ரி (ரஹ்) அவர்கள் – ரமலான் மாதம் வந்துவிட்டால் கூறுவார்கள் : (ரமலானில்) பணியென்பது குர்ஆன் ஓதுவதும் உணவு வழங்குவதும்தான்!„

இமாம் மாலிக்(ரஹ்)அவர்கள் ஏழு நாட்களுக்கு ஒருதடவை குர்ஆனை ஓதி முடிப்பார்கள். ஆனால் ரமலான் மாதத்தில் மூன்று நாட்களுக்கு ஒருதடவை குர்ஆனை ஓதிமுடிப்பார்கள். கடைசிப் பத்து நாட்களில் தினமும் ஒரு தடவை ஓதிமுடிப்பார்கள்.

இப்ராஹீம் நகஈ (ரஹ்) அவர்கள் ரமலானில் மூன்று நாட்க ளுக்கு ஒருதடவையும் கடைசிப் பத்து நாட்களில் இரண்டு நாட் களுக்கு ஒருதடவையும் ஓதிமுடிப்பார்கள். அஸ்வத் (ரஹ்)அவர் கள் ஒவ்வொரு மாதமும் இரண்டு நாட்களுக்கு ஒரு தடவை குர்ஆனை ஓதி முடிப்பவர்களாய் இருந்தர்கள்!

சகோதரர்களே! இந்தச்சான்றோர்களைப் பின்பற்றுங்கள்! இவர்களின் வழியில் வாழுங்கள். அதன் மூலம் பரிசுத்தவான்களின் குழுவில் இணைவீர்கள்!

பகல்–இரவு எல்லா நேரங்களிலும் – எந்த அமல்கள் இறைவனோடு உங்களுக்கு நெருக்கத்தை ஏற்படுத்துமோ அந்தஅமல்களைச் செய்வதைப் பெரும் பாக்கியமாகக் கருதுங்கள். ஆயுட்காலம் வேகமாகச் சுருட்டப்படுகின்றது. காலங்கள் அனைத்தும் எவ்வாறு கழிந்துசெல்கிறதெனில் பகலின் சிலமணி நேரங்கள் கழிந்து போன்றே அது தோன்றுகின்றது!

யா அல்லாஹ்! உனது வேதத்தை – உனக்குத் திருப்தி அளிக்கும் வகையில் ஓதுகிற பாக்கியத்தை எங்களுக்கு வழங்குவாயாக! அதன் மூலம் எங்களை ஈடேற்றப் பாதையில் செலுத்துவாயாக! இருள்களிலிருந்து எங்களை வெளியேற்றி வெளிச்சத்திற்குக் கொண்டுவருவாயாக! மேலும் குர்ஆனை– எங்களுக்குப் பாதகமாக அன்றி சாதகமாக ஆக்குவாயாக! அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபாலிக்கும் இரட்சகனே!

யா அல்லாஹ்! இந்தகுர்ஆனின் மூலம் எங்களின் அந்தஸ்தை உயர்த்துவாயாக! மேலும் அதன் மூலம் எங்களைவிட்டும் தீமைகளைப் போக்குவாயாக! உனது கருணையினால் எங்களுக்கும் எல்லா முஸ்லிம்களுக்கும் – கருணையாளர்களில் எல்லாம் கருணையாளனே! – பாவமன்னிப்பு வழங்குவாயாக!

# المجلس السادس– في اقسام الناس في الصيام

6–வது மஜ்லிஸ்

## நோன்பும் மக்களும் (1)

அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும். அவனே,படைத்தஒவ்வொரு பொருளையும் தனது நுண்ணறிவால் செம்மைப்படுத்தினான். தனது கருணையாலும் அறிவுநுட்பத்தாலும் ஷரீஅத் – சட்டங் களை வழிமுறைகளாக வகுத்தளித்தான்! அவனுக்குக் கீழ்ப்படிய வேண்டுமென நமக்கு அவன் கட்டளையிட்டது – அவனுடைய தேவைக்காக அல்ல., நமது நன்மைக்காகவே! பாவமீட்சி தேடித் தன் பக்கம் திரும்பிய அனைவருக்கும் அவன் பாவமன்னிப்பு வழங்குகிறான். அழகிய முறையில் அமல்கள் செய்பவர் யாரோ அவர்களுக்கு அதிக அளவில் வெகுமதிகள் அளிக்கிறான். „எவர் கள் நமக்காக ஜிஹாத் செய்தார்களோ அவர்களுக்கு நாம் நம் முடைய வழிதனைக் காண்பிக்கறோம்„ என்று குர்ஆனில் கூறினான்!

அப்படிப்பட்ட அல்லாஹ்வை – அவனுடைய அருள்கொடை களுக்காக அகமும் புறமும் நான் புகழ்கிறேன். மேலும் வணக்கத் திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறு யாருமில்லை., அவன் தனித்தவன்., அவனுக்கு இணைதுணை இல்லை என்று சாட்சி சொல்கிறேன். அந்த சாட்சியத் தைக் கொண்டு – அருட் பேறும் இன்பமும் நிறைந்த சுவனத்தை வென்றெடுக்க ஆதரவு வைக்கிறேன். மேலும் முஹம்மத் நபி அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அல்லாஹ் – நபியவர்களை வானங்களுக்கு மேலே அழைத்துச் சென்று தனது சமூகத்தில் சிறப்பளித்தான்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் எனும் அருள் பொழிவா னாக! அவர்களின் தோழரான அபூபக்ர் மீதும்பொழிவானாக! அவர் கஷ்டத்தையும் களைப்பையும் பொருந்திக் கொண்டவர்., வழி பாடுகளை நிறைவேற்றியவர்., – "துயரப்படாதீர்., திண்ணமாக அல்லாஹ் நம்முடன் இருக்கிறான், என்று (நபியவர்கள்) தம் தோழருக்குச் சொன்ன வேத வசனத்தின் மூலம் அல்லாஹ் அவருக்குச் சிறப்பளித்தான்!– மேலும் இஸ்லாம் மேலோங்குவதில் கடும்முயற்சி செய்தவரும் பலவீனமோ சோர்வோ அடையாதவரு மான உமர் மீதும் அருள்பொழிவானாக! மேலும் வீட்டின் முற்றத் திலேயே அழிவு வந்துவிட்ட நிலையிலும் விதியைப் பொருந்திக் கொண்டவரான உஸ்மான் மீதும் அருள் பொழிவானாக! மேலும் நெருங்கிய குடும்ப உறவினரும் தம் விருப்பங்களை அடைந்த வருமான அலீ மீதும் அருள் பொழிவானாக! மேலும் நபியவர் களின் குடும்பத்தினர் அனைவர் மீதும் கண்ணியத்திற்குரியவர் களும் நம்பிக்கைக்குரியவர்களுமான நபித்தோழர்கள் மீதும் அருள் புரிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! ஆரம்பத்தில் இரண்டு கட்டமாக நோன்பு கடமையாக்கப்பட்டது., பிறகு நோன்பின் சட்டங்கள் உறுதி செய் யப்பட்டன என்கிற விவரம் முன்னர் 3 வது மஜ்லிஸில் சொல்லப் பட்டுள்ளது. மக்கள் நோன்பின் சட்டங்களைப் பொறுத்து பத்து வகையினராக உள்ளனர்!

☐ அ – முஸ்லிம் ., அவர் பருவவயதுடையவராக, புத்தி நிலை சீரானவராக, ஊரில் தங்கியிருப்பவராக, சக்தியுள்ளவராக, தடைகள் எதுவும் இல்லாதவராக இருக்கவேண்டும். இப்படிப் பட்டவர் மீது – ரமலான் மாத நோன்பை அதற்குரிய நேரத்தில் நிறைவேற்றுவது கடமையாகும். குர்ஆனும் ஹதீஸும் முஸ்லிம் களின் ஏகோபித்த முடிவும் இதனை எடுத்துரைக்கின்றன. அல் லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي :شهر رمضان الذي أنزل فيه القرآن هدي للناس وبينات من الهدي
والفرقان فمن شهد منكم الشهر فليصمه

„ரமலான் மாதம் எத்தகையதெனில் அதில்தான் குர்ஆன் இறக்கி யருளப்பட்டது„ அது மனிதர்களுக்கு முழுமையான வழிகாட்டியா கவும் நேர்வழியின் தெளிவான அறிவுரைகளைக் கொண்டதாகவும் சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்துக் காட்டக்கூடியதாகவும் இருக்கிறது! எனவே உங்களில் எவர் அம்மாதத்தை அடைகி றாரோ அவர் அம்மாதம் முழுவதும் நோன்பு நோற்கட்டும்„(2:185)

அண்ணல்நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

قال النبي ﷺ : اذا رأيتم الهلال فصوموا متفق عليه

„நீங்கள் பிறையைப் பார்த்தால் நோன்பு வையுங்கள்„ நூல் : புகாரி. முஸ்லிம்

மேலும் நாம் விவரித்த தன்மையுள்ளவர்கள் மீது – உரிய காலத்தில் நோன்பை நிறைவேற்றுவது கடமைஎன்று அனைத்து முஸ்லிம்களும் ஏகோபித்த கருத்து கொண்டுள்ளர்கள்!

இறைநிராகரிப்பாளன் என்றால் அவன் மீது நோன்பு கடமையா காது. அவனிடமிருந்து அது நிறைவேறவும் செய்யாது! ஏனெ னில் அவன் இறைவழிபாடு செய்யத் தகுதியில்லாதவன் ஆவான்!

–அவன் ரமலான் மாதத்தின் மத்தியில் இஸ்லாத்தில் சேர்ந்தால், சென்றுவிட்ட நாட்களின் நோன்பைத் திரும்பநோற்பது அவன் மீது கடமையில்லை! அல்லாஹ் கூறுகிறான் :

لقوله تعالى : قل للذين كفروا ان ينتهوا يغفر لهم ما قدسلف

„(நபியே!) இந்நிராகரிப்பாளர்களிடம் நீர் கூறும் (நிராகரிப்பிலி ருந்து) அவர்கள் விலகிவிடு வார்களாயின் முன்பு செய்த குற்றங் கள் யாவும் அவர்களுக்கு மன்னிக்கப்படும்„அல்குர்ஆன் (8 : 38)

ஒருவன் ரமலானின் பகலில் இஸ்லாத்தில் சேர்ந்தால் அன்றைய மாலை நேரம் வரையில் எதையும் உண்ணாமல் – பருகாமல் இருப்பது அவன்மீது கடமையாகும். ஏனெனில் அவன் இஸ்லாத்

தில் சேர்ந்தபோது நோன்பு கடமையானவர்களில் ஒருவனாக ஆகி விட்டான். ஆனாலும் அன்றைய தினத்தின் நோன்பை அவன் திரும்ப நோற்க வேண்டியதில்லை! ஏனெனில் நோன்பு தொடங்கும் நேரத்தில் அவன் மீது நோன்பு கடமையாயிருக்கவில்லை!

☐ ஆ–சிறுவன்., பருவவயதை அடையும் வரையில் அவன் மீது நோன்பு கடமையாகாது. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

لقول النبي ﷺ : رفع القلم عن ثلاثة عن النائم حتي يستيقظ و عن الصغير حتي يكبر و عن المجنون حتي يفيق - رواه أحمد و ابو داؤد و ا لنسائي

«மூவரின் மீது குற்றம் பதிவு செய்வது நிறுத்தப்பட்டது., 1– தூங்குபவன்.,அவன் விழித்தெழும் வரையில்! 2– சிறுவன்.,அவன் பெரியவனாகும் வரையில்! 3 – பைத்தியம் பிடித்தவன்., அதிலி ருந்து தெளியும் வரையில்!„ நூல் : அஹ்மத், அபூ தாவூது, நஸாஈ

ஆனாலும் சிறுவன் நோன்பு நோற்க ஆற்றல் பெறும் நேரத்தில் அவனுடைய பொறுப்பாளர் அவனை நோன்பு நோற்கும்படி ஏவு வார். வழிபாட்டில் அவனுக்குப் பயிற்சி அளித்துப் பெரியவனாகும் போது அது அவனுக்கு நன்கு பழக்கப்பட்டதாக ஆகிவிட வேண்டும் என்பதேஅதன் நோக்கம்! மட்டுமல்ல, ஸல∴புஸ் ஸாலி ஹீன் எனும் சான்றோர்களைப் பின்பற்றுதலும் அதில் இருக்கிறது! நபித்தோழர்கள் தம்முடைய சிறுபிள்ளைகளை நோன்பு நோற்கச் செய்திருக்கிறார்கள், அவர்களை மஸ்ஜிதுக்கு அழைத்துச் செல் வார்கள். கம்பளிப் பஞ்சினால் செய்யப்பட்ட விளையபாட்டுப் பொருட்களை அவர்களுக்குக் கொடுப்பார்கள். உணவு கேட்டு அவர்கள் அழுதால் விளையாட்டுப் பொருட்களைக் கொடுத்து அவர்களைப் பராக்காக்குவார்கள்!

இன்று பெரும்பாலான பெற்றோர்கள் இது விஷயத்தல் பொடு போக்காக இருக்கிறார்கள். நோன்பு நோற்கும்படி தம் பிள்ளை களை அவர்கள் ஏவுவதில்லை. மட்டுமல்ல, சிலர் நோன்பு நோற் பதில் தாம் ஆர்வமாக இருப்பதுடன் தம் பிள்ளைகளை நோன்பு

நோற்க வேண்டாமெனத் தடுக்கிறார்கள், இதனை அவர்களுக்குச் செய்யும் கருணையெனக் கருதுகிறார்கள். உண்மை என்ன வெனில், இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் – நேர்த்திமிகு அதன் அறிவுரைகளில் தங்களுடைய பிள்ளைகளுக்கு நற்பயிற்சி அளிக்கும் கடமையை நிறைவேற்வதுதான் அவர்கள் செய்யும் கடமையாகும். அந்தப் பயிற்சியைவிட்டும் தம் பிள்ளைகளை யார் தடுக்கிறாரோ அல்லது யார் அதில் குறைபாடு செய்கிறாரோ அவர் அவர்களுக்கும் தமக்கும் அநீதி செய்தவர் ஆவார் !

ஆம்! தம் பிள்ளைகள் நோன்பு நோற்று பிறகு அதனால் அவர்களுக்குத் தீங்கு ஏற்படக் கண்டால் அப்போது நோன்பு நோற்பதை விட்டும் அவர்களைத் தடுப்பது குற்றமாகாது!

பின்வரும் மூன்றில் ஒன்றின் மூலம் ஓர் ஆண்பிள்ளை பருவ நிலை அடைகிறான் : (1) கனவினாலோ பிற காரணத்தினாலோ விந்து வெளியாவது. அல்லாஹ் கூறுகிறான் :

لقوله تعالي . واذا بلغ الاطفال منكم الحلم فليستأذنوا كما استأذن الذين من قبلكم

“உங்கள் சிறுவர்கள் பருவவயதை அடைந்துவிட்டால் அவர்க ளுடைய பெரியவர்கள் எவ்வாறு(வீட்டில் நுழைவதற்கு) அனுமதி கோரினார்களோ அவ்வாறு இவர்களும் அனுமதி பெறட்டும்!” (24 : 59) – மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

لقول النبي ﷺ : غسل الجمعة واجب علي كل محتلم – متفق عليه

“பருவ வயதை அடைந்த ஒவ்வொருவரின் மீதும் – ஜும்ஆ நாளில் குளிப்பது கடமையாகும்” நூல் : புகாரி. முஸ்லிம்

(2) வெட்கத் தலத்தைச் சுற்றிலும் ரோமம் முளைப்பது! இது ஆண்குறியைச் சுற்றி வளரும் ரோமம் ஆகும். அத்திய்யா –அல் குறளி (ரலி) அவர்கள் அறிவிக்கிறர்கள் :

لقول عطية القرظي ﷺ : عرضنا يوم قريظة فمن كان محتلما أو انبت عانتـه قتـل و من لا ترك - رواه أحمد و النسائي

,,பனூா குறைளா போரின்போது (கைது செய்யப்பட்ட) நாங்கள், நபி(ஸல்) அவர்கள் முன்னிலையில் ஆஜர் படுத்தப்பட்டோம். யார் யார் பருவ வயதை அடைந்திருந்தார்களோ அல்லது மர்மஸ்தலத் தில் ரோமம் முளைத்திருந்ததோ அவர்களுக்கு மரண தண்டனை வழங்கப்பட்டது. சிறுவர்களாய் இருந்தவர்கள் விடுதலை செய்யப் பட்டார்கள்!,, நூல்: அஹ்மது, நஸாஈ

(3) பதினைந்து வயது பூர்த்தியாவது.இப்னு உமர்(ரலி) அவர் கள் அறிவிக்கிறார்கள் :

لقول عبد الله بن عمر ﷺ : عرضـت علي النبي ﷺ يوم أحد وأنا ابن أربعة عشر سنة فلم يجزني (يعني ) للقتال)

,, உஹது போரின்போது நபி (ஸல்) அவர்களின் முன்னிலை யில் நான் ஆஜர் படுத்தப்பட்டேன். அப்போது எனக்கு பதினான்கு வயது. எனக்கு நபி (ஸல்) அவர்கள் (போரில் கலந்து கொள்ள) அனுமதி வழங்கவில்லை! - பைஹகியலும் இப்னு ஹிப்பானிலும் உள்ள மற்றோர் அறிவிப்பில்- என்னைப் பருவ வயது அடைந்த வனாக நபியவர்கள் கருதவில்லை. பிறகு அகழ்யுத்தத்தின் போது நபியவர்களிடம் ஆஜர்படுத்தப்பட்டேன். அப்போது எனக்குப் பதி னைந்து வயது! நபியவர்கள் எனக்கு அனுமதி அளித்தார்கள்,, என வந்துள்ளது. பைஹகி -இப்னு ஹிப்பான் ஆகிய நூல்களில் வரும் மற்றோர் அறிவிப்பில்- என்னைப் பருவ வயது அடைந்த வனாக நபியவர்கள் கருதினார்கள் - என உள்ளது.

நா:.பிஉ அவர்கள் கூறுகிறார்கள்:,,கலீ:.பா உமர் பின் அப்துல் அஜீஸ் அவர்களிடம் நான் வந்தேன். இந்த நபிமொழியை அவர்க ளுக்கு அறிவித்தேன். அதற்கு அவர்கள் சொன்னார்கள்: சிறுவன் பருவ வயது அடைந்து பெரியவனாகி விட்டான் என்பதற்குரிய கால அளவாகும் இது,, -பிறகு பதினைந்து வயதைத் தாண்டிய

வர்களுக்கு மானியம் நிர்ணயிக்க வேண்டுமென்று தம்முடைய அதிகாரிகளுக்குக் கடிதம் எழுதினார்கள்„ நூல் : புகாரி

சிறுவன் பருவ வயது அடையும் இந்தமூன்று விஷயங்களில் ஏதேனும் ஒன்றின் மூலம் ஒருசிறுமியும் பருவ வயது அடைகிறாள். அத்துடன் நான்காவதான ஒன்றைக் கொண்டும் அவள் பருவவயதை அடைகிறாள். அதுதான் மாதவிடாய் வருவது. மாதவிடாய் கண்டால் அவள் பெரியவளாகிறாள். அப்போது கடமைகளை நிறைவேற்றும் பொறுப்பு அவள் மீது வந்துவிடுறது! பத்து வயதை அவள் அடையாவிட்டாலும் சரியே!

ஒருவன் ரமலானின் பகலில் பருவவயதை அடைந்தால். அப்போது அவ்வன் நோன்பாளியாக இருந்தால் அதை நிறைவு படுத்துவான்„ அவன் வேறெதுவும் செய்யவேண்டாம். ஆனால் அவன் நோன்பு வைத்திருக்கவில்லை என்றால் அன்றைய பகல் பொழுது மறையும் வரை உண்ணாமல் - பருகாமல் இருப்பது அவனுக்கு அவசியமாகும். ஏனெனில்நோன்பு கடமையானவர்களில் ஒருவனாக அவன் ஆகிவிட்டான். ஆனால் அந்நாளின் நோன்பை அவன் திரும்ப நோற்க வேண்டியதில்லை! ஏனெனில் நோன்பு தொடங்கும் நேரத்தில் நோன்பு கடமையானவர்களில் ஒருவனாக அவன் இருக்கவில்லை!

(4) - பைத்தியம் பிடித்தவன். அதாவது புத்தி சுவாதீனமானவன். இவன் மீது நோன்பு கடமை இல்லை. முன்னர் சொல்லப்பட்ட - மூவர்களைவிட்டும் குற்றம் பதிவு செய்வது நிறுத்தப்பட்டு விட்டது . . . என்கிற நபிமொழியே இதற்கு ஆதாரமாகும். இவன் நோன்பு நோற்றால் அது நிறை வேறாது. காரணம் வணக்க வழிபாட்டை அறிந்துகொள்ளக்கூடிய - மேலும் அதன் பேரில் நிய்யத் - எண்ணம் வைக்கக்கூடிய - புத்தி நிலை அவனுக்கு இல்லை! நிய்யத் - எண்ணத்தைக் கொண்டே அன்றி வழிபாடு நிறைவேறாது! அண்ணல் நபி (ஸல்)அவர்கள் அருளினார்கள் :„அமல்கள் அனைத்தும் நிய்யத் - எண்ணத்தைக் கொண்டே தீர்மானிக்கப் படுகின்றன! ஒவ்வொரு மனிதனுக்கும் - அவன் எதை எண்ணினானோ அதுவே கிடைக்கும் „

சிலநேரம் புத்தி இழந்தும் சிலநேரம் தெளிந்தும் விடுகிறான் எனில் புத்தியிழந்த நேரத்திலன்றி தெளிவடைந்திருக்கும் நேரத்தில் நோன்பு அவன் மீது கடமையாகும்.

பகல் நேரத்தில் அவனுக்குப் பைத்தியம் ஏற்பட்டால் நோன்பு பாழாகிவிடாது. (நோன்பு வைத்திருக்கும் நிலையில்) நோயினாலோ வேறு காரணத்தாலோ அவனுக்கு மயக்கம் ஏற்படுவது போன்று! ஏனெனில் அவன் புத்தியுள்ளவனாக இருந்தபோது சரியான நிய்யத்-தைக் கொண்டு நோன்பு நோற்றுள்ளான், அது முறிந்துவிடும் என்பதற்கு ஆதாரம் எதுவுமில்லை. அதிலும் குறிப்பாக - அவனுக்குப் பைத்தியம் ஏற்படுவது சில குறிப்பட்ட நேரங்களில்தான் என்பது நன்கு அறியப்பட்டிருக்கும்போது நோன்பு முறிவதற்கு எதுவுமில்லை. இதன்படி அவனுக்குப் பைத்தியம் பிடித்த நாளின் நோன்பை திரும்ப நோற்க வேண்டியது இல்லை.

பைத்தியம் பிடித்த ஒருவன், ரமளானின்பகலில் தெளிவடைந்தால் அன்றைய பகல் பொழுது மறையும் வரை உண்ணாமல் - பருகாமல் இருப்பது அவனுக்கு அவசியம். காரணம் நோன்பு கடமையானவர்களில் ஒருவனாக அவனும் ஆகிவிட்டான். அந்நாளின் நோன்பை-களா- செய்வது அவனுக்கு அவசியமாகாது - பருவ வயதை அடையும் ஒரு சிறுவனையும் இஸ்லாத்தில் புதிதாகச் சேர்பவரையும் போன்று!

(5) - தள்ளாத வயதுடைய , பேச்சு தடுமாறும் நிலையை அடைந்த, விபரமறியும் தன்மையையும் இழந்துவிட்ட முதியவர்! இப்படிப்பட்டவர் மீது - நோன்பு நோற்பதும் கடமையில்லை, அதற்குப் பகரமாக உணவு வழங்குதும் கடமையில்லை! காரணம், பகுத்துணரும் தன்மையை அவர் இழந்த காரணத்தினால் கடமைகளை நிறைவேற்றும் பொறுப்பு அவரை விட்டும் நீங்கி விடுகிறது. விபரமறியும் நிலையை அடையாத சிறுவனைப் போன்று ஆகிவிடுகிறார்!

சிலநேரம் விவரமறிந்து பேசுகிறார், வேறுசிலநேரம் உழறுகிறார் எனில் உழறும்நிலையிலன்றி விவரமறிந்து பேசும்நேரத்தில் நோன்பு நோற்பது அவர் மீது கடமையாகும்.- நோன்பைப் போன்றுதான்

தொழுகையும்! உழறும் நிலையிலன்றி விவரமறிந்துபேசும் நேரத்தில் தொழுவது அவருக்குக் கடமையாகும்.

(6) – நோன்பு நோற்க இயலாதவர்! அந்த இயலாமை தொடர்ந்து நீடிக்கிறது., குணமாகிவிடும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை! எடுத்துக்காட்டாக, தள்ளாத வயதுடையவர்., குணமாகும் என்கிற எதிர்பார்ப்புகள் இல்லாதவர் – புற்றுநோய் போன்ற நோயாளி! நோன்பு நோற்பது இவர் மீது கடமை இல்லை. ஏனெனில் அதற்கு அவரால் இயலவில்லை! அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : فاتقوا الله ما استطعتم

„உங்களால் முடிந்தவரை அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்! (64:16) மேலும் கூறுகிறான் :

قال : لا يكلف الله نفسا الا وسعها

"அல்லாஹ் எந்த மனிதரையம் அவரது சக்திக்கு அதிகமாக (ப்பொறுப்புகளைச் சுமத்தி) சிரமப்படுத்துவதில்லை!„ (2 : 286)

ஆனால் ஒவ்வொரு நோன்புக்குப் பகரமாக ஓர் ஏழைக்கு உணவளிப்பது அவருக்குக் கடமையாகும், ஏனெனில் உணவளிப்பதை நோன்புக்கு நிகரானதாக அல்லாஹ் ஆக்கியுள்ளான்., நோன்பு கடமையாக்கப்பட்ட ஆரம்ப காலத்தில் அவ்விரண்டில் எதையும் தேர்வு செய்யலாம்எனும் சுயவிருப்பத்தை அளித்தபோது! எனவே நோன்பு நோற்க இயலாத நிலையில் உணவளிப்பதானது நோன்புக்கு மாற்றாக ஆகுவது தெளிவாகிவிட்டது! ஏனெனில் அதுதான் நோன்புக்கு நிகரானதாக இருக்கும்!

உணவு அளிப்பதில் இரண்டு நிலைகளை மேற்கொள்ளலாம். ஒன்று: பல ஏழைகளுக்குத் தானியமாகவே பங்கிட்டுக் கொடுப்பது. ஒவ்வொருவருக்கும் ஒருசிரங்கை கோதுமை–அதாவது நபிகளார் கணித்த (ஸாவு) மரைக்காலில் கால்மரைக்கால் கொடுப்பது. ஒரு சிரங்கையின் அளவு அரைகிலோ பத்து கிராம். (510 கிலோ கிராம்) அதுஉயர்ரக கோதுமையாக இருக்கவேண்டும். இரண்டு:

உணவாகத் தயார் செய்து வழங்கவது! எத்தனை நோன்புக ளுக்கு உணவளிப்பதுஅவன்மீது கடமையோ அத்தனை நோன்பு களுக்குரிய உணவைத் தயார் செய்து ஏழைகளை அழைத்து உண்ணச் செய்வது.

இமாம் புகாரி (ரஹ்) அவர்கள் சொல்கிறார்கள் : „முதுமை அடைந்த பெரியவர் நோன்புநோற்க இயலாமலாகிவிட்டால் ! அனஸ் (ரலி) அவர்கள் முதுமை அடைந்த பிறகு ஓரிரு ஆண்டுகளாக தினமும் ஓர் ஏழைக்கு ரொட்டியும் இறைச்சியுமாகக் கொடுத்துக் கொண்டு நோன்பை விட்டுவிடுவார்கள்."

– நோன்பு நோற்கஇயலாத முதியவர்களான ஆண்– பெண்கள் குறித்து–அவர்கள் தினமும் ஓர் ஏழைக்கு உணவளிக்வேண்டும் என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்" நூல் : புகாரி

சகோதரர்களே! ஷரீஅத் என்பது அல்லாஹ் வழங்கிய தத்துவ மும் அருளுமாகும். அதன் மூலம் மனிதர்களுக்கு அவன் அருள் பாலித்துள்ளான். ஏனெனில் அந்த ஷரீஅத்– எளிமை, கருணை, உறுதிப்பாடு, அறிவுஞானம் ஆகியவற்றின் மீது அமையப்பெற்ற மார்க்கமாகத் திகழ்கிறது! பருவ வயது அடைந்த, அறிவுடைய ஒவ்வொருவர்மீதும்–அவரவரின் நிலைமைக்கேற்ப பொறுப்புகளை – அந்த ஷரீஅத் மூலம் அல்லாஹ் சுமத்தியுள்ளான். ஒவ்வொருவ ரும் தம் மீதுள்ள பொறுப்புகளை மன நிறைவுடனும் அமைதி யுடனும் நிறைவேற்றவேண்டும் என்பதே நோக்கம். அல்லாஹ்வை இரட்சகனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை நபியாகவும் – அவர்கள் பொருந்தி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதே இலட்சியம்!

இறைநம்பிக்கையாளர்களே! இத்தகைய சீர்மிகு மார்க்கத்தின் பால் உங்களுக்கு வழிகாட்டியதற்காக அல்லாஹ்வைப் புகழுங்கள்! பெரும்பாலான மக்களோ இம்மார்க்கத்தைவிட்டும் வழிதவறிப்போய் விட்ட நிலையில் நீங்கள் நேர்வழியில் வாழ்வது இறையருள் அன்றோ! மேலும் மரணம் வரையில் உங்களை இந்த மார்க்கத்

தில் நிலைபெறச் செய்திடுமாறு அவனிடம் பிரார்த்தனை செய்த வண்ணம் இருங்கள்!

யா அல்லாஹ்! நிச்சயமாக நீதான் ஏகஇறைவன்., வணக்கத்திற் குரிய இறைவன் உன்னைத் தவிர வேறில்லை என்று நாங்கள் சாட்சி சொல்வது கொண்டு உன்னிடம் இறைஞ்சுகிறோம்! நீதான் எல்லோராலும் நாடப்படுகிறவன்! யாரையும் பெறாதவன்–எவராலும் பெறப்படாதவன்! எவரும் நிகராய் இல்லாதவன்.,

மாட்சிமையும் கண்ணியமும் உடையவனே! கருணை காட் டுபவனே! வானங்கள், பூமியின் படைப்பாளனே! நித்திய ஜீவனே! (பேரண்டம் முழுவதையும்) நன்கு நிர்வகிப்பவனே! நீ நேசிக்கிற – பொருந்திக் கொள்கிற அமல்களின்பால் எங்களை வழிநடத்து வாயாக என்று உன்னிடம் இறைஞ்சுகிறோம் ! மேலும் உன்னை இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை நபியாகவும் பெருந்தி ஏற்றுக்கொள்கிற மக்களில் எங்களையும் சேர்த்தருள்வாயாக! மரணம் வரைக்கும் எங்களை அதில் நிலைத்திருக்கச் செய்யுமாறும் உன்னிடம் இறைஞ்சுகி றோம்!

நாங்கள் செய்த குற்றங்களையும் தீமைகளையம் நீ மன்னித்தரு ளவும் எங்களுக்கு உன் அருளிலிருந்து நற்பேறு வழங்க வேண் டும் என்றும் கேட்கிறோம். திண்ணமாக நீயே தாராளமாக வழங்கு பவனாக இருக்கிறாய்.

# المجلس السابع في طائفة من اقسام الناس في الصيام

7-வது மஜ்லிஸ்

# நோன்பும் மக்களும் (2)

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் இணைதுணை இல்லாதவன். குறைகளை விட்டும் தூய்மையானவன். மனைவி-மக்களை விட்டும் பரிசுத்தமானவன். உறுதியான ஏழுவானங்களை உயர்த்தியவன், அவை தூண்களின்றி உயர்ந்து நிற்கின்றன! பூமியை விரிப்பாக அமைத்தவன், அது மலைகளெனும் முளைகளால் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது! உள்ளங்களின் ரகசியத்தையும்-இதயத்தில் மறைத்துவைக்கப்பட்டிருப்பதையும் அவன் அறியக் கூடியவன்! உலகில் என்னென்ன வழிகேடுகளும் நேர்வழிகளும் நிகழ்ந்தனவோ -நிகழவிருக்கின்றனவோ அவை எல்லாவற்றையும் விதியில் நிர்ணயித்தவன்!

அவனது அருளெனும் கடலில் அடியார்களின் படகுகள் செல்கின்றன. அவனது அன்பெனும் மைதானத்தில் இறைபக்தியாளர்களின் குதிரைகள் சுற்றிவருகின்றன. வேண்டுவோரின் தேட்டமும் நாடுவோரின் நோக்கமும் அவனிடத்தே உள்ளன! வணக்கவழிபாட்டின் போது அவனுக்காக அடியார்கள் தாங்கிக்கொள்கிற சிரமங்கள் அவனது கண்ணெதிரில் உள்ளன! இருளில் கருநிற சிற்றெறும்பு ஊர்ந்து செல்வதையும் அவன் பார்க்கிறான். நம்பிக்கையினுள் - மனம் ஏற்படுத்துகிற ஊசாட்டங்களையும் அவன் அறிகிறான்!

கையேந்தி கேட்போர்க்கு வழங்கினான். பயணச்சாதனங்களை அவர்களுக்கு அதிகப்படுத்திக் கொடுத்தான். தூய எண்ணத்துடன் அமல் செய்தோருக்கு ஏராளம் வழங்கினான்!

எண்ணிலடங்காப் புகழ்களைக் கொண்டு நான் அவனைப் புகழ்கிறேன். அவனுடைய அருள் கொடைகளுக்காக அவனுக்கு

நன்றி செலுத்துகிறேன். ஒவ்வொரு நன்றிக்குப் பிறகும் அதிகம் வழங்குவது அவனது நியதியாகும்.

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவன் தனித்தவன்., அவனுக்கு யாதொரு இணையுமில்லை., அவன் அரசன். அடியார்களின் மீது பெரும் கிருபைபொழிபவன்! மேலும் முஹம்மத் நபி, அல்லாஹ் வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கி றேன்.–அவர்கள் புவியெங்கும் வாழும் மனிதகுலம் முழுவதற்கும் இறைத்தூதர் ஆவார்கள்!

அவர்களின் மீது அல்லாஹ் ஸலவாத் எனும்அருட்பேறுகளைப் பொழிவானாக! மேலும் தம் உயிரையும் பொருளையும் (இறை வழியில்) ஈந்த நபித்தோழர் அபூபக்ர் மீதும் ஸலவாத் பொழிவா னாக. மேலும் இஸ்லாத்தின் வெற்றிக்காகப்பெரிதும் உழைத்து – நன்முயற்சி செய்த உமர் மீதும் துன்பம் சூழ்ந்த நேரத்தில் படை திரட்டி உதவிய உஸ்மான்மீதும் ஸலவாத் பொழிவானாக. மேலும் வீரத்திலும் தீரத்திலும் பிரபலமானவரான அலீ மீதும் ஸலவாத் பொழிவானாக. நபியவர்களின் குடும்பத்தினர்–தோழர்கள் அனைவர் மீதும் வாய்மையுடன் அவர்களைப் பின்பற்றிவாழ்வோர் மீதும் – மறுமை நாள்வரை அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அனை வருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! நோன்பைப் பொறுத்து ஐந்துவகை மனிதர் களின் சட்ட விதிகளை முன்னர் விவரித்தோம். இந்த மஜ்லிஸில் இன்னும் சிலரின் சட்ட விதிகளைப் பார்ப்போம்!

6– பயணி., அவர் தனது பயணத்தை – நோன்பை விடுவதற் கான சாக்குப்போக்காக் கருதாமலிருக்கவேண்டும். அப்படிக் கருதி னால் நோன்பை விடுவது அவருக்கு விலக்கப்பட்டதாகும். கட்டா யமாக அவர் நோன்பு நோற்றாக வேண்டும்.

நோன்பைத் தட்டிக்கழிப்பதற்காக அவர் பயணம் மேற்கொள்ள வில்லையெனில், நோன்பை நோற்கவும் விடவும் அவருக்கு அனு மதி உண்டு. பயணம் நெடியதாகவோ குறுகியதாகவோ –

எப்படிஇருந்தாலும் சரியே!விமானம் மற்றும்டாக்சி ஓட்டுநர்களைப் போன்று! ஏனெனில் இது தொடர்பான இறைவசனம் பொதுவா கவே வந்துள்ளது. அது வருமாறு:

ومن كان مريضا أو علي سفر فعدة من أيام اخر يريد الله بكم اليسر و لا يريد بكم العسر

"ஆனால் ஒருவர் நோயாளியாகவோ பயணியாகவோ இருந்தால் அவர் மற்ற நாட்களில் கணக் கிட்டு நோன்பு நோற்றிடவேண்டும். அல்லாஹ் உங்களுக்கு இலகுவை விரும்புகிறான், உங்களுக்குக் கஷ்டத்தைத் தர விரும்பவில்லை!" அல்குர்ஆன் (2 : 185)

அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

وعن أنس ﷺ قال : كنا نسافر مع رسول الله ﷺ فلم يعيب الصائم علي المفطر و لا المفطر علي الصائم متفق عليه "

"நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் பயணம் புறப்பட்டிருந் தோம். நோன்பு நோற்றிருந்தவர்கள், நோற்றாதவர்களைக் குறை சொல்லவில்லை, நோற்காதிருந்தவர்கள் நோற்றவர்களையும் குறை சொல்லவில்லை!" நூல் : புகாரி. முஸ்லிம்

அபூ ஸயீத் அல் குத்ரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறாகள் : "சக்தியுள்ளவர் யாரோ அவர் நோன்பு நோற்றார். அவர் அதனை நல்லதென்று கருதினார். பலவீனர் யாரோ அவர் நோன்பை விட்டு விட்டார். அவர் அதனை நல்ல தென்று கருதினார்." நூல் : முஸ்லிம்

ஹம்ஸா பின் அம்ருல் அஸ்லமி (ரலி) அவர்கள் அறிவிக்கி றார்கள் : "நான் கேட்டேன் : அல்லாஹ்வின் தூதரே! நான் வாகன வசதி உடையவன், அதனை இழுத்துக் கொண்டு செல்கிறேன். அதன் மீது ஏறி பயணம் செய்கிறேன். அதனை வாடகைக்கும் விடுகிறேன். இந்நிலையில் சிலநேரம் இந்த மாதம் - ரமலான்

என்னை வந்தடைகிறது. நானோ இளைஞன்., சக்தியுள்ளவன்., அல்லாஹ்வின் தூதரே! நோன்பைப் பிற்படுத்துவதைவிட நோற்பதே எனக்கு எளிதாக உள்ளது. அல்லாஹ்வின் தூதரே! நான் நோன்பு நோற்கலாமா? நோன்பு நோற்பது எனக்கு நற்கூலியை அதிகரிக்குமா? அல்லது நான் நோன்பை விட்டு விடட்டுமா?„ அதற்கு நபியவர்கள் சொன்னார்கள் : ஹம்ஸாவே,[14] நீர் எப்படி விரும்புகிறீரோ அப்படிச் செய்து கொள்ளும்., நூல்:அபூ தாவூது

ரமலான் மாதத்தில் பயணம் செய்வதுடன் நோன்பு நோற்பது –வாடகைக்கார் ஓட்டுநருக்குச் சிரமமாக இருந்தால் குறிப்பாக – வெயிலின் காரணத்தால் சிரமமாக இருந்தால்–காலநிலை கனிந்து நோன்பு வைப்பது அவருக்கு எளிதாகும் வரை நோன்பை அவர் பிற்படுத்துவார். மேலும் ஒருபயணிக்கு–நோன்பிருப்பது, நோன்பை விடுவது இவ்விரண்டில் எது இலகுவோ அதுவே அவருக்கு நல்லது. இரண்டுமே சம அளவில் இருந்தால் நோன்பு நோற்பது சிறந்தது. ஏனெனில் அதுவே விரைந்து பொறுப்பை நிறைவேற்றுவதாக அமையும். மேலும் மக்களோடு சேர்ந்து நோன்பு நோற்பதுவே அவருக்கு உற்சாகம் கொடுக்கக்கூடியாகவும் உள்ளது. நபி (ஸல்) அவர்களின் வழிமுறையும் அதுவே!

عن ابي الدرداء ﷺ : خرجنا مع رسول الله ﷺ في رمضان في حر شـديد حتي اذا كان أحدنا ليضع يده علي رأسه من شدة الحر و ما فينا صائم الا رسول الله و عبـد الله بن رواحة

அபுத்தர்தா (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„நாங்கள்நபி(ஸல்) அவர்களுடன் பயணம் புறப்பட்டோம். ரமலானில் – கடும் வெயில் காலத்தில்!எந்த அளவுக்கெனில், வெயிலின் கடுமையால் எங்களில்

---

[14] இதன் அறிவிப்புத் தொடரில் பலவீனம் உள்ளது. ஆயினும் மேலும்பல அறிவிப்புச் சான்றுள் இதற்குண்டு. அதன் அடிப்படைப்பொருள் ஸஹீஹ் முஸ்லிமில் பதிவாகியுள்ளது. அதில் வருகிறது: ஹம்ஸா கேட்டார்: அல்லாஹ்வின் தூதரே! புயணத் தில் நோன்பு நோற்கும் அளவுக்கு என்னில் சக்தியை நான் உணர்கிறேன். அது என்மீது குற்றமாகுமா? அதற்கு நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: இது அல்லாஹ் அளித்துள்ள சலுகையாகும். யார் இதைப் பயன்படுத்தினாரோ அவருக்கு அது நல்லதாகும். ஒருவர் நோன்பு நோற்க விரும்பினால் அது குற்றமாகாது...

சிலர் கையைத் தலையில் வைத்து மறைத்துக்கொள்வர். நபியவர்களும் அப்துல்லாஹ் பின் ரவாஹாவும் தவிர வேறு யாரும் எங்களில் நோன்பு வைக்கவில்லை!" நூல் : முஸ்லிம்

(பயணத்தில்)நோன்பு நேற்பது தோழர்களுக்குச்சிரமமாக இருக்கும் செய்தி நபியவர்களுக்கு எட்டியபோது- அவர்களின் நலனை கருத்தில் கொண்டு நபியவர்கள் நோன்பை விட்டுவிடுவார்கள்.

عن جابر ﷺ ان النبي ﷺ خرج ال مكة عام الفتح فصام حتي بلغ كراع الغميم فصام الناس معه فقيل له : ان الناس قد شق عليهم الصيام و انهم ينظرون فيما فعلت فدعا بقدح من ماء بعد العصر فشرب و الناس ينظرون اليه رواه مسلم

ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:„நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்ஆண்டில் மக்காவுக்குக்கிளம்பினார்கள். குராவுல் ஃகமீம் என்ற இடத்தை அடையும் வரை நபியவர் கள் நோன்பு நோற்றிருந்தார்கள். அவர்களுடன் மக்களும் நோன்பு வைத்திருந்தார்கள்- நோன்பு நோற்பது மக்களுக்குக் கடினமாக இருக்கிறது„ நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்றுதான் எல்லோரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அவர்களிடம் சொல்லப்பட்டது. உடனே-அஸருக்குப் பிறகு ஒருகுவளைத் தண்ணீர் தருவித்து மக்கள் பார்க்கும் வண்ணம் அருந்தினார்கள் நபி (ஸல்) அவர்கள்!„ நூல் :முஸ்லிம்

அபூ ஸயீத் -அல் குத்ரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: (ஒருபயணத்தில்) நபியவர்கள் மழைநீர் ஓடும் நதி அருகில் வந்தார்கள். கொதிக்கும் வெயிலுடையநாளில் அவர்கள் நடை பயணிகளாய் வந்தார்கள். நபி (ஸல்)அவர்கள் தங்களுடைய கோவேறு கழுதை மீது அமர்ந்திருந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

மக்களே! நீங்கள் எல்லாம் தண்ணீர் அருந்துங்கள்„ என்று! ஆனால் அவர்கள் (தண்ணீர் அருந்த) மறுத்துவிட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் : நான் உங்கள் அனைவரையும்விட இலகுவை விரும்புகிறவன். மட்டுமல்ல நான் வாக

னத்தில் அமர்ந்து வந்து கொண்டிருக்கிறேன்„ – பிறகும் மக்கள் தண்ணீா அருந்தச் சம்மதிக்கவில்லை! – அப்போது நபி (ஸல்) அவர்கள் தங்களது தொடையை வலித்துக் கீழே இறங்கி தண் ணீர் அருந்தினார்கள். தொடர்ந்து மக்களும் அருந்தினார்கள். தண்ணீர் அருந்தும் எண்ணம் நபியர்களுக்கு இல்லை!„ நூல்: அஹ்மது[15]

பயணத்தில் இருப்பவருக்குநோன்பு நோற்பதுசிரமமாக இருந் தால் அவர் நோன்பு நோற்க வேண்டியதில்லை„நோன்பை விட்டு விடுவார். மேற்சொன்ன–ஜாபிர் (ரலி)அவர்களின் ஹதீஸில் வந்துள் ளது :„நோன்பைத் தொடர்வது சிலருக்குச் சிரமமாக இருந்த நேரத்தில் நபி (ஸல்) அவர்கள் நோன்பை முறித்தார்கள். மக்களில் சிலர் தொடர்ந்து நோன்பு நோற்கிறார்கள் என்று நபியவர்களிடம் சொல்லப்பட்டபோது–அவர்கள்தாம் பாவிகள்„ அவர்கள்தாம் பாவி கள்„ அவர்கள்தாம் பாவிகள்!„ என்று நபியவர்கள் கூறினார்கள்,, நூல் : முஸ்லிம்

ஜாபிர் (ரலி)அவர்கள் மேலும் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) ஒருமுறை பயணம் செய்து கொண்டிருந்தார்கள். (ஓரிடத்தில்) மக்கள் கூட்டமாக நின்று ஒருமனிதர் மீது நிழல் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். இவருக்கு என்ன? என்று நபியவர்கள் கேட்டார்கள். – பயணத்தில் நோன்பு நோற்பது புண்ணியமல்ல„ என்று கூறினார்கள்„ நூல் : புகாரி. முஸ்லிம்

ஒரு நோன்பாளி பகலில் பயணம் மேற்கொண்டால் –அதனால் நோன்பைப் பூரணப்படுத்வது அவருக்குச் சிரமமாக இருந்தால் நோன்பை விடுவது அவருக்குக்கூடும். ஆனால் பயணம் கிளம்பி ஊருக்கு வெளியே அவர் வந்திருக்க வேண்டும். ஏனெனில் நபி (ஸல்)அவர்களும் தோழர்களும் குராவுல் ஃகமீம் என்ற இடத்தை அடையும் வரை நோன்பு நோற்றிருந்தார்கள். நோன்பு நோற்பது மக்களுக்குச் சிரமமாக உள்ளது என்பதை நபியவர்கள் அறிந்த

---

[15] இதன் அறிவிப்புத் தொடர் சிறந்தது. அல் ஃபத்ஹுர் ரப்பானி யில் இதனைச் சொல்லியுள்ளார்கள்.

போது தாங்களும் நோன்பை விட்டுவிட்டார்கள். நபியவர்களுடன் சேர்ந்து மக்களும் நோன்பை விட்டுவிட்டார்கள்!

குராவுல் ∴கமீம் என்பது ஹர்ரா எனும் இடத்தை அடுத்துள்ள கருநிற மலைத்தொடர்ச்சியாகும். அது ∴கமீம் என்று சொல்லப் படுகிற பள்ளத்தாக்குவரை தொடர்கிறது. ∴கமீம் பள்ளத்தாக்கு மர்ருள் ளஹ்ரான் – உஸ்பான் ஆகிய பகுதிகளுக்கு மத்தியில் உள்ளது.

ஒரு பயணி ரமலான் பகலில்– நோன்பு நோற்காத நிலையில் ஊர் வந்தடைந்து பின்னர் அந்நாளில் நோன்பு நோற்றால் அவருக்கு நோன்பு நிறைவேறாது! ஏனெனில் அந்நாளின் தொடக்கத்தில் அவர் நோன்பு வைக்கவில்லை! அதிகாலை உதயத்திற்கு முன்பிருந்து தொடங்கினாலே தவிர கடமையான நோன்பு நிறைவேறாது! ஆனால் அன்றைய நாளின் மீதியுள்ள நேரம் உண்ணாமல் – பருகாமல் இருப்பது அவருக்கு அவசியமா? – இதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது.

சிலர் சொல்கிறார்கள் : நோன்பு காலத்திற்குக் கண்ணியம் அளித்து அன்றைய மீதிநாளில் உண்ணாமல், பருகாமல் இருப்பது அவசியம். அந்நோன்பை மற்றொரு நாளில் களா செய்வதும் அவர் மீது கடமை. காரணம் அன்றைய நாளின் நோன்பு அவருக்கு இன்னும் நிறைவேற வில்லை என்பதனால்!– இது இமாம் அஹ்மத் அவர்களின் பிரபலமான கருத்து ஆகும்.

வேறு அறிஞர்கள் சொல்கிறார்கள் : அன்றைய தினம் மீதி நேரம் உண்ணாமல் – பருகாமல் இருப்பதற்கு அவசியமில்லை. ஏனெனில் அப்படி இருப்பதால் எந்தப் பயனும் இல்லை. அந்த நோன்பை வேறு நாளில் களா செய்வதுதான் அவர் மீது கடமையாக உள்ளதே! பகலின் ஆரம்பத்தில் வெளிப்படையாகவும் அந்தரங்கமாகவும் அவர் நோன்பின்றி இருந்ததன் மூலம் – அது அவருக்கு அனுமதிக்கப்பட்டதன் மூலம் காலத்தின் கண்ணியத்தை அவர் பேணவில்லை எனும் பேச்சு வராது.

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது(ரலி)அவர்கள் சொல்கிறார் : பகலின் ஆரம்பத்தில் யார் உணவு உட்கொண்டாரோ அவர் அதன் இறுதியிலும் உட்கொள்ளட்டும்„ – அதாவது, பகலின் ஆரம்பத்தில் ஏதேனும் தக்க காரணத்தை முன்னிட்டு உணவு உண்பது யாருக்கு ஆகுமானதோ அவர் மீதி நேரங்களிலும உண்ணலாம்.– இது இமாம் மாலிக், ஷாஃபிஈ ஆகியோரின் கருத் தாகும். இது இமாம் அஹ்மத் அவர்களின் மற்றுமோர் அறிவிப்பு மாகும். ஆனாலும் உண்பதையும் பருகுவதையும் அவர் பகிரங் கப்படுத்தமாட்டார். ஏனெனில் அவர் நோன்பை விட்டிருப்பதற்கான காரணம் வெளிப்படையாக தெரிவதில்லை. இந்நிலையில் அவர் அப்படிச் செய்தால் அவரைப் பற்றி தவறான கருத்து ஏற்படலாம். அல்லது மற்றவர்களும் அவரைப் பின்பற்றத் தலைப்படலாம் !

7– நோய் குணமாகிவிடும் என்று ஆதரவு வைக்கப்படுகிற நோயாளி. இவருக்கு மூன்று நிலைகள் உள்ளன.

(1) நோற்பதால் அவருக்குச் சிரமமோ இடைஞ்சலோ ஏற்படாத நிலை! இவர் நோன்பு நோற்பது கடமை. ஏனெனில் நோன்பை விட்டுவிட அனுமதிக்கும் காரணம் எதுவும் அவரிடம் இல்லை.

(2) நோன்பு நோற்பது அவருக்குக் கடினமெனும் நிலை! அத னால் இடைஞ்சல் ஏற்படாது. இப்படிப்பட்டவர் நோன்பை விட்டு விடுவார். ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான் : ஒருவர் நோயாளியாக அல்லது பயணியாக இருந்தால் மற்ற நாட்களில் கணக்கிட்டு நோன்பு நோற்றிட வேண்டும்„ குர்ஆன் – (2:185) – நோன்பு நோற்பது அவருக்கு மக்ருஹ் – வெறுக்கத்தக்கது ஆகும். ஏனெனில் அது அல்லாஹ் அளித்த சலுகையை புறக்கணிப்பதும் தன்னைத்தானே வருத்திக்கொள்வதுமாகும். நபிமொழியில் வந்துள் ளது : அல்லாஹ் அளித்த அனுமதிகளை மக்கள் பயன் படுத்து வதை நிச்சயமாக அவன் விரும்புகிறான்„ அவனுடைய கட்ட ளையை மீறிப்பாவம் புரிவதை அவன் வெறுப்பது போன்று!„ நூல் : அஹ்மத், இப்னு ஹிப்பான், இப்னு ஹுஸைமா[16]

[16] இதன் அறிவிப்புத் தொடரில் குழறுபடி உள்ளது. ஆயினும் நபிமொழிகளிலிருந்தும் ஷரீ அத்தின் அடிப்படைகளிலிருந்தும் ஷவாஹித் – அறிவிப்புச் சான்றுகள் இதற்குண்டு.

(3) நோன்பு நோற்பதால் அவருக்கு தீங்கு ஏற்படும் நிலை! இப்படிபபட்ட நோயாளி நோன்பு நோற்காதிருப்பது கடமையாகும். நோன்புவைப்பது அவருக்கு ஆகுமானதல்ல. ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்:

لقول الله تعالي: ولا تقتلو أنفسكم ان الله كان بكم رحيما

„உங்களை நீங்களே மாய்த்துக் கொள்ளவேண்டாம். திண்ண மாக அல்லாஹ் உங்கள் மீது அளப்பரிய கருணை புரிபவனாக இருக்கிறான்.„ (4:29) – மேலும் அல்லாஹ் கூறுகிறான் :

لقول الله تعالي: لا تلقوا بايديكم الي التهلكة

„உங்களுடைய கரங்களால் உங்களுக்கு அழிவைத் தேடிக் கொள்ளாதீர்கள்!„ குர்ஆன்: (2: 195)

மேலும் அண்ணல் நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள் : திண் ணமாக உனக்கு நீ செய்ய வேண்டிய கடமையும் உன்மீது உள் ளது!„ நூல் : புகாரி

– நம் உடலுக்குச் செய்யவேண்டிய கடமையைச் சேர்ந்தது தான் அதற்கு தீங்கு அளிக்கா திருப்பது„ அல்லாஹ் அளித்த சலுகைகள் இருக்கவே அவற்றைப் பயன்படுத்தாமல் உடலுக்குத் தீங்கு அளிப்பது சரியல்ல! மேலும் நபியர்கள் சொல்லியுள்ளார்கள் :

ولقول النبي ﷺ : لا ضرر ولا ضرار

„நமக்கும் நாம் தீங்களிக்க் கூடாது„ பிறருக்கும் தீங்களிக்கக் கூடாது!„ நூல் : இப்னு மாஜா, ஹாகிம்

–இமாம் நவவி(ரஹ்)அவர்கள்கூறுகிறார்கள்:இந்த நபிமொழிக்கு இன்னும் சில அறிவிப்பு வரிசைகள் உள்ளன„ அவற்றுள் சில சிலவற்றை வலுப்படுத்துவதாகவும் உள்ளன.

ரமலானின் பகலில் நோன்பாளிக்கு நோய் ஏற்பட்டு நோன்பைப் பூரணமாக்குவது அவனுக்குச் சிரமமாக இருந்தால் நோன்பை முறிப்பது அவனுக்குக்கூடும். அதனைஆகுமாக்கும் தக்ககாரணம் இருப்பதால்!

ரமலானின் பகலில் நோன்பு வைக்காதிருக்கும் நிலையில் நோய் குணமானால் அந்நாளில் அவன் நோன்பு இருப்பது நிறை வேறாது. ஏனெனில் பகலின் ஆரம்பத்தில் அவன் நோன்பு நோற்றி ருக்கவில்லை. அதிகாலை உதயத்திற்கு முன்பிருந்தே நோன்பி ருந்தாலே தவிர நோன்பு நிறை வேறாது. ஆயினும் அன்றைய மீதிப் பகலில் உண்ணாமல் – பருகாமல் இருப்பது அவனுக்கு அவசியமா? இல்லையா? இதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது. இதன்விபரம்–பயணி நோன்பு நோற்காதிருக் கும் நிலையில் ஊர் வந்தடைந்தால் . . . . – எனும் பகுதியில் சென்றுள்ளது.

நோன்பு நோற்பதால் நோய் ஏற்படும் என்றோ குணப்படுவதை அது தாமிதப்படுத்தும் என்றோ மருத்துவத்தின் மூலம் உறுதி செய்யப்பட்டால் அப்படிப்பட்டவர் நோன்பைவிடுவது கூடும். ஏனெனில் அவர் தனது ஆரோக்கியத்தைப் பாதுகாத்திட வேண் டும். நோயிலிருந்து தன்னைத் தற்காத்துக் கொள்ளவேண்டும். இந்த அபாயம் நீங்கிவிடும் என்று ஆதரவுவைக்கப்பட்டால் அது நீங்கும் வரையில் எதிர்பார்த்திருக்க வேண்டும். பிறகு, விடுபட்ட நோன்புகளை திரும்பநோற்றிடவேண்டும். அந்த அபாயம் நீங்கும் எனும் அதரவு இல்லை எனில் – அவர் தொடர்பான சட்டம் ஐந் தாவது வகையினரின் சட்டத்தைப் போன்றதாகும். அதாவது, நோன்பு நோற்பதை விட்டுவிட்டு ஒவ்வொரு நளைக்குப் பகர மாக ஓர் ஏழைக்கு உணவு அளிக்க வேண்டும்.

யா அல்லாஹ்! உனக்கு விருப்பமான அமல்களை செய்திட எங்களுக்கு அருள்பாலிப்பாயாக! உனக்கு கோபமூட்டுகிற காரணி களைவிட்டும் உனக்குப் பாவங்கள் புரிவதைவிட்டும் எங்களைத் தூரப்படுத்துவாயாக! எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் ––கருணைமிக்க இறைவனே! உனது கருணையினால் பாவமன்னிப்பு வழங்குவாயாக!

## المجلس الثامن

## في بقية اقسام الناس في الصيام و القضاء

8 வது மஜ்லிஸ்

# நோன்பும் மக்களும் (3)

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் ஏகன்., மகத்துவ மிக்கவன்., தனது கட்டளையை செயல்டுத்தக்கூடியவன்., ஆற்றல் மிக்கவன்., வலிமையுடையவன்., அடக்கியாள்பவன்! கண்களால் அவனைக் காணமுடியாது– கற்பனைகளாலும் அவனை அடைந் திட இயலாது. படைப்பினம் ஒவ்வொன்றையும்– தேவைப்படுபவை என்று அடையாளப் படுத்தினான். இரவையும் பகலையும் மாறி மாறி வரச்செய்வது கொண்டு தனது ஆற்றலின் தன்மைகளை வெளிப்படுத்தினான்!

கடும் நோயினால் துயருபவன் தனது வேதனையைச் சொல்லி முனங்குவதை அல்லாஹ் கேட்கிறான். இருள்சூழ்ந்த இரவில் கருநிற எரும்பு குகையில் ஊர்ந்து செல்வதையும் அவன் பார்க் கிறான். உள்ளங்களில் ஒளிந்திருப்பவற்றையும் மறைக்கப்பட்டிருக் கும் இரகசியங்களையும் அவன் அறிகிறான்!

அவனுடைய தன்மைகளும் அவனைப் போன்றவையே! அவற்றை உவமைப்படுத்துவோர் நிராகரிப்பாளர்கள் ஆவர்! தனக்கு என்னென்ன பண்புப் பெயர்களைச் சூட்டியுள்ளானோ அவற்றை–குர்ஆனிலும் நபிமொழிகளிலும் வந்துள்ளபடி– ஏற்றுக் கொள்வோம்! –"அல்லாஹ்வின் அச்சத்தையும் திருப்தியையும் அடிப்படையாகக் கொண்டு தனது கட்டடத்தை நிர்மாணித்தவன் சிறந்தவனா? அல்லது வெள்ளத்தால் அரிக்கப்பட்ட ஓடைக்கரை யின் மீது தனது கட்டடத்தை நிர்மாணித்தவன் சிறந்தவனா?" (குர்ஆன் 9 : 109)

அல்லாஹ்வைத் துதிப்பதுடன் – இன்பத்திலும் துன்பத்திலும் அவனைப் புகழ்கிறேன்! வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கி றேன். அவன் தனித்தவன்„அவனுக்கு யாதொரு இணையுமில்லை. படைக்கும் ஆற்றலிலும் நிர்வகிக்கும் அதிகாரத்திலும் அவன் தனித்துவம் உடையவனாகத் திகழ்கிறான்! وربك يخلق ما يشاء உம் முடைய இறைவன் தான் நடுவதைப்படைக்கிறான்„ தேர்ந்தெடுத் துக் கொள்கிறான்„

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமையும் அவனுடைய தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சிசொல்கிறேன்„ தூயவர்களான நபிமார்களில் அவர்கள் சிறந்தவர்கள்!

அல்லாஹ், நபியவர்கள் மீது ஸலாத் எனும்அருள் பெரிழவா னாக! மேலும் குகையில் அவர்களுடன் பயணத்தோழராக இருந்த அபூ பக்ர் மீதும் நிராகரிப்பாளர்களை ஒழித்துக் கட்டிய உமர் மீதும் மேலும் வீட்டிலேயே கொலைசெய்யப்பட்டு ஷஹீத்– தியாகி யான உஸ்மான் மீதும் பின்னிரவு நேரங்களில் விழித்தெழுந்து தொழுதவரான அலீ மீதும் ஸலவாத் பொழிவானாக! மேலும் நபி யவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் குறிப்பாக முஹாஜிர்கள் – அன்சார்கள் மீதும் ஸலவாத் பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! நோன்பின் சட்டங்களைப் பொறுத்து ஏழு வகை மனிதர்களின் சட்ட நிலைகள் பற்றி முன்னர் விவரித்தோம். இங்கே மீதி வகையினர் பற்றிய விவரத்தைக் காண்போம்.

(8) மாதவிடாய்ப் பெண்! நோன்பு நோற்பது இவளுக்கு விலக்கப் பட்டுள்ளது. இவளது நோன்பு நிறைவேறாது. ஏனெ னில் பெண்கள் குறித்து நபி (ஸல்)அவர்கள் சொல்லியுள்ளார்கள்:

لقول النبي ﷺ في النساء : ما رايت من ناقصات عقل و دين اذهب للب الرجل الحازم من احديكن قلن : و ما نقصان عقلنا و ديننا يا رسول الله ؟ قال : ا ليس

شهادة المراة نصف شهادة الرجل ؟ قلن بلي قال : فذلك نقصان عقلها , ا ليس اذا حاضت لم تصل و لم تصم ؟ قلن : بلي قال : فذلك من نقصان دينها - متفق عليه

" அறிவிலும் வழிபாட்டிலும் குறைநிலையுடன் இருந்து கொண்டு, உறுதிமிக்க ஆண் மகனின் (கணவனின்) புத்தியை அதிகம் மாற்றக் கூடியவர்களாக உங்களைவிட வேறு யாரையும் நான் காணவில்லை„-அப்போது பெண்கள் கேட்டனர் : அல்லாஹ் வின் தூதரே! எங்களது அறிவும் வழிபாடும் குறைவானது என்பதென்ன?„ அதற்கு நபியவர்கள் கூறினார்கள் : ஒரு பெண் ணின் சாட்சியம் ஆணின் சாட்சியத்தில் பாதியாக இல்லையா? அதற்கு அவர்கள்.. ஆம் „ என்றனர். நபியவர்கள் சொன்னார்கள்: இதுதான் அவளுக்கு அறிவு குறைவு என்பதாகும். அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுவதில்லை., நோன்பு நோற்ப தில்லைதானே? அதற்கு, ஆம், என்று பெண்கள் பதிலளித்தனர். நபியவர்கள் சொன்னார்கள் : இதுதான் அவளது வழிபாடு குறை வானது என்பதாகும்„ நூல் : புகாரி முஸ்லிம்

மாதவிடாய் என்பது -பெண்ணுக்குக் குறிப்பிட்ட சில நாட்க ளில் வழக்கமாக ஏற்படுகிற இயற்கையான உதிரப்போக்கு ஆகும்.

நோன்பு நோற்ற நிலையில் அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் - சூரியன் மறைவதற்கு ஒரு விநாடிக்கு முன்பு என்றால் கூட! அவளது அன்றைய நோன்பு முறிந்துவிடும். அதை வேறொரு நாளில் திரும்ப நோற்பது அவளுக்கு அவசியமாகும்., ஆனால் ந:ஃபிலான நோன்பாக இருந்தாலே தவிர! அதைத் திரும்ப நோற் பது ஸுன்னத் தானே தவிர,. கடமையல்ல!

ரமலானின் பகலில் மாதவிடாய் நின்று சுத்தமானால் அன்றைய மீதிப் பகலில் அவள் நோன்பு பிடிப்பது நிறைவேறாது. ஏனெனில் பகலின் ஆரம்பத்தில் நோன்புக்கு தடையான நிலை அவளிடம் இருந்தது! ஆனால் அன்றைய சூரியன் மறையும் வரை அவள் கட்டாயம் உண்ணாமல்- பருகாமல் இருக்க வேண்டுமா? இதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது. இதன் விவரம்

– நோன்பு நோற்காத நிலையில் ஊர் வந்துசேரும் பயணி பற்றிய குறிப்பில் முன்பு கூறப்பட்டுள்ளது.

ரமலான் இரவில் (மாதவிடாயிலிருந்து ) அவள் சுத்தமானால் – அதிகாலை உதயமாவதற்கு ஒருவிநாடிக்கு முன்பு சுத்தமானாலும் சரியே – நோன்பு அவள் மீது கடமையாகிவிடும். ஏனெனில் நோன்பு கடமையானவர்களில் அவளும் ஒருவர்„ நோன்பைத் தடைசெய்யும் காரணம் எதுவும் அவளிடம் இல்லை! அப்போது அவள் நோன்பு நோற்பது நிறைவேறும்„ அதிகாலை உதயமான பிறகு அவள் குளித்தாலும் சரியே! உதாரணமாக, பெருந்துடக்கு உடையவள் நோன்பு நோற்றுக்கொண்டு அதிகாலை உதயமான பிறகு குளிப்பது போன்று! ஏனெனில் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் : கனவில் விந்து வெளிப்படுவதனால் அல்ல –உடலுறவின் காரணத்தாலேயே பெருந்துடக்கு உடையவர்களாய் நபி (ஸல்) அவர்கள் அதிகாலை வரை இருப்பார்கள். பிறகு ரமலான் மாத நோன்பையும் நோற்பார்கள்„ நூல் : புகாரி, முஸ்லிம்

பிரசவத்துடக்கு உடையவள்–மேலே சொன்ன எல்லாச் சட்ட நிலைகளிலும் – மாதவிடாய்ப் பெண்களைப் போன்றவளாவாள்.

விடுபட்ட நோன்புகளை வேறு நாட்களில் கணக்கிட்டு நோற்பது அவ்விருவர் மீதும் கடமையாகும். ஏனெனில் அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான்: لقوله تعالي فعدة من ايام أخر „ மற்ற நாட்களில் கணக்கிட்டு நோன்பு நோற்றிட வேண்டும்„ – மேலும் ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்கப் பட்டது :

وسئلت عائشة رضي الله عنها : ما بال الحائض تقضي الصوم و لاتقضي الصلاة ؟
قالت : كان يصيبنا ذلك فنؤمر بقضاء الصوم و لانؤمر بقضاء الصلاة رواه مسلم

„ மாதவிடாய்ப் பெண்ணின் நிலைஎன்ன? அவள்ஏன் நோன்பை களா செய்கிறாள்„ தொழுகையை, களா செய்வதில்லை?„ என்று! அதற்கு அவர்கள் சொன்னார்கள்: எங்களுக்கு அது ஏற்பட்டது„ அப்போது நோன்பை களா செய்யுமாறும் தொழுகைளை, களா,

செய்ய வேண்டாம் என்றும் எங்களுக்குக் கட்டளையிடப்பட்டது„
நூல் : முஸ்லிம்[17]

(9) பாலுட்டக் கூடிய அல்லது கர்ப்பவதியாக உள்ள பெண்! இவள் நோன்புநோற்பதினால் தனக்கோ குழந்தைக்கோ இடையூறு ஏற்படுமென்று பயந்தால் நோன்பு நோற்க வேண்டியதில்லை! ஏனெனில் அனஸ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

لحديث أنس بن مالك ﷺ قال : قال رسول الله ﷺ ان الله وضع عن المسافر شطر الصلاة و عن المسافر و الحامل و المرضع الصوم او الصيام اخرجه الخمسة

„திண்ணமாக அல்லாஹ் பயணியைவிட்டும் தொழுகையின் பாதிச் சுமையை குறைத்தான். மேலும் பயணி, கர்ப்பவதி, பாலுட்டும் தாய் ஆகியோரைவிட்டும் நோன்பின் சுமையைக்குறைத்தான்„
நூல் : முஸ்லிம், திர்மிதி, அபூ தாவூத், நஸாஈ, இப்னு மாஜா

பயம் அகன்று நோன்பு நோற்பது இலகுவாகும் போது - எத்தனை நாட்களின் நோன்பை விட்டிருந்தாளோ அத்தனை நாட்களின் நோன்பை அவள் அவசியம் மீண்டும்நோற்றிட வேண்டும்„ நோயிலிருந்து குணமாகும் நோயாளியைப் போன்று!

(10) பிறருக்கு நேரவிருந்த ஆபத்தைத் தடுப்பதற்காக நோன்பை விட்டவர்„ வெள்ளம், தீ, இடிபாடு போன்றவற்றிலிருந்து ஒரு பரிசுத்தமான உயிரைக்[18] காப்பாற்றுவதற்காக நோன்பை விட்டவர் போன்று! உணவு உட்கொண்டு சக்திபெற்றாலே தவிர அந்த மனிதனைக் காப்பாற்றுவது சாத்தியமில்லை என்றிருந்தால் அவர் நோன்பை விடுவது கூடும்! ஏனெனில் அழிவில் இருந்து ஒரு மனிதனைக் காப்பாற்றுவது கடமை„ ஒருகடமை

---

[17] இது உம்தாவின் ஹதீஸ்களில் ஒன்றாகும். அல்-முன்தகா எனும் நூலில் முஹத்திஸ் களில் பலர் இதனை அறிவித்துள்ளதாகக் கூறுகிறார்,

[18] கொலை செய்வது தடை செய்யப்பட்டிருக்கும்படியான பரிசுத்தமான மனித உயிரை!

ஒருகடமை நிறைவேறிடத் துணையாக இருக்கக்கூடியதும் கடமையே! ஆனாலும் விடுபட்ட நோன்பை அவன் அவசியம் வேறு நாளில் நிறைவேற்றியாக வேண்டும்.

அதைப் போன்றுதான் அல்லாஹ்வின் வழியில் ஜிஹாத் செய்வதற்கு—எதிரிகளுடன் போர் செய்வதற்கு—சக்தி பெற வேண்டும் என்பதற்காக நோன்பை விட்டுவிடுவதும்! அதற்காக நோன்பை விடுபவர் வேறுநாளில் அதனை நிறைவேற்றுவார். இத்தகைய நிலமை பயணத்தில் ஏற்பட்டாலும் சரி, ஊரில் இருக்கும்போதே எதிரிகள் வந்தாலும்சரியே, அவர் நோன்பை விட்டுவிடலாம்., ஏனெனில் நோன்பை விட்டுவிட்டுப்போரில் ஈடுபடுவதில் முஸ்லிம்களைத் தற்காத்துக் கொள்வதுடன் இறை மார்க்கத்தை மேலோங்கச் செய்யும் இலட்சியமும் நிறைவேறுகிறது!

அபூ ஸயீத் – அல்குத்ரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : „நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் மக்கா நகர் நோக்கிப் பயணமானோம். நாங்கள் நோன்பு நோற்றிருந்தோம். (வழியில்) ஓரிடத்தில் தங்கினோம். அப்போது நபி(ஸல்)அவர்கள், நீங்கள் உங்கள் எதிரிகளை நெருங்கிவிட்டீர்கள். நோன்பை விடுவது உங்களுக்குப் பலம் அளிக்கக் கூடியதாக உள்ளது என்று சொன்னார்கள். அது ஒரு சலுகையாக ஆனது. எங்களில் சிலர் நோன்பு நோற்றனர்., வேறு சிலர் நோன்பை விட்டனர். பிறகு (பயணமாகி) வேறோர் இடத்தில் தங்கினோம். அப்போது நபி (ஸல்) அவர்கள்„ நிச்சயமாக நீங்கள் உங்கள் எதிரிகளை நாளைக் காலையில் சநிதிக்க இருக்கிறீர்கள். நோன்பைவிடுவது உங்களுக்கு அதிகபலம் அளிக்கக் கூடியதாகும். நோன்பை விட்டுவிடுங்கள்„ என்று சொன்னார்கள். அது கட்டளையாக ஆனது! எனவே நாங்கள் நோன்பை விட்டுவிட்டோம்.„ நூல் : முஸ்லிம்

– போர் செய்வதற்கு வலிமை பெறுவதென்பது பயணம் நீங்கலான தனிப்பட்ட ஒரு காரணம் என்பது இந்நபிமொழியில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது! ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் நோன்பை விடுமாறு கட்டளையிட்டதற்கு – எதிரிகளுடன் போர் புரியும் வலிமை பெறுவதைக் காரணமாகச் சொன்னார்களே தவிர பயணத்தை

அல்ல! அதனால்தான் முதலில் தங்கிய இடத்தில் நோன்பை விடு மாறு அவர்களுக்கு நபியவர்கள் கட்டளையிடவில்லை!

மேற்சொன்ன காரணங்கள் ஒன்றினால் நோன்பை விடுவது யார் யாருக்குக்கூடுமொ அவர், தான் நோன்பு நோற்கவில்லை என்பதை பகிரங்கப்படுத்தக் கூடாது என்று சொல்லப்படமாட்டாது., ஆனால் ஒருநிபந்தனை: அவர் நோன்பை விடுவதற்கான காரணம் வெளிப் படையாக இருக்கவேண்டும்., நோயாளி, நோன்பு நோற்க இயலாத முதியவர் ஆகியோரைப் போன்று!

ஆனால் நோன்பை விட்டதற்கான காரணம் ரகசியமாக இருந் தால் – மாதவிடாய்ப் பெண் மற்றும் அழிவிலிருந்து ஒருவரைக் காப்பாற்றியவர் ஆகியோரைப் போன்று–அவர்கள் உணவு– பானம் உட்கொள்வதை மறைவாக வைத்துக் கொள்ளவேண்டும்., தாம் நோன்பு நோற்காதிருப்பதைப் பகிரங்கப் படுத்தக்கூடாது. இதற்குக் காரணம் பிறர் தம்மைச் சந்தேகிக்கும்படியாகச் செய்யக்கூடாது என்பதே! மேலும் அறியாதநபர் தம் விஷயத்தில் ஏமாற்றம் அடை யக்கூடாது., எவ்விதக் காரணமு மின்றி நோன்பை விடலாம்போல் உள்ளதே என்று அவர் நினைத்துவிடக் கூடாது.

மேலே சொன்ன மனிதர்களில்– வேறுநாளில் நோன்பை நிறை வேற்றுவது யார் யாருக்கு அவசியமோ அவர்கள், எத்தனை நாட்கள் நோன்பு நோற்காமலிருந்தாகளோ அத்தனை நாட்களின் நோன்பை மீண்டும் நோற்க வேண்டும். ஏனெனில் அல்லாஹ் கூறி யுள்ளான்: (அவர்கள்) மற்றநாட்களில் கணக்கட்டு நோன்பு நோற்க வேண்டும்,, – அம்மாதம் முழுவதும் நோன்பு நோற்காமல் இருந் தால் அந்த அனைத்து நாட்களின் நோன்பையும் மீண்டும் நோற் பது அவசியம். அந்த மாதம் *30* நாட்கள் எனில் *30* நாட்கள் நோன்பு நோற்பது அவசியம். *29* நாட்கள் எனில் *29* நாட்கள் மட்டும் நோற்பது அவசியம்!

தடை நீங்கிய நாளிலிருந்து விரைவாக 'களா' செய்வதே சிறந்ததாகும். ஏனெனில் அதுவே நன்மையின் பக்கம் முந்திச்செல் வதாகவும் பொறுப்பை விரைந்து நிறைவேற்றுவதாகவும் உள் ளது.

எத்தனை நாட்களின் நோன்பு அவன் மீது கடமையோ அத் தனை நாட்கள்– அடுத்த ரமலா னுக்கு மீதமிருக்கும் காலகட்டம் வரை ' களா ' நோன்பைத் திரும்பப் பிடிப்பதைப் பிற்படுத்துவது கூடும். ஏனெனில் அல்லாஹ் கூறியுள்ளான் : வேறு நாட்களில் கணக்கிட்டு நோன்புநோற்க வேண்டும். அல்லாஹ் உங்களுக்கு இலகுவை விரும்புகிறான்., உங்களுக்கு கஷ்டம் தர விரும்புவ தில்லை! அல்குர்ஆன் (2 : 185)

நோன்பைத் திரும்பப் பிடிப்பதைப் பிற்படுத்துவது கூடும் என்பது இலகுவின் நிறைவான அர்த்தமாகும். எனவே ரமலான் மாதத்தின் பத்து நாட்களின் நோன்பு அவன் மீது கடமையாக இருந்தால் அடுத்த ரமலானுக்கு பத்து நாட்கள் மீதமிருக்கும் வரை அவற்றை களா செய்வதைப் பிற்படுத்தலாம்.

தக்க காரணம் எதுவுமின்றி இரண்டாமவர் ரமலான் வரை ' களா ' வைப்பிற்படுத்துவது கூடாது. ஏனெனில் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள் :

لقول عائشة رضي الله عنها : كان علي الصوم من رمضان فما استطيع ان اقضيه الا في شعبان – رواه البخاري

"ரமலானின் நோன்பு என் மீது கடமையாக இருந்தது. ஷஅ பான் மாதத்திலேயே தவிர அதனை 'களா' செய்வதற்கு என்னால் இயலவில்லை,, நூல் : புகாரி

மேலும் இரண்டாவது ரமளான் வரை அதைப் பிற்படுத்து வது, அவன் மீது அடுக்கடுக்காய் நோன்புகள் குவிந்துவிடு வதற்கு வழிவகுத்துவிடும். அவற்றை நோற்றுமுடிக்க அவனுக் குச் சிலநேரம் இயலாமலாகிவிடும். அல்லது அவன் இறந்துவிட லாம்!

மேலும் நோன்பு என்பது திரும்பத் திரும்பவரும் ஒருவழி பாடு ஆகும். இரண்டாவதின் காலம்வரை முதலாவதைப் பிற்படுத் துவது கூடாது., தொழுகையைப் போன்று!

மரணம் வரை அவனது இயலாமை நீடித்தால் அதனால் அவன் மீது குற்றமில்லை. ஏனெனில் வேறுசில நாட்களில் கணக் கிட்டு நோன்பு வைப்பதைத்தான் அல்லாஹ் அவன் மீது கடமை யாக்கியிருந்தான்! ஆனால் அப்படிப்பட்ட நாட்களை அவனால் அடையமுடிய வில்லை! எனவே அவனை விட்டும் அக்கடமை நீங்கிவிடுகிறது. ரமலான் மாதம் வருவதற்கு முன்பே இறந்து விட்டவரைப் போன்று! அந்த நோன்பு அவர் மீது கடமை இல்லைதானே!

ஆனால் நிறைவு செய்வதற்குச் சாத்தியம் இருந்தும் அதில் அவன் கவனக்குறைவாக இருந்து மரணம் அடைந்தால் எத் தனை நாட்களின், ‹களா,வை—சாத்தியமிருந்தும் விட்டுவிட்டானோ அத்தனை நாட்களின் நோன்பை அவனுக்குப்பதிலாக அவனுடைய பொறுப்பாளர் நோற்க வேண்டும்! ஏனெனில் அண்ணல் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் :

لقوله ﷺ : من مات وعليه صيام صام عنه وليه– متفق عليه

« நோன்பு கடமையாக இருக்கும் நிலையில் ஒருவர் மரணம் அடைந்துவிட்டால் அவருக்கு பதிலாக அவருடைய பொறுப்பா ளர் நோன்பு நோற்பார்„ நூல் : புகாரி, முஸ்லிம்

பொறுப்பாளர் என்பவர் அவருடைய வாரிசோ உறவினரோ ஆவார். இறந்தவரின் மீது எத்தனை நாட்களின் நோன்பு கடமை யாக உள்ளதோ அத்தனை நாட்களின் கணக்கில் ஒரு குழுவினர் சேர்ந்து ஒரே நாளில் அவர் சார்பாக நோற்பது கூடும்.

ஹஸன்(ரலி)அவர்கள் கூறியதாக இமாம்புகாரிஅவர்கள் பதிவு செய்துள்ளார்கள் : இறந்தவர் சார்பாக முப்பது பேர் ஒரே நாளில் நோன்பு நோற்றால் அது கூடும்„

பொறுப்பாளர் யாரும் இல்லையெனில் அல்லது இருக்கிறார்„ ஆனால் இறந்தவர் சார்பாக நோன்பு நோற்க அவர் விரும்பவில் லையெனில் – எத்தனை நாட்களை, ‹களா, செய்வது இறந்த வருக்கு சாத்தியமாகஇருந்ததோ அத்தனை நாட்களின் எண்ணிக்

கையில் ஒவ்வொரு நாளுக்குப் பகரமாக ஓர் ஏழைக்கு அவரது சொத்திலிருந்து உணவுப் பொருள் வழங்கப்படவேண்டும். ஒவ்வொரு ஏழைக்கும் ஒரு சிரங்கை கோதுமை வழங்க வேண்டும். அதன் எடை அளவு : நல்ல கோதுமையில் அரைக்கிலோ 10 கிராம் ஆகும்.

சகோதரர்களே! இதுதான் நோன்பின் சட்டங்களைப் பொறுத்து மக்களில் எத்தனை பிரிவி னர்கள் உள்ளனர் என்கிற விபரமாகும். ஒவ்வொரு பிரிவினருக்கும் அவரவரின் நிலைக்கேற்ப அல்லாஹ் சட்டம் வகுத்துள்ளான். இவ்வாறாக இந்த ஷரீஅத்தில் உங்கள் இரட்சகன் அமைத்துள்ள தத்துவத்தை அறிந்து கொள்ளுங்கள்! அதனை இலகுவாக்கி, நடைமுறைக்கு ஏற்றதாக்கி உங்கள் மீது அவன் அருள் புரிந்தமைக்காக அவனுக்கு நன்றி செலுத்துங்கள். மேலும் மரணம் அடையும் வரையில் இந்த மார்க்கத்தில் நிலைத்திருப்பதற்கு அவனிடம் பிரார்த்தனை செய்யுங்கள்!

யா அல்லாஹ்! நாங்கள் உன்னை நினைவு கூர்வதற்குத் தடையாக உள்ள பாவங்களை எங்களுக்கு மன்னித்தருள்வாயாக! உன்னை வணங்குவதில்–உனக்கு நன்றி செலுத்துவதில் நாங்கள் செய்த குறைபாடுகளைப் பொறுத்தருள்வாயாக! உன்பக்கம் வந்து சேரும் வழியில் எங்களை நிரந்தரமாக நடைபோடச் செய்வாயாக! உன் பக்கம் நேர்வழி பெறுவதற்கான ஒளியை எங்களுக்கு வழங்குவாயாக!

யா அல்லாஹ்! உன்னுடன் உரையாடும் இன்பத்தை எங்களுக்கு அருள்வாயாக! உனது உவப்பைப் பெற்ற பாக்கியசாலிகளின் வழியில் எங்களையும் செலுத்துவாயாக! எங்களின் குற்றங் குறைகளில் இருந்து எங்களைக் காப்பாற்றுயாக! எங்களது பொடுபோக்கிலிருந்து எங்களை விழிப்படையச் செய்வாயாக! எங்களுக்கு நல்லறிவின் உள்ளுணர்வை ஏற்படுத்துவாயாக! உனது அருளால் எங்களது லட்சியத்தை அழகாக்குவாயாக! யா அல்லாஹ்! நாளை மறுமையில் இறைபக்தியாளர்களின் குழுவில் எங்களை எழுப்புவாயாக! உன்னுடைய நல்லடியார்களின் குழுவில் எங்களைச் சேர்ப்பாயாக!

## المجلس التاسع--في حكم الصيام

9-வது மஜ்லிஸ்

# நோன்பின் தத்துவங்கள்

எல்லாப் புகழும் இறைவனுக்கே! அவனே இரவையும் பகலையும் இயக்கக்கூடியவன்.,மாதங்களையும் வருடங்களையும் சுழன்று வரச் செய்பவன்., அவன் அரசன்., தூய்மையானவன்., முழுக்க முழுக்க சாந்தியுடையவன்., மகத்துவத்திலும் நீடித்திருப்பதிலும் தனித்தவன்., குறைபாடுகளைவிட்டும் மனிதர்களுக்கு ஒப்பாகுதல்களை விட்டும் தூய்மையானவன்!

நரம்புகளினுள் இருப்பவற்றையும் எலும்புகளினுள் உள்ளவற்றையும் அவன் பார்க்கிறான். மெல்லிய குரல்களையும் நுண்ணிய பேச்சையும் கேட்கிறான்! கருணை பொழியும் இறைவன்., அதிக அளவு உபகாரம் செய்பவன்., ஆற்றல் மிக்கவன்., பழிவாங்குவதில் கடுமையானவன்., உலகிலுள்ள எல்லாவற்றையும் சரியாக நிர்ணயிப்பவன்.,அழகியமுறையில் அவற்றை இயக்குபவன்..சட்டநெறிகளை வகுத்தவன்! ஆகா! அந்தச் சட்டங்களைத்தான் எத்தனை சிறந்த முறையில் உறுதிப்படுத்தியிருக்கிறான்!

அவனது ஆற்றல் கொண்டுதான் காற்று சுழல்கிறது! மேகம் செல்கிறது. அவனது நுண்ணறிவு மற்றும் கருணையினால்தான் இரவு - பகல்கள் மாறிமாறிச் சுழன்று வருகின்றன!

மாட்சிமைமிக்க ஆற்றல்களுக்காகவும் அழகிய அருட்கொடைகளுக்காகவும் இறைவனை புகழ்கிறேன். அதிகஅளவில் அருளை வேண்டுபவன்போல் அவனுக்கு நான் நன்றி செலுத்துகின்றேன்!

அறிவு மற்றும் கற்பனையினால்கூட அவனைச் சரியாகஅறிந்திட முடியாதே அப்படிப்பட்ட அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன்

இல்லை என்று சாட்சியம் அளிக்கின்றேன். மேலும் மனிதருள் மாணிக்கமாகத் திகழ்கிற முஹம்மத் நபி அவர்கள் அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சியம் அளிக்கி றேன்.

அவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் எனும் அருட்பேறுகள் பொழிவானாக! இஸ்லாத்தை முதன்முதலில் தழுவியவரான நபித் தோழர் அபூ பக்ர் மீதும்– ஷைத்தான் யாரைக் கண்டால் விரண் டோடுவானோ அப்படிப்பட்ட உமர் மீதும்– துன்பம் சூழ்ந்த நேரத் தில் படைவீரர்களைத்தமது செல்வத்தால் அனுப்பிவைத்து வீரத் தில் நிலைத்து நின்ற உஸ்மான் மீதும் –பரந்து விரிந்த கடலாக வும் சினம்கொண்ட சிங்கமாகவும் திகழ்ந்த அலீ மீதும் ஸலவாத் பொழிவானாக! மேலும் நபியவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் மற்றும் வாய்மையுடன் அவர்களைப் பின்பற்றி வந்தோர் அனை வர் மீதும் என்றென்றும் அல்லாஹ் ஸலவாத் எனும் அருட்பேறு கள் பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

அல்லாஹ்வின் அடியார்களே! அறிந்து கொள்ளுங்கள் : தன்னு டைய படைப்பினங்களின் விஷயத்தில் தீர்ப்பளிக்கும் நிறைவான அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டுமேஉண்டு. அவனுடைய படைப் புகளிலும் நெறிமுறைகளிலும் உள்ள முழுமையான தத்துவங் களை அவன்மட்டுமே அறிவான். படைப்பதிலும் நெறிடுறைகளை வகுப்பதிலும் அவன் விவேகமானவனாக இருக்கிறான். மனிதர் களை விளையாட்டுக்காக அவன் படைக்கவில்லை., அவர்களை வெறுமனே விட்டுவிடவுமில்லை. ஷரீஅத் – நெறிமுறைகளை அவர்களுக்கு வகுத்தளித்திருப்பது வீணுக்காக அல்ல! உண்மை யாதெனில், பெரியதொரு லட்சியத்திற்காகவே அவர்களைப் படைத் திருக்கிறான்.,ஒருமகத்தான காரியத்திற்காகவே அவர்களை உலகத் திற்குக் கொண்டுவந்திருக்கிறான்! நேரான வழியை அவர்களுக்கு விளக்கிக் கொடுத்திருப்பதும் ஷரீஅத்– நெறிமுறைகளை அவர்க ளுக்கு வகுத்தளித் திருப்பதும் எதற்காகவெனில், அவர்களின் ஈமான்–இறைநம்பிக்கை அதிகரிக்க வேண்டும்., அவற்றின் மூலம் அவர்களின் வழிபாடு முழுமையடைய வேண்டும் என்பதற்காகத் தான்!

ஆம்! அல்லாஹ் மனிதர்களுக்கு வகுத்தளித்துள்ள எல்லா வணக்க வழிபாடுகளுக்கும் ஒரு நிறைவான தத்துவம் உண்டு. அதனை அறிந்தவர்கள் அறிந்தார்கள்., அறியாதவர்கள் அறியாது போனார்கள்! ஏதேனும் வழிபாட்டின் தத்துவத்தை நாம் அறியாதிருப்பதன் பொருள், அந்த வழிபாட்டிற்கு எந்த தத்துவமுமில்லை என்பதல்ல., மாறாக அல்லாஹ் அதில் வைத்துள்ள தத்துவத்தை அறிவதில் நம்மிடம் குறைபாடு உள்ளது என்பதைத்தான் அது காட்டுகிறது.

و ما اوتيتم من العلم الا قليلا

"உங்களுக்கு மிகக் குறைவான ஞானமே வழங்கப்பட்டுள்ளது" அல்குர்ஆன் : ( 17 : 85 )

திண்ணமாக அல்லாஹ் வழிபாடுகளை வகுத்தளித்திருப்பதும் நடைமுறை விவகாரங்களை ஒழுங்கு படுத்தியிருப்பதும்– மனிதர்களைச் சோதனைக்குள்ளாக்க வேண்டுமெனும் நோக்கத்தில்தான்! அதாவது, யார் தன் இறைவனை வழிபடுகிறார்., யார் தனது மன இச்சையை வழிபடுகிறார் என்று அதன் மூலம் தெளிவாக வேண்டும் என்பதற்காகத்தான்!

யார் இந்த வணக்கவழிபாடுகளையும் அந்த நெறிமுறைகளையும் திறந்த உள்ளத்துடனும் மனநிம்மதியுடனும் ஏற்றுக் கொண்டாரோ அவரே தன் இறைவனை வழிபடக்கூடியவர். தன் இறைவனின் கட்டளைக்குக் கட்டுப்படுவதற்காக தன் மனஇச்சையைத் துறந்தவர்!

எவர் வணக்கவழிபாடுகளில் தான் விரும்பும் சிலவற்றை மட்டும் ஏற்றுக்கொள்கிறாரோ – தனது விருப்பத்திற்கும் நோக்கத்திற்கும் ஒத்துவரக்கூடிய நெறிமுறைகளை மட்டும் பின்பற்றுகிறாரோ அவர் தனது மன இச்சையை வழிபடக்கூடியவராவார்., அல்லாஹ்வின் ஷரீஅத்தை வெறுத்தவராவார்., தன் இறைவனுக்குக் கீழ்படிவதைப் புறக்கணித்தவராவார்! அத்தகையவர் தனது மனஇச்சையைத் தன் தலைவராக ஆக்கினாரே தவிர மனத்தைத் தனக்குக் கீழடங்கிப் போகக்கூடியதாய் ஆக்கவில்லை! தன் விருப்பத்திற்கு

ஏற்றவாறு அமையவேண்டும் எனும் வகையில் அல்லாஹ்வின் ஷரீஅத்தை ஆக்கிவிட்டார். அவரது அறிவு குறைபாடு உடைய யதாக இருந்தும் - அதன் விவேகம் குறைந்திருப்பதுடனும் அவர் இப்படி விரும்பிவிட்டார்! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : و لو اتبع الحق أهواء هم لفسدت السموات و الارض ومن فيهن
بل اتيناهم بذكرهم فهم عن ذكرهم معرضون

"மேலும் சத்தியம் அவர்களின் மன இச்சையைப் பின்பற்றிச் செல்லுமாயின் வானங்கள், பூமி மற்றும் அவற்றிலுள்ள அனைத்தின் ஒழுங்கமைப்பும் சீர் குலைந்து போயிருக்கும் - உண்மை என்னவெனில் அவர்ளுக்கே உரிய நல்லுரையை அவர்களிடம் நாம் கொண்டுவந்திருக்கிறோம்., அவர் களோ தங்களது நல்லுரையைப் பறக்கணித்துக் கொண்டிருக்கிறார்கள்!,,குர்ஆன் (23 : 71)

அல்லாஹ்வின் விவேகத்தின் பாற்பட்டதுதான் இதுவும். அதாவது, வணக்கவழிபாடுகளை பல வகைகளாக அவன் ஆக்கியுள்ளான் என்பதும்! எதற்காகவெனில் ஏற்றுக்கொள்வதும் திருப்தியும் தெளிவுபடுவதற்காக!

و ليمحص الله الذين آمنوا

,, (இவ்வாறெல்லாம் சோதனை செய்வது) நம்பிக்கையாளர்களை அல்லாஹ் பிரித்தறிவ தற்காகதான்... ,, குர்ஆன்(3 : 143)

மக்களில் சிலர் உள்ளனர்.,அவர்கள் வழிபாடுகளில் ஒரேயொரு வகையை மட்டும் பொருந்திக்கொள்கிறார்கள்., அவற்றை மட்டும் நிறைவேற்றுகிறார்கள்! ஆனால் அவர்கள் வேறுசிலவழிபாடுகளை வெறுக்கிறார்கள். அதில் அலட்சியம் செய்கிறார்கள் !

அல்லாஹ் சிலவழிபாடுகளை உடலுறுப்புகளுடன் தொடர்புடைய வையாக ஆக்கினான்., தொழுகையைப் போன்று! - வேறு சிலவற்றை மனதிற்குவந்த செல்லத்தைச் செலவுசெய்வதுடன் தொடர்புடையவையாக ஆக்கினான்., ஜகாதைப் போன்று!- வேறு

சில வழிபாடுகளை உடலுறுப்புகள் , செல்வம் ஆகிய இரண்டுடனும் தொடர்படையவையாக ஆக்கினான்., ஹஜ் மற்றும் ஜிஹாத் போன்று! - இன்னும் சில வழிபாடுகளை, பிரியமானவற்றையும் ஆசைப்படுகின்றவற்றையும் விட்டும் மனத்தைக் கட்டுப்படுத்துவதோடு தொடர்புடையவையாக ஆக்கினான்., நோன்பு போன்று!

ஒரு மனிதன் இப்படிப்பட்ட வணக்கவழிபாடுகளைச் செயல்படுத்தினால், எந்த முறையில் நிறைவேற்ற வேண்டுமென உள்ளதோ அந்த முறையில் - எவ்வித வெறுப்பும் குறைபாடுமின்றி முழுமையாகஅவற்றை நிறைவேற்றினால்-அவ்வழியில் களைப்பையும் கடும் சிரமத்தையும் தாங்கிக் கொண்டால் அதாவது, அவனுக்கு விருப்பமான செல்வத்தைப் பிறருக்கு வழங்கிடவும் மேலும் தனது மனத்தை - அதன் ஆசைகளை விட்டு தடுத்திடவும் செய்தால் (இவை அனைத்தையும்) தன் இறைவனுக்குக் கீழ்ப்படிந்தவனாகவும் அவனது கட்டளைக்குக் கட்டுப்பட்டவனாகவும் அவனது ஷரீஅத்தில் விருப்பம் கொண்டவனாகவும் நிறைவேற்றினால் அது, தன் இறைவனுக்கு அவன் முழுமையாக அடிமைப்பட்டவன் என்பதற்கான அடையாளமாகும். மேலும் தன் இறைவனுக்கு அவன் முழுமையாகக் கீழ்ப்படிகிறான்., அவனை நேசிக்கிறான் என்பதற்கும் அடையாளமாகும்-ஆம்! இதன் மூலம், அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபாலித்துவரும் இறைவனாகிய அல்லாஹ்வுக்கு முழுமையாய்அடிமைப்பட்டிருக்கும் தன்மை அவனில் உறுதியாகிவிடுகிறது!

- இதுவரை சொல்லப்பட்ட விஷயங்கள் தெளிவாகிவிட்டதெனில் இப்போது நீங்கள் அறிந்துகொள்ளவேண்டும்: நோன்புக்கு அநேகத் தத்துவங்கள் உள்ளன. நோன்பை இஸ்லாத்தின் கடமையாகவும் அதன் அடிப்படை அம்சங்களில் ஒன்றாகவும் ஆக்கியது அந்தத் தத்துவஙகள்தாம்!

☐ நோன்பின் தத்துவங்களில் ஒன்று என்னவெனில், அது அல்லாஹ்வுக்குரிய ஒரு வழிபாடு., அதை மேற்கொள்ளும் மனிதன் தன் இரட்சனின் பக்கம் நெருங்கிச் செல்கிறான்.,உணவு-பானம், உடலுறவு ஆகியவை - அவனுக்கு விருப்பமானவையாகவும் ஆசைகொள்கத் தக்கவையாகவும் உள்ள நிலையில் அவற்றைத்

துறப்பதன் மூலம் இறையண்மை அவனுக்குக் கிடைக்கிறது.

இப்படிச் செயவதன் மூலம் செய்வதன் மூலம் அவனது ஈமான் - இறைநம்பிக்கையின் உண்மைநிலை வெளிப்படுதுடன் அல்லாஹ்வுக்கு அவன் அடிமைப்பட்டிருப்பதும் அல்லாஹ்வின் மீதுஅவன் கொண்டுள்ள அன்பின் வலிமையும் - அல்லாஹ்விட முள்ள மறுமைப் பேறுகளை அவன் ஆதரவு வைத்திருப்பதும் தெரிய வருகிறது!

ஏனெனில் ஒருமனிதன் தன் மனத்திற்குகந்ததை விட்டுவிடு கிறான் எனில் அவனிடத்தில் அதைவிட முக்கியமாக உள்ள ஒன்றைக் கருத்தில் கொண்டுதான் அப்படிச்செய்வான்!

எந்தப் பொருள்களின் ஆசை இயற்கைளாக மனிதனின் உள்ளத்தில் படைக்கப்பட்டுள்ளதோ அந்தப் பொருள்களின் ஆசை யைத் துறந்துவிடவேண்டும்., இதுதான் நோன்பின் மூலம் இறைவன் விரும்புவது என்பதை அறிந்து கொண்ட ஓர் இறைநம்பிக்கையாளன் தனது மனவிருப்பத்தைக் காட்டிலும் தன் எஜமானனின்—இறைவனின் விருப்பத்திற்குமுன்னுரிமை கொடுத்தா னெனில் மேலும் அந்தப்பொருள்களின்மீது அதிக அளவில்அவன் ஆசை வைத்தநிலையில் அவற்றை அவன் விட்டு விட்டான் னில் எதற்காக அப்படிச் செய்தான்? ஆம்! அல்லாஹ்வுக்காக அவற்றைத் துறப்பதில் தனக்கு இன்பமும் மனஅமைதியும் உள் ளன என்றுஅறிந்ததால்தான் அப்படிச் செய்தான்!

இதனால்தான் முஸ்லிம்களில் பெரும்பாலோரைக் காணலாம்: ரமளான் மாதத்தின் ஒரேஒருநாள் நோன்பைக்கூட தக்க காரண மின்றி விட்டுவிடுமாறு அவர்களை வற்புறுத்தினால்கூட— அவர்க களைஅடித்தாலும்கூட—சிறைப்பிடித்தாலும்கூட அதற்கு அவர்கள் உடன்படுவதில்லை! - இதுதான் நோன்பின் தத்துவங்களில் மிகப்பெரிய - முக்கியத்துவம் வாய்ந்த தத்துவமாகும்!

நோன்பின் மற்றொருதத்துவம் - அது இறையச்சத்திற்குக் காரணமாக அமைந்துள்ளது என்பதாகும். அல்லாஹ் குர்அனில் கூறுகிறான்:

يا ايها الذين آمنوا كتب عليكم الصيام كما كتب علي الذين من قبلكم لعلكم تتقون

“இறைநம்பிக்கை கொண்டவர்களே! உங்களுக்கு முன் வாழ்ந்து சென்றவர்கள் மீது நோன்பு கடமையாக்கப்பட்டதுபோல் உங்கள் மீதும் கடமையாக்கப்பட்டுள்ளது., நீங்கள் இறையச்சம் கொள்ளக் கூடும் என்பதற்காக!„ (2: 183)

ஏனெனில் நோன்புநோற்பவன் வணக்கவழிபாடு செய்யவேண்டு மென்றும் பாவங்களை விட்டும் விலகவேண்டுமென்றும் ஏவப்பட் டுள்ளான். நபி (ஸல்)அவர்கள் கூறியிருப்பது போன்று: எவர்பொய் பேசுவதையும் பித்தலாட்டம் செய்வதையும் அபத்தமாக நடப்பதை யும் விட்டுவிடவில்லையோ அவர் உண்ணாமலும் பருகாமலும் இருப்பது குறித்து அல்லாஹ்வுக்கு எந்த அக்கரையுமில்லை!„ நூல் : புகாரி

நோன்பாளி நோன்பு வைத்திருக்கும் நேரத்தில் ஏதேனும் பாவச்செயல் செய்ய நாடும் போது, தாம் ஒருநோன்பாளி என்பதை நினைவு கூர்கிறார். உடனே அந்தப்பாவச் செயலைவிட்டும் விலகி விடுகிறார்.

இதனால்தான் தன்னைத் திட்டுகிறவனிடமும் ஏசுகிறவனிடமும் ‘நான் நோன்பாளி’ என்று கூறவேண்டும் என்று நபி(ஸல்)அவர்கள் கட்டளையிட்டார்கள், இதன்நோக்கம் திட்டுவதையும் ஏசுவதையும் விட்டு விலகியிருக்க நோன்பாளிக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது என்று தன்னை ஏசுபவனுக்கு எச்சரிக்கை செய்வதாகும். மேலும் நோன்பாளி – தாம் நோன்பு வைத்திருப்பதைத் தனக்கு நினைவு படுத்திக் கொள்வதுமாகும். அப்போது பதிலுக்குப் பதில் திட்டு வதையும் ஏசுவதையும் தவிர்த்துக் கொள்வார்!

☐ நோன்பின் மற்றொரு தத்துவம் என்னவெனில், சிந்திப்பதற் கும் (இறைவனை திக்ர்) நினைவு கூர்வதற்கும் உள்ளத்திற்குத் தனிமைகிடைகிறது என்பதாகும்.ஏனெனில் ஆசைப்படும் பொருள் களையெல்லாம் உண்பதென்பது மெய் மறதியை உண்டாக்கும். சிலநேரம் இதயத்தையே இறுகச் செய்துவிடும். சத்தியத்தை விட்டும் இதயத்தைக்குருடாக்கிவிடும். இதனால்தான் உணவை யும் குடிப்பையும் குறைத்துக் கொள்ளும்படி நபி(ஸல்) அவர்கள் அறிவுறுத்தினார்கள் :

فقال ﷺ : ما ملأ ابن آدم وعاء شرا من بطن , بحسب ابن آدم لقيمات يقمن صلبه فان كان لا محالة فثلث لطعامه و ثلث لشرابه و ثلث لنفسه – رواه احمد[١٩] و النسائي و ابن ماجة

„ஆதத்தின் மகன் மிகவும் கெட்டதொரு பையை நிரப்புகிறானெனில் அது வயிறாகத்தான் இருக்கும். ஆதத்தின் மகனுக்கு அவனது முதுகை நிமிர்த்துவதற்கு ஒருசில கவளங்களே போதுமானதாகும். அதிகம் உண்ணத்தான் வேண்டுமெனில் (வயிற்றின்) மூன்றில் ஒரு பகுதியை உணவுக்காகவும் மற்றொரு பகுதியைத் தண்ணீருக்காகவும் இன்னொரு பகுதியைத் தனக்காகவும் ஆக்கிக் கொள்ளட்டும்„ நூல்: அஹ்மத், நஸாஈ, இப்னு மாஜா19

நபி (ஸல்) அவர்களின் எழுத்தர்களில் ஒருவரான ஹன்ழலா –அல் உஸைதி (ரலி) என்பார் நபியவர்களிடம் சொன்னார்கள் : „ஹன்ழலா நயவஞ்சகனாகிவிட்டான்„ என்று! –அதற்கு நபி (ஸல்) என்ன இது? என்று கேட்டார்கள்! அதற்கு அவர்கள் சொன்னார்கள்: அல்லாஹ்வின் தூதரே! தங்களது சமூகத்தில்நாங்கள் இருக்கும் போது நரகம் – சொர்க்கம் பற்றி எங்களுக்கு நல்லுரை கூறுகிறீர்கள். அப்படியே நாங்கள் அவற்றைக் கண்ணெதிரில் காண்பதுபோல் உள்ளோம்! ஆனால் தங்களைவிட்டும் நாங்கள் சென்றுவிடும் போது மனைவி–மக்கள் தோட்டந்துறவு விஷயத்தில் மூழ்கி பெரும்பாலான அறிவுரைகளை மறந்துவிடுகிறோம். (இந்த ஹதீஸ் இன்னும் தொடர்கிறது) அதில் வருகிறது : ஹன்ழலாவே! அப்படியும் ஒரு நேரம்! இப்படியும் ஒரு நேரம்! என்று மூன்றுதடவை நபியவர்கள் சொன்னார்கள்!„நூல்: முஸ்லிம்

அபூ ஸுலைமான் – அத் தாரானி அவர்கள் சொல்கிறார்கள் : „உடல் பசித்தும் தாகித்தும் இருந்தால்தான் இதயம் தெளிவடையும்„ மென்மை பெறும். வயிறு நிறைந்துவிட்டால் இதயம் குருடாகிவிடுகிறது! „

---

[19] இமாம் திர்மிதி (ரஹ் ) அவர்கள் இதனை அறிவித்தவிட்டு இது ஹஸன்– ஸஹீஹ் என்று சொல்லியுள்ளார்கள் . ஹாகிம் அவர்களும் இதனை ஆதாரப்பூர்வமான ஹதீஸ் என்று சொல்லியுள்ளார்கள்.

☐ நோன்பின் இன்னொரு தத்துவம் என்னவெனில் ஒருசெல் வந்தனுக்குச் செல்லத்தின் மூலம் அல்லாஹ் எந்த அருட்கொடை வழங்கியுள்ளானோ அதனை அந்தச் செல்வந்தன் அறிந்துகொள்வ தாகும். உணவு, பானம், மனைவியுடன் கூடிவாழும் பேறு ஆகிய வற்றை அவனுக்கு வழங்கி அல்லாஹ் அருள்புரிந்துள்ளான். அதேநேரம் மக்களில்பலர் இவைகிடைக்காமல் உள்ளனர்! எனவே இத்தகைய அருட்கொடைகளுக்காக அல்லாஹ்வை அவன் புகழ் கிறான்! இந்த வசதியை வழங்கி யமைக்காக அவனுக்கு நன்றி செலுத்துகிறான்! மேலும் நோன்பின் மூலம் அந்தச் செல்வந்தன், உணவின்றி வெறும் வயிறுடன் இரவைக் கழிக்கும் தன் ஏழை சகோதரனை நினைத்துப் பார்க்கிறான். அவனுக்குச் செல்வத்தைத் தர்மம் செய்கிறான்., அ ந்த ஏழை அந்தப் பணத்தைக் கொண்டு ஆடைகள் வாங்கி தன் மானத்தை மறைக்கிறான். உணவு வாங் கித்தன் பசியைப் போக்குகிறான்!

இதனால்தான் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மக்களிலெல் லாம் அதிகம் வாரி வழங்கும் வள்ளலாய்த் திகழ்ந்தார்கள் என்று ஹதீஸில் வந்துள்ளது! அதுவும் ரமளான் மாதத்தில்—அவர்களை ஜிப்ரீல் சந்தித்து குர்ஆனை அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கும் நேரத்தில் இன்னும் அதிகமாக கொடை வழங்குபவர்களாய் இருந் தார்கள்!

☐ நோன்பின் மற்றெரு தத்துவம் மனத்தைக் கட்டுப்படுத்து வதற்கும் அதனை அடக்குவதற்கும் பயிற்சி தருவதாகும். மனத் தின் கடிவாளத்தைக் கைப்பற்றும் ஆற்றல் பெறுவதுமாகும். அப்போதுதான் மனிதன் தன் மனத்தின் மீது அதிகாரம் செலுத்தி மனத்தை வென்றடக்க முடியும்! அதன் நன்மையும் நற்பேறும் எதில் உள்ளதோ அதன்பால் அதற்கு வழிகாட்டி அழைத்துச் செல்ல வும் முடியும். ஏனெனில் மனித மனம் தீயதை அதிகம் தூண்டக்கூடியதாக உள்ளது., எவருக்கு அல்லாஹ் கருணை புரிந்தானோ அவரது மனத்தைத் தவிர! மனிதன் தனது மனத்தின் கடிவாளத்தை அவிழ்த்து விட்டால் அது அவனை அழிவில் தள்ளிவிடும்! அதன்மீது அதிகாரம் செலுத்தி அதன் நடவடிக்கை களைக் கட்டுப்படுத்தினால் உன்னதமான பதவிகளின்பால் —

உயர்ந்த குறிக்கோள்களின்பால் அதனை அவன் வழிநடத்திச் செல்லமுடியும்.

□ நோன்பின் இன்னொரு தத்துவம் மனத்தின் வேகத்தைத் தணிப்பதாகும். சத்தியத்திற்குப் பணிந்திடும் வகையில் – மக்களிடம் மென்மையாக நடந்துகொள்ளும் முறையில் அதன் ஆணவத்தைக் கட்டுப்படுத்துவதுமாகும். ஏனெனில் வயிறு நிரம்ப உண்பதும் – பருகுவதும் பெண்ணிடம் உடலுறவு கொள்வதும் – இவை அனைத்தும் தற்பெறுமை கொள்ளும்படி மனத்தைத் தூண்டிவிடுகின்றன! மேலும் சத்தியத்தை ஏற்காமல் ஆணவம் கொள்ளும்படியும் மக்களிடம் அகம்பாவமாக–வரம்பு மீறி நடக்குமாறும் செய்கின்றன! அப்படிச் செய்வதற்குக் காரணம், உணவு, பானம், உடலுறவு ஆகியவற்றின் பக்கம் மனிதன் தேவையாகும் போது அவற்றைப் பெறும் வழிகளில் ஈடுபடுகிறான்., அவ்வாறு ஈடுபட்டு அவற்றைப் பெற்றுவிட்டால் தனது நோக்கத்தில் தாம் வெற்றி அடைந்துவிட்டதாகக் கருதுகிறான். அதனால் அளவு கடந்த பூரிப்பும் தற்பெறுமையும் அடைகிறான். அவையே அவனது அழிவுக்குக் காரணமாகி விடுகிறது! அல்லாஹ் யாருக்குப் பாதுகாப்பு அளித்தானோ அவரே இதிலிருந்த பாதுகாக்கப்பட்டவர் ஆவார்!

□ இதுவும் நோன்பின் தத்துவங்களில் ஒன்றாகும். அதாவது பசி, தாகத்தின் காரணத்தால் இரத்த நாளங்கள் சுருங்குகின்றன! அப்படிச் சுருங்குவது உடலில் ஷைத்தான் ஓடும் இடங்களை நெருக்குதலுக்குள்ளாக்குகிறது. ஏனெனில் மனிதனின் உடலில் இரத்தம் ஓடும் எல்லா இடங்களிலும் ஷைத்தான் ஓடிக் கொண்டிருக்கிறான். இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் கூறியிருப்பதாக புகாரி – முஸ்லிமில் பதிவாகியுள்ளது.

ஆக! நோன்பின் பயனாக ஷைத்தானின் ஊசாட்டங்கள் அடங்குகின்றன! இச்சை மற்றும் கோபத்தின் வேகம்தணிகிறது! இதன் அடிப்படையில் நபியவர்கள் கூறினார்கள் :„ஓ! இளைய சமுதாயமே! உங்களில் எவர் திருமணத்திற்குச் சக்தி பெற்றுள்ளாரோ அவர் திருமணம் செய்துகொள் ளட்டும். ஏனெனில் திருமணம் பார்வையைத் தாழ்த்தக்கூடியது. வேட்.கத்தலத்தைப் பாதுகாக்கக்

கூடியது. எவர் அதற்குச் சக்திபெறவில்லையோ அவர் நோன்பு நோற்கட்டும்! திண்ணமாக நோன்புஅவருக்கொரு கேடயமாகும்!„ நூல் : புகாரி, முஸ்லிம்

– திருமண ஆசைக்குக் கேடயம் நோன்பு என்றார்கள். அதன் வேகத்தை முறிக்கக் கூடியதாக அதைக் குறிப்பிட்டார்கள் நபி (ஸல்) அவர்கள்!

☐ நோன்பினால் கிடைக்கும் ஆரோக்கிய ரீதியான பயன்களும் நோன்பின் தத்துவங்களில் அடங்கும். உணவைக் குறைப்பதனால் – ஒருகுறிப்பிட்ட காலத்திற்கு ஜீரணஉறுப்புக்கு ஓய்வு கொடுப்ப தனால் உடலுக்குத் தீங்கு அளிக்கக்கூடிய சில கழிவுளும் ஈரத்தன் மைகளும் வெளியேறுவதனால் இத்தகைய பயன்கள் கிடைக்கின் றன!

அல்லாஹ்வுடைய அறிவு நுட்பத்தின் மகத்துவம்தான் என்ன! அது எத்துணை நிறைவாய் உள்ளது! அவனுடைய ஷரீஅத் சட்டங்கள் மக்களுக்கு எத்துணை பயன்மிக்கவை! நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்றவை! எளிமையானவை!

யா அல்லாஹ்! உனது தீனில் எங்களுக்கு ஞானம் வழங்கு வாயாக! உனது ஷரீஅத்தின் இரசியங்களை அறிந்து கொள்வ தற்கு எங்களுக்கு நல்லுணர்வு அளிப்பாயாக! எங்களுடைய மார்க் கம் மற்றும் உலக விவகாரங்களை எங்களுக்குச் சீர்படுத்துவா யாக! கருணையாளர்களிலெல்லாம் கருணைமிக்கோனே! உனது கருணையால்–எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் பாவமன்னிப்பு வழங்குவாயாக!

المجلس العاشر في آداب الصيام الواجبة

10-வது மஜ்லிஸ்

# நோன்பில்

# கட்டாயம் பேணவேண்டிய ஒழுங்குமுறைகள்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் நிறைவான நல்லொழுக்கத்தின்படி வாழுமாறு மனிதர்களுக்கு வழிகாட்டினான். தனது கருணைக் களஞ்சியம் மற்றும்அருட்கொடைகளின் வாயில்களை அவர்களுக்காகத் திறந்துவிட்டான். நம்பிக்கையாளர்களின் இதயங்களுக்கு ஒளியூட்டினான்., அவர்கள் யதார்த்த நிலையை அறிந்து நன்மையைத் தேடிக் கொண்டார்கள். மேலும் அவனுக்கு வழிபடாமல் புறக்கணித்தவர்களின் இதயங்களை ஒளியிழக்கச் செய்தான்., அதனால் அவர்களுக்கும் அவனது ஒளிக்குமிடையே திரை ஒன்று விழுந்துவிட்டது!

முந்தையவர்களுக்கு தனது கிருபையினாலும் கருணையினாலும் வழிகாட்டினான். மற்றவர்களை-தனது நீதிமற்றும் விவேகத்னால் வழிகேட்டில் ஆழ்த்தினான்! திண்ணமாக இதில் அறிவுள்ளோர்க்கு நல்லுரை உள்ளது.

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவன் தனித்தவன்., அவனுக்கு இணைதுணை எதுவுமில்லை! யாவரையும் மிகைக்கக்கூடிய அரசன்! பெருங்கொடையாளன்!-முஹம்மத் நபியவர்கள், அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் நான் சாட்சி சொல்கிறேன். உன்னதமான வழிபாடுகள் - முழுமையான நல்லொழுக்கங்களைக் கொண்டு நபியாக அனுப்பட்டவர்கள் அவர்கள்!

அவர்களின்மீது அல்லாஹ் ஸலாத் எனும் கருணை பொழிவானாக! அவர்களின் குடும்பத்தினர் - தோழர்கள் - அவர்களை வாய்மையுடன் பின்பற்றி வாழ்ந்தவர்கள் அனைவர்மீதும் மறுமை

நாள் வரையிலும் அல்லாஹ் கருணைபொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

அன்புச் சகோதரர்களே! அறிந்து கொள்ளுங்கள்: நோன்புக்குப் பல ஒழுங்குமுறைகள் உள்ளன., அவை இன்றி நோன்பு பூரணத் துவம் அடையாது., அவற்றை நிறைவேற்றாமல் நோன்பு நிறைவு பெறாது!

அவை இரண்டு வகைப் படும். ஒன்று: கட்டாயமான ஒழுங்கு முறைகள். நோன்பாளி இவற்றைக் கட்டாயம் பேணியாக வேண் டும். முறையாகக் கடைப்பிடித்திடவேண்டும். இரண்டு: விரும்பத் தக்க ஒழுங்குமுறைகள்.. இவற்றை முறையாகக் கடைப்படிப்ப தும் பேணிநடப்பதும் நோன்பாளிக்கு அவசியமாகும்!

கட்டாயமான ஒழுங்குமுறைகள் என்றால், அல்லாஹ் நோன்பா ளியின்மீது கடமையாக்கிய சொல் மற்றும் செயல் ரீதியானவழிபாடு கள் அனைத்தையும் நிறைவேற்றுவதாகும்.

இவற்றில் முக்கியமான கடமை தொழுகை! வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாருமில்லை என்றும் முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் எனும் சாட்சியத்திற்குப் பிறகு இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் தொழுகை மிக முக்கியமானதாகும்.

எனவே தொழுகையை நிரந்தரமாகப்பேணுவது கடமையாகும். தொழுகையின் அடிப்படையான அம்சங்கள் மற்றும் நிபந்தனைக ளுடன் அதனை நிறைவேற்றிட வேண்டும்!

உரிய நேரத்தில் பள்ளிவாசலுக்குச் சென்று ஜமாஅத்துடன் தொழுகையை நிறைவேற்ற வேண்டும். ஏனெனில் இப்படிச் செய் வது–தக்வா–வின்பாற் பட்டதாகும். இறையச்சமெனும் தக்வாவுக் காகவே அல்லாஹ் நோன்பை ஷரீஅத்தின் நடைமுறையாக்கினான்., இந்தச் சமுதாயத்தின் மீது கடமையாக்கினான்! தொழுகையை வீணடிப்பது இறையச்சத்திற்கு முரணானது மட்டுமல்ல தண்ட னைக்குரியதுமாகும்! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله : فخلف من بعد هم خلف أضاعوا الصلاة و اتبعوا الشهوات فسوف يلقون غيا الا من تاب وآمن وعمل صالحا فاولئك يدخلون الجنة و لا يظلمون شيئا

„அவர்களுக்குப் பிறகு சீர்கெட்ட மக்கள் பிற்சந்ததிகளாகத் தோன்றினார்கள். அவர்கள் தொழுகையை வீணாக்கினார்கள். மன இச்சைகளின்படி நடந்தார்கள். அத்தகையவர்கள் தங்களது வழி கேட்டின் தீயவிளைவை விரைவில் சந்திப்பார்கள். ஆனால் யார் பாவமன்னிப்புக் கோரி, இறைநம்பிக்கை கொண்டு நற்செயலும் புரிந்தார்களோ அவர்கள் சுவனத்தில் நுழைவார்கள். அவர்களுக்கு இம்மியளவும் அநீதி இழைக்கப் படமாட்டாது!" (19: 59–60)

நோன்பாளிகள் சிலர் ஜமாஅத்துடன் சேர்ந்து தொழுவதில் பொடுபோக்காக இருக்கிறார்கள்„அதுவோ அவர்களின்மீது கடமை யானதாக இருக்கிறது! ஜமாஅத்துடன் தொழுமாறு அல்லாஹ் தனது வேதத்தில் கட்டளையிட்டுள்ளான்! „நபியே! (போர்நிலை யில்) நீர் முஸ்லிம்களிடையேஇருந்து அவர்களுக்குத் தொழுகை நடத்துவீராயின் அவர்களில் ஒருகுழுவினர் தங்களுடைய ஆயதங் களை ஏந்திக்கொண்டு உம்மோடு நிற்கவேண்டும். பிறகுஅவர்கள் ஸுஜூத் செய்துமுடித்து விட்டால் (அதாவது தொழுதுவிட்டால்) பின்னால் சற்று விலகிச் சென்றிடவேண்டும். தொழாமல் இருக்கும் மற்றொரு குழுவினர் வந்து உம்மோடு தொழவேண்டும். அத்து டன் அவர்களும் முன்னெச்சரிக்கையோடு தம் ஆயுதங்களை ஏந் திக் கொண்டிருக்கவேண்டும்!" (அல் குர்ஆன் 4 : 102)

போர் மற்றும் அச்சத்தின் சூழ்நிலையில் ஜமாஅத்துடன் சேர்ந்து தொழுதிடுமாறு அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான் எனில் அமைதி மற்றும் அச்சமில்லா நிலையில் அதன் முக்கியத்துவம் இன்னும் அதிகமாகிறது!–அபூ ஹுரைரா (ரலி)அவர்கள் அறிவிக் கிறார்கள்:„கண்பார்வை இழந்த ஒருமனிதர் வினவினார்: அல்லாஹ் வின் தூதரே! பள்ளிவாசல்வரை என்னை அழைத்துச் செல்லக் கூடியவர் எவரும் எனக்கில்லையே என்று. அப்போது (வீட்டில் தொழுதிட) அவருக்கு நபி (ஸல்) அவர்கள் அனுமதி அளித்தார் கள். அம்மனிதர் திரும்பிச் சென்ற பிறகு அவரை அழைத்துக் கூறினார்கள்: தொழுகைக்காக பாங்கு சொல்வதை நீர் கேட்கிறீரா?

என்று. அதற்கு அவர் – ஆம் என்றார். அப்படியாயின் அந்த அழைப்புக்கு நீர் பதிலளிக்கும் வகையில் பள்ளிவாசலுக்கு வரத் தான் வேண்டும் என்றார்கள்„ நூல் : முஸ்லிம்

– அந்தமனிதர் கண் தெரியாதவர் – அழைத்துவர யாரும் கிடைக்காதவர் என்பதுடனேயே ஜமாஅத்தொழுகையைக் கைவிட அவருக்கு நபியவர்கள் அனுமதி அளிக்கவில்லை!

ஜமாஅத் தொழுகையை விட்டுவிட்டவன் கடமையை வீண டித்ததுடன் தனக்கு இரட்டிப்பாகக் கிடைக்கவிருந்த ஏராளமான நன்மைகளைப் பாழாக்கிவிடுகிறான்! ஏனெனில் ஜமாஅத்துடன் தொழுவதற்கு நற்கூலி பலமடங்கு இரட்டிப்பாக வழங்கப்படுகிறது.

நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் :

كما في حديث ابن عمر ﷺ ان النبي ﷺ قال : صلاة الجماعة تفضل علي صلاة الفذ بسبع وعشرين درجة متفق عليه

„ஜமாஅத்துடன் தொழுவதற்கு – தனியாகத் தொழுவதைவிட 27 மடங்கு அந்தஸ்து அதிகம் கிடைக்கிறது!„அறிவிப்பு: இப்னு உமர் (ரலி)– நூல் : புகாரி, முஸ்லிம்

மட்டுமல்ல, ஜமாஅத் தொழுகையின்மூலம் முஸ்லிம்களுக்குக் கிடைக்கிற சமூகநலன்களையும் பாழ்படுத்திவிடுகிறான். அவை தாம்: உள்ளத்தில் அன்பையும் பாசத்தையும் விதைப்பதும் அறியா தாருக்குக் கற்றுக்கொடுப்பதும் இல்லாதாருக்குக் கொடுத்துதவுவ தும் ஆகும்!

மேலும் ஜமாஅத் தொழுகையை விட்டுவிடுவதன் மூலம் அவர் தன்னைத் தண்டனைக்குட் படுத்துவதுடன் நயவஞ்சகர்களுடன் ஒப்பாகும் நிலையும் அவருக்கு ஏற்படுகிறது!

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

فعن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : اثقل الصلوات علي المنافقين صلاة العشاء و صلاة الفجر و لو يعلمون ما فيهما لأتوهما و لو حبوا وقد هممت ان آمر بالصلاة فتقام ثم آمر رجلا فيصلي بالناس ثم انطلق معي رجال الي قوم لا يشهدون الصلاة فاحرق عليهم بيوتهم با لنار متفق عليه

நயவஞ்சகர்களுக்கு அதிகப்பழுவான தொழுகை இஷா தொழுகையும் ஸுப்ஹு தொழுகையுமாகும். இவ்விரண்டிலும் உள்ள நன்மைகளைஅவர்கள்அறிவார்களாயின் இத்தொழுகைகளுக்குத் தவழ்ந்தேனும் வந்துவிடுவார்கள்!–இப்படி ஓர் எண்ணம் எனக்கு வந்துவிட்டது : தொழுகைக்காக உத்தரவு பிறப்பித்து இகாமத் சொல்லப்படவேண்டும்., பிறகு மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு ஒருவரை நான் ஏவிவிட்டு பிறகு விறகுக் கட்டுகளுடன் சிலபேரை என்னுடன் அழைத்து வந்து– தொழுகைக்கு வராமல் இருப்பவர்களின் வீடுகளை தீயிட்டுக் கொளுத்தவேண்டும் என்று! நூல் : புகாரி, முஸ்லிம்

இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

عن ابن مسعود ﷺ قال : من سره ان يلقي ا لله غدا مسلما فليحافظ علي هؤلاء الصلوات حيث ينادي بهن فان ا لله شرع لنبيكم سنن الهدي و انهن من سنن الهدي قال : و لقد رأينا و لايتخلف عنها الا منافق معلوم النفاق و لقد كان الرحل يؤتي به يهادي بين الرجلين حتي يقام في الصف رواه مسلم

எவர் நாளை மறுமையில் முஸ்லிமாக அல்லாஹ்வைச் சந்திப்பதில் மகிழ்ச்சி அடைகிறாரோ அவர் இந்தத் தொழுகைகளை அவற்றிற்கென அழைப்புவிடுக்கப்படும் இடங்களில் சென்று பேணுதலுடன் தொழட்டும்! திண்ணமாக உங்கள் நபிக்கு நேர்வழியின் நடைமுறைகளை அல்லாஹ் நிர்ணயித்துக் கொடுத்துள்ளான். இந்தத்தொழுகைகள் நேர்வழியின் நடைமுறைகளின் பாற்பட்டவையாகும்! – இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் தொடர்ந்து சொல்கிறார்கள் : எங்கள் காலத்தில் என்ன நடந்தது தெரியுமா? எல்லோ

ருக்கும் பகிரங்கமாகத் தெரியக்கூடிய நயவஞ்சகனைத் தவிர வேறு யாரும் தொழுகைக்கு வராமல் இருக்கமாட்டார்கள். நோயுற்றிருக் கும் மனிதரை இருவர் கைத்தாங்கலாகத் அழைத்து வந்து தொழுகை - வரிசையில் நிறுத்துவார்கள்! நூல் : முஸ்லிம்

நோன்பாளிகள் சிலர் இந்த விஷயத்தில் பொடுபோக்காக உள்ள னர். நேரத்துடன் தொழாமல் தூங்கிவிடுகின்றனர். இது வெறுக் கத்தக்க - மிகமோசமான செயலாகும்! தொழுகையை வீணடிப்ப தில் மிகக் கடுமையான போக்குமாகும்! எந்த அளவுக்கெனில், பெரும்பாலான அறிஞர்கள் கூறியுள்ளார்கள்: மார்க்க ரீதியான—தக்க காரணமின்றி யார் உரிய நேரத்தில் தொழாமல் பிற்படுத்துகிறாரோ அவரது தொழுகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது,, அவர் நூறு தடவை தொழுதாலும் சரியே! ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் சொல்லியுள்ளார்கள் :

لقول النبي ﷺ : من عمل عملا ليس عليه امرنا فهو رد رواه مسلم

‚‚நமது வழிகாட்டலைப் பெறாத ஓர் அமலை யார் செல்தாலும் அது ரத்து செய்யப்படக் கூடியதாகும்,, நூல்: முஸ்லிம் - நேரத் தைத் தவறவிட்டுத் தொழுவதென்பது -அப்படிச் செய்யுமாறு நபி (ஸல்)அவர்கள் வழிகாட்டவில்லை,, எனவே அத்தொழுகை ரத்து செய்யப்படுமே தவிர ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது!

☐ கடமையான ஒழுங்குமுறைகளில் மற்றொன்று:அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் தடுத்துள்ள சொற்கள்- செயல்கள் எல்லா வற்றையும் நோன்பாளி தவிர்த்துக் கொள்வதாகும்.

பொய்சொல்வதைத் தவிர்த்திட வேண்டும். பொய் என்பது நடக் காததைத் நடந்ததாகச் சொல்வதாகும். பொய்களிலேயே மிகவும் கொடுமையானது அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதரின் மீதும் பொய் சொல்வதாகும். ஹராம்—தடுக்கப்பட்டதை அல்லாஹ் வும் அவனுடைய தூதரும் ஹலால் ஆக்கிவிட்டார்கள் என்றோ, ஹலால் - அனுமதிக்கப்பட்டதை அவ்விருவரும் ஹராம் ஆக்கி விட்டார்கள் என்றோ சொல்வது போன்று!

அல்லாஹ் கூறுகிறான் :

قال ا لله تعالي : و لاتقولوا لما تصف السنتكم ا لكذب هذا حلال و هذا حرام لتفتروا علي ا لله الكذب ان الذين يفترون علي ا لله الكـذب لايفلحـون متـا ع قليـل و لهـم عذاب ا ليم

„ உங்கள் நாவுகள் பொய்யுரைப்பது போன்று – இது ஹலால் (ஆகுமானது) இது ஹராம் (தடுக்கப்பட்டது) என்று நீங்கள் (தன்னிச்சையாகக்) கூறாதீர்கள்! அதனால் அல்லாஹ்வின் மீது பொய்யை ஏற்றிச் சொன்னவர்களாய் நீங்கள் ஆக நேரிடும்! நிச்சய மாக யார் அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைந்துரைக்கிறார் களோ அவர்கள் ஒரு போதும் வெற்றியடைவதில்லை! இவ்வுலக வாழ்வின் இன்பம் சொற்பநாட்கள்தான்! இறுதியில் அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு!„ அல்குர்ஆன் (16:116–117)

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن ابي هريره ﷺ ان النبي ﷺ قال : من كذب علي متعمدا فليتبوأ مقعـده مـن النـار – متفق عليه

“ யார் என் மீது வேண்டுமென்றே பொய் கூறினாரோ அவர் தனது இருப்பிடத்தை நரகத்தில் ஆக்கிக் கொள்ளட்டும்„ நூல் : புகாரி, முஸ்லிம்

மேலும்நபியவர்கள் பொய் பேசுவது பற்றி இப்படி எச்சரிக்கை செய்துள்ளார்கள் :

فقال النبي ﷺ : ايـاكم و الكـذب فـان الكـذب يهـدي الي الفجـور و ان الفجـور يهدي الي النار و لايزال الرجل يكذب و يتحري الكذب حتي يكتـب عنـد ا لله كذابا متفق عليه

“பொய் பேசுவது குறித்து உங்களை எச்சரிகை செய்கிறேன். திண்ணமாகப் பொய் பேசுவது தீமைசெய்வதன்பால் இட்டுச் செல் கிறது. தீமை செய்வது நரகத்தின் பால் இட்டுச் செல்கிறது. ஒரு மனிதன் சதா பொய் பேசிக்கொண்டும் பொய்யைத் தேடிக்கொண் டும் இருக்கிறான்., இறுதியில் அல்லாஹ்விடத்தில் – மகாப் பொய் யன் – என்று எழுதப்பபட்டுவிடுகிறான்! „ நூல் : முஸ்லிம்

☐ புறம் பேசுவதைத் தவிர்த்திடுவான். புறம் பேசுவதென்பது உங்கள் சகோதரரைப் பற்றி – அவர் வெறுக்கும் விஷயத்தை அவர் இல்லாத இடத்தில் பேசுவவதாகும். அவரது உடலமைப் பில்–அவர்வெறுக்கும் வார்த்தையை அதாவது நெண்டி,ஒற்றைக் கண்ணன், குருடன் என்று இழித்துரைக்கும் தோரணையில் நீங் கள் கூறினாலும் சரி அல்லது முட்டாள், தீயவன் என்று அவரது குணத்தில் அவர் வெறுக்கும் வார்த்தைகளை நீங்கள்கூறினாலும் சரி! நீங்கள் கூறுகிற விஷயம் அவரிடத்தில் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரியே!

ஏனெனில் புறம் பேசுவதுபற்றி நபி(ஸல்)அவர்களிடம் கேட்கப் பட்டது., அவர்கள் சொன்னார்கள் : “உன் சகோதரனைப் பற்றி அவன் வெறுக்கும் விஷயத்தை நீ கூறுவதாகும்„ என்று!– நான் கூறுவது என் சகோதரனிடம் இருந்தால் அதுபற்றி என்ன சொல் கிறீர்கள்? என்று நபியவர்களிடம் வினவப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : நீ சொல்வது அவனிடம் இருந்தால் நீ அவனைப் புறம் பேசிவிட்டாய்! நீ சொல்வது அவனிடம் இல்லா விட்டால் நீ அவன் மீது அவதூறு கூறிவிட்டாய்!„ நூல் : முஸ்லிம்

புறம் பேசுவது கூடாதென குர்ஆனில் அல்லாஹ் தடுத்துள் ளான். அருவருக்கத் தக்கதொரு நிலையுடன் அதை ஒப்பிட்டுக் கூறியுள்ளான்! புறம் பேசும் மனிதனைத் தன சகோதரனின் சதை யைத் தின்னும்மனிதனுடன் ஒப்பிட்டுள்ளான்!அல்லாஹ் கூறுகிறான்:

فقال تعالى : و لا يغتب بعضكم بعضا أيحب أحدكم أن يأكل لحم أخيه ميتا فكرهتموه

„ உங்களில் ஒருவர் மற்றவரைப் பற்றி புறம் பேசவேண்டாம். இறந்தவிட்ட தன் சகோதரனின் இறைச்சியை உங்களில் எவரும் உண்ண விரும்புவாரா? பாருங்கள்! நீங்களேஅதனை அருவருப் பாய்க் கருதுகிறீர்கள்!„ அல் குர்ஆன் ( 49–12)

மேலும் நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள் :„அவர்கள் மி.:ராஜுக்குச் சென்ற இரவில் சில கூட்டத்தைக்கடந்து சென்றார் கள்„ அவர்களுக்கு செம்புத் தகட்டினாலான நகங்கள் இருந்தன. அவற்றைக்கொண்டு தம்முகங்களையும் நெஞ்சுகளையும் பரண்டிக் கொண்டிருந்தார்கள். இவர்கள் யார்? ஜிப்ரீலே, என்று நான் கேட் டேன். அதற்கு – இவர்கள்தான் பிற மனிதர்களின் சதைகளைத் தின்று கொண்டிருந்தவர்கள். அவர்களின் கண்ணியத்தைக் குலைத்துக் கொண்டிருந்தவர்கள் என்றுபதிலளித்தார். நூல் : அபூ தாவூத்

☐ கோள் சொல்வதையும் தவிர்த்திடுவார். கோள் சொல்வதென் பது ஒருவர் இன்னொரு மனித ரைப் பற்றி சொன்ன விஷயத்தை அப்படியே அம்மனிதரிடம் சொல்லிவிடுவது„ அவ்விருக்கிடையில் உறவைக் கெடுக்கும் நோக்கத்துடன்!

„கோள் சொல்வது பெரும்பாவங்களில் ஒன்றாகும். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

قال النبي ﷺ : لا يدخل الجنة نمام متفق عليه

கோள் சொல்பவன் சுவனம் புகமாட்டான்!„நூல்: புகாரி,முஸ்லிம்

இப்னு அப்பாஸ் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„நபி (ஸல்) அவர்கள் இரண்டு மண்ணறைகளைக் கடந்து சென்றார்கள்„அப் போது சொன்னார்கள் : இவ்விருவருக்கும் கப்றில் வேதனை கொடுக்கப் படுகிறது! ஒருபெரிய காரியத்திற்காக (அதாவது அவ் விருவரும் செய்த கடுமையானதொரு காரியத்திற்காக) அவர்கள் வேதனை செய்யப்படவில்லை! அவ்விருவரில் ஒருவர் – சிறுநீர் கழித்தபின் நன்கு சுத்தம் செய்யக்கூடியவராய் இருக்கவில்லை.

மற்றவரோ கோள் சொல்லிக் கொண்டு திரிந்தார்„ நூல் : புகாரி, முஸ்லிம்

கோள் சொல்வது, தனி மனிதனையும் சமுதாயத்தையும் குழப் பத்தில் ஆழ்த்தவல்ல ஒருகுற்றம்„முஸ்லிம்களுக்கிடையே பிளவை ஏற்படுத்தக்கூடியது! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : ولا تطع كل حلاف هماز مشاء بنميم ...

“அதிகம் சத்தியம் செய்யக்கூடிய–அற்பத்தனமான எந்த மனித னுக்கும் நீர் அடங்காதீர்! அவன் திட்டுகிறவனாகவும் புறம் பேசித் திரிபவனாகவும் இருக்கிறான்...!„அல்குர்ஆன் (68: 10)

யார் உங்களிடம் பிறரைப்பற்றிக் கோள் சொல்கிறானோ அவன் உங்களைப் பற்றியும் பிறரிடம் கோள் சொல்வான்!ஆகவே அவன் விஷத்தில் எச்சரிக்கையாக இருங்கள்!

□ வியாபாரம், வாடகை, தொழில், அடகு போன்ற எல்லாக் கொடுக்கல்–வாங்கல்களிலும், உடன்படிக்கைகளிலும் மோசடியைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும். ஒருவருக்கொருவர் நலன்நாடுவதி லும் ஆலோசனை வழங்குவதிலும்கூட மோசடியைத் தவிர்தது்க் கொள்ள வேண்டும்!

ஏனெனில் மோசடி என்பது பெரும்பாவங்களில் ஒன்றாகும். இதனைச் செய்பவர்களோடு தமக்கு எவ்விதத்தொடர்பும் இல்லை என்று விலகிக்கொண்டார்கள் நபி(ஸல்)அவர்கள்!அவர்கள் சொன் னார்கள்:„யார் நமக்கு மோசடி செய்தாரோ அவர் நம்மைச் சார்ந்த வர் அல்லர்„ – வேறோர் அறிவிப்பில், மோசடி செய்தவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்„ நூல் : முஸ்லிம்

மோசடி என்பது ஏமாற்றுதல், நம்பிக்கைத் துரோகம் செய் தல், நம்பி ஒப்படைக்கப்பட்ட பொருளை வீணாக்குதல் ஆகும். மேலும் மக்களிடையே ஒருவருக்கொருவர் நம்பிக்கை இழக்கச் செய்யும் நிலையை ஏற்படுத்துவதும் ஆகும்.

ஏமாற்றிச் சம்பாதிக்கும் ஒவ்வொரு சம்பாத்தியமும் ஹராம் – தடுக்கப்பட்ட, கெட்டசம்பாத் தியமாகும். அது மோசடிக்காரனுக்கு – அல்லாஹ்வைவிட்டு மேலும்மேலும் தூரமாகிச் செல்வதைத் தவிர வேறெந்தப் பலனையும் அளிக்காது!

☐ இசைக் கருவிகளையும் தவிர்த்துக் கொள்ளவேண்டும். அதில் எல்லாவகையான இசைக்கருவிகளும் அடங்கும்.எடுத்துக் காட்டாக, புல்லலாங்குழல், மிருதங்கம், யாழ், நாதஸ்வரம், பியானுா, கடம் போன்று! திண்ணமாக இவை விலக்கப்பட்டவையாகும். இசையுடன் இவை கலந்தால் – அழகிய குரலுடன்கூடிய பாடல் களுடனும் உணர்வைத் தூண்டக்கூடிய ராகங்ளுடனும் இவை சேர்ந்தால் பாவமும் தீமையும் மேலும் அதிகரிக்கும்! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : و من الناس من يشتري لهو الحديث ليضل عن سبيل الله بغير علم و يتخذ ها هزوا اؤلئك لهم عذاب مهين

மனிதர்களில்சிலர் இப்படியும் இருக்கிறார்கள்: மனத்தைப் பரா முகமாக்கக்கூடிய விஷயங் களை விலை கொடுத்து வாங்குகிறார் கள்., எவ்வித அறிவுமின்றி மக்களை அல்லாஹ்வின் மார்க்கத்தை விட்டும் வழிபிறழச் செய்வதற்காகவும் அவ்வழியி(ல் வருமாறு விடுக்கப்படும் அழைப்பி)னை ஏளனமாக எடுத்துக்கொள்ளச் செய் வதற்காகவும்தான்! இத்தகையோர்க்கு இழிவு படுத்தும் வேதனை உள்ளது!„ (31 : 6) –

இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களிடம் இந்த வசனத்தின் விளக் கம் என்னஎன்று கேட்கப்பட்டது.அதற்குஅவர்கள்,எந்த அல்லாஹ் வைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன் மீது சத்தி யமாக! இந்தவசனம் இசையுடன்கூடிய பாடல்களைக் குறிக்கும்.,. என்றார்கள். – இது நம்பகமான அறிவிப்பாகும். இப்னுஅப்பாஸ், இப்னு உமர் (ரலி) ஆகியோரிடம் இருந்தும் இதேகருத்து அறி விக்கப்பட்டுள்ளது. இப்னு கதீர் அவர்களும் ஜாபிர், இக்ரிமா, ஸயீத் பின் ஜுபைர்(ரலி) ஆகியோரிடம் இருந்தும் இதே கருத்து அறிவித்துள்ளார்கள்.ஹஸன்(ரலி) அவர்கள் இந்த வசனம், பாட்டு

மற்றும் இசைக்கருவிகள் தொடர்பாக இறங்கியதுஎன்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இசைக் கருவிகளை விபச்சாரத்துடன் சேர்த்துச் சொல்லி எச்சரிக்கை செய்துள்ளார்கள்!

قال ﷺ ليكونن من امتي أقوام يستحلون الحر والحرير و الخمر و المعازف

“ என் சமுதாயத்தில் சில கூட்டத்தார் வருவார்கள். அவர்கள் விபச்சாரத்தையும் பட்டாடைகளையும் மது பானத்தையும் இசைக் கருவிகளையும் ஹலால் – ஆகுமாக்கப் பட்டவையாகக் கருது வார்கள்! நூல்,,: புகாரி

இந்த நபிமொழியின் அரபிமூலத்தில் உள்ள الحر (அல் ஹிரு) எனும் சொல் பெண்ணுறுப்கைக் குறிக்கும். அதன் கருத்து விபச்சாரம் என்பதாகும். – இவற்றை ஹலால் எனக் கருது வார்கள் என்பதன் கருத்து, எதையும் பொருட்படுத்தாமல் அவற்றைச் சாதாரணமானச் செய்வார்கள்., ஹலால் எனக் கருதுபவர் செய்வது போன்று–என்பதாகும். நமது காலத்தில் நடப்பது இதுவே! மக்களில் பலர் இந்த இசைக்கருவிகளைப் பயன்படுத்துகின்றனர். அல்லது அவற்றைச்செவிமடுக்கின்றனர்., ஏதோஅவை ஹலாலானவை போன்று!

இதன் மூலம் முஸ்லிம்களைச் சூழ்ச்சிவலையில் சிக்கவைக் வேண்டும் என்பதில் இஸ்லாத்தின் எதிரிகள்வெற்றி பெற்றுவிட்டார்கள்! இறைவனை நினைவுகூரவிடாமல் முஸ்லிம்களைத் தடுத்து விட்டார்கள்! மேலும் இறைமார்க்கம்–உலகம் தொடர்பான அவர்களின் முக்கியப் பணிகளை விட்டும் அவர்களைத் திசை திருப்பி விட்டார்கள்! ஆம்!பெரும்பாலான முஸ்லிம்கள் இசையை ரசித்து ரசித்துக் கேட்கத் தொடங்கிவிட்டர்கள்., குர்ஆனையும் நபிமொழிகளையும் கேட்பதைவிட அதிகமாக! மேலும் ஷரீஅத்தின் சட்டங்களையும் அவற்றின் நுட்பங்களையும் உள்ளடக்கிய கல்வியாளர்களின் நல்லுரைகளைக் கேட்பதைவிடவும் அதிகமாக!

எனவே முஸ்லிம்களே! நோன்பை முறிக்க்கூடிய – குறைப் படுத்தக் கூடிய விஷயங்கள் குறித்து எச்சரிக்கையாக இருங்கள். பொய் பேசுவதைவிட்டும் பொய்யைக் கொண்டு அமல் செய்வதை விட்டும் நோன்பை பாதுகாத்துக் கொள்ளங்கள்! நபி (ஸல்)அவர் கள் சொன்னாரகள் :

قال النبي ﷺ : من لم يدع قال الزور و العمل بـه والجهـل فليس لله حاجة في ان يدع طعامه و شرابه

„எவர்(நோன்பு நோற்கும்போது)பொய் பேசுவதையும் பொய்யான முறையில் செயல்படுவதையும் அபத்தமானபோக்கையும் விட்டுவிட வில்லையோஅவர் உண்ணாமல்-பருகாமல் இருப்பதில் அல்லாஹ் வுக்கு எந்தத் தேவையும் இல்லை!„– ஜாபிர்(ரலி)அவர்கள் சொன் னார்கள் :„நீ நோன்பு நோற்றால், உனது செவியும் பார்வையும் நோன்பிருக்கட்டும். உனது நாவு பொய் மற்றும்ஹராமானவற்றைச் பேசுவதைவிட்டும் நோன்பிருக்கட்டும். நீ அண்டை வீட்டாருக் குத் துன்பம் கொடுப்பதைக் கைவிடு! நீ அமைதியாகவும் கௌர வமாகவும் இரு! நீ நோன்பு நோற்கும் நாளும் நோன்பு நோற்காத நாளும் சமமாக வேண்டாம்!„

யா அல்லாஹ்! எங்களுடைய தீனை–மார்க்கத்தை பாதுகாப்பா யாக. உனக்குக் கோபமூட்டும் காரியங்களைவிட்டும் எங்களுடைய உறுப்புகளைத் தடுத்திடுவாயாக! எங்களுடைய பாவங்களையும் எங்கள் பெற்றோரின் பாவங்களையும் எல்லா முஸ்லிம்களின் பாவங் களையும் மன்னித்தருள்வாயாக! கருணையாளர்களிலெல்லாம் கரு ணையாளனே! உனது கருணையைக் கொண்டு!

# المجلس الحادي عشر في آداب الصيام المستحبة

11 வது மஜ்லிஸ்

# நோன்பின் விரும்பத்தக்க ஒழுங்கு முறைகள்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே தன்னை ஆதரவு வைத்து வணங்குபவருக்கு, அவரது எதிர்பார்ப்பைவிடக் கூடுத லாக வழங்குபவன். கேட்போருக்குக்கேட்டதைவிடஅதிகம் கொடுப் பவன்!

நேர்வழி கிடைத்ததற்காக அவனை புகழ்கிறேன். அவன் ஒரு வனே வணக்கத்திற்குரிய இறைவன் என்பதை – ஆதாரத்தையும் அதன் மூலாதாரங்களையும் அறிந்தவர் ஏற்றுக் கொண்டதுபோல் உளமார ஏற்றுக்கொள்கிறேன்!

அல்லாஹ்வின் அடியாரும் தூதருமான முஹம்மத் நபி மீது ஸலவாத்தும் ஸலாமும் சாற்றுகிறேன். மேலும் பயணத்திலும் ஊரிலும் சதாவும் அவர்களுடன் இருந்த அவர்களின் தோழர் அபூ பக்ர் மீதும் – ஆதரவாளர்கள் குறைவாய் உள்ளனரே என்றுகூட அஞ்சாமல் இஸ்லாத்திற்குப் பாதுகாப்பளித்த உமர் மீதும்– துன் பம் இறங்கியபோதும் நிலைகுலையாதிருந்த உஸ்மான் மீதும் – வாட்கள் கொண்டு மோதும் முன்னரே தம் வீரத்தால் எதிரிகளை நிலைகுலையச் செய்தஅலீ மீதும் ஸலாதும்ஸலாமும் பொழியட்டு மாக! மேலும்நபியவர்களின் குடும்பத்தினர் மீதும்– இறைமார்க்கத் தின் அனைத்து அறிவுரைகளிலும் முந்திச்சென்று வெற்றியைத் தட்டிச் சென்றவர்களான நபித்தோழர்கள் மீதும்–நான்கு திசைகளி லும் தென்றல் காற்று வீசும் காலமெல்லாம் ஸலாத்தும் ஸலாமும் அனைவர் மீதும் பொழிந்துகொண்டிருக்கட்டுமாக!

சகோதரர்களே! இந்த மஜ்லிஸில் நோன்பின் இரண்டாவது வகை ஒழுங்குமுறைகள் பற்றி விளக்கப்படும். இவை முஸ்தஹப் – விரும்பதத்க்க ஒழுங்குமுறைகளாகும்.

□ ஸுஹூர் (இரவின் பின்னேரத்தில் உண்ணல்) என்பது நோன்பின் விரும்பத்தக்க ஒழுங்கு முறைகளில் ஒன்றாகும். இந்த உண்ணல், ஸஹ்ர் எனும் (இரவின் பின்) நேரத்தில் நிகழ்வதால் இதற்கு ஸுஹூர் என வழங்கலாயிற்று! நபி(ஸல்)அவர்கள் ஸஹ்ர் செய்யுமாறு கட்டளையிட்டுள்ளார்கள் : „(நோன்புக்காக) இரவின் பின் னேரத்தில் உண்ணுங்கள்! திண்ணமாக இரவின் பின்னேரம் உண்பதில் அருட்பாக்கியம் உள்ளது!„ நூல் : புகாரி, முஸ்லிம்

அம்ருப்னுல் ஆஸ்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن عمرو بن العاص ﷺ ان النبي ﷺ قال : فصل ما بين صيامنا وصيام أهل الكتاب أكلة السحر -- مسلم

„நமது நோன்புக்கும் வேதம் வழங்கப்பட்டவர்களின் நோன்புக் கும் வித்தியாசம் ஸஹ்ரில் உண்பதேயாகும்!„நூல் : முஸ்லிம்

ஸஹ்ரில் பேரீத்தம் பழம் உண்பது பற்றி நபி(ஸல்) அவர்கள் வெகுவாகப் பாராட்டியுள்ளார்கள்.

فقال النبي ﷺ : نعم سحور المؤمن ا لتمر رواه ابو داؤد

„ஓர் இறைநம்பிக்கையபளனின் ஸஹ்ர் உணவில் பேரீத்தம் பழம் சிறந்ததாகும்„ நூல்: அபூ தாவூத்[20]

[20] இதன் அறிவிப்புத் தொடர் ஹஸன் தரத்திலானது. மேலும் ஸஹீஹ் தரத்தோடு இதனைச் சேர்க்கக்கூடிய அறிவிப்புச் சான்றுகள் பல இதற்கு உண்டு.

وقال ﷺ : السحور كله بركة فلا تدعوه و لو ان يجرع أحدكم جرعة من ماء فان الله وملائكته يصلون علي المتسحرين رواه أحمد وقال المنذري : اسناده قوي

“ஸஹ்ர் உண்பதில் முழுக்க அருட்பாக்கியமுள்ளது. எனவே ஸஹர் உண்பதை விட்டுவிடாதீர்கள்! உங்களில் ஒருவர் ஒரு மிடர் தண்ணீர்மட்டும் குடித்தாலும்சரியே! ஏனெனில் ஸஹ்ர்செய்ப வர்கள் மீது அல்லாஹ்வும் அருள் பொழிகின்றான்., அவர்களுக்காக மலக்குகளும் பாவமன்னிப்பு வேண்டிப்பிரார்த்தனை செய்கிறார்கள்!,” நூல் : அஹ்மத் [21] முன்திரி அவர்கள் இதன் அறிவிப்பத்தொடர் உறுதியானது என்று சொல்லியுள்ளார்கள்.

ஸஹ்ர் செய்பவர், அப்படிச் செய்வதன் மூலம் நபியவர்களின் கட்டளைக்குக் கீழ்ப்படிவதாகவும் அவர்களின் செயலைப்பின்பற்று வதாகவும் நிய்யத் – மனதில் நினைப்பது அவசியமாகும். அதன் மூலம் ஸஹ்ர் செய்வது ஓர் வழிபாடாக ஆகிறது. மேலும் அந்த ஸஹ்ரின் மூலம் நோன்புநோற்க சக்திபெறுவதையும் அவர்நினைத் திட வேண்டும்., அவருக்குக் கூலி கிடைக்க வேண்டும் என்பதற் காக!

அதிகாலை உதயமாகிவிடுமோ என அஞ்சாதிருக்கும் வரை ஸஹ்ர் உண்பதைப் பிற்படுத்து வது நபிவழி (ஸுன்னத்)ஆகும்.

فعن قتادة عن انس بن مالك رضي الله عنه ان نبي الله ﷺ و زيد بن ثابت تسحرا فلما فرغا من سحورهما قام نبي الله ﷺ الي الصلاة فصلي قلنا لانس كم كان بين فراغهما من سحورهما و دخولهما في الصلاة ؟ قال : قدر ما يقرأ الرجل خمسين آية رواه البخاري

---

21 இந்த ஹதீஸின் முதல் வாக்கியத்திற்கு புகாரியிலும் முஸ்லிமிலும் அறிவிப்புச் சான்று உள்ளது.

„அனஸ்(ரலி)அவர்களிடம் இருந்து கதாதா அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்களும் ஜைது பின் ஸாபித் அவர்களும் ஸஹ்ர் உணவு சாப்பிட்டார்கள். இருவரும் ஸஹ்ர் உணவு சாப்பிட்டு முடித்தபோது நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்கு எழுந்துசென்று தொழுகை நடத்தினார்கள். நாங்கள் அனஸ் (ரலி) அவர்களிடம் கேட்டோம் : இருவரும் ஸஹ்ர் உணவு உண்டு முடித்ததற்கும் தொழுகைக்குச் சென்றதற்கும் எவ்வளவு நேரம் இடைவெளி இருந்தது? என்று! அனஸ் சொன்னார்கள்: ஒரு மனிதன் ஐம்பது வசனங்கள் ஓதும் அளவு!„ நூல் : புகாரி

عن عائشة رضي الله عنها ان بلالا ﷺ كان يؤذن بليل فقال النبي ﷺ : كلوا و اشربوا حتي يؤذن ابن أم كمتوم فانه لا يؤذن حتي يطلع الفجر رواه البخاري

ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :„பிலால், இரவில் பாங்கு சொல்வார்கள். நபி(ஸல்)அவர்கள்„ இப்னு உம்மி மக்தூம் பாங்கு சொல்லும்வரை நீங்கள் உண்ணுங்கள்„ பருகுங்கள்!என்று சொன்னார்கள். ஏனெனில் அவர்(இப்னுஉம்மி மக்தூம்)அதிகாலை உதயமாகும் வரை பாங்கு சொல்வதில்லை!„ நூல் : புகாரி

ஸஹ்ர் உணவு உண்பதைப் பிற்படுத்துவது நோன்புநோற்பவருக்கு வசதியாகவும் ஃபஜ்ர் தொழுகையை விட்டுவிட்டுத்தூங்காமலிருப்பதற்கு வகைசெய்யக் கூடியதாகவும் உள்ளது.

நோன்பாளி ஸஹ்ர் உண்வை உட்கொண்ட பிறகும்கூட உண்ணலாம்.. பருகலாம். நோன்பின் நிய்யத்(எண்ணம்)வைத்த பிறகும் உண்ணலாம்„ அதிகாலை உதயம் உறுதி செய்யப்படும் வரை! ஏனெனில் அல்லாஹ் கூறியுள்ளான் :

لقوله تعالي : و كلوا و اشربوا حتي يتبين لكم الخيط الابيض من الخيط الاسود من الفجر

மேலும் உண்ணுங்கள்., பருகுங்கள்,. கருப்பு நூலிலிருந்து விடியற்காலை எனும் வெள்ளை நூல் உங்களுக்குத் தெளிவாகத் தெரியும் வரையில்!,.

அதிகாலை உதயமாகிவிட்டதாக எவற்றைக்கொண்டு முடிவு செய்யப்படுமெனில், ஒன்று:அடிவானத்தில் அதிகாலை உதயத்தைக் காண்பது கொண்டு அல்லது உறுதியாக நம்பப்படும் ஒருவரது அறிவிப்பைக் கொண்டு முடிவுசெய்யப்படும். பாங்கும்அது போன்ற அறிவிப்பும் இதில்சேரும். அதிகாலை உதயமானதும் உண்பதை அவர் நிறுத்திக் கொள்ளவேண்டும். உள்ளத் தால் நிய்யத் (எண் ணம்) வைப்பார். நிய்யத் நாவால் மொழியப்படமாட்டாது. ஏனெனில் அதை நாவால் மொழிவது பித்அத் – இறைமார்க்கத்தில் இல்லாத புதிய நடைமுறை ஆகும்.

☐ நோன்பின் விரும்பத்தக்க நடைமுறைகளில் – சூரியன் மறைந்து விட்டதென உறுதிப்பட்டதும் உடனடியாக நோன்பு திறப்பதும் ஒன்றாகும். அதனை உறுதிப்படுத்துவதானது – சூரியன் மறைவதை நேரடியாகப் பார்ப்பதன் மூலமாகவும் ஆகலாம். அல்லது நம்பத்தகுந்த ஒருவருடைய அறிவிப்பின் மூலமாகவும் ஆகலாம். பாங்கும் இதில் சேரும். அல்லது வேறுஎந்த வழியிலாவது சூரியன் மறைந்துவிட்டதென மிகையானநம்பிக்கை ஏற்பட்டதும் உடனே நோன்பைத் திறந்திடவேண்டும்! ஸஹ்ல் பின்ஸஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

فعن سهل بن سعد ﷺ ان النبي ﷺ قال : لا يزال الناس بخير ما عجلوا الفطر

,, நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மக்கள்(சூரியன் மறைந்ததும்) உடனடியாக நோன்பு திறந்து கொண்டிருக்கும் காலமெல்லாம் நன்மையில் நீடிப்பார்கள்!,, நூல் : புகாரி, முஸ்லிம்

நபி (ஸல்)அவர்கள் இறைவன் கூறியதாக அறிவித்தார்கள் :

وقال ﷺ فيما يرويه عن ربه ان احب عبادي الي أعجلهم فطرا وراه أحمد

என் அடியார்களில் எனக்குப் பிரியமானவர்கள் யாரெனில் (சூரியன் மறைந்ததும்) விரைந்து நோன்பு திறப்பவர்கள்தாம்!„ நூல்: முஸ்னத் அஹ்மத், திர்மிதி[22]

பழுத்துவரும் பருவத்திலுள்ள பேரீத்தம் பழம் கொண்டு நோன்பு திறப்பது ஸூன்னத் – நபி வழியாகும். அது கிடைக்கவில்லையானால் நன்கு பழுத்தபேரீத்தம் பழம் கொண்டு„ அதுவும் கிடைக்கவில்லையெனில் தண்ணீர் கொண்டு நோன்பு திறக்க வேண்டும். அனஸ் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் :

لقول انس ﷺ كان النبي ﷺ يفطر قبل ان يصلي علي رطبات فان لم تكن رطبات فتمرات فان لم تكن تمرات حسا حسوات من ماء رواه أحمد و الترمذي

நபி (ஸல்)அவர்கள், தொழுவதற்கு முன்னால்–பழுத்துவரும் பருவத்திலுள்ள பேரீத்தம் பழங்கள் கொண்டு நோன்பு திறப்பார்கள். அவை இல்லையெனில் நன்குபழுத்த பழங்கள் கொண்டு நோன்பு திறப்பார்கள். அவையும் இல்லையெனில் ஒரு சிரங்கை தண்ணீர் அள்ளியருந்திக் கொண்டுநோன்பு திறப்பார்கள்!„ நூல்:அபூ தாவூத், திர்மிதி, அஹ்மத்[23]

இருவகை பேரீத்தம் பழமும் கிடைக்கவில்லை„ தண்ணீரும் கிடைக்கவில்லை எனில் எளிதில் எதுகிடைக்கிறதோ அத்தகைய ஹலாலான உணவு–பானத்தைக் கொண்டு நோன்பு திறக்கவேண்டும். எதுவும் கிடைக்கவில்லையெனில் நோன்புதிறப்பதாக உள்ளத்தில் எண்ணிக் கொள்ளவேண்டும்! அதற்காக விரலைச் சூப்பவோ உமிழ் நீரை (வமினுள்) சேர்த்து அதை விழுங்கவோ செய்யக் கூடாது„ பாமரர்களில் சிலர் செய்வது போன்று! அது தவறு!

---

22 இது பலவீனமான அறிவிப்புத் தொடர். திர்மிதி கூறுகிறார்கள்: இந்த ஹதீஸ், ஹஸன் ∴கரீப் தரத்திலானது. ( ∴கரீப் : அறிவிப்புத் தொடரில் ஒரேஒர் அறிவிப்பாளரும் இடம் பெற்றது)

23 இதன் அறிவிப்பத் தொடர் மிகவும் ஹஸன் தரத்திலுள்ளதாகும்.

நோன்பு திறக்கும் நேரத்தில் தனக்கு விருப்பமானவற்றை கேட்டு அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்வது நல்லது. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

في سنن ابن ماجة عن النبي ﷺ انه قال : ان للصائم عند فطره دعوة ما ترد

“நோன்பாளிக்கு, நோன்பு திறக்கும் நேரத்தில் மறுக்கப்படாத பிரார்த்தனை ஒன்று உள்ளது„ நூல் : இப்னு மாஜா - அஸ்-ஸவாயித் எனும் நூலில் கூறியுள்ளார்: இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் தரத்திலானது.[24]

முஆத் பின் ஜஹ்ரா (ரலி) எனும் தாபிஈ அறிவித்துள்ளார்கள் :

عن معاذ بن زهرة مرسلا مرفوعا : كان النبي ﷺ اذا افطر يقول لـك صمـت و علـي رزقك افطرت - رواه ابي داؤد

நபி(ஸல்)அவர்கள் நோன்பு திறக்கும்போது இவ்வாறு பிரார்த்தனை செய்பவர்களாய் இருந்தார்கள் : யா அல்லாஹ், உனக்காக நோன்பு நோற்றேன். உனது உணவைக்கொண்டே நோன்புதிறக்கிறேன். நூல் : அபூ தாவூது[25] - இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் :

عن ابن عمر ﷺ ان النبي ﷺ كان اذا افطر يقول : ذهب الظمـأ و ابتلـت العـروق و ثبت الاجر ان شاء الله

---

[24] வேறுசிலர் இதனை பலவீனமானது என்று சொல்லியுள்ளார்கள். இந்த ஹதீஸின் நம்பகத்தன்மையில் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டிற்குக் காரணம், இதன் அறிவிப்பாளர் வரிசையில் வரும் ஓர் அறிவிப்பாளரை யார் என்று முடிவு செய்வதில் ஏற்பட்டகருத்து வேறுபாடுதான்! ஆனாலும் நோன்பாளியின் பிரார்த்தனை பொதுவாக ஏற்றுக் கொள்ளத்தக்கது என்று அறிவிக்கும் பல அறிவிப்புச் சான்றுகள் இதற்குண்டு!

[25] முஆத் பின் ஜஹ்ரா என்பவர் தாபிஈ ( ஸஹாபாக்களுக்கு அடுத்த தலைமுறையினர்) ஆவார். இப்னு ஹிப்பான், இவரை நம்பிக்கைக்குரியவராகக் கருதுகிறார். நபித்தோழரின் பெயர் இல்லாததால் இந்த நபிமொழி பலவீனமானது., என்றாலும் வேறு அறிவிப்பாளர்களாலும் இது அறிவிக்கப்பட்டுள்ளதால் இது வலிமை பெறுகிறது!

„நபி(ஸல்)அவர்கள் நோன்பு திறக்கும்போது இவ்வாறு பிரார்த் தனை செய்பவர்களாய் இருந்தார்கள் : தாகம் தீர்ந்தது„ நரம்புகள் குளிர்ந்தன!கூலி உறுதியாகிவிட்டது - இன்ஷாஅல்லாஹ்!„[26]

☐ நோன்பின் விரும்பத்தக்க ஒழுங்கு முறைகளில் குர்ஆன் ஓதுதல், திக்ர் (இறை நினைவு), பிரார்த்தனை, தொழுகை, தர்மம் ஆகியவற்றை அதிகம்அதிகம் செய்வதும் அடங்கும். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

في صحيح ابن حزيمة و ابن حبان ان النبي ﷺ قال : ثلاثة لا ترد دعوتهم الصائم حتي يفطر و الامام العادل و دعوة المظلوم يرفعها الله فوق الغمام تفتح لها ابواب السماء ويقول الرب : وعزتي وجلالي لأنصرنك ولو بعد حين

„மூவருடைய பிரார்த்தனை நிராகரிக்கப்படமாட்டாது. ஒன்று: நோன்பாளி, நோன்பு திறக்கும் நேரம்வரை! இரண்டு : நீதிமிக்க தலைவர். மூன்று : அநீதி இழைக்கப்பட்டவர்„ இவரது பிரார்த்த னையை அல்லாஹ் மேகத்திற்கு மேல் உயர்த்துகிறான். மேலும் வானத்தின் அனைத்துக் கதவுகளும் அதற்காகத் திறக்கப்படுகின் றன. இறைவன் கூறுகிறான்: எனது கண்ணியத்தின் மீதும் மகத் துவத்தின் மீதும் சத்தியமாக! நிச்சயமாக உனக்கு நான் உதவி செய்வேன்!சில காலத்திற்குப்பிறகேனும்!„நூல்: அஹ்மத், திர்மிதி[27]

இப்னு அப்பாஸ்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் :„நபி (ஸல்) அவர்கள் மனிதர்கள் யாவரி னும் அதிகம் கொடை வழங்குபவர்க ளாக இருந்தார்கள். அதுவும் ரமளான் மாதத்தில் - அவர்களை ஜிப்ரீல் சந்தித்து குர்ஆனை அவர்களுக்கு ஓதிக்காண்பிக்கும் நோரத்தில் மேலும் அதிகமாக கொடை வழங்குபவர்களாய் இருந் தார்கள். ஜப்ரீல் சந்திக்கும் நேரத்தில் நபி(ஸல்)அவர்கள் தென்றல்

---

[26] இதன் அறிவிப்பத் தொடர் ஹஸன் தரத்திலானது.

[27] இந்த ஹதீஸில் பலவீனம் உள்ளது. இதிலுள்ள சில வாசகங்களுக்கு அறிவிப்புச் சான்றுகள் உள்ளன.

காற்றைவிட அதிகமாக வாரிவழங்குபவர்களாய் இருந்தார்கள்!„ நூல்: புகாரி, முஸ்லிம்

நபி(ஸல்)அவர்கள் கொடை வழங்கினார்களெனில் அதுஎல்லா வகையான கொடைகளையும் உள்ளடக்கியதாகவே இருந்தது! கல்வி கற்பித்தல், அல்லாஹ்வுக்காக–அவனது தீனை மேலோங்கச் செய்வதற்காக உயிரையும்பெருளையும் தியாகம்செய்தல், அல்லாஹ் வின் அடியார்களுக்கு வழிகாட்டுதல் போன்ற எல்லா அம்சங்களும் நபியவர்களிடம் இருந்தன! மனித குலத்திற்கு எல்லா வழிகளிலும் பயன் கிட்டுமாறு செய்வார்கள்! அதாவது, அறியாதிருப்போருக்கு கல்வி கற்பிப்பது, தேவையுடையோரின் தேவைகளை நிறைவேற் றுவது, பசித்தோருக்கு உணவழிப்பது போன்ற எல்லா வழிகளி லும் மக்களுக்குப் பயனளித்துக் கொண்டிருந்தார்கள் நபி (ஸல்) அவர்கள்!

நபி (ஸல்)அவர்கள் கொடைவழங்குவது ரமளான் மாதத்தில் பன்மடங்காகும். காரணம் ரமளானின் காலம் சிறப்புடையதாக இருப்பதும் அதன் கூலி இரட்டிப்பாக்கப்படுவதுமாகும். மேலும் அம்மாதத்தில் வழிபாடு பரிபவர்களுக்கு உதவிபுரிய வேண்டும்„ நோன்பையும் உணளிப்பதையும் ஒருசேர நிறைவேற்றவேண்டும் என்பதும் நோக்கமாகும்! இவ்விரண்டு பண்புகளும் சுவனம் செல் வதற்கான் காரணிகளாகத் திகழ்கின்றன!

ஆபூ ஹுரைரா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

في صحيح مسلم عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : من أصبح منكم اليوم صائما ؟ قال ابو بكر أنا.قال: فمن تبع منكم اليوم جنازة ؟ قال ابو بكر أ نا . قال : فمن أطعم منكم اليوم مسكينا ؟ قال ابو بكر أ نا . قال : فمن عاد منكم مريضا ؟ قال ابو بكر أ نا . قا ل النبي : ﷺ ما ا جتمعن في امرئ ا لا دخل الجنة

இன்று உங்களில் நோன்பு நோற்றிருப்பவர் யார்? அதற்கு அபூ பக்ர் (ரலி)அவர்கள், நான், என்றார்கள். இன்று உங்களில் ஜனாஸாவை (அடக்கம் செய்யப்) பின்தொடர்ந்து சென்றவர் யார்?

நான்„

இன்று உங்களில் ஏழைக்கு உணவு அளித்தவர் யார்?

நான்„

இன்று உங்களில் நோயாளியை நலம் விசாரித்தவர் யார்?„

நான்„

அப்போது நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள் : இந்தக் குணங்கள் ஒருவரிம் ஒருங்கே அமையப்பெற்றிருந்தால் அவர் நிச்சயம் சுவனம் பிரவேசிப்பார்!„ நூல் : முஸ்லிம்

☐ நோன்பின் மூலம் அல்லாஹ் பொழிந்த அருட்கொடையின் மதிப்பை நோன்பாளிஎண்ணிப் பார்ப்பதும்நோன்பின் விரும்பத்தக்க ஒழுங்கு முறைகளில் ஒன்றாகும். அவருக்கு நோன்புநோற்றிட அவன் அருள்புரிந்தான். அன்றைய பகலின் நோன்பை நிறைவு படுத்தவும் அந்த மாதம் முழுவதும் நோற்றுமுடிக்கும் வகையிலும் நோன்பை அவருக்கு இலகுவாக்கிக் கொடுத்தான். பெரும்பாலான மக்களோ நோன்பு நோற்கும் பாக்கியத்தை இழந்துவிட்டனர்! காரணம், அதை அடைவதற்கு முன்னர் இறந்துவிட்டனர்„ அல்லது நோன்பு நோற்க இயலாமல்போயினர்! அல்லது வழிகேட்டிற்குள்ளாகி நோன்பைப் புறக்கணித்தனர்!

எனவே நோன்பு எனும் அருட்கொடைக்காக நோன்பாளி தன் இரட்சகனைப் புகழ்ந்திட வேண்டும். அது எத்தகைய அருட்கொடை? பாவங்கள் மன்னிக்கப்படவும் தீமைகள் மாய்க்கப்படவும் கண்ணியமிக்க இரட்சகனுக்கு அருகில்–அருட்பேறுகள் நிறைந்த சுவனபதியில் அந்நஸ்துகள் உயர்த்தப்படவும் காரணமாக இருக்கிற அருட்கொடைகளாகும்!

சகோதரர்களே! நோன்பின் ஒழுங்குமுறைகளைக் கடைப்பிடியுங்கள்! கோபம் மற்றும் பழிவாங்கலின் காரணங்களைவிட்டும் விலகிவிடுங்கள். ஸல∴புஸ் ஸாலிஹ் எனும் சான்றோர்களின் குணவொழுக்கங்களை மேற்கொள்ளுங்கள். திண்ணமாக இந்தச் சமுதாயத்தின் ஆரம்பகால மக்களை எந்தப்பண்புகள்சீர்திருத்தம் செய்ததோ அந்தப் பண்புகளைத் தவிர வேறெதுவும் இந்தச் சமுதாயத்தின் கடைசிகாலத்து மக்களைச் சீர்திருத்தப் போவதில்லை! அவைதாம் – கீழ்ப்படிதல் மற்றும் பாவங்கள் புரியாதிருத்தல் எனும் பண்புகளாகும்!

இப்னு ரஜப் அவர்கள் சொல்கிறார்கள்: நோன்பாளிகள் இரண்டு வகையில் உள்ளனர். ஒரு வகையினர்: உணவையும் பானத்தையும் மனஇச்சையையும்–அல்லாஹ்வுக்காக எனும் தூய எண்ணத்துடன் விட்டவர்கள். அதற்கான பிரதிபலனை அல்லாஹ்விடம் – சுவனத்தில் எதிர்பார்த்திருக்கிறார்கள். இத்தகையவர்கள் அல்லாஹ்வுடன் ஒருவிதவியாபாரத்தை–கொடுக்கல் வாங்கலை மேற்கொண்டிருக்கிறார்கள். நல்லமல் புரிந்தவர்களின் கூலியை அல்லாஹ் வீணாக்கமாட்டான்! அவனுடன் உடன்படிக்கை செய்தவர்களை அவன் ஏமாற்றிவிடமாட்டான். மிகவும்மகத்தான லாபத்தை நிச்சயம் அவர்களுக்கு வழங்குவான்!

قال رسول الله ﷺ لرجل انك لن تدع شيئا اتقاء الله الا آتاك الله خيرا منها –

اخرجه الامام أحمد

நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதருக்குச் சொன்னார்கள் : நீ அல்லாஹ்வுக்காக அஞ்சி எந்த ஒரு பொருளை – விட்டுவிட்டாலும் அதனை விடச்சிறந்த ஒன்றை அல்லாஹ் உனக்கு வழங்காமல் இருக்கமாட்டான்!„ நூல் : முஸ்னத் அஹ்மத்[28]

நோன்பாளிக்குச் சுவனத்தில் உணவு, பானம், பெண்கள் ஆகியவை– எந்தஅளவு வழங்க வேண்டும் என அல்லாஹ் நாடி

[28] ஸஹீஹ் தரத்திலானது.

னானோ அந்த அளவு வழங்கப்படும். அல்லாஹ் குர்ஆனில் கூறி யுள்ளான் :

قال لله تعالي : كلوا و اشربوا هنيئا بما اسلفتم في الايام الخالية

,,உண்ணுங்கள்., பருகுங்கள்., சுவையாக! கடந்த காலங்களில் நீங்கள் செய்த நல்ல அமல்களுக்குப் பகரமாக!,, குர்ஆன் : (69:24) இந்த வசனம் நோன்பாளிகள் குறித்து அருளப்பட்டதாகும் என முஜாஹித் போன்ற விரிவுரையாளர்கள் சொல்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கனவில் பார்த்த அப்துர் ரஹ்மான் பின் ஸமுரா (ரலி) என்கிற தோழரின் அறிவிப்பில் வருகிறது :

و في حديث عبد الرحمن بن سمرة الذي رآه النبي ﷺ في منامه قال : و رأيت رجلا من امتي يلهث عطشا كلما دنا من حوض منع و طرد فجاء ه صيام رمضان فسقاه و ارواه - خرجه الطبراني

நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள்:,,என் சமுதாயத்தைச் சேர்ந்த ஒருமனிதரை நான்கனவில் கண்டேன்.அவர் தாகத்தால் நாக்கைத் தொங்க விட்டுக்கொண்டிருக்கிறார். தண்ணீர் தடாகத்தின்அருகில் வரும் போதெல்லாம் தடுக்கப்பட்டு விடுகிறார்.. விரட்டப்படுகிறார்! பிறகு ரமளான் மாத நோன்பு அவரிடம் வந்தது. அது அவருக் குத் தண்ணீர் புகட்டித் தாகம் தீர்த்து வைத்தது!,,நூல்: தபரானி [29]

என் சமுதாய மக்களே! இந்தமாதத்தில் கருணைமிக்க இறை வனிடம் உரையாடுபவர் யாரும் இல்லையா? வழிபாடு புரிபவர்

---

[29] அறிவிப்புத் தொடர் பலவீனமான ஹதீஸ். ஆனாலும் இப்னுல் கையிம் (ரஹ்) அவர்கள் ரூஹ் எனும் தமது நூலின் பத்தாவது அத்தியாயத்தில் இந்த நபிமொழியை முழுமையாக எடுத்தெழுதிய பிறகு சொல்கிறார்கள்: ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா(ரஹ்) அவர்கள் இந்த நபிமொழிக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க கேட்டிருக்கிறேன். அவர்கள் சொன் னார்கள் : நபிமொழிக் கலையின் அடிப்படைக் கொள்கைகள் இந்த நபிமொழிக்குச் சார்பாக சான்றுபகர்கின்றன. மிகவும் அழகிய நபிமொழிகளில் இதுவும் ஒன்றாகும்.

களுக்குச் சுவனபதிகளில் அல்லாஹ் தயார் செய்து வைத்துள்ள அருட்பேறுகளில் ஆசைகொள்பவர் யாரும் இல்லையா?

சுவனபதிக்குச்

சொந்தம்கொண்டாட விரும்புகிறவர்

இன்றே

விரைந்து செயல்படட்டும்!

இரவின் இருளில் விழித்தெழுந்து

குர்ஆனின் வெளிச்சத்திற்கு வரட்டும்!

நோன்பை நோன்புடன் தொடரட்டும்.

இந்த வாழ்வு அழிவது நிச்சயம்!

அமைதி இல்லத்தில்

அல்லாஹ்வுக்கு அருகில்

அமையும் வாழ்வே நித்தியம்!

நோன்பாளிகளில் இரண்டாவது வகையினர் யாரெனில் உலகில் அல்லாஹ்வைத் தவிர மற்ற வை அனைத்தை விட்டும் விலகிய வண்ணம் நோன்பிருப்பவர்கள். இவர்கள்—தலையையும்அது உள்ளடக்கிய புலன்களையும் பாதுகாப்பார்கள். வயிற்றையும் அதனுள் செல்லும் உணவையும் கண்ணாணிப்பார்கள். மரணத்தையும் (மண்ணினுள் உடல்) மக்கிப்போகும் நிலையையும் நினைத்துப் பார்ப் பார்கள்! மறுமையை நாடுவார்கள்! உலக அலங்காரத்தை விட்டுவிடுவார்கள்! இப்படிப்பட்டவர்ககளுக்கு நோன்புப் பெருநாள் என்பது தங்கள் இரட்சகனைச் சந்திக்கும் நாளாகும்! அவனைக் கண்டு களிப்படையும் நாளாகும்!

எவர், அல்லாஹ்வின் கட்டளையை ஏற்று உலகின் ஆசாபா சங்களைத் துறந்து நோன்பிருந்தாரோ அவர் நாளை மறுமையில் சுவனத்தில் அவற்றை அனுபவிப்பார்! அல்லாஹ்அல்லாத அனைத் தையும் விட்டுவிட்டு வாய்மையுடன் எவர் நோன்பிருந்தாரோ அவ ரது பெருநாள் அவனை அவர் சந்திக்கும் திருநாளாகும்!

من كان يرجو لقاء الله فان اجل الله لآت و هو السميع العليم

„அல்லாஹ்வின் சந்திப்பை யார் எதிர் பார்த்திருக்கிறாரோ (அவர் தெரிந்துகொள்ளவேண்டும்:) அல்லாஹ்வினால் நிர்ணயிக்கப்பட்ட நேரம் வந்தே தீரும்! மேலும் அவன் யாவற்றையும் செவியுறுபவ னாகவும் நன்கறிபவனாகவும் இருக்கிறான்„ குர்ஆன் (29:5)

பாவமீட்சிதேடும் மக்களே! மனம் ஆசைப்படுகிறவற்றைவிட்டு இன்றே நோன்பு இருங்கள்! இறைவனைச் சந்திக்கும் நாளினைப் பெருநாளாகப் பெற்றுக் கொள்வீர்கள்!

யா அல்லாஹ்! உனக்காக என்று செயல்படும் வாய்மையைக் கொண்டு எங்களது அகத்தை அழகுபடுத்துவாயாக! உன் தூத ரைப் பின்பற்றல், நற்குணங்களைக் கடைப்பிடித்தல் ஆகியவற்றின மூலம் எங்களின் அமல்களை அலங்கரிப்பாயாக! யா அல்லாஹ்! அலட்சியத்தில் இருந்து எங்களை விழித்தெழச் செய்வாயாக!அழி வுகளிலிருந்து எங்களை ஈடேற்றுவாயாக! எங்களுடைய பாவங் களையும் தீமைகளையும் போக்குவாயாக! எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் - அவர்களில் இறந்தவர்களுக்கும் உயிருடன் உள்ளவர்களுக்கும் பாவமன்னிப்பு வழங்குவாயாக!

المجلس الثاني عشر

في النوع الثاني من تلاوة القرآن

12 வது மஜ்லிஸ்

# குர்ஆனின் சட்டங்களை அமுல்படுத்துவது

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே-நன்மையை ஆதரவு வைத்துத் தன்னை வணங்கி வழிபட்டோருக்கு ஏராளமாக வழங்குபவன்! அவனது அறிவுரையைப் புறக்கணித்துவிட்டு அவனுக்குப் பாவம் செய்பவர்களைக் கடுமையாகத் தண்டிப்பவன்.

தான் நாடியவர்களைத் தனது கருணையால் தேர்ந்தெடுத்துத் தன்னோடு நெருங்கிவரும் அந்தஸ்தைஅவர்களுக்கு வழங்கினான். தான் நாடியவர்களைத் தூரமாக்கினான்., அவர்கள் எந்த வழியில் திரும்பினார்களோ அந்த வழியில் அவர்களைச்செலுத்தினான்!இது அவனது நீதத்தின்படி செய்ததாகும்.

குர்ஆனை, அகிலத்தார்க்கு ஓர் அருட்கொடையாய்- வழிபாடு செய்வோர்க்கு ஒருகலங்கரை விளக்கமாய் இறக்கியருளினான். அதைப் பற்றிப்பிடித்து வாழ்ந்தவர்கள் யாரோ அவர்கள்தம் குறிக்கோளை அடைந்துவிட்டார்கள். யார் அதன் வரம்புகளை மீறினார்களோ - அதற்குச் செலுத்தவேண்டிய கடமைகளைப் பாழ்படுத்தினார்களோ அவர்கள் உலகிலும்மறுமையிலும் நஷ்டம் அடைந்து விட்டார்கள்!

அல்லாஹ் வழங்கிய உபகாரங்களுக்காகவும் உதவிகளுக்காகவும் அவனை நான் புகழ்கிறேன்! இம்மை-மறுமை தொடர்பான அருட்கொடைகளை அவன் வழங்கியதற்காக அவனுக்கு நான் நன்றி செலுத்துகிறேன். நன்றி செலுத்துபவன் - மேலும்மேலும் அருட்கொடைகளைப் பெற எத்துணை தகுதியும் உரிமையும் பெற்றுள்ளான்! வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவன் தனித்

தவன்., அவனுக்கு யாதொரு இணைதுணை இல்லை. நிறை வான ஆற்றல்களைக் கொண்டவன். நிகர்களைவிட்டும் உவமை களைவிட்டும் உயர்ந்தவன்! முஹம்மத் நபியவர்கள்,அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன். மனிதர்கள் அனைவரைக் காட்டிலும் அல்லாஹ், அவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான்!

நபியவர்கள் மீதும் அவர்கள் குடும்பத்தினர்– தோழர்கள் மீதும் அவர்களைப் பின்பற்றி வாழ்ந்தவர்கள் மீதும் காலெமெல்லாம் அல்லாஹ் ஸலாத் – கருணை பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! இதற்கு முன்பு 5 ம் மஜ்லிஸில் கூறியுள்ளோம்: குர்ஆனை ஓதுவது இரண்டு வகையில் உள்ளது. ஒன்று : அதன் வார்த்தைகளை ஓதுவது! இதுதான் கிராஅதுல் குர்ஆன் என்பதாகும்.–இது பற்றிய விளக்கமும் முன்னர் அந்த மஜ்லிஸில் முடிந்துவிட்டது.

இரண்டாவதுவகை அதன் சட்டத்தைஓதுவதாகும்.சட்டத்தை ஓதுவதென்பதன் பொருள் குர்ஆனின் செய்திகளை உண்மைப் படுத்துவதும் அதன் சட்டங்களைப்பின்பற்றுவதும் அதன் ஏவல் களைச் செயல்படுத்துவதும் அதில் விலக்கப்பட்டவற்றை விட்டுத் தவிர்த்து வாழ்வதுமாகும்.

இந்த இரண்டாவது வகைதான் குர்ஆன் இறக்கியருளப்பட்ட தற்கான உயரிய இலட்சியமாகும். அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : كتاب أنزلناه اليك مبارك ليدبروا آياته و ليتذكر اولو الالباب

„இது பெரும் பாக்கியங்கள் நிறைந்த வேதமாகும். (நபியே) இதனை உம் மீது இறக்கி யுள்ளோம்„ இந்த மக்கள் இதன் வச னங்களைச் சிந்திக்கவேண்டும்„அறிவுடையோர் இதிலிருந்து படிப் பினை பெறவேண்டும் என்பதற்காக!„ குர்ஆன் (38 : 9)

எனவேதான் நம்முடைய சான்றோர்கள் இந்த அடிப்படையில் வாழ்ந்தார்கள்., உறுதியான நம்பிக்கையுடன்குர்ஆனைக் கற்றார்கள் அதனை உண்மை வேதமென ஏற்றார்கள்.. அதன் சட்டங்களை ஆக்கப்பூர்வமாக –தாமும் செயல்படுத்தினார்கள்., பிறரையும் நடை முறைப்படுத்தச் செய்தார்கள்!

அபூ அப்துர் ரஹ்மான் – அஸ்ஸுலமி என்பார் சொல்கிறார் : "எங்களுக்குக் குர்ஆனை கற்றுத் தந்தவர்கள் சொன்னார்கள் : உஸ்மான்(ரலி) மற்றும் இப்னு மஸ்வூத் (ரலி) போன்றவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் இருந்து பத்து வசனங்களைக் கற்றார்கள் என்றால் அவற்றை நன்கு முழுமையாகக் கற்காதவரை– அவற்றி லுள்ள அறிவு ஞானத்தையும் அமல்படுத்தும் முறைகளையும் கற்தாதவரையில் புதிய பாடங்களைக்கற்கச் செல்லவேமாட்டார்கள். அவர்கள் சொல்வார்கள் : குர்ஆனுடன் அறிவு–செயல்பாடு ஆகிய அனைத்தையும் நாங்கள் கற்றோம்!,,

இந்த இரண்டாவதுவகை ஓதுதல்தான் நற்பாக்கியம்–துற்பாக் கியத்திற்கு அடித்தளமாகும். அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான் :

قال الله تعالي : قال اهبطوا منها جميعا بعضكم لبعض عدو فاما يأتينكم مني هدي
اتبع هداي فمن فلا يضل و ولايشقي و من أعرض عن ذكري فان له مغيشة ضنكا
و نحشره يوم القيامة أعمي قال رب لم حشرتني أعمي و قد كنت بصيرا قال
كذ لك أتتك آياتنا فنسيتها و كذلك اليوم تنسي و كذلك نجزي من أسرف و لم
يؤمن بآيات ربه ولعذاب الآخرة أشد و أبقي

"அவன் கூறினான்: நீங்கள் இருவரும் (மனிதனும் இபலீஸும்) இங்கிருந்து வெளியேறி விடுங் கள்! நீங்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாவீர்கள். இனி என்னிடமிருந்து வழிகாட்டல் உங்க ளுக்குக் கிடைத்தால் யார் என் வழியைப் பின்பற்றினாறோ அவர் வழிதவறமாட்டார்., துர்ப்பாக்கியத்திற்கு ஆளாகவும்மாட்டார். எவன் எனது திக்ரை (நல்லுரையை) புறக்கணிக்கிறானோ அவனுக்கு (இவ்வுலகில்) கடினமான வாழ்வு இருக்கிறது. மேலும் மறுமை நாளில் அவனைநாம் குருடனாக எழுப்புவோம்–அவன் கேட்பான்:

என் இறைவனே! (உலகில்) நான் பார்வையுள்ளவனாக இருந்தேனே! இங்கு நீ என்னைஏன் குருடனாக எழுப்பினாய்? அதற்கு அல்லாஹ்– ஆம்! இவ்வாறே நம்முடைய வசனங்கள் உன்னிடம் வந்திருந்தபோது நீ அவற்றை மறந்துவிட்டிருந்தாய்., அவ்வாறே இன்று நீயும் மறக்கடிக்கப்படுகின்றாய்! என்று கூறுவான்! இவ்விதமே வரம்பு மீறி வாழ்வோர்க்கும் தம் இறைவனின் வசனங்களை ஏற்காதோருக்கும் நாம் (இவ்வுலகில்) கூலிவழங்குகிறோம். மேலும் மறுமையின் தண்டனை மிகக் கடினமானதாகவும் நீடித்து நிற்கக் கூடியதாகவும் இருக்கிறது!,,குர்ஆன் (20:123–124)

இந்த வசனங்களில் – அல்லாஹ் தன் தூதர்களுக்கு வஹியின் மூலம் அனுப்பிய நேர்வழியை யார் பின்பற்றினார்களோ அவர்களுக்குரிய நன்மையை விளக்கியுள்ளான்.–இறைவன் வழங்கிய நேர்வழியில் மிகமுக்கியமானது மகத்துவமிக்க இந்த குர்ஆன் ஆகும் – இதேபோன்று அந்தநேர்வழியை யார் புறக்கணித்தார்களோ அவர்களுக்குரிய தண்டனையும் இந்த வசனங்களில் அல்லாஹ் விவரித்துள்ளான்!

பின்பற்றி வாழ்ந்தவர்களின் நன்மை என்னவெனில், அவர்கள் வழிதவற மாட்டார்கள்., துர்ப்பாக்கியம் அடையவும் மாட்டார்கள் என்பதாகும். அவர்களிடம் வழிகேடும் துர்ப்பாக்கியமும் இருக்காது என்று சொல்லியிருப்பதில் –அவர்கள்முழுமையான நேர்வழியில் இருக்கிறார்கள்., இம்மை–மறுமையின் நிறைவான பாக்கியங்களைப் பெற்றுள்ளார்கள் என்பதும் அடங்கியுள்ளது!

நேர்வழியைப் புறக்கணிப்பவர்களுக்குரிய – அதன்படி அமல் செய்யாமல் ஆணவம்கொள்பவர்களுக்குரிய தண்டனை என்னவெனில் அவர்கள் இவ்வுலகிலும் மறுவுலகிலும் துர்ப்பாக்கியத்தற்கும் வழிகேட்டிற்கும் ஆளாவார்கள்., கடினமான வாழ்க்கையை எதிர்கொள்வார்கள்,. உலக வாழ்விலும் மனக்கவலையும் கலக்கமும் அடைவார்கள்.,அவர்களிடம் சீரான கொள்கையும் இருக்காது., சீரான செயல்பாடும் இருக்காது!

اولئك كالانعام بل هم أضل اولئك هم الغافلون „அவர்கள் மிருகங்களைப் போன்றவர்கள்., ஏன் அவற்றைவிடவும் அவர்கள்தரம் தாழ்ந்தவர்

கள்! அவர்கள்தாம் அலட்சியத்தில் மூழ்கியிருப்பவர்கள்!,, குர்ஆன் (7:179)

மண்ணறையிலும் அவனது நிலை நெருக்கடியாகவும் கடின மாகவும் இருக்கும்.அவன் மீது மண்ணறைநெருக்கப்பட்டு அவ னுடைய விலா எலும்புகள் நொறுங்கத் தொடங்கும். மறுமையில் அவன் மீண்டும் உயிருடன் எழுப்பப்படும்போது குருடனாகஎழுப் பப்படுவான் எதையும் அவனால் பார்க்கமுடியாது!

அல்லாஹ் கூறுகிறான் :

و نحشرهم يوم القيامة علي وجوههم عميا و بكما و صما مأواهم جهنم كلما خبت زدناهم سعيرا

“மறுமை நாளில் நாம் அவர்களை ஒன்று திரட்டும்போது முகங்குப்புற இழுத்துவருவோம். குருடர்களாய், செவிடர்களாய், ஊமையர்களாய்! அவர்களின் இருப்பிடம் நரகமாகும்.அதன் வெப் பம் தணியத் தொடங்கும் போது அதனை இன்னும் கொழுந்து விட்டு எரியும்படி செய்வோம்!,, (17: 97)

உலகில் சத்தியத்தைப் பார்ப்பதைவிட்டும் அவர்கள் குருடர் களாய் ஆனபோது – அதைச் செவியேற்பதைவிட்டும் செவிடர்க ளாய் ஆனபோது– அதைப் பேசமாட்டோமென வாயைப் பொத்திக் கொண்டபோது . . . . அவர்கள் என்ன சொன்னார்கள் என்பதை குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது :

وقالوا قلوبنا في أكنة مما تدعونا اليه و في آذاننا وقر و من بيننا وبينك حجاب

“அவர்கள் கூறினார்கள்: எதன் பக்கம் எங்களைநீர் அழைத்துக் கொண்டிருக்கிறீரோ (அதனைச் சிந்திக்காதபடி) எங்களின் உள் ளங்கள் உறையிடப்பட்டுள்ளன. எங்கள் காதுகளில் அடைப்பு ஏற் பட்டுள்ளது. மேலும் எங்களுக்கும் உமக்கும் இடையேஒரு திரை விழுந்துள்ளது!,, (41: 5)

–மறுமையில் அவர்களின் தண்டனையை அல்லாஹ் எவ்வாறு அமைத்தான்? உலகில் அவர்கள் எவ்வாறு செயல்பட்டார்களோ அதைப்போன்ற நிலைக்கு ஆளாக்கினான். அல்லாஹ் வழங்கிய ஷரீஅத்தை அவர்கள் வீணடித்ததைப் போன்று அல்லாஹ்வும் அவர்களை வீணடித்தான்! இதனை குர்ஆனில் அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகின்றான் :

قال رب لم حشرتني أعمي و قد كنت بصيرا قال كذلك اتتك آياتنا فنسيتها وكذلك اليوم تنسي

„அவன் கேட்பான்: என் இறைவா, (உலகில்) நான்பார்வையுள்ளவனாக இருந்தேனே! இங்கு நீ என்னை ஏன் குருடனாக எழுப்பினாய்?„அதற்கு அல்லாஹ் கூறுவான்: ஆம்„இவ்வாறே நம்முடைய வசனங்கள் உன்னிடம் வந்திருந்தன„ நீ அவற்றை மறந்துவிட்டிருந்தாய்! அவ்வாறே இன்று நீயும் மறக்கடிக்கப்பட்டாய்!„ (20 : 123–127)

மற்றோர் இடத்தில் , جزاء وفاقا „ (அவர்களின் இழிச்செயல்களுக்கு) ஏற்றதான தண்டனையாக„ (78: 26)–இன்னோரிடத்தில்,

و من جاء با لسيئة فلا يجزي الذين عملوا السيئات الا ما كانوا يعملون

„ஒருவர் தீ மையைக் கொண்டு வருவாராயின் தீமைகள் செய்தோருக்கு, அவர்கள் செய்துகொண்டிருந்த தீமைகள்தாம் தண்டனையாகக் கொடுக்கப்படும்„ (28:84)

ஸமுரா பின் ஜுன்துப்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் :„நபி (ஸல்) அவர்கள் ஒரு தடவை தொழுது முடித்தபோது(மற்றோர் அறிவிப்பில் அது காலைத்தொழுகை என உள்ளது) எங்களை முன்னோக்கி அமர்ந்தார்கள். அப்போது கேட்டார்கள் : உங்களில் யாராவது இன்றுஇரவில் கனவுகண்டுள்ளீர்களா? என்று! அறிவிப்பாளர் சொல்கிறார் : யாராவது கனவு கண்டால் அதை அவர் விவரிப்பார். நபியவர்கள்„ மா ஷாஅல்லாஹ்„ என்று சொல்வார்கள்.

ஒருதடவை நபியவர்கள் கனவு கண்டதாகக் கூறியதை நாங் கள் கேட்டோம். (அன்றும் வழக்கம்போல்) உங்களில் யாராவது கனவு கண்டீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள், இல்லை,, என்று சொன்னோம். அப்போது நபியவர்கள் சொன்னார் கள் : இன்று நான் ஒரு கனவு கண்டேன். என்னிடம் இரண்டு மனிதர்கள் வந்தார்கள். (அந்தஅறிவிப்பில் தொடர்ந்து வருகிறது:) அப்படியே நாங்கள் நடந்து சென்றோம். படுத்திருந்த ஒரு மனித ருக்கு அருகில் வந்தோம். அங்கே இன்னோருவர் பெரியதொரு கல்லுடன் அவருக்கருகில் நின்று கொண்டிருந்தார். திடீரென அவர், படுத்திருப்பவரின் தலைமீது கல்லை எறிந்து தாக்குகிறார். அது அந்தப் பக்கமாக உருண்டோடியது. தாக்கியவர் அதன் பின்னே சென்றுஅதை எடுத்துக்கொண்டுவருகிறார். அவர் வருவ தற்குள் அம்மனிதரின் தலை மீண்டும் முன்போல் நல்லவிதமாக ஆக விடுகிறது. முன்னர் தாக்கியது போல் மீண்டும் அக்கல்லால் அவரது தலையை அவர் தாக்குகிறார். நான் கேட்டேன்: ஸுப்ஹா னல்லாஹ்! இது என்ன?என்று! அந்த இரண்டுமனிதர்களும் எனக் குச்சொன்னார்கள்: தொடர்ந்து நடப்பீராக! என்று. (மேலும் அந்த நபிமொழி தொடர்கிறது,,அதில் வருகிறது:)எந்தமனிதரைப் படுத்தி ருக்கக் கண்டேனோ – எவரது தலை மீது தாக்கப்பட்டதோ அந்த மனிதர் யார் என்றால், அவர்தான் குர்ஆனைப் பெற்றிருந் தும் அதை உதறித்தள்ளியவர்,,மேலும் கடமையான தொழுகையினை நிறை வேற்றாமல் தூங்கிக்கொண்டிருப்பவர்!,, நூல் : புகாரி

இப்னு அப்பாஸ்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் :“நபி (ஸல்) அவர்கள் இறுதிஹஜ்ஜில் மக்களுக்கு உரையாற்றினார்கள்.அப்பொ ழுது கூறினார்கள்: உங்கள் பூமியில் தனக்கு வழிபாடு கிடைப்பது குறித்து திண்ணமாக ஷைத்தான் நிராசை அடைந்துவிட்டான். ஆனால் அது தவிர உள்ளவற்றில் அதாவது நீங்கள் லேசாகக் கருதுகிற செயல்களில் தனக்குக்கீழ்ப்படிதல் கிடைப்பது குறித்து அவன் திருப்திகொள்கிறான்!,,

எனவே எச்சரிக்கையாக இருங்கள்! நிச்சயமாக நான் உங்களி டையே சிலவற்றை விட்டுச் செல்கிறேன்,,அவற்றை நீங்கள் பற்றிப் பிடித்து வாழ்வீர்களாயின் ஒருபோதும் வழி

தவறமாட்டீர்கள்!அவைதாம் அல்லாஹ்வின்வேதமும், அவனு டைய தூதரின் வழிமுறையுமாகும்![30] நூல் : ஹாகிம்

அம்ருப்னு ஷுஐப்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மறுமை நாளில் குர்ஆன் ஒரு மனிதனாக உருமாற்றப்படும். குர்ஆனை கற்றறிந்தபின்பும் அதன்கட்டளைக்கு மாறு செய்தஒருமனிதன் கொண்டுவரப்படுவான்.அவனுக்கு எதிராக வழக்காடும் மனிதனாக குர்ஆன் கொண்டுவரப்படும். வழக்காடும் அந்த, மனிதர், சொல்வார்: என் இறைவா, இந்த மனிதனுக்கு என் னைப் பற்றிய கல்வி ஞானத்தை வழங்கினாய். என்னைக் கற்ற இவன் மிகமோ சமான கல்வியாளனாய் இருந்தான். நான் விதித்த வரம்புகளை மீறினான். நான்வகுத்தளித்த கடமைகளை வீணாக்கி னான். எனக்குப் பாவம் செய்தான். எனக்குக் கீழ்ப்படிவதைக் கை விட்டான்....! இவ்வாறாக அந்தப் பிரதிவாதி அந்தமனிதனுக்கு எதி ராக ஆதாரங்களை அடுக்குவார். இறுதியில், உன்பாடு, அவன் பாடு, என்று சொல்லப்படும். அவர், அந்த மனிதனின் கையைப் பிடிப்பார். அவனை நரகில் முகங்குப்புற வீசியெறியாத வரையில் அவனது கையை விடமாட்டார்[31]!,,

அபூ மாலிக்-அல் அஷ்அரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: „நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள் : குர்ஆன் உனக்குச் சாதகமான அல்லது பாதகமான ஆதாரமாகத் திகழ்கிறது!,, நூல் : முஸ்லிம்

இப்னு மஸ்வூது(ரலி)அவர்கள் கூறினார்கள்:குர்ஆன் பரிந்துரை செய்யக் கூடியதாகவும் பரிந்துரை ஏற்கப்படக் கூடியதாகவும்

---

[30] இமாம் ஹாகிம் அவர்கள் இதன் அறிவிப்புத தொடர் ஆதாரப்பூர்வமானது என்று சொல் லியுள்ளார்கள். இதன் முதல் வாக்கியத்தைப போன்றதொரு வாக்கியத்தை அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் அறிவிப்பிலிருந்து இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்கள் பதிவு செய்துள் ளார்கள்!

[31] இது பலவீனமான அறிவிப்பு. ஆனாலும் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் இதனை ஹஸன் என்று சொல்லியுள்ளார்கள். ஆக, ஹஸன் என்பது உறுதியானால் உருமாற்றப் படுவது ஓதுதலாகும் அல்லது அதற்கானகூலியாகும். இவ்விரண்டும், மக்லூக்-படைக்கப 'படக்கூடியவைதாம்! அல்லது இப்படிச் சொல்லலாம்: உருமாற்றுதல் என்பதனால் அசல் பொருள் வேறொன்றாகத்தான் ஆகவேண்டும் என்பதில்லை. ஏனவே குர்ஆன் படைக்கப் பட்டதாக ஆகவேண்டியது வரும் என்பது அவசியமில்லை!

திகழ்கிறது. யார் அதனைத் தனக்கு முன்னால் வழிகாட்டியாக ஆக்கினாரோ அவரை அது சுவனத்தின் பால் வழிநடத்திச் செல் லும். யார் அதனை முதுகுக்குப் பின்னே ஆக்கினாரோ அவரை அது நரகத்திற்கு இழுத்துச் செல்லும்!,,[32]

எந்த மனிதன் குர்ஆனை தனக்கு எதிரியாக ஆக்கிக்கொண் டானோ அத்தகைய மனிதனே! நீ எதிரியாகக் கருதியவரிடமிருந்து எப்படி பரிந்துரையை எதிர்பார்ப்பாய்? எந்த மனிதனுக்கு, அவனு டைய பரிந்துரையாளர்களே எதிரிகளாக வழக்காட வந்துவிட்டார் களோ அந்த மனிதனுக்கு, வியாபாரச்சரக்குகளின் பேரில் லாபம் கிடைக்கக்கூடிய அந்தமறுமை நாளில் நாசம் (நஷ்டம்) தான் கிட்டும்! அல்லாஹ்வின் அடியார்களே!இது அல்லாஹ்வின் வேதம்! உங்கள் முன்னால் ஓதப்படுகிறது., கேட்பிக்கப்படுகிறது!

இந்தக் குர்ஆன் எப்படிப்பட்டதெனில், இதனை மலை மீது இறக்கியருளினால் அது பணியக் கூடியதாகவும் பிளந்துபோகக் கூடியதாகவும் அதனை நீங்கள் காண்பீர்கள்! இத்தகைய மகத்து வம் அதற்கு இருப்பதுடன் இன்றைக்கு இதனைச் செவியேற்ப தற்குக் காதுகளில்லை!கண்ணீர் வடிப்பதற்குக்கண்கள் இல்லை! உணர்ந்து பணிவதற்கு இதயங்களுமில்லை!குர்ஆனுக்குக் கீழ்ப்ப டிந்து நடக்கும் நிலையுமில்லை.,கீழ்ப்படிந்தாலன்றோ அதன்மூலம் சிபாரிசை எதிர்பார்க்க முடியும்! இதயங்களில் இறையச்சமில்லை., அவை பாழடைந்த தரிசாகிவிட்டன! பாவங்கள் எனும் இருள்கள் அங்கே மண்டிக்கிடக்கின்றன! அதனால் தான் இத்தகைய இத யத்தை உடையவர்கள் பார்ப்பதுமில்லை., கேட்பதுமில்லை!

ஆம்! எத்தனை தடவைகள் குர்ஆன் வசனங்கள் நம்மிடமி டையே ஓதிக்காட்டப்படுகின்றன! ஆனாலும்நம்முடைய இதயங்கள் கல்லாகிவிட்டனவே! இல்லை இல்லை, கற்களைவிடவும் அவை இறுகிவிட்டனவே!

---

32 இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள், நபியவர்கள் கூறியதாக அறிவித்திருப்பாகவும் பதிவா கியுள்ளது.

எத்தனை எத்தனை ரமளான்கள் நம்மிடம் வருகை தருகின் றன! அம்மாதத்தில் நமது நிலை துர்ப்பாக்கியவான்களின் நிலை போன்றுதானே இருக்கிறது! நம்முடைய இளைஞர்கள் சிற்றின்ப மோகத்திலிருந்து விடுபடுவதில்லை., வெறுக்கத்தக்க செயல்களிலி ருந்து நம்முடைய முதியவர்களும் விலகியபாடில்லையே! அவற்றி லிருந்து விலகினால்தானே நல்லோர்களின் குழுவில்அவர்கள் சேர்ந் திட முடியும்!

எந்த மக்கள் அல்லாஹ்வுடைய அழைப்பாளரின் அழைப்பைக் கேட்டு அதற்குப் பதிலளித்தார்களோ—எந்தமக்களிடம் வேதவசனங் கள் ஓதிக் காண்பிக்கப்படும்போது அவர்களின் இதயங்கள் அஞ்சி நடுங்கினவோ – அவற்றை ஆட்கொண்டனவோ அந்த மக்கள் எங்கே? நாம் எங்கே?அந்த மக்கள் மீது அல்லாஹ் அருள்மழை பொழிந்தான்! அல்லாஹ்வுக்குச் செலுத்தவேண்டிய கடமைகளை அவர்கள் அறிந்தார்கள்., தூய்மையை மேற்கொண்டார்கள்!

நபித்தோழர் இப்னு மஸ்ஊது (ரலி) அவர்கள் சொன்னார்கள் : குர்ஆனை கற்றுத்தேரிய ஒரு காரீ—அறிஞர் எதன்மூலம் அறிந்து கொள்ளப்பட வேண்டுமெனில், மக்கள் எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கும் இரவு நேரங்களில் இவர் மட்டும் விழித்திருந்து வழிபாடுகள் செய்வதன் மூலம் அறியப்படவேண்டும்! மக்கள் எல் லோரும் நோன்பு வைக்காமலிருக்க இவர் மட்டும் நோன்பிருப்ப தன் மூலமும் – மக்கள் சிரித்துக் கொண்டிருக்க இவர் மட்டும் அழுவதன் மூலமும்– மக்கள் தவறுகள் செய்திடும் போது இவர் பேணுதலோடு இருப்பதன் மூலமும்—மக்கள் வீண் பேச்சில் மூழ்கி யிருக்கும்போது இவர் மௌனமாக இருப்பதன் மூலமும்– மக்கள் ஆணவப் போக்கிலிருக்கும்போது இவரிடமுள்ள பணிவின் மூல மும்-மக்கள் எல்லாம் மகிழ்ச்சியில் பூரித்திருக்கும் போது இவரிட முள்ள கவலையின் மூலமும் இவர் அறியப்படவேண்டும்!

மனமே! சான்றோர்கள் பயபக்தியின் மூலம்

வெற்றிஅடைந்தனர்., சத்தியத்தைக் கண்டார்கள்!

ஆனால்!

நீ கண்ணிழந்து குருடானாயோ!
ஓ! அந்தச் சான்றோர்களின் வாழ்வில்தான்
எத்தனை அழகு!
அவர்களின் மீது
இரவு இருளைப் பரப்பினாலும்
அவர்கள் தாரகைகளைவிட
அதிகம் ஒளிர்ந்தார்களே!

இரவு நேரங்களில்
திக்ரை இதமாகப் பாடினார்கள்!
திக்ரின் ராகத்தால்
அவர்களின் வாழ்வு மணம் கமழ்ந்ததே!

அவர்களின் இதயங்கள்
திக்ரிலே மூழ்கிவிட்டன!
அவர்களின் கண்ணீர்த்துளிகள்
முத்துக்களாய் ஒளிர்ந்தன!
அவர்களின்
பின்னிரவு நேரங்கள்

பிரகாசத்தால் ஒளிர்ந்தன!
பாவமன்னிப்பெனும் ஆடைகள் - அவர்களின்
பாவக்கறைகளைக் கரைத்தன!

வீணான சொல்- செயல்களிலிருந்து
நோன்புகளைப் பாதுகாத்தனர்!
இரவு நேரத்து திக்ர்களில்
பணிவடக்கம் மேற்கொண்டனர்!
மனமே! உனக்கேன் இந்த நாசம்!
பாதம் சறுக்குமுன்
பயன்மகு பணிகளாற்றிட - நீ ஏன்
இன்னும் விழித்தெழவில்லை?
நீ தாமிதத்திலும் மனஇச்சையிலும்
உழன்று கொண்டிருந்தால்
காலங்கள் நிற்கவா செய்யும்!
எஞ்சிய நாடகளையேனும்
சரியாகப் பயன்படுத்திடு!
கிடைப்பதற்கரிய பொக்கிஷமாய்க் கருதிடு!

சகோதரர்களே!சாத்தியமான காலகட்டம் கழிந்துபோகு முன்னர் குர்ஆனை ஓதி மனனம் செய்யுங்கள். அதன் வரையறைகளைப் பேணிநடங்கள்,,அதில் அலட்சியம்காட்டாதீர்கள். மீறிநடக்காதீர்கள்! திண்ணமாக இந்த குர்ஆன் இறைவனிடத்தில் உங்களுக்குச் சாதகமாக அல்லது பாதகமாக சாட்சி சொல்லக் கூடியதாக இருக்கிறது என்பதை அறிந்துகொள்ளுங்கள். இந்த குர்ஆனை நமது முதுகுக்குப் பின் நாம் ஆக்கிக் கொள்வது, அல்லாஹ் அதனை இறக்கியருளிய உபகாரத்திற்கு நன்றி செலுத்துவதாகாது! மேலும் இதன் சட்டங்களை நாம் பரிகாசம் செய்வது–இறைவனால் புனிதமாக்கப்பட்டவற்றிற்குக் கண்ணியமளிப்பதாகாது!

و يوم يعض الظالم علي يديه يا ليتني اتخذت مع الرسول سبيلا يا ويلتي ليتني لم اتخذ فلانا خليلا لقد أضلني عن الذكر بعد اذ جائني و كان الشيطان للانسان خذولا و قال الرسول يا رب ان قومي اتخذوا هذا القرآن مهجورا و كذلك جعلنا لكل نبي عدوا من المجرمين و كفي بربك هاديا و نصيرا

“அந்தநாளில் கொடுமை புரிந்தமனிதன் தன்னுடைய கைகளைக் கடித்தபடி கூறுவான்: அந்தோ! நான்இறைத்தூதருக்குத் துணை புரிந்திருக்கக் கூடாதா? எனது துர்ப்பாக்கியமே! நான் இன்ன மனிதனை நண்பனாக்காமல் இருந்திருக்கக்கூடாதா? அறிவுரை என்னிடம் வந்த பின்னால் அதை ஏற்கவிடாமல் என்னை அவன் வழிகெடுத்துவிட்டானே! ஷைத்தான், மனிதனை மிகவும் ஏமாற்றக் கூடியவனாக இருக்கிறான். – மேலும் இறைத்தூதர் கூறுவார் : என் இறைவா! என் சமுதாயத்து மக்கள் இந்தக் குர்ஆனை நகைப்புக்குரியதாக்கிக் கொண்டிருந்தார்கள்,, – மேலும் இவ்வாறே ஒவ்வொரு நபிக்கும் குற்றவாளிகளைப் பகைவர்களாக்கினோம். வழிகாட்டுவதற்கும் உதவிபுரிவதற்கும் உம் இறைவனே உமக்குப் போதுமானவன்,, (25 : 27)

யா அல்லாஹ்! உனது வேதத்தை எந்த முறையில் ஓதவேண்டுமோ அந்த முறையில் ஓதும் பாக்கியத்தை எங்களுக்கு வழங்குவாயாக! இந்த குர்ஆனின் மூலம் வெற்றியையும் நற்பேற்றையும் அடைந்த மக்களின் குழுவில் எங்களையும் சேர்ப்பாயாக!

இதன் வார்த்தையையும் அர்த்தத்தையும் நிலைநாட்டும் பாக்கியத்தை எங்களுக்கு வழங்குவாயாக! மேலும் இதன்வரம்புகளைப் பேணிவாழ்வதற்கும் இதன் புனிதத்தைப் பாதுகாப்பதற்கும் எங்ளுக்கு அருள்வாயாக!யா அல்லாஹ்!இதன்செய்திகளை உண்மைப் படுத்தக்கூடிய, இதிலுள்ள முஹ்கம் மற்றும் முதஷாபிஹ் எனும் எல்லா வசனங்களிலும் நம்பிக்கை கொள்ளக்கூடிய அறிவுத்திறன் மிக்கவர்களின் குழுவில் எங்களைச் சேர்த்திடுவாயாக! மேலும் எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் – கருணைமிக்க இறைவனே உனது கருணையால் பாவமன்னிப்பு வழங்குவாயாக!

# المجلس الثالث عشر في آداب قراءة القرآن

13 வது மஜ்லிஸ்

# குர்ஆனை ஓதும் ஒழுங்குமுறைகள்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் எப்படிப்பட்டவன் எனில், அவனை வணங்குபவர் அவனது ஷரீஅத்திற்கே கட்டுப் படுவார். ருகூவும் ஸுஜூதும் செய்வோர் அவனது மகத்துவத் திற்கே அஞ்சுவார்.த்ஹஜ்ஜுத் தொழுபவர் மனதிற்குகந்த அவனது முனாஜாத் – திற்காகவே நித்திரை கொள்ளாமல் விழித்திருப்பார். ஜிஹாத் செய்பவர், அவன் வழங்கும் நன்மையைப் பெறுவதற்கா கவே தமது உயிரை அர்ப்பணிப்பார்., கஷ்டத்தை அனுபவிப்பார்! தூய்மைமிகு அந்த இறைவன் எத்தகையவாக்கினை பேசுகிறான் எனில், அது, படைப்பினங்களின் பேச்சுக்கு ஒப்பாவதைவிட்டும் உயர்ந்தது! கண்ணியமானது! அஹ்மது நபி (ஸல்) அவர்கள் மீது இறக்கியருளப்பட்ட வேதம் அவனது வாக்கேயாகும். அதையே நாம் இரவு பகல் எந்நேரமும் திரும்பத் திரும்ப ஓதுகி றோம். ஆனால்எவ்வளவு ஓதினாலும்அது புளித்துப்போவதில்லை! சோர்வு கொடுப்பதுமில்லை., தளர்வை ஏற்படுத்துவதுமில்லலை!

அல்லாஹ்வை புகழ்கிறேன்., அல்லாஹ்வின் வாசலில் விரட்டப் படாமல் நிற்கும் பாக்கியத்தை எதிர்பார்ப்பவன் புகழ்வதைப்போன்று புகழ்கிறேன். வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சியம் சொல்கிறேன். அவன் தனித்த வன். யாதொரு இணையுமில்லாதவன்! அல்லாஹ் ஒருவனுக்காகத் தூய்மையோடு வழிபாடு செலுத்துகிறவனின் சாட்சியமாகச் சாட்சி அளிக்கிறேன்! முஹம்மத் நபியவர்கள் அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி அளிக்கிறேன் – அவர்கள் வணக்கத்தின் கடமையை செவ்வனே நிறைவேற்றினார்கள். மறு மையின் கட்டமுதைச் சேகரித்துக் கொண்டார்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் எனும் அருட்பாக்கியங்கள் பொழிவானாக! மேலும் தம்மை விரோதித்தவர்களின் உள்ளங்களை ஆழமாகக் காயப்படுத்திய அபூ பக்ர் ஸித்தீக் மீதும்– இஸ்லாத்திற்கு வலிவும்பொலிவும் தேடித்தந்த உமர் மீதும்– ஷஹாதத் எனும் தியாகத்தின் நிலை வந்தபோதும் தயங்காதிருந்த உஸ்மான் மீதும்– குஃப்ர் எனும் இறைமறுப்புக் காளானை வாளால் தவிடு பொடியாக்கிவிட்டு(பயிரை)அறுவடை செய்த அலீ மீதும் ஸலாத் பொழிவானாக! நபியவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் அனைவர் மீதும் காலமெல்லாம் ஸலவாத் பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! எந்த குர்ஆனை உங்கள் கரங்களில் இருக்கிறதோ – எந்த குர்ஆனை நீங்கள் ஓதுகிறீர்களோ, செவிமடுக்கிறீர்களோ, மனப்பாடம் செய்கிறீர்களோ, எழுதுகிறீர்களோ அந்த குர்ஆன் –

அகிலம் முழுவதையும் படைத்துப்பரிபாலிக்கும் இரட்சகனாகிய – முன்னோர்கள், பின்னோர்கள் அனைவரின் இறைவனாகிய அல்லாஹ்வின் வேதவாக்காகும்!அதுஅவனது உறுதியான கயிறு! அவனது நேர்வழி! பாக்கியமிக்க நல்லுரை! மிகத்தெளிவான ஒளி! மெய்யாகவே அல்லாஹ் அதனை மொழிந்தான். அந்த மொழிதல், அவனது கண்ணியத்திற்கும் மாட்சிமைக்கும் ஏற்ற முறையில் அமைந்திருந்தது!தன்னிடம் நெருக்கமான,கண்ணியமிக்க மலக்குமார்களில் ஒருவரான நம்பிக்கைக்குரிய ஜிப்ரீல் மீது அல்லாஹ் அதனை சுமத்தினான்! அவர் அதனை முஹம்மது(ஸல்) அவர்களின் உள்ளத்தில் இறக்கியருளினார்! தெளிவான அரபி மொழியில் எச்சரிக்கை செய்பவர்களுள் ஒருவராக அவர்கள் திகழவேண்டும் என்பதே குறிக்கோள்!

அல்லாஹ்,இந்தகுர்ஆனை மகத்தான தன்மைகளைக் கொண்டு புகழ்ந்துரைத்தான்., நீங்கள் அதனைக் கண்ணியப்படுத்த வேண்டும்., கௌரவிக்கவேண்டும் என்பதற்காக!

شهر رمضان الذي أنزل فيه القرآن هدي للناس و بينات من الهدي و الفرقان

“ரமளான் மாதம் எத்தகைய தெனில் அதில்தான் மனிதர்களுக்கு முழுமையான வழிகாட்டியாகவும் நேர்வழியின் தெளிவான அறிவுரைகளைக் கொண்டதாகவும் சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்துக்காட்டக் கூடியதாகவும் உள்ள குர்ஆன் இறக்கியருளப் பட்டது!„ (2 : 185)

ذلك نتلوه عليك من الآيات و الذكر الحكيم

“(நபியே)உமக்கு நாம் எடுத்துரைக்கும் இவை இறைவசனங்களாகும். ஞானம் நிறைந்த அறிவுரைகளாகும்„ (3 : 58)

يا ايها الناس قد جاء كم برهان من ربكم و أنزلنا اليكم نورا مبينا

“மனிதர்களே! உங்கள் இரட்சகனிடம் இருந்து உங்களுக்குத் தெளிவான சான்று வந்துள்ளது. தெள்ளத் தெளிவாய் வழிகாட்டும் ஒளியையும் உங்களுக்கு இறக்கியருளியிருக்கிறோம்!„ (4 : 174)

قد جاءكم من الله نور وكتاب مبين يهد به الله من اتبع رضوانه سبل السلام

“அல்லாஹ்விடமிருந்து பேரொளிமிக்க, சத்தியத்தைத் தெளிவாக எடுத்துரைக்கிற திருமறை உங்களிடம் வந்துள்ளது. தனது திருப்பொருத்தத்தை விரும்புவோருக்கு அல்லாஹ் அதன் மூலம் சாந்திக்கான வழிகளைக் காண்பிக்கிறான்!„ (5 : 15–16)

ما كان هذا القرآن ان يفتري من دون الله و لكن تصديق الذي بين يديه و تفصيل الكتاب لا ريب فيه من رب العالمين

“இந்தகுர்ஆன் அல்லாஹ்(வின் வஹியேதவிரஅவன்) அல்லாதவர்களால் புனைந்துரைக்கப்பட்டதன்று!உண்மையில் இதுதனக்கு முன்னால் வந்துள்ள வேதங்களை மெய்ப்படுத்தக் கூடியதாகவும் அல்கிதாப் எனும் மூலவேதத்தின் விளக்கமாகவும் திகழ்கிறது! அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபாலிக்கும் இரட்சகனிடம்

இருந்து இது வந்துள்ளது என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை!,, (10 : 37)

يا ايها الناس قد جاء تكم موعظة من ربكم و شفاء لما في الصدور و هدي و رحمة للمؤمنين

,,மனிதர்களே! உங்கள் இறைவனிடம் இருந்து ஓர் அறிவுரை திண்ணமாக உங்களிடம் வந்திருக்கிறது. இது இதயங்களில் உள்ள நோய்களைக் குணப்படுத்தக்கூடியதாகவும் இறைவிசுவாசிகளுக்கு வழிகாட்டக்கூடிதாகவும் ஓர் அருட்கொடையாகவும் திகழ்கிறது!,, (10 : 57)

كتاب احكمت آياته ثم فصلت من لدن حكيم خبير

,,இது இறைவேதமாகும். அனைத்தையும் அறிந்தவனும் நுண்ணறிவாளனுமாகிய அல்லாஹ்வின் தரப்பிலிருந்து இதன் வசனங்கள் உறுதியான முறையிலும் விரிவாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன!,,(11 : 1)

ا نا نحن نزلنا الذكر و انا له لحافظون

,,திண்ணமாக இந்த நல்லுரையை நாம்தாம் இறக்கிவைத்தோம். திண்ணமாக நாமே இதனைப் பாதுகாப்போராக இருக்கிறோம்,, (15 : 9)

و لقد آتينا سبعا من المثاني و القرآن العظيم لا تمدن عينيك الي ما متعنا به أزواجا منهم و لا تحزن عليهم و اخفض جناحك للؤمنين

,,திரும்பத்திரும்ப ஓதப்படக்கூடிய ஏழுவசனங்களையும் மகத்துவமிக்க குர்ஆனையும் திண்ணமாக நாம் உமக்கு வழங்கியுள்ளோம்!நாம் இம்மக்களில் பலதரப்பட்டவர்களுக்கு அளித்திருக்கும் வாழ்க்கை வசதிகளை நீர் ஏறிட்டும் பார்க்காதீர்!இவர்களின் நிலை

குறித்து வருந்தாதீர். (இவர்களை விட்டு) நம்பிக்கையாளர்களின் பால் பணிவுடனும் கனிவுடனும் இருப்பீராக! „ (15 :88)

و نزلنا عليك الكتاب تبيانا لكل شي وهدي ورحمة وبشري للمسلمين

இவ்வேதத்தை உம்மீதுநாம் இறக்கியருளினோம். இது, யாவற்றையும் மிகத்தெளிவாகு விவரிக்கக்கூடியதாகஇருக்கிறது. (இறைவனுக்குக்) கீழ்ப்படிந்து வாழும் மக்களுக்கு வழிகாட்டியாகவும் அருளாகவும் நற்செய்தியாகவும் திகழ்கிறதது!„ (16 :89 )

ان هذا القرآن يهدي للتي هي أقوم و بشر المؤمنين الذين بعملون الصالحات ان لهم أجرا كبيرا و ان الذين لا يؤمنون با لآخرة أعتدنا لهم عذابا اليما

“திண்ணமாக இந்த குர்ஆன் முற்றிலும் நேரானவழியைக்காண்பிக்கிறது. நற்செயல்கள் புரிகிறார்களே அத்தகைய விசுவாசிகளுக்குத் திண்ணமாகப் பெரும்கூலி உண்டென்று நற்செய்தி அறிவிக்கிறது. ஆனால் மறுமையின்மீது நம்பிக்கை கொள்ளாதவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையை நாம் தயார் செய்து வைத்துள்ளோம் (என்றும் அறிவிக்கப்படுகிறது)„ (17 : 9–10)

و ننزل من القرآن ما هو شفاء و رحمة للمؤمنين و لا يزيد الظالمين الا خسارا

„இந்தகுர்ஆனின் தொடரில் இறைநம்பிக்கையாளர்களுக்கு நிவாரணமாகவும் அருளாகவும் உள்ளவற்றை நாம் இறக்கியருளுகிறோம். ஆனால் கொடுமையாளர்களுக்குப் பேரிழப்பைத்தவிர வேறெதையும் அது அதிகப்படுத்துவதில்லை„ (17 : 82)

قل لئن اجتمعت الانس و الجن علي ان يأتوا بمثل هذا القرأن لا يأتون بمثله و لو كان بعضهم لبعض ظهيرا

“கூறும் : மனிதர்கள் மற்றும் ஜின்னுகள் அனைவரும் ஒன்று சேர்ந்து இந்த குர்ஆனை போன்று ஒன்றைக்கொண்டுவர முயன்

றாலும் இதைப் போன்று அவர்களால் கொண்டுவர முடியாது! அவர்கள் ஒருவர் மற்றவருக்கு உதவியாளராக இருந்தாலும் சரியே!„ (17:88)

ما أنزلنا عليك القرآن لتشقي الا تذكرة لمن يخشي تنزيلا ممن خلق الارض و السموات العلي

„நீர்துன்பத்திற்குள்ளாக வேண்டுமென்பதற்காக இந்த குர்ஆனை உம் மீது நாம் இறக்கிய ருளவில்லை. ஆனால் இது, அஞ்சுகிற ஒவ்வொருவருக்கும் நினைவூட்டுதலாகும். பூமியையும் உயர்வான வானங்களையும் படைத்தவனிடமிருந்து இறக்கிறருளப்பட்டது மாகும்„ (20 : 2-3)

تبارك الذي نزل الفرقان علي عبده ليكون للعالمين نذيرا

„பெரும் பாக்கியம் நிறைந்தவனாக இருக்கிறான்.. (சத்தியத்தை யும் அசத்தியத்தையும்) பிரித்துக் காட்டக்கூடிய இந்தவேதத்தைத் தன் அடியார் மீது இறக்கிவைத்தவன்!அவர்—அகிலத்தார் அனை வருக்கும் எச்சரிக்கை செய்யக்கூடியவராகத் திகழவேண்டும் என்பதே நோக்கம்„ (25 : 1)

و انه لتنزيل رب العالمين نزل به الروح الامين علي قلبك لتكون من المنذرين بلسان عربي مبين و انه لفي زبر الاولين او لم يكن لهم آية أن يعلمه علماء بني اسرائيل

„திண்ணமாக இது, அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபா லிக்கும் இறைவனால் இறக்கியருளப்பட்டதாகும். நப்பிக்கைக்குரி யவரான ரூஹ் (ஜிப்ரீல்) இதனை எடுத்துக்கொண்டு இறங்கியி ருக்கிறார்„ உமது உள்ளத்தின்மீது! எதற்காகவெனில் எச்சரிக்கை செய்பவர்களுள்நீரும் ஒருவராக வேண்டும் என்பதற்காக!தெள்ளத் தெளிவான அரபி மொழியில்! மேலும் முன்னோர்களின் வேதங்களி லும் திண்ணமாக இது உள்ளது. இஸ்ராயீலின் வழித்தோன்றல் களின் (யூதர்களின்)அறிஞர்கள் இதனைஅறிந்துள்ளார்கள் என்பது இந்த மக்(காவாசி)களுக்குஒருசான்றாக இல்லையா?„(26:192-196)

وما تنزلت به الشياطين و ما ينبغي لهم و ما يستطيعون

"இதனை (தெளிவான இந்தவேதத்தை)ஷைத்தான்கள் எடுத்துக் கொண்டு இறங்கவில்லை. அது அவர்களுக்குரிய பணியுமில்லை. அவ்வாறு செய்வதற்கும் அவர்களால் இயலாது." (26 : 210)

بل هو آيات بينات في صدور الذين أوتوا العلم

"உண்மையில் இதுஞானம் வழங்கப்பட்டோரின் உள்ளங்களில் பதிந்துள்ள தெளிவான வசனங்களாகும்." (29 : 49)

ان هو الا ذكر و قرآن مبين لينذر من كان حيا ويحق القول علي الكافرين

"உண்மையில் இது ஒரு நல்லுரையும் தெளிவாக ஓதப்படுகிற வேதமுமேயாகும். உயிரோடி ருக்கிற (ஒவ்வொரு) மனிதனையும் இதன் மூலம் எச்சரிகிகை செய்வதற்காகவும் நிராகரிப்பாளர் களுக்குஎதிரான ஆதாரம் நிறைவாகுவதற்காகவும்தான்!"(36:69–70)

كتاب انزلناه اليك مبارك ليدبروا آياته و ليتذكر اولوا الالباب

"இது பாக்கியமிக்க வேதமாகும். (நபியே) இதனை நாம் உம் மீது இறக்கியுள்ளோம. இந்தமக்கள் இதன்வசனங்களைச் சிந்திக்க வேண்டும்." அறிவுடையோர் இதிலிருந்துபடிப்பினை பெறவேண் டும் என்பதற்காக!" (38 : 29)

قل هو نبأ عظيم

"(நபியே, இவர்களிடம்) நீர் கூறும்: இது ஒரு மாபெரும் செய்தி!" (38 : 67)

الله نزل أحسن الحديث كتابا متشابها مثاني تقشعر منه جلود الذين يخشون ربهم ثم
تلين جلودهم و قلوبهم الي ذكر الله ذلك هدي الله يهدي به من يشاء

“அல்லாஹ் மிக அழகிய உரைகளை இறக்கியருளினான்„ ஒரு வேதத்தை! அதன் எல்லாப் பகுதிகளும் ஒன்றுக்கொன்று ஒப்பாய் இருக்கின்றன„ அதன் கருத்துக்கள் திரும்பத்திரும்ப கூறப்பட்டுள்ளன. அதனைச் செவியுற்றவுடன் தம் இறைவனை அஞ்சுபவர்களின் மேனி சிலிர்க்கிறது. பின்னர் அவர்களின் உடலும் உள்ளமும் மிருதுவாகி அல்லாஹ்வை நினைவு கூர்வதற்கு ஆர்வம் கொள் கின்றன! இது அல்லாஹ்வின் வழிகாட்டுதலாகும். தான் நாடுவோரை இதனைக் கொண்டு அவன் நேர்வழியில் செலுத்துகிறான்„ (39:23)

ان الذين كفروا بالذكر لما جاء هم و انه لكتاب عزيز لا ياتيه الباطل من بين يديـه و لا من خلفه تنزيل من حكيم حميد

“நிச்சயமாக எவர்கள் தங்களிடம் நல்லுரை (இந்த குர்ஆன்) வந்தபோது அதனை நிராகரித்து விட்டார்களோ அவர்களுக்கு தண்டனை வழங்கப்படும்) நிச்சயமாக இது ஓர் ஆற்றல்மிக்க வேதமாகும். அசத்தியம் இதன் முன்னாலிருந்தும் வரமுடியாது. இதன் பின்னாலிருந்தும் வரமுடியாது.நுண்ணறிவாளனும் மிகுந்த புகழுக்குரியவனுமான இறைவனால் இறக்கியருளப்பட்டதாகும் இது„ (41 : 41–42)

وكذلك أوحينا اليك روحا من امرنا ما كنت تدري ما الكتاب و لا الايمان و لكـن جعلناه نورا نهدي به من نشاء من عبادنا

“மேலும் இவ்வாறே(நபியே)நம் கட்டளையின் வாயிலாக ரூஹை உமக்கு வஹி அறிவித்தோம். வேதம் என்பதென்ன? விசுவாசம் என்பதென்ன? என்பதெல்லாம் உமக்குத்தெரியாதிருந்தது! ஆனால் அந்த ரூஹை நாம் ஒளியாக ஆக்கினோம். நம் அடியார்களில் நாம் நாடுவோர்க்கு அதன் மூலம் வழிகாட்டுகிறோம்„(42 : 52–53)

و انه في ام ا لكتاب لدينا لعلي حكيم

“உண்மையில் இது (இந்த குர்ஆன்) மூலவேதத்தில் பதிவு செய்யப்டுள்ளது. நம்மிடம் உயர் அந்தஸ்துடையதும் ஞானம் நிறைந்ததுமான வேதமாக உள்ளது„ (43 : 4)

هذا بصائر للناس وهدي ورحمة لقوم يوقنون

„இவை மனிதர்கள் அனைவருக்கும் பகுத்துணரும் சான்றுகளாய் இருக்கின்றன! மேலும் உறுதி கொள்ளக்கூடிய மக்களுக்கு வழிகாட்டியாகவும் திகழ்கிறது! „ (45 : 20)

و القرآن المجيد

„மாட்சமைமிக்க குர்ஆனின் மீது ஆணையாக!„ (50 : 1)

فلا اقسم بمواقع النجوم و انه لقسم لـو تعلمـون عظيـم انـه لقـرآن كريـم في كتـاب مكنون لا يمسه الا المطهرون تنزيل من رب العالمين

„இல்லை„ நட்சத்திரங்களின் அமைவு நிலைகளின் மீது நான் சத்தியம் செய்கிறேன். நீங்கள் அறிவீர்களானால் திண்ணமாக இது ஒரு மகத்தான சத்தியமாகும்.நிச்சயமாக இதுபாதுகாப்பான தொரு நூலில் பதிவுசெய்யப்பட்டிருக்கும்கண்ணியமிக்க குர்ஆன் ஆகும். தூய்மையானவர்களைத் தவிர வேறெவரும் இதனைத்தொட முடியாது! அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபாலிக்கும் இறைவனால் இறக்கியருளப்பட்டதாகும் இது„ (56 : 75–80)

لو انزلنا هذا القرآن علي جبل لرأيته خاشعا متصدعا من خشـية الله و تلـك الامثـال نضربها للناس لعلهم يتفكرون

„நாம் இந்த குர்ஆனை மலையின்மீது இறக்கியிருந்தால் அதனைப் பணியக்கூடியதாகவும் பிளந்துவிடக்கூடியதாகவும் நீர் கண்டிருப்பீர்! நாம் இந்த உதாரணங்களை மக்கள் முன் விளக்கிக் கூறுவது, அவர்கள் சிந்தித்துப்பார்க்கட்டும் என்பதற்காகத்தான்! „ (59 : 21)

மேலும் ஜின்னுகள் பற்றி அல்லாஹ் ஓரிடத்தில் கூறுகிறான்:

انا سمعنا قرآنا عجبا يهدي الي الرشد فآمنا به

"(ஜின்னுகள் கூறினர் :) நாங்கள் ஓர் அற்புதமான குர்ஆனை செவியுற்றோம். அது நேரிய பாதையின் பக்கம் வழிகாட்டுகிறது. ஆகையால் நாங்கள்அதன்மீது விசுவாசம் கொண்டோம்" (72: 1–2)

மேலும் ஓரிடத்தில் கூறினான்:

بل هو قرآن مجيد في لوح محفوظ

"உண்மையில் இது மகத்துவமிக்கதொரு குர்ஆன் ஆகும். பாதுகாக்கப்பட்ட பலகையில் பதிவு செய்யப்பட்டுள்ளது" (85 : 22)

மேலே நாம் எடுத்தெழுதிய இதுபொன்ற மகத்தான ஏராளமான புகழுரைகள் யாவும் குர்ஆனின் மாண்பினை எடுத்துரைக்கின்றன. அதற்குக்கண்ணியம் அளிப்பதன் அவசியம்பற்றியும்அதனைஓதும் போது மரியாதையைக் கடைப்பிடிப்பது பற்றியும் கேலிவிளை யாட்டைத் தூரமாக்கிடவேண்டும் என்பது பற்றியும் வலியுறுத்து கின்றன!

☐ குர்ஆனை ஓதும்ஒழுங்குமுறைகளில் ஒன்று: அல்லாஹ்வுக் காக ஓதுகிறோம் என்று எண்ணத் தூய்மை கொள்வதாகும். ஏனெனில் குர்ஆனைஓதுவதுஉன்னதமான வழிபாடுகளில் ஒன்று! இந்த விவரம் குர்ஆன் ஓதுவதன்சிறப்பு எனும் தலைப்பில் முன்பு விளக்கப்பட்டுள்ளது. அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : فادعوا الله مخلصين له الدين

"உங்களது கீழ்ப்படிதலை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவண் ணம் அவனை அழையுங்கள்! (40 : 14)

وقال تعالي : وما امروا الا ليعبدوا الله مخلصين له الدين

„தங்களது (தீனை)கீழ்ப்படிதலை அல்லாஹ்வுக்கு மட்டும்உரித் தாக்கியவர்களாகவும் முற்றிலும் மன ஒருமைப்பட்டவர்களாகவும் அவனை அவர்கள் வணங்கிவழிபட வேண்டும் என்பதைத் தவிர வேறெந்தக் கட்டளையும் அவர்களுக்கு இடப்படவில்லை„ (98:5)

قال النبي ﷺ : اقرؤا القرآن و ابتغوا به وجه الله عز وجل من قبل ان ياتي قوم يقيمونه اقامة القدح يتعجلونه و لايتأجلونه

நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்:„குர்ஆனை ஓதுங்கள்„அதன் மூலம் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை நாடுங்கள்!இப்படி ஒரு கூட்டம் வருவதற்கு முன்னால்: அவர்கள் இந்தகுர்ஆனை– குறி பார்க்கும் அம்பைப் பயன்படுத்துவதுபோன்று பயன்படுத்துவார்கள். அதன் கூலியை உடனடியாகத் தேடுவார்கள்„தாமதிக்கமாட்டார்கள். நூல் : அஹ்மது[33] – அதன் கூலியை உடனடியாகத் தேடுவார்கள் என்பதன் கருத்து, குர்ஆனின் மூலம் உலகத்தின் கூலியை நாடு வார்கள் என்பதாகும்.

☐ குர்ஆனை ஓதும் ஒழுங்குமுறைகளில் மற்றொன்று, கவனத்துடனும் மனஓர்மையுடனும் அதை ஓதுவதாகும். ஒருவர் தாம் ஓதுகிற வசனங்களை சிந்திக்கவேண்டும்„ அதன் அர்த்தங் களை விளங்க வேண்டும். அந்த நேரத்தில் அவரது உள்ளம் பணிவை மேற்கொள்ள வேண்டும். மேலும் திண்ணமாக இந்த குர்ஆனில் அல்லாஹ் தம்மை நோக்கி உரையாடுகிறான் என்கிற எண்ணம் இருந்துகொண்டிருக்க வேண்டும். ஏனெனில் குர்ஆன் அல்லாஹ்வின் வாக்காகும்!

☐ குர்ஆனை ஓதும் ஒழுங்குமுறைகளில் இன்னொன்று சுத்தமான நிலையில் அதை ஓத வேண்டும் என்பது! ஏனெனில் அல்லாஹ்வின் வேதத்திற்கு அளிக்கும் கண்ணியமாகும் இது! பெருந்துடக்கு உடையவராயின் குளிக்காத வரையில் குர்ஆனை அவர் ஓதக்கூடாது„ தண்ணீர் கிடைக்கும் பட்சத்தில்! நோயினால் தண்ணீரைப்பயன் படுத்தஇயலாதவராக இருந்தாலோ தண்ணீர்

---

[33] இதன் அறிவிப்புத் தொடர் ஹஸன் தரத்திலானது.

கிடைக்கவில்லை என்றாலோ தயம்மும் செய்யாதவரை குர்ஆனை அவர் ஓதக் கூடாது!

பெருந்துடக்கு உடையவர் அல்லாஹ்வை திக்ர் செய்யலாம்., பிரார்த்தனையாக அமைந்துள்ள குர்ஆன் வசனங்களைக் கூறி அவனிடம் துஆ செய்யலாம். அப்போது அவர் குர்ஆன் ஓதுவ தாக நினைக்கக்கூடாது. எடுத்துக்காட்டாக,

لا اله الا انت سبحانك اني كنت من الظالمين

(பொருள் : உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. இறைவா! உன்னைத் தூயவன் என்று துதிக்கிறேன். திண்ண மாக நான் அநீதம் செய்தவர்களில் ஒருவனாக ஆகிவிட்டேன்.)

ربنا لا تزغ قلوبنا بعد اذ هديتنا و هب لنا من لدنك رحمة انك انت ا لوهاب

(பொருள்:எங்கள் இறைவா! எங்களை நேர் வழியில் செலுத் திய பின்பு எங்கள்இதயங்களை வழிபிறழச்செய்துவிடாதே! மேலும் எங்களுக்கு உன்பிரத்தியேக அருளிலிருந்துவழங்குவாயாக! திண் ணமாக நீயே தாராளமாக வழங்குபவன்!)–இவைபோன்ற திக்ர்கள்!

☐ குர்ஆன் ஓதும் ஒழுங்கு முறைகளில் மற்றொன்று, அறு வறுப்பான இடங்களில் குர்ஆனை ஓதாதிருப்பதாகும். குர்ஆன் ஓதுவதைக் கேட்டு மௌனம் சாதிக்காத கூட்டத்தில் ஓதாதிருப் பதும் அந்த வகையைச் சேர்ந்ததுதான்! ஏனெனில் இது போன்ற இடங்களில் அதைஓதுவது அதைஇழிவுபடுத்துவதாகும். மேலும் மலஜலம் கழிப்பதற்கென ஒதுக்கப்பட்ட இடங்களிலோ குர்ஆனை ஓதுவது கூடாது!ஏனெனில் கண்ணியமிக்க குர்ஆனுக்கு இம்மா திரி இடங்கள் 'உகந்தவையல்ல!

குர்ஆனை ஓத விரும்பும்போது சபிக்கப்பட்ட ஷைத்தானை விட்டு அல்லாஹ்வீடம் பாதுகாப்புத் தேடுவதும் ஓதும் ஒழுங்கு முறைகளில் ஒன்றாகும். ஏனெனில் அல்லாஹ் கூறியுள்ளான்:

اذا قرأت القرآن فاستعذ با لله من الشيطان الرجيم

“நீர் குர்ஆனை ஓதத் தொடகுவீராயின் சபிக்கப்பட்ட ஷைத் தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக்கோருவீராக!(16: 98) குர்ஆனை ஓதவிடாமல் அல்லது நிறைவுபடுத்தவிடாமல் ஷைத் தான் தடுக்காமலிருப்பதே இதன் நோக்கமாகும்.

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் சொல்வதாகிறது . . . . . அத்தியாயத்தின் நடுவிலிருந்து ஓதத் தொடங்குவதாக இருந்தால் பிஸ்மில்லாஹ் சொல்லப்படமாட்டாது. அத்தியாயத்தின் ஆரம்பத் திலிருந்து ஓதுவதாயின் பிஸ்மில்லாஹ் சொல்லவேண்டும். ஆனால் அத்தெளபா அத்தியாயத்தைத் தவிர! ஏனெனில் அதன் ஆரம்பத் தில் பிஸ்மில்லாஹ் ... இல்லை! காரணம், குர்ஆன் எழுதிப் பதிவு செய்யப்பட்டபோது இது தனியோர் அத்தியாயமா அல்லது அல் அன்ஃபாலின் எஞ்சிய பகுதியா? என்று நபித்தோழர்களுக்குச் சந்தே கம் வந்துவிட்டது! எனவே அவ்விரண்டு அத்தியாயங்களையும் பிஸ்மில்லாஹ் அன்றிப் பிரித்துவிட்டார்கள். இந்த ஆராய்ச்சி சந்தே கமின்றி எதார்த்த நிலைக்கு ஏற்புடையதாகும். ஏனெனில் இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் பிஸ்மில்லாஹ் இறக்கியருளப்பட்டி ருந்தால் அல்லாஹ்வுடைய பாதுகாப்பின் மூலம் அது பாதுகாக் கப்பட்டிருக்கும். ஏனெனில் அல்லாஹ் கூறியுள்ளான்: திண்ணமாக இந்த(குர்ஆன்எனும்) நல்லுரையை நாம்தான் இறக்கிவைத்தோம். திண்ணமாக நாமே இதனைப் பாதுகாப்போராயும் உள்ளோம்!„ குர்ஆன் (15 : 9)

குர்ஆனை அழகிய குரலில் ராகமிட்டு ஓதுவதும் ஓதும் ஒழுங்கு முறைகளைச் சேர்ந்ததாகும். அபூ ஹுரைரா(ரலி) அவர் கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

ان النبي ﷺ قال : ما اذن ا لله لشي ( أي ما استمع لشي) كما اذن لنبي حسن الصوت يتغني بالقرآن يجهر به

அழகிய குரலுடைய ஒரு நபி, குர்ஆனை சப்தமாக-ராகமிட்டு ஓதுவதை அல்லாஹ் கேட்டது போன்று வேறெதையும் கேட்ட தில்லை!„ நூல் : புகாரி, முஸ்லிம்

ஜுபைர் பின் முத்இம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் மஃரிப் தொழுகையில் அத்தூர் அத்தியாயத்தை ஓதிடக் கேட்டேன். நபி(ஸல்)அவர்களைவிட அழகிய குரலுடைய ஒருவரை அல்லது அழகாக ஓதுபவரை நான் கேட்டதில்லை„ நூல் : புகாரி .முஸ்லிம்

ஆனாலும் ஓதுபவருக்கு அருகில்-அவர் சப்தமிட்டு ஓதுவத னால் தொல்லைக்குள்ளாகும் நிலையில்- தூங்குபவர், தொழுபவர் போன்று - யாராவது இருந்தால் அவரைக் குழப்புகிற வகையில் அல்லது தொல்லை கொடுக்கிற வகையில் குரலுயர்த்தி அவர் ஓதமாட்டார். ஏனெனில் ஒருதடவை நபி(ஸல்)அவர்கள் வெளியே வந்தார்கள்„ அங்கே மக்கள் குர்ஆனை சப்தமிட்டு ஓதிக்கொண்டி ருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் : தொழுபவர் தன் இறைவனுடன் மெதுவாகஉரையாடுகிறார். எனவேஎதைக்கொண்டு அவர் அவனுடன் உரையாடுகிறார் என்பதைக் கவனித்துக் கொள் ளட்டும்! மேலும் உங்களில் ஒருவர் மற்றவருக்கு இடைஞ்சல் ஏற்படுத்தும் முறையில் குர்ஆனை சப்தமிட்டு ஓத வேண்டாம்!„ நூல் : முஅத்தா

☐ ஓதும் ஒழுங்குமுறைகளில் மற்றொன்று நிறுத்தி நிதான மாக ஓதுவதாகும். ஏனெனில் அல்லாஹ் கூறியுள்ளான் :

لقوله تعالي : و رتل ا لقرآن ترتيلا

„மேலும் குர்ஆனை நிறுத்தி நிதானமாக ஓதுவீராக!„ (73: 3)

எனவே ஓதுபவர் நிதானமாக - வேகமின்றி குர்ஆனை ஓத வேண்டும். ஏனெனில் அப்படி ஓதுவது அதன் அர்த்தங்களைச் சிந்திப்பதற்கும் அதன் எழுத்துக்களை- வார்த்தைகளை நேர்த்தி யாக உச்சரிப்பதற்கும் பெரிதும் உதவியாக இருக்கும்!

நபி (ஸல்) அவர்களின் கிராஅத்- ஓதும்முறை பற்றி அனஸ் (ரலி)அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், நபியவர்களின் ஓதும் முறை நீட்டமாக இருந்தது என்று பதிலளித்து விட்டு பிறகு, பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்று ஓதிக்காட்டினார்கள். பிஸ்மில்லாஹ் . . . வை நீட்டினார்கள்., . . . அர்ரஹ் மான் . . . ஐ யும் நீட்டினார்கள்., அர் ரஹீம் . . . ஐ யும் நீட்டினார்கள்!,, நூல்: புகாரி

உம்மு ஸலமா (ரலி) அவர்களிடம் -நபி (ஸல்) அவர்களின் ஓதம் முறை பற்றி கேட்கப்பட்டது. அவர்கள் பதிலளித்தார்கள் : நபியவர்கள் ஒவ்வொரு வசனம் வசனமாகப் பிரித்து ஓதுவார்கள்! பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் - அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் - அர் ரஹ்மானிர் ரஹீம் - மாலிகி யௌமித்தீன் . . . . என்று!,, நூல்: அஹ்மத், அபூ தாவூத், திர்மிதி

இப்னு மஸ்வூத்(ரலி)அவர்கள் கூறினார்கள்:அதை (குர்ஆனை) மணலைத் தூவுவது போன்று தூவாதீர்கள்! கவிதையை முறிப் பது போன்று முறிக்காதீர்கள்!அதன் ஆச்சரியங்களின்போது சற்று நிறுத்துங்கள். அதனைக் கொண்டு உள்ளங்களை உலுக்குங்கள்! (ஓதும்போது) உங்களின் குறிக்கோள் அத்தியாயத்தின் கடைசி யாக இருக்கவேண்டாம்,,

எந்தவேகத்தில் சிலஎழுத்துக்களை விட்டுவிடுதல் இல்லையோ -எந்த வேகத்தில் இணைத்து வாசிப்பதும் இல்லாத எழுத்துக் களைக் கூட்டிவாசிப்பதும் இல்லையோ- எந்த வேகம் வார்த்தையைத் தெளிவு குன்றச் செய்யாதோ அந்த வேகம் பரவாயில்லை. வார்த்தையைத் தெளிவுகுன்றச் செய்யும் அளவிலான வேகமாக இருந்தால் அந்த வேகம் ஹராம் -தடுக்கப்பட்டதாகும். ஏனெனில் அது குர்ஆ(னின் வார்த்தையி)னை மாற்றிவிடுவதாக உள்ளது!

☐ ஓதலின் மற்றொருஒழுங்குமுறை, ஓதுபவர் ஸஜ்தா வசனத்தைக் கடந்து சென்றால் அது- அவர் உளூவுடனும் இருந்தால் - ஸுஜூது செய்வதாகும். இரவு பகல் எந்நேரமாக இருந்தாலும் சரியே! ஸுஜூதுக்கு தக்பீர் சொல்வார். ஸுப்ஹான ரப்பியல்அஃலா (உயர்வான என் இறைவனைத் துதிக்கின்றேன்)என்று ஓதுவார்.,

பிரார்த்தனை செய்வார்! பிறகு ஸுஜூதிலிருந்து எழுவார்„ தக்பீரோ ஸலாமோ எதுவுமின்றி! ஏனெனில் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அவ்வாறுஎதுவும் அறிவிக்கப்படவில்லை!ஆனால்அந்த ஸுஜூது தொழுகையில் ஏற்பட்டாலே தவிர! அதில் ஸுஜூதுக்கு செல்லும் போது தக்பீர் சொல்லவேண்டும்.

ஏனெனில் அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக் கப்படுள்ளது: அவர்கள் தொழுகையில் குனிந்தாலோ நிமிர்ந்தாலோ எல்லா நிலைகளிலும் தக்பீர் சொல்பவர்களாய் இருந்தார்கள். நபியவர்கள் அவ்வாறு செய்பவர்களாய் இருந்தார்கள் என்றும் அறிவித்துள்ளார்கள்„ நூல் : முஸ்லிம்

இப்னு மஸ்வூது (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

عن ا بن مسعود ﷺ قال : رأيت النبي ﷺ يكبر في كل رفـع و خفـض و قيـام و قعـود

„ நான் நபி(ஸல்) அவர்களைப் பார்த்துள்ளேன். (தொழுகையில்) குனிந்தாலோ நிமிர்ந்தாலோ நின்றாலோ உட்கார்ந்தாலோ – ஒவ் வொரு நிலைகளிலும் தக்பீர் சொல்வார்கள்„ (நூல்: அஹ்மத், திர்மிதி)இது தொழுகையின் ஸுஜூதையும் உள்ளடக்கும் தொழு கையில் குர்ஆன் ஓதியதற்கான ஸுஜூதையும் உள்ளடக்கும். இவைதாம் குர்ஆன் ஓதும் போது கடைப்பிடிக்கவேண்டிய சில ஒழுங்கு முறைகளாகும். இவற்றைக் கடைப்பிடியுங்கள்! இவற் றில் ஆர்வம் கொள்ளுங்கள்! இவற்றின் மூலம் அல்லாஹ்வின் அருளைத் தேடுங்கள்!

யா அல்லாஹ்! புனிதமானவை என்று உன்னால் நிர்ணயிக்கப் பட்டவற்றை கண்ணியப்படுத்தக் கூடியவர்களுள் எங்களைச்சேர்த் திடுவாயாக! மேலும் உன்னுடைய சுவனங்களுக்கு வாரிசுகளாக வரக்கூடிய மேலும் உன்னுடைய வெகுமதிகளை வெல்லக் கூடிய குழுவில் எங்களையும் சேர்ப்பாயாக! கருணையாளர்களிலெல்லாம் கருணைமிக்கோனே! உன் கருணைகொண்டு எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் மன்னிப்பு வழங்குவாயாக!

## المجلس الرابع عشر في مفطرات الصوم

14– வது மஜ்லிஸ்

# நோன்பை முறிக்கக்கூடியவை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!அவனே ஒவ்வொரு பொருளின் அகத்தையும் புறத்தையும் தெரிந்துகொள்பவன். மனிதனின் மெல்லிய மற்றும் உரத்த பேச்சுகளையும் அவனதுமனதில் நிழலாடும் எண்ணங்களையும் அறிபவன். அகிலத்தை உருவாக்கி அதில் பலவகையான பொருள்களை வடிவமைத்தவன் அவன் ஒருவனே!மனிதர்கள் மீது–அவர்களின் அசைவு, அமைதி ஆகிய எல்லா நிலைகளிலும் ஆட்சிசெலுத்துபவன் அவனே!

படைத்த ஒவ்வொரு பொருளையும் அழகாக அமைத்தான். செவிகளையும் பார்வைகளையும் ஏற்படுத்தினான்! மரங்களின் கிளைகளிலும் தண்டுகளிலும் உள்ள இலைகளின் எண்ணிக்கையைக்கூட கணக்கிட்டு அறிந்துள்ளான்!

பூமியைப் பரப்பி விரிப்பாக அமைத்தான்.வானத்தை விரிவாக்கி உயர்த்தினான். நட்சத்திரங் களை நகரச்செய்தான். இரவின் இருள்களில் அவற்றை உதிக்கச் செய்தான். நீர்த் துளிகளைப்பெருமழையாகவும் சாரலாகவும் பொழியச்செய்தான்! அதன்மூலம் பயிர்களைக் கருகவிடாமல் பாதுகாத் தான்! –“இவையாவும் அல்லாஹ்வின் படைப்புகள். அவனல்லாதவர்கள் என்ன படைத்துள்ளார்கள்? என்பதை எனக்குக் காட்டுங்கள்” குர்ஆன் (31 : 11)

கொடைகள்–உபகாரங்களின் பேரில் அல்லாஹ்வை நான் புகழ்கிறேன். வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என்று சாட்சி அளிக்கிறேன். அவன் தனித்தவன், இணைதுணை இல்லாதவன். மேலும் முஹம்மத் நபிஅவர்கள், அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும்

சாட்சி அளிக்கிறேன். அவர்கள் அல்லாஹ்விடம் இருந்து சான்று வழங்கப்பட்டு உதவியும் ஊக்கமும் அளிக்கப்பட்டவர்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! எல்லா வகையிலும் அவர்களுக்குஒத்துழைப்பு நல்கியஅவர்களின் தோழர் அபூ பகர் மீதும் – பாரசீக மன்னனை அவனது கோட்டையினுள் ளேயே கதிகலங்கச் செய்த உமர் மீதும் – இரவெல்லாம் விழித் திருந்து குர்ஆன் ஓதிவந்த உஸ்மான் மீதும்–கைபரின் கதவைப் பிடுங்கி எறிந்த, அதன் கோட்டைகளை அதிரச் செய்த அலீ மீதும் ஸலவாத் பொழிவானாக!

நபியவர்களின் குடும்பத்தார்கள் மீதும் அமைதி – அசைவு ஆகிய எல்லா நிலைகளிலும் அல்லாஹ்வை வழிபடுவதில் முனைந்து ஈடுபட்ட நபித்தோழர்கள் அனைவர் மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக!அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : فالآن باشروهن و ابتغوا ما كتب الله لكم و كلوا و اشربوا حتي يتبين لكم الخيط الابيض من الخيط الاسود من الفجر ثم اتموا الصيام الي الليل

“எனவே இனி அவர்களுடன்(உங்கள் மனைவியருடன்) நீங்கள் வீடு கூடுங்கள்! அல்லாஹ் உங்களுக்கு நிர்ணயித்தவற்றைத் தேடுங்கள். மேலும் விடியற்காலை எனும் வெள்ளை நூல், கருப்பு நூலில் இருந்து உங்களுக்குத் தெளிவாகத் தெரியும் வரையில் உண்ணுங்கள்., பருகுங்கள்! பிறகு (இவற்றைத் தவிர்த்து) இரவு வரை நோன்பை நிறைவுபடுத்துங்கள்!„ அல்குர்ஆன் (2 : 187)

– அல்லாஹ் இத்திரு வசனத்தில் நோன்பை முறிக்கக்கூடிய வற்றின் அடிப்படைகளைக் கூறியுள்ளான். நபி (ஸல்) அவர்கள் ஹதீஸ்களில் அவற்றை விரிவாக எடுத்துரைத்துள்ளார்கள்!

நோன்பை முறிக்கக்கூடியவை ஏழுவகைப்படும். அவை வரு மாறு :

(1) உடலுறவு : அதாவது ஆண் குறியைப் பெண்குறியில் நுழைப்பது! இது நோன்பை முறிக்கக்கூடிய காரியங்களில் மிகப் பெரியதும் பாவமானதுமாகும்! நோன்பு நோற்றிருப்பவர் உடலுறவு கொண்டால் அவரது நோன்பு பாழாகிவடும்! அது கடமையான நோன்பானாலும் சரி, நஃபிலான – அதிகப்படியான நோன்பானாலும் சரியே!

பிறகு இந்தச்செயல் ரமளான் மாதத்தில் நிகழ்ந்தால்–அந்நோன்பு அவர் மீது கடமையானதாக இருந்தால் அதை வேறுநாளில் நோற்பதுடன் கடுமையான குற்றப்பரிகாரம் நிறைவேற்றுவ தும் அவர் மீது கடமையாகும்.

அதற்கான குற்றப்பரிகாரம் – இறைவிசுவாசமுள்ள ஓர் அடி மையை விடுதலை செய்வதாகும். அடிமை கிடைக்க வில்லையா னால் இரண்டு மாதங்கள் தொடர்ச்சியாக நோன்பு நோற்கவேண் டும். அவ்விரு மாதங்களில் எந்நாளிலும் – தீன் ரீதியான அல்லது உடல் ரீதியான தக்க காரணமின்றி நோன்பைவிட்டுவிடக் கூடாது!

தீன் – மார்க்க ரீதியான காரணத்திற்கு உதாரணம், பெருநாட் கள், துல்ஹஜ் மாதத்தின் 11–12–13 ஆகிய நாட்கள் வருவது! உடல் ரீதியான காரணத்திற்கு உதாரணம், நோய், நோன்பைவிடும் நோக்கமில்லாத பயணம்! தக்க காரணமின்றி நோன்பை விட்டுவிட் டால்–அப்படிவிடுவது ஒருநாள் நோன்பானாலும் சரியே– இரண்டு மாதங்களின் நோன்பையும் புதிதாகத் தொடங்கவேண்டும்! ஏனெ னில் (அந்தநோன்புகளில்) தொடர்ச்சி இருக்கவேண்டும் என்பது நிபந்தனை!

தொடர்ச்சியாக இரண்டு மாதங்கள் நோன்பு நோற்க அவனால் இயலவில்லையானால் அறுபதுஏழைகளுக்கு உணவளிக்க வேண் டும். ஒவ்வொரு ஏழைக்கும் – நல்ல தரமான கோதுமையில் 510 கிராம் வழங்கிடவேண்டும்.[34]

---

[34] கோதுமைக்குப் பகரமாக அரிசி வழங்கலாம். ஆனால் எடையைக் கவனித்துக் கொள்வது அவசியம். ஆரிசி கனமாக இருந்தால் அதற்கேற்ப எடையை அதிகப்படுத்திக்

ஸஹீஹ் முஸ்லிமில் பதிவாகியுள்ளது :„ஒரு மனிதர் ரமளான் பகலில் தன் மனைவியுடன் உடலுறவு கொண்டு – அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் விளக்கம் கேட்டு வந்தபோது நபியவர்கள், ஏதேனும் அடிமை உம்மிடம் உண்டா? என வினவினார்கள். இல்லை„ என்றார் அவர். நபி யவர்கள் கேட்டார்கள் : இரண்டு மாதங்கள் நோன்பு நோற்க உம்மால இயலுமா?(வேறு சிலஅறிவிப்புகளில் வந்துள்ளது தொடர்ச்சியாக நோற்க உம்மால் இயலுமா?) எனக் கேட்டார்கள். அதற்கு அவர் இயலாது என்றார். நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்:அறுபது ஏழைகளுக்கு உணவு வழங்குவீராக!„ – இந்த நபிமொழி புகாரியிலும் முஸ்லிமிலும் மிகநீளமாக இடம் பெற்றுள்ளது.

(2) சுயவிருப்பத்துடன் விந்து வெளியாவது! அதாவது முத்தமிடுவது, தொடுவது அல்லது சுயமாக விந்தை வெளிப்படுத்துவது போன்ற எந்தச்செயலினால் அது ஏற்பட்டாலும் சரியே! ஏனெனில் எந்தஆசையைத் தவிர்ப்பது கொண்டேதவிர நோன்பு நிறைவேறாதோ அந்த ஆசையினால் ஏற்படுவதாகும் இது! இறைவன் அருளியதாக நபியர்கள் அறிவித்த ஹதீஸுல் குத்ஸி–யில் வந்துள்ளது :

جاء في الحديث القدسي : يدع طعامه و شرابه وشهوته من أجلي – رواه البخاري

அவர் தனது உணவையும் பானத்தையும் தனது ஆசையையும் என் பொருட்டு விட்டுவிடுகிறார்„ நூல் : புகாரி – ஆனால் விந்து வெளிப்படாத வகையில் தொடுவதோ முத்தமிடுவதோ நோன்பை முறிக்காது! ஏனெனில் ஆயிஷா(ரலி)அவர்கள் அறிவித்துள்ளார்கள் :

في الصحيحين من حديث عائشة ﷺ : ان النبي ﷺ كان يقبل وهو صائم و يباشر وهو صائم ولكنه كان أملككم لاربه

---

கொள் ளவேண்டும். அரிசி லேசாக இருந்தால் அதற்கேற்ப எடையில் குறைத்துக் கொள்ள வேண்டும்.

„நபி (ஸல்)அவர்கள் நோன்பு நோற்றிருக்கும் நிலையில் முத்த மிடுவார்கள். மேலும் நோன்பு நோற்றிருக்கும் நிலையில் கட்டிய ணைப்பார்கள். ஆனால் அவர்கள் தமது ஆசையைக் கட்டுப் படுத்துவதில் உங்கள் அனைவரினும் ஆற்றல் உடையவர்களாய் இருந்தார்கள்!„ நூல் : புகாரி, முஸ்லிம்

உமர் பின் அபீ ஸலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நான் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன் : நோன்பாளி முத்தமிட லாமா? என்று! அதற்கு நபி(ஸல்)அவர்கள்,–இவர்களைக் கேளுங் கள்– என்று உம்மு ஸலமா(ரலி)அவர்களின் பக்கம் சுட்டிக்காட்டி னார்கள்! – நபியவர்கள் அவ்வாறு செய்பவர்களாய் இருந்தார்கள்„ என்று உம்மு ஸலமா அவர்கள் சொன்னார்கள்! அதற்கு நான் – அல்லாஹ்வின் தூதரே! உங்களின் நிலைமை வேறு„ உங்களின் முந்தைய, பிந்தைய பாவங்கள் அனைத்தையும் அல்லாஹ் மன் னித்து விட்டான்!„என்று சொன்னேன்.அப்போது நபி (ஸல்) அவர் கள் சொன்னார்கள் : அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் உங்கள் அனைவரினும் அதிகமாக அல்லாஹ் வுக்கு பயபக்தியாளனாக இருக்கிறேன். உங்கள் அனைவரினும் அதிகமாக அல்லாஹ்வுக்கு அஞ்சக்கூடியவனாக இருக்கிறேன்!„ நூல் : முஸ்லிம்

ஆனால் முத்தமிடுவதால்–அதுபோன்ற செயலில் ஈடுபடுவதால் விந்து வெளியாகிவிடுமோ என்று பயந்தால் அல்லது இதுபோன்ற செயல் படிப்படியாகத்தொடர்ந்து உடலுறவில்கொண்டுபோய் சேர்த் துவிடும் என்றோ தனது இச்சையை அடக்கத் தன்னால் இய லாது என்றோ அஞ்சினால் – அப்போது முத்தமிடுவதும் அது போன்ற செயலும் ஹராம் (தடுக்கப்பட்டவை) ஆகும். ஏனெனில் தவறான பாதையை அடைக்கவேண்டும்„ பாழாகிவிடாமல் நோன் பைப் பாதுகாக்க வேண்டும்! இதனால்தான் உளூ செய்பவருக்கு – மூக்கினுள் தண்ணீர் செலுத்திச் சுத்தம் செய்யுமாறு கட்டளை யிட்ட நபி(ஸல்) அவர்கள் நோன்பாளி அப்படிச் செய்யவேண்டாம் எனத் தடுத்துள்ளார்கள்! உள்ளே தண்ணீர் சென்றுவிடுமோ என அஞ்சியதே காரணமாகும்!

ஆனால் கனவு காண்பதனாலோ செயலற்ற வெறும் சிந்தனையி னாலோ விந்து வெளியாகுவது நோன்பை முறிக்காது. ஏனெனில் கனவில் வெளியாகுவது நோன்பாளியின் சுயவிருப்பமில்லாத ஒன்றா கும். வெறும் சிந்தனை என்பது மன்னிக்கத்தக்கதேயாகும்! நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் : : ان ا لله تجاوز عن امتي

ماحدثت به أنفسهم ما لم تعمل او تتكلم - متفق عليه

„மனதினுள் எண்ணுகிறஎண்ணங்களின் வஷயத்தில் என் சமுதா யத்தினருக்கு இறைவன் மன்னிப்பு வழங்கிவிட்டான்„ அந்த எண் ணங்கள் செயலாகவோ பேச்சாகவோ உருவெடுக்காமலிருக்கும் பட்சத்தில்!„ நூல் : புகாரி, முஸ்லிம்

(3) உண்பதும் பருகுவதும்! அதாவது உணவையோ பானத்தையோ வாய் வழியாக அல்லது மூக்கின் வழியாக உடலி னுள் சேர்ப்பது! எவ்வகை உணவானாலும் பானமானாலும் சரியே! ஏனெனில் அல்லாஹ் கூறியுள்ளான் :

لقول تعالي : و كلوا و اشربوا حتي يتبين لكم الخيط الابيض من الخيط الاسود من الفجر

„மேலும் விடியற்காலை எனும் வெள்ளை நூல், கருப்பு நூலி லிருந்து உங்களுக்குத் தெளிவாகத் தெரியும்வரை உண்ணுங்கள். பருகுங்கள்! பிறகு (இவற்றைத் தவிர்த்து) இரவுவரை நோன்பை நிறைவுபடுத்துங்கள்!„ அல்குர்ஆன் (2 : 187)

மூக்கு வழியாக செலுத்துவதும்-உண்பதையும் பருகுவதை யும் போன்றதேயாகும்.ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள் :

لقوله ﷺ في حديث لقيط بن صبرة : وبالغ في الاستنشاق الا ان تكون صائما رواه الخمسة و صححه ا لترمذي

லகீத் பின் ஸப்ரா எனும் தோழரை நோக்கி) :„நீ தண்ணீரை நன்கு மூக்கினுள் செலுத்திச் சுத்தம் செய்„ஆனால் நீ நோன்பாளி யாக இருந்தாலே தவிர„ நூல் : அபூதாவூத், நஸாஈ,இப்னு மாஜா, திர்மிதி, முஸ்னத் அஹ்மத்

ஆனால் மணக்கும் பொருள்களை நுகர்வது நோன்பை முறிக் காது. ஏனெனில் உடலினுள் செல்லும் படியான தடிப்பம் எதுவும் மணத்திற்குக் கிடையாது.

(4) உண்ணும் பருகும் அந்தஸ்தில் வரக்கூடியது! இது இரண்டு விஷயங்களாகும்.

(அ) நோன்பாளியின் உடலில்இரத்தம் செலுத்துவது! இரத் தம் அதிகஅளவு வெளியேறும் நிலமைஏற்பட்டு உடலினுள் இரத் தம் செலுத்தப்படுவது போன்று! அதனால் அவனது நோன்பு முறிந்து விடும். ஏனெனில் இரத்தம் ஊறுவதுதான் உணவு - பானம் முதலியன உட்கொண்டு ஊட்டம் பெறுவதன் நோக்கமா கும். அவனுள் இரத்தம் செலுத்துவதன்மூலம் அது ஏற்பட்டுவிடு கிறது![35]

(ஆ) ஊட்டத்துக்கான ஊசி போட்டுக்கொள்வது!இது உண் ணவும் பருகவும் தேவைப்படாதஅளவு பலம் கொடுக்கக் கூடிய தாகும்! நோன்பாளி அந்த ஊசியைப் போட்டுக்கொண்டால் அவன் நோற்றுள்ள நோன்பு முறிந்து விடும். ஏனெனில் அது உண்மை யில் உண்பதாகவோ பருகுவதாகவோ இல்லாவிட்டாலும் அவற் றின் இடத்தை நிரப்புவதாக உள்ளதால் அவ்விரண்டின் சட்டம் இதற்கும் பொருந்தும். ஊட்டச்சத்து அல்லாதவேறு இஞ்சக்ஷன் போடுவது நோன்பைமுறிக்காது. அந்தஊசியைச்சதையில் போட்டா லும் சரி, நரம்பில் போட்டாலும் சரியே!அதன்உஷ்ணத்தை தொண்

---

35 முன்னர் நான் கருதிக்கொண்டிருந்த கருத்தாகும் இது. பிறகு எனக்குப்புலப்பட்டது: உடலில் இரத்தம் செலுத்துவீது நோன்பை முறிக்காது என்று! ஏனெனில் அது உண்பது மல்ல., பருகுவதுமல்ல ; அவற்றின் அர்த்தத்தில் உள்ளதுமல்ல! நோன்பு கெட்டுவிட்ட தெனத் தெளிவாகாத வரை அதன் நிறைவேறும் தன்மை நீடிப்பதே அசல் நிலையாகும். ஏனெனில் சந்தேகத்தினால் உறுதப்பாடு நீங்கிவிடாது என்பது உறுதிசெய்யப்பட்ட நியதிகளில் ஒன்றாகும்!

டையில் உணர்ந்தாலும்கூட அது நோன்பை முறிக்காது! ஏனெனில் அது உண்பதாக–பருகுவதாக இல்லை„அவற்றின் அர்த்தத்தில் வரக்கூடியதாகவும் இல்லை! எனவே உண்ணல்– பருகலின் சட்டம் அதற்குப்பொருந்தாது. உண்ணாமல் பருகாமல் இருந்து தொண்டையில் சுவை உணரப்படுமானால் அது பற்றிப் பொருட்படுத்த வேண்டியதில்லை!

இதனால்தான் நம்முடைய சட்ட அறிஞர்கள் சொன்னார்கள் : „ஒருவன் குமட்டிக்காயை அரைத்து தனது உள்ளங்காலில் தேய்த்து அதன் மூலம் சுவையைத் தொண்டையில் உணர்ந்தால் அது நோன்பை முறிக்காது!„

இப்னு தைமிய்யா(ரஹ்) அவர்கள் நோன்பின் உண்மைநிலை என்கிற தமது நூலில் சொல்கிறார்கள் :“எதனை அல்லாஹ்வும் அவனுடைய தூதரும்– நோன்பை முறிக்கக்கூடியதாக நிர்ணயித்துள்ளார்களோ அது –

– ஏதேனும் ஒரு பொருள் மூளைவரை போய் சேர்வது,

– ஏதேனும் ஒரு பொருள் உடலினுள் செல்வது,

– ஏதேனும் ஒரு பொருள் (உடலின்) ஏதேனும் ஒரு துவாரத்தில் புகுந்துவிடுவது,

– ஏதேனும் ஒரு பொருள் உட்பகுதியைச் சென்றடைவது,

– ஆகியவை போன்ற ஒன்றாகுமென வலியுறுத்தக் கூடிய எந்த ஆதாரமும் இல்லை. இது போன்ற காரணம் நோன்பை முறித்துவிடும்என்று சொல்பவர்கள்–அல்லாஹ்விடமும் ரஸூலிடமும் இதுதான் சட்டம்என்று தொடர்புப்படுத்தி வைத்துள்ளார்களே அதற்கு எந்த ஆதாரமும் இல்லை!„

இப்னு தைமிய்யா(ரஹ்)அவர்கள் தொடர்ந்து சொல்கிறார்கள் : „மேலே சொன்ன அந்த விளக்கத்துடன் அல்லாஹ்வும் ரஸூலும் நோன்பின் விதியைத் தொடர்பு படுத்தியுள்ளார்கள் என்பதற்கு எந்த ஆதாரமும் இல்லையெனும் போது–இதனை நோன்பை முறிக்கக்

கூடியதாக அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஆக்கியுள்ளார்கள் என்று கூறுபவரின் கூற்று விபரமற்ற கூற்றாக ஆகிவிடுகிறது!„

(5) இரத்தம் வெளியாக்குவது – இரத்தம் குத்தி – உறிஞ்சி எடுத்தல் எனும் சிகிச்சையின் மூலம்! ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் :

لقول النبي ﷺ : أفطر الحاجم و المحجوم رو اه أحمد و ابو داؤد من حديث شداد بن اوس قال البخاري : ليس في الباب أصح منه

„இரத்தம் குத்தி – உறிஞ்சி எடுத்தவரும் எடுக்கப்பட்டவரும் நோன்பை முறித்துக்கொண்டார்கள்„ நூல் : அஹ்மத்,அபூ தாவூத் – (இந்தப் பாடத்தில் இதனை விடவும் நம்பகமான ஸதீஸ் வேறொன்றும் இல்லை என்று இமாம் புகாரி சொல்லியுள்ளார்கள்)

இது இமாம் அஹ்மத் அவர்களுடையவும் பெரும்பாலான ஸதீஸ் கலை வல்லுநர்களுடையவும் கருத்தாகும்.இரத்தம் குத்தியெடுப்பதைப் போன்றதே, நரம்பைக் கழித்து இரத்தம் எடுப்பதும்! இருத்தம் உறிஞ்சியெடுப்பது உடலில் பாதிப்பை ஏற்படுத்துவது போன்றே இதுவும் பாதிப்பை ஏற்படுத்தும்!

எனவே கடமையான நோன்பை நோற்றிருக்கும் நோன்பாளி தனது உடம்பில் பாதிப்பை உண்டாக்கும் வகையில் ரத்தத்தை அதிக அளவு வழங்கி தானம் செய்வது கூடாது! ஆனால் ரத்தம் செலுத்தியாக வேண்டிய நிர்ப்பந்த நிலையில் ஒருவர் இருக்கிறார்„ அவருக்கு இரத்தம்வழங்காவிட்டால் அவரதுஉயிரைக் காப்பாற்ற முடியாது என்றிருந்தால்–அத்துடன் நோன்பாளிக்கு தனது உடலிலிருந்து இரத்தம் எடுப்பதால் எந்தத் தீங்கும் வராது என்றால் (அந்தமனிதருக்காக)அவர் இரத்த தானம் செய்வது கூடும்! இது நிர்ப்பந்தமான சூழ்நிலையிலுள்ள சட்ட அனுமதியாகும். அவர் அந்நாளின் நோன்பை விட்டுவிட்டு வேறுநாளில் அதை நிறைவேற்றுவார்!

சில்லி மூக்கு உடைவது – மூலவியாதி – பல் பிடுங்குவது – காயத்தைப் பிளப்பது – பரிசோதனைக்காக இரத்தம் எடுப்பது – ஊசி குத்துவது போன்றவற்றினால் இரத்தம் வெளியாகுவதன் சட்ட நிலை என்னவெனில் –அது நோன்பை முறிக்காது! ஏனெனில் அது இரத்தம் உறிஞ்சியெடுப்பதாகவோ அதன் கருத்தில் உள்ளதாகவோ இல்லை.ஏனெனில் ஹிஜாமத் உடலைப் பலவீனப்படுத்துவது போன்று இது பலவீனப்படுத்தாது!

(6) வேண்டுமென்றே வாந்தி எடுப்பது! அதாவது இரைப்பையில் உள்ள உணவையோ பானத்தையோ வாய்வழியாக வெளியேற்றுவது! நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

لقول النبي ﷺ : من ذرعه القيْ فليس عليه قضاء و من استقاء عمدا فليقض رواه الخمسة الا النسائي و صححه الحاكم و معني ذرعه غلبه

எவர் வாந்தியைக் கட்டுப்படுத்த முடியாதவராகி விட்டாரோ அவர் மீது நோன்பை களா செய்வது கடமை இல்லை. எவர் வேண்டு மென்றே வாந்தி எடுக்கிறாரோ அவர்களா, செய்ய வேண்டும்!„நூல்: அபூதாவூது,இப்னு மாஜா, திர்மிதி, முஸ்னத் அஹ்மது

வேண்டுமென்றே வாந்தி எடுப்பதென்பது– ஒன்று : உடலில் ஏதாவது செய்வதன்மூலம் வாந்தியெடுப்பதாகும்„வயிற்றைப் பிசைவது, தொண்டையினுள் குத்துவதுபோன்று! அல்லது நுகர்வதன் மூலம் வாந்தியெடுப்பதாகும்„ ஏதாவது மணத்தை நுகர்வது கொண்டு வாந்தியெடுப்பது போன்று! அல்லது பார்ப்பதன் மூலம் வாந்தியெடுப்பதாகும்„ஏதேனும் ஒருபொருளைப்பார்த்துக் கொண்டிருந்து வாந்தியெடுப்பது போன்று! இவற்றின்மூலம் அவன் வாந்தியெடுத்தாலும் அது நோன்பை முறித்துவிடுகிறது!

அவன் தரப்பிலுள்ள காரணம் எதுவுமின்றி வாந்தி வந்தால் அதனால் எந்தத்தீங்கும் இல்லை.அவனுக்கு வயிறு குமட்டுமேயானால் வாந்தியைத் தடுக்க வேண்டியதில்லை. ஏனெனில் அது நோன்புக்கு எந்த இடையூறும் செய்யாது!அதைஅப்படியே விட்டு

விடவேண்டும். வாந்திவருதற்கும் முயற்சி செய்ய வேண்டாம். அதைத் தடுப்பதற்கும் முயற்சி செய்யவேண்டாம்!

(7) மாதவிடாய் அல்லது பிரசவத்தின் உதிரம் வெளிப்படுவது. பெண்களைக் குறித்து நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

لقول النبي ﷺ في المرأة : اليس اذا حاضت لم تصلي و لم تصوم ؟

“அவளுக்கு மாதவிடாய்ஏற்பட்டால் அவள்தொழாமலும் நோன்பு நோற்காமலும் இருக்கிறாள் அல்லவா?„

மாதவிடாய் அல்லது பிரசவத்தின் உதிரத்தைஎப்போது அவள் பார்க்கிறாளோ அப்பொழுது அவளது நோன்பு முறிந்து விடும். அது பகலின் ஆரம்பத்திலானாலும் சரி, கடைசியிலானாலும் சரி, சூரியன் மறைவதற்கு ஒருவிநாடி முன்பு ஏற்பட்டாலும் சரியே! ஆனால்உதிரம் பிரிவதாகஅவள் உணர்ந்து பிறகுசூரியன் மறைந்த பிறகுதான் அது உறுதியானது என்றால் அவளுடைய நோன்பு நிறைவேறிவிடும்!

நோற்றிருப்பது, ரமளான் நோன்பு எனில் – குற்றப் பரிகாரம், நேர்ச்சை ஆகியவற்றின் நோன்பைப் போன்று கடமையான நோன்பு எனில் நோன்பை முறிக்கக்கூடியவற்றை மேற்கொள்வது நோன்பாளிக்கு ஹராம் – விலக்கப்பட்டுள்ளது. ஆனால் பயணம், வியாதி போன்று நோன்பை விடுவதை ஆகமாக்கக் கூடிய தக்க காரணம் இருந்தால் அது ஹராம் அல்ல!ஏனெனில் ஒருகடமையைச் செய்பவர் அதை முழுமையாக நிறைவேற்றுவது அவசியம். சரியான காரணம் இருந் தாலே தவிர!

இனி, தக்க காரணமின்றி ரமளானில் – நோன்பை முறிக்கக் கூடியவற்றைச்செய்தால் அன்றையபகலின்மீதி நேரத்தில் உண்ணாமலும் பருகாமலும் உடலுறவில் ஈடுபடாமலும் இருப்பது கடமையாகும். அத்துடன் அந்நோன்பை ‘களா’ செய்யவும் வேண்டும். ரமளான் அல்லாத நாட்களில் நோன்பி ருந்து கொண்டு அவற்றைச் செய்தால் ‘களா’ மட்டும் செய்வது அவசியமாகும். உண்ணாமல் – பருகாமல் இருக்க வேண்டியதில்லை.

நோற்றிருப்து ந:பிலான நோன்பு எனில் நோன்பை விடுவது கூடும். தக்ககாரணம் இல்லையானாலும் சரியே!ஆயினும் நோன்பை முழுமைப்படுத்துவது நல்லது!

சகோதரர்களே! இறைவழிபாடுகளைப் பேணுங்கள்! பாவங்கள் மற்றும் விலக்கப்பட்டவற்றை விட்டுவிலகி விடுங்கள்! வானங்களையும் பூமியையும் படைத்த(இறை)வனுக்குப் பணிந்து வாழுங்கள். அவனுடைய அருட்கொடையின் சுகந்தங்களை நுகருங்கள். நிச்சயமாக அவன் அதிகம் அதிகம் கொடைவழங்குபவனாவான்!

இந்த உலகத்தில் உங்களுக்கென உள்ளவை– இறைவனை வழிபடுவதில் நீங்கள் கழித்தகாலம் மட்டும்தான்என்பதை அறிந்து கொள்ளுங்கள்! சந்தர்ப்பம் நழுவி விடுவதற்கு முன்பு காலத்தை அரிய பொருளாய் கருதுங்கள்! நஷ்டம் ஏற்படும்முன் லாபம் ஈட்டப்பாருங்கள்!!

யா அல்லாஹ்! காலத்தை அரிதாகக் கருதிச் செயல்படவும் நல்ல அமல்கள் புரிவதில் அதைஈடுபதுத்தவும் எங்ளுக்கு அருள் பாலிப்பாயாக! யா அல்லாஹ்! கிருபையையும் பேருபகாரத்தையும் எங்களுக்குக் கொடையாய் வழங்குவாயாக!மன்னிப்புடனும் பொறுத்தருளுவதுடனும் எங்களை நடத் துவாயாக!

யா அல்லாஹ்!இலகுவான வழியில்வாழ எங்களுக்கு வழிவகை செய்வாயாக! கடினமான வழியைவிட்டும் எங்களைக் காப்பாற்றுவாயாக! இம்மையிலும் மறுமையிலும் எங்களை மன்னித்தருள்வாயாக!

யா அல்லாஹ்!எங்கள் நபியின் சிபாரிசைப் பெறும் பாக்கியத்தை எங்களுக்கு வழங்குவாயாக!அவர்களின் நீர்த்தடாகத்தில் எங்களை ஆஜர் படுத்துவாயாக!அதிலிருந்து எங்களுக்கு–பின்னெப் போதும் தாகம் ஏற்படாத வகையில் அதன் நீரைப்பருகத் தருவாயாக! அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபாலிக்கும் இரட்சகனே!

المجلس الخامس عشر

## في شروط الفطر بالمفطرات و ما لايفطر و ما يجوز للصائم

15- வது மஜ்லிஸ்

# நோன்பை முறிக்கக் கூடியவற்றின் நிபந்தனை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் நுண்ணறிவாளன்., படைப்பாளன்., மாண்பாளன் ., சாந்தமுடையவன்., கிருபையாளன்., கண்ணியமுடையவன்., உணவளிப்பவன்! தூண்களோ வேறெந்த தொடர்புகளோ இன்றி ஏழுபாதைகளை விண்ணில் அமைத்தவன். நேடிதுயர்ந்த மலைகளை நட்டுப் பூமியை உறுதிப்படுத்தினான். சான்றுகள்மற்றும் உண்மைகளின் மூலம் மக்களுக்குத் தன்னைப் பற்றி அறிவித்துக்கொடுத்தான்.மேலும் எல்லாப்படைப்புகளின் வாழ் வாதாரங்களுக்கும் பொறுப்பேற்றான்!

துள்ளிப்பாயும் நீரிலிருந்து மனிதனைப் படைத்தான். மனித னுக்கும் இறைவனுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் என்பதற் காக ஷரீஅத்- சட்டநெறிகளை மனிதனுக்குக் கடமையாக்கினான்! தவறையும் மறதியையும் மனிதர்களுக்காகப் பொறுத்தருளினான்!

பேசுவோர் பேசும் காலமெல்லாம்-பேசாதார் மௌனமாக இருக் கும் காலமெல்லாம் நான் அவனைப் புகழ்கிறேன். வணக்கத்திற் குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை.,அவன் தனித் தவன்., இணைதுணை இல்லாதவன் என்று நான் சாட்சி சொல் கிறேன். இது வாய்மையாளனின் சாட்சியமே தவிர வஞ்சகனின் சாட்சியமல்ல!

மேலும் முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி அளிக்கின்றேன். அவர்கள் விடுத்த அழைப்பு உலகின் எல்லாப் பகுதிகளிலும் வியாபித்துள்ளது!

நபியவர்கள் மீது அல்லாஹ்வின் ஸலவாத் பொழியட்டுமாக! இஸ்லாத்தைவிட்டும் வெளியே றுதல் நிகழ்ந்த நாளில் தெளிவான உறுதியை மேற்கொண்ட நபித்தோழர் அபூ பக்ர் மீதும் - இறை மறுப்பாளர்களைப் பணியச்செய்து வெற்றிக்குமேல் வெற்றிகளைக் குவித்த உமர் மீதும்- அவரது கண்ணியத்தைக் குலைப்பதைப் பாவியைத்தவிர வேறெவரும் அனுமதிக்க மாட்டார்களே அப்படிப் பட்டவரான உஸ்மான் மீதும்-நெறுக்கடியான நிலைமைகளையும் வீரத்தோடு சமாளித்தவரான அலீ மீதும் அல்லாஹ்வின் ஸலவாத் பொழியட்டுமாக! நபியர்களின் குடுப்பத்தினர் மீதும் மக்கள் அனை வரையும் முந்திவிட்ட நபித்தோழர்கள் மீதும் ஸலவாத் உண்டா கட்டுமாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! நோன்பை முறிக்கக் கூடியவையென முன்பு சொல்லப்பட்டவை எவையெனில், உடலுறவு கொள்வது, கட்டி யணைத்தல் போன்ற செயலினால் விந்து வெளிப்படுவது, உண் பது-பருகுவது, இவை இரண்டின் அர்த்தத்தின் கீழ் வரக்கூடி யது, ஹிஜாமத் எனும் இரத்தம் குத்தியெடுப்பது, வாந்தி, மாத விடாய்,பிரசவத்துடக்கு ஆகியவையாகும்.-மாதவிடாய், பிரசவத்து டக்கு நீங்கலாக — இவற்றில் எதனை நோன்பாளி மேற்கொண்டா லும் அது நோன்பை முறிக்காது., ஆனால் அறிந்துகொண்டே - நினைவும் சுயவிருப்பமும் இருப்பதுடனே மேற்கொண்டால் அது நோன்பை முறிக்கும்! ஆக, இவை மூன்று நிபந்தனைகளாகும்.

ஒன்று: நோன்பாளி அறிந்தவனாக இருப்பது!(நோன்பை முறிக் கக் கூடியதன் சட்டம் பற்றி) அறியாதவனாக இருந்தால் அது நோன்பை முறிக்காது. ஏனெனில் அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான் :

لقوله تعالي : ربنا لا تؤآخذنا ان نسينا او أخطأنا

„எங்கள் இறைவனே! நாங்கள் மறந்து விட்டாலோ தவறுதலா கச் செய்துவிட்டாலோ எங்களைக் குற்றம் பிடிக்காதே!„- இந்தப்

பிரார்த்தனைக்கு,, அப்படியே செய்தேன் என்று அல்லாஹ் பதிலளித்தான்,,[36]

குர்ஆனில் இன்னோர் இடத்தில் கூறுகிறான் :

وليس عليكم جناح فيما اخطأتم به لكـن مـا تعمـدت قلوبكـم و كـان الله غفـورا رحيما

,, நீங்கள் தவறுதலாக ஏதேனும் பேசிவிட்டால்அதற்காக உங்கள் மீது எவ்விதக் குற்ற முமில்லை. ஆனால் மனப்பூர்வமாக நீங்கள் கூறினால் அஃது குற்றமே! அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் கருணையாளனாகவும் இருக்கிறான்,, (33: 5)- அவன் ஷரீஅத் சட்டத்தை அறியாதவனாக இருந்தாலும் சரியே!எடுத்துக்காட்டாக, இந்தக் காரியம் நோன்பை முறிக்கக் கூடியதல்ல எனக்கருதிக் கொண்டு செய்வது போன்று!-அல்லது நிலைமையை அதாவது காலத்தை அறியாதவனாக இருந்தாலும் சரியே! எடுத்துக்காட்டாக அதிகாலை உதயமாகிவிட்டிருக்கவே இன்னும் உதயமாகவில்லை எனக் கருதிக்கொண்டு அவன் உண்பதுபோன்று!-சூரியன் இன்னும் மறையாதிருக்கவே மறைந்துவிட்டதெனக் கருதிக் கொண்டு அவன் உண்பது போன்று! இத்தகைய ஒவ்வொரு நிலையிலும் அவன் நோன்பை விட்டுவிடமாட்டான்!

لما في صحيحين عن عدي بن حاتم ﷺ قال : لما نزلت هذه الاية .. حتي يتبين لكم الخيط الابيض من الخيط الاسود ,, عمدت الي عقالين أحدهما اسـود و الاخر ابيض فجعلتهما تحت وسادتي أنظر اليهما فلما تبـين لي الابيـض مـن الاسـود امسكت فلما غدوت الي رسو ل الله ﷺ فقال النبي ﷺ ان وسادتك اذن لعريـض ان كان الخيط الابيض و الاسود تحت وسادتك انما ذلك بياض النهار و سواد الليل

[36] இதனை இமாம் முஸ்லிம் அறிவித்துள்ளார்கள்.

"அதிய்பி பின் ஹாதம்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: கருப்பு நூலில் இருந்து வெள்ளைநூல் உங்களுக்குத் தெளிவாகத் தெரியும் வரை உண்ணுங்கள்., பருகுங்கள் எனும் வசனம் இறங்கிய போது நான் இரண்டு கயிறுகளை எடுத்தேன்., ஒன்று வெள்ளை., மற்றொன்று கருப்பு! அவற்றை எனது தலையணையின் கீழ் வைத்து அவ்விரண்டையும் பார்த்துக்கொண்டிருந்தேன். கருப்பு நூலில் இருந்து வெள்ளை நூல் எனக்குத் தெளிவாகத் தெரிந்த போது உண்பதையும் பருகுவதையும் நிறுத்திக் கொண்டேன்! காலையில் நபி(ஸல்)அவர்களிடம் வந்து நான் செய்ததைச் சொன்னேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : வெள்ளைக் கயிறும் கருப்புக் கயிறும்(அதிகாலையின் ஒளியும் இருளும்)உம் தலையணையின் கீழே இருந்ததெனில் உமது தலையணை நீளமானதுதான்........! அது பகலின் வெண்மையும் இரவின் கருப்புமாகும் என்பதை அறிந்துகொள்ளும்,, நூல் : புகாரி, முஸ்லிம்

அதிகாலை உதயமான பிறகு அதி (ரலி) அவர்கள் உணவு உட்கொண்டிருக்கிறார்கள். இரண்டு கயிறுகளும் அவருக்குத் தெளி வாகத் தெரியும் வரை உண்பதை நிறுத்தவில்லை! ஆனாலும் அந்நோன்பை திரும்பவும் நோற்கும்படிஅவருக்கு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடவில்லை! காரணம் அவர் சட்டத்தைத் தெரியாமலிருந்தார்!

في صحيح البخاري من حديث أسماء بنت ابي بكر رضي الله عنها : أفطرنا في عهد النبي ﷺ يوم غيم ثم طلعت الشمس

"அபூ பக்ர்(ரலி)அவர்களின் மகள் அஸ்மா (ரலி) அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்களின் காலத்தில்–மேகம் அதிகமாக இருந்த ஒரு நாளில் நாங்கள் நோன்பு திறந்தோம். பிறகு சூரியன் தென்பட்டது,, நூல்: புகாரி– அந்நோன்பை மீண்டும் நோற்கும்படி தோழர்களை நபியவர்கள் ஏவியதாக அஸ்மாஅவர்கள் சொல்ல வில்லை! ஏனெனில் அவர்கள் நேரத்தைச் சரியாக அறியாதவர்களாய் இருந்தார்கள். 'களா' செய்யும்படி அவர்களை நபியவர்கள் ஏவியிருந்தால் அது பற்றி அறிவிப்புகள் வந்திருக்கும். ஏனெனில் அதிக அளவு

அறிவிப்புச் செய்யத் தூண்டும் விவகாரங்களில் இதுவம் ஒன்றா கும். இதற்கு அந்த அளவுக்கு முக்கியத்துவம் உள்ளது!

நோன்பின் உண்மைநிலை எனும் நூலில் இப்னு தைமிய்யா (ரஹ்)அவர்கள் சொல் கிறார்கள்: தம்முடைய தந்தை உர்வா(ரலி) அவர்கள் சொன்னதாக ஹிஷாம் அவர்கள் அறிவித்துள்ளார்கள் : (அந்நாளின் நோன்பை)களா, செய்யும்படி நபித்தோழர்களுக்கக் கட் டளையிடப்பட வில்லை,, .ஆயினும் பகல்பொழுது இன்னும் உள் ளது., சூரியன் மறையவில்லை எனத்தெரியவந்தால் சூரியன் மறை யும் வரை உண்பதையும் பருகுவதையும் உடனே நிறுத்திக் கொள்ளவேண்டும்!

இதே போன்றுதான் நோன்புநோற்பவரும் அதிகாலை உதயமான பிறகு உணவு உட்கொள்கிறார் எனில் – ஆனால் இன்னும் அதி காலை உதயமாகவில்லை என்று கருதுகிறார். பிறகு அதிகாலை உதயமாகிவிட்ட விஷயம் தெளிவானது எனில் அவரது நோன்பு நிறைவேறிவிடும்., அதை அவர் திரும்ப நோற்கவேண்டியதில்லை. ஏனெனில் அவர் நேரம்காலத்தை அறியாதவராய் இருந்திருக்கிறார்! அதிகாலை அவருக்குத் தெளிவாகத்தெரியும் வரையில் உண்பதற் கும் பருகுவதற்கும் அல்லாஹ் அவருக்கு அனுமதி வழங்கியுள் ளான்! அனுமதிக்கப்பட்ட – ஆகுமான செயலைச் செய்தவரை நோக்கி மீண்டும் நோற்குமாறு கட்டளையிடப்படமாட்டாது!

ஆனால் அவர் உணவு உட்கொள்கிற – பானம் அருந்துகிற நிலையில் சூரியன் இன்னும் மறையவில்லை என்றோ அதிகாலை உதயமாகிவிட்டதென்றோ அவருக்குத்தெளிவாகிவிட்டால் உடனே உண்பதையும் பருகுவதையும் நிறுத்திக்கொண்டு தனது வாயில் ஏதாவது இருந்தால் அதை உடனே துப்பிவிடவேண்டும். ஏனெ னில் உண்பதற்கான–பருகுவதற்கான அனுமதி அப்போது நீங்கி விட்டது!

(2) நோன்பாளி நினைவுள்ளவனாக இருப்பது!மறதியாக உண் ணவோ பருகவோ செய்தால் அவரது நோன்பு நிறைவேறிவிடும். அவர் அந்நோன்பை மீண்டும் நிறைவேற்ற வேண்டியதில்லை! மேலே அல்பகரா அத்தியாயத்தின் வசனத்தில் இதுபற்றி சொல்லப்

பட்டுள்ளது. மேலும் அபூ ஹுரைரா(ரலி)அவர்கள்அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள் :

لما رواه ابو هريرة ﷺ عن النبي ﷺ انه قال: مـن نسـي وهـو صـائم فـاكل او شـرب فليتم صومه فانما أطعمه ا لله و سقاه – متفق عليه

,,நோன்பு நோற்றிருக்கும் நிலையில் ஒருவர் மறந்து ஏதேனும் உண்ணவோ பருகவோ செய்தால் அவர் தன் நோன்பை நிறைவு செய்யட்டும். ஏனெனில் அல்லாஹ் (அவரை மறதியில் ஆழ்த்தி) உணவும் பானமும் அளித்துள்ளான்!,, நூல் : புகாரி, முஸ்லிம்

நோன்பை நிறைவு படுத்துமாறு அவருக்கு நபி(ஸல்) கட்டளையிட்டது அவரது நோன்பு சரியாக நிறைவேறிவிட்டது என்பதற்கான ஆதாரமாகும். மேலும்மறந்தவருக்கு உணவும் பானமும் அளித்ததை அல்லாஹ்வுடன் சேர்த்துச்சொல்லியிருப்பது அல்லாஹ் அவரைக் குற்றம் பிடிக்கமாட்டான் என்பதற்கான ஆதாரமாகும்.

ஆனால் எப்போது அவருக்கு நினைவு வந்ததோ அல்லது நினைவூட்டப்பட்டதோ அப்போது அவர் நிறுத்திக்கொள்ள வேண்டும். தனது வாயில் ஏதேனும் இருந்தால் அதனைத் துப்பிவிட வேண்டும். ஏனெனில் உண்பதற்கான அனுமதி அப்போது நீங்கி விடுகிறது. நோன்பாளி (மறதியாக) உணவு – பானம் உட்கொள்வதை யாரேனும் பார்த்தால் உடனே அவரை எச்சரிக்கை செய்வது கடமையாகும். அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான்:,,நன்மையான காரியத்திலும் இறையச்சத்திற்குரிய விஷயத்திலும் ஒருவருக்கொருவர் ஒத்துழைப்புச் செய்யுங்கள்,,

(3) நோன்பாளி சுயவிருப்பம் உள்ளவனாக இருப்பது! அதாவது நோன்பை முறிக்கக் கூடிய காரணியைச் சுயவிருப்பதுடன் செய்பவனாக இருப்பது!நிர்ப்பந்திக்கப்பட்டவனாக இருந்தால் அவனது நோன்பு சரியாக நிறைவேறிவிடும். அதை அவன் மீண்டும் நோற்க வேண்டியதில்லை.ஏனெனில் உள்ளம் இறைவனை ஏற்றுக் கொள்வதில் நிம்மதியுடன் இருக்க – நிர்பந்திக்கப்பட்ட நிலையில் எவர் குஃப்ர் எனும் இறைநிராகரிப்பை மேற்கொண்டாரோ அவரை

விட்டும் திண்ணமாக அல்லாஹ் சட்டத்தை நீக்கிவிட்டான்! அல்லாஹ் கூறுகிறான் :

فقال تعالي : من كفر با لله من بعد ايمانه الا من اكره و قلبه مطمئن بالايمان ولكن من شرح بالكفر صدرا فعليه غضب من ا لله ولهم عذاب عظيم

" எவர் அல்லாஹ்வை ஏற்றுக் கொண்ட பிறகு அவனை நிரா கரித்தாரோ (அவர் தண்டனைக் குரியவராவார்) அவரது உள்ளம் இறைவனை ஏற்றுக் கொள்வதில் நிம்மதியுடன் இருக்கும் நிலை யில் நிராகரிக்குமாறு நிர்பந்திக்கப்பட்டாலே தவிர!(அவர்மீது குற்ற மில்லை) ஆனால் எவர் மனநிறைவுடன் நிராகரிப்பை ஏற்றுக் கொள்கிறாரோ அவர் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாகும். மேலும் இத்தகையவர்களுக்கு கடுமையான வேதனையும் இருக் கிறது!" அல் குர்ஆன் (16 :106)

நிர்பந்தத்தினால் இறைவனை நிராகரித்தவருக்கு நிராகரிப்பின் சட்டத்தை அல்லாஹ் நீக்கிவிடுகிறான் எனும்போது அதனை விடக் குறைவான குற்றங்களுக்குத் தண்டனை இல்லை என்பது மிகத் தெளிவான விஷயமாகும். மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் :

لقوله ﷺ : ان ا لله تجاوز عن امتي الخطأ و النسيان و ما استكرهوا عليه - رواه ابن ماجة و البيهقي وحسنه ا لنووي

தவறுதலாக அல்லது மறதியாக அல்லது நிர்பந்தத்திற்குள்ளாக் கப்பட்டு செய்கிற குற்றங்களின் சட்டத்தை என சமுதாயத்தினரை விட்டும் திண்ணமாக அல்லாஹ் நீக்கிவிட்டான்" நூல் : இப்னு மாஜா, பைஹகி

நோன்பு வைத்திருக்கும் மனைவியை கணவன் உடலுறவு கொள்ளுமாறு நிர்பந்தப்படுத்தியால் அவளதுநோன்பு சரியாக நிறை வேறிவிடும். அதனை அவள் திரும்ப நோற்க வேண்டியதில்லை! ஆனால் நோன்பு நோற்றிருக்கக் கூடிய அவளை உடலுறவுக்கு

நிர்பந்தம் செய்வது அவனுக்கு ஹலால்– ஆகுமாக்கப்பட்டதல்ல! ஆனால் அவன் ஊரில்இருக்கும்போது அவனது அனுமதி இன்றி அவள் ந.்.பில் நோன்பை நோற்றிருந்தாலே தவிர!

நோன்பாளியின் உடலினுள்புழுதி பறந்துசென்றாலோ அவனது சுயவிருப்பமின்றி ஏதேனும் ஒருபொருள் உள்ளே புகுந்துவிட் டாலோ அல்லது வாய் கொப்பளித்தபோது– மூக்கினுள் தண்ணீர் செலுத்தியபோது அவனது சுயவிருப்பமின்றி சிறிது தண்ணீர் உள்ளே இறங்கிவிட்டாலோ அவனது நோன்பு சரியாக நிறைவேறி விடும்., அதை அவன் திரும்ப நோற்கவேண்டியதில்லை! கண் ணில் சுர்மா இடுதல், அதில் மருந்து ஊற்றுதல் ஆகியவற்றினால் நோன்பாளி தனது நோன்பை முறித்துக் கொள்ளமாட்டார்., அதன் சுவையைத் தொண்டையில் உணர்ந்தாலும் சரியே!ஏனெனில் இது உண்பதும் பருகுவதும் அல்ல., அவற்றின் அர்த்தத்தில் உள்ள தும் அல்ல!

காதில் சொட்டுமருந்து ஊற்றுதல்,காயத்தில் மருந்து வைத்து கட்டுதல் ஆகியவற்றாலும் நோன்பை முறித்துக் கொள்ளமாட்டார்., இதுவும் உண்பதும் பருகுவதும் அல்ல.,அவற்றின் அர்த்தத்தில் உள்ளதுமல்ல!

இப்னு தைமிய்யா (ரஹ்) அவர்கள் நோன்பின் உண்மைநிலை எனும் தமதுநூலில் கூறுகிறார்கள்:இந்த விஷயங்களினால் நோன்பு முறிந்துவிடும் என்று அறிவிக்கக் கூடிய எந்த ஓர் ஆதாரமும் குர்ஆனிலும் இல்லை., ஹதீஸிலும் இல்லை என்பதை நாம் அறி வோம். எனவே இவை நோன்பை முறிப்பவை அல்ல என்பதை நாம் அறிந்திட வேண்டும்!.,

தொடர்ந்து சொல்கிறர்கள்: திண்ணமாக நோன்பு முஸ்லிம்களின் மார்க்க விஷயங்களைச் சேர்ந்ததாகும். பண்டிதரும் பாமரரும் அறிந்தாக வேண்டிய ஒன்றாகும். மேலேசொன்ன இந்தவிஷயங்கள் – நோன்பில் அல்லாஹ்வும் ரஸூலும் தடைசெய்துள்ள காரியங்க ளாக இருந்தால்–இவற்றி னாலும் நோன்பு பாழாகிவிடும் என்றிருந் தால் – நபி (ஸல்) அவர்கள் விளக்கிச் சொல்லக்கடமைப் பட்ட விஷயங்களாக இவை ஆகியிருக்கும்.அப்படி நபி(ஸல்) சொல்லி

யிருந்தார்களெனில் தோழர்கள் அதை அறிவித்திருப்பார்கள். நபி (ஸல்)அவர்கள் கொணர்ந்த எல்லா அம்சங்களையும் சமுதாயத்திடம் ஸஹாப்பாக்கள் சேர்ப்பித்ததுபோல் இந்த விஷயங்களையும் சேர்ப்பித்திருப்பார்கள். ஆனால் கல்வியாளர்களில் யாருமே நபி (ஸல்)அவர்களிடம் இருந்து இந்த விஷயத்தில் எந்தஓர் அறிவிப்பையும் எடுத்துரைக்கவில்லை! ஸஹீஹ், ளயீ∴ப், முஸ்னத், முர்ஸல்[37] என எத்தரத்திலுள்ள ஹதீஸையும்அவர்கள் தர வில்லை! எனவே நபி(ஸல்)அவர்கள் இது பற்றி எதுவும் சொல்ல வில்லை எனத் தெரிகிறது!

சுர்மா தொடர்பாக அறிவிக்கப்பட்டுள்ள ஹதீஸ் – அதாவது, தூங்கும்போது நறுமணம் கலந்த சுர்மாவைப் போட்டுக் கொள்ளுமாறு நபி (ஸல்) அவர்கள் ஏவினார்கள். மேலும் சொன்னார்கள் : நோன்பாளி அதைத் தவிர்த்துக் கொள்ளட்டும் என்கிற ஹதீஸ் ளயீ∴ப் ஆகும். மட்டுமல்ல இதனை ஆபூ தாவூது மட்டும் தமது ஸுனனில் அறிவித்துள்ளார்கள். வேறு யாரும் அறிவிக்க வில்லை. ஆபூ தாவூது சொல்லியுள்ளார்கள்: இந்த ஹதீஸ் முன்கர்[38] என்று யஹ்யா பின் மயீன் என்னிடம் கூறினர்கள்!

இப்னு தைமிய்யா (ரஹ்)அவர்கள் சொன்னார்கள் : என்னென்ன சட்டங்களை அறிவதன்பால் சமுதாய மக்கள் தேவையாகிறார்

---

[37] ஸஹீஹ் : எந்த நபிமொழியின் அறிவிப்பாளர் நம்பகமானவராக , இறைபக்தியாளராக ,ஏற்கத்தக்க நினைவாஙற்றல் உடையவராக இருக்கிறாரோ மேலும் அதன் அறிவிப்புத் தொடர் தொடர்ச்சியாக இருக்கிறதோ அந்த நபிமொழி ஸஹீஹ் ஆகும்.
ளயீ∴ப் : எந்த நபிமொழி ஸஹீஹ்– ஹஸன் உடைய நிபந்தனைகளுக்கு உட்பட வில்லையோ அல்லது அதன் அறிவிப்பு வரிசையில் ஒருவர் இல்லாதிருக்கிறாரோ அல்லது குறைகூறப்பட்டவராய் இருக்கிறாரோ அந்த நபிமொழி ளயீ∴ப் ஆகும்.
முஸ்னது : ஒவ்வொரு ஸஹாபியின் அறிவிப்புகளாக வரிசைக் கிரமப்படி எந்த நூலில் திரட்டப்பட்டிருக்குமோ அந்த நூலில் இடம் பெற்ற ஹதீஸ் முஸ்னத் எனப்படும் . எடுத்துக்காட்டாக, முஸனத் இமாம் அஹ்மத்
முர்ஸல்: எந்த நபிமொழியின் அறிவிப்புத் தொடரில் இறுதி அறிவிப்பாளர் விடுபட்டிருக்கிறதோ அதாவது தாபிஈ– க்குப் பிறகு ஸஹாபியின் பெயர் இல்லையோ அந்த நபிமொழி முர்ஸல் ஆகும். ( மொழிபெயர்த்தோன்)

[38] முன்கர் : எந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவர் சந்தேகப்பேர்வழியாக , தீயவராக அல்லது பித்அத்–நூதன அனுஷ்டானம் உடையவராக உள்ளாரோ அந்த ஹதீஸ் முன்கர் ஆகும் .

களோ அவற்றை எல்லோரும் அறிந்திடும் வகையில் தெளிவான முறையில் அவர்களுக்கு நபியவர்கள் விளக்கிக்கொடுப்பது அவசியமாகும். அந்தச் சட்டங்களைச் சமுதாய மக்களும் வாழையடி வாழையாக எடுத்தரைத்துக் கொண்டு வந்திருக்க வேண்டும். இப்படி எதுவும் நடைபெறவில்லை எனும்போது இது நபி(ஸல்) அவர்களின் தீனில் சேர்ந்த விஷயம் அல்ல என்று அறிந்து கொள்ளப்பட்டது.,- இது தெளிவான வார்த்தையாகும். தெளிவான ஆதாரங்களின் மீதும் நிலையான விதிகளின் மீதும் அமைக்கப் பட்ட வாக்காகும்!

உணவை ருசி பார்ப்பதால் நோன்பு முறியாது.ஆனால் அதை விழுங்கிவிடக் கூடாது! நறு மணத்தையோ சாம்புராணிப்புகையையோ நுகர்வதாலும் நோன்பு முறியாது! ஆனால் நோன்பாளி சாம்புராணியை மூக்கினால் உள்ளிழுக்கமாட்டார். ஏனெனில் மேலே எழுந்துவரும் பகுதிகள் சாம்புராணியில் உள்ளன.அவற்றில் ஏதெனும் உடலின் உட்பகுதியில் சிலபோது சென்றுவிடலாம்

வாய்கொப்பளிப்பதாலோ மூக்கினுள் தண்ணீர் செலுத்துவதாலோ நோன்பு முறிந்துவிடாது. ஆனாலும் அதில்அளவு கடந்து செயல் படக் கூடாது. ஏனெனில் அதனால் சிலசமயம் சிலதுளிகள் உடலினுள் ஊடுறுவிச் சென்றுவிடலாம்!

நபி(ஸல்)அவர்கள் அறிவிக்கிறார்கள்: முழுமையாக உளுசெய்! விரல் இடுக்குகளைக் கோதிவிடு! ஆனால் நீ நோன்பாளியாக இருந்தாலே தவிர!,, லகீத் பின் ஸபராஹ் (ரலி) நூல்:அபூதாவூது, நஸாஈ, இப்னு மாஜா

மிஸ்வாக்(பல் துலக்கும்குச்சியைப்)பயன்படுத்துவது கொண்டு நோன்பாளி நோன்பை முறித்துக் கொள்ளமாட்டார். உண்மையாதெனில் மிஸ்வாக் செய்வது, நோன்பு நோற்காதவர்களைப் போல அவருக்கும் ஸுன்னத் - நபிவழி ஆகும். பகலின் ஆரம்பத்திலும் சரி, கடைசிலும் சரி! ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் சொல்லியுள்ளார்கள் :

لقول النبي ﷺ : لو لا ان أشق علي امتي لامرتهم بالسواك عند كل صلاة

“நான் என் சமுதாய மக்களுக்கு சிரமம் கொடுத்துவிட்டேனோ எனும் பயம் இல்லாவிட்டால் ஒவ்வொரு தொழுகையின் போதும் மிஸ்வாக் செய்யுமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டிருப்பேன்!„ நூல்: புகாரி, முஸ்லிம் போன்று பல நூல்கள் – இது, நோன்பு நோற்றவர்கள்,நோற்காதவர்கள் அனைவருக்கும் பொதுவான விதி யாகும். எல்லா நேரங்களிலும் பொருந்தக் கூடியதாகும்.

மேலும்ஆமிர் பின் ரபீஆ(ரலி)அவர்கள் அறிவித்துள்ளார்கள்:
وقال عامر بن ربيعة ﷺ : رأيت النبي ﷺ ما لا أحصي يتسوك وهو صائم رواه أحمد و ابو داؤد و الترمذي

“கணக்கிட முடியாத அளவு எத்தனையோ தடவை நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கும் நிலையில் மிஸ்வாக் செய்ததை நான் பார்த்திருக்கிறேன்!„ நூல் : அஹ்மத்,தபூ தாவூத், திர்மிதி[39]

பற்பசை கொண்டு பற்களைச்சுத்தம் செய்வது நோன்பாளிக்குத் தேவையில்லை.ஏனெனில் ஊடுருவிச் செல்லும் வலுவான தன்மை ஒன்று அதற்கு உண்டு.எச்சிலுடன் கலந்து அதுவும் உடலினுள் போய்விடுமோ என அஞ்சப்படுகிறது! மிஸ்வாக்கைப் பயன் படுத்தி னால் பற் பசையைப்பயன்படுத்தவேண்டிய அவசியம் இருக்காது!

வெப்பம் மற்றும் தாகத்தின் கடுமையைக்குறைத்திடும் காரியங் களைச் செய்வது நோன்பு நோற்றவருக்குக் கூடும். தண்ணீர் ஊற்றி வெப்பத்தைத் தணிப்பதுபோன்று! நபித்தோழர்கள் சிலரிடம் இருந்து இமாம் மாலிக்கும் அபூதாவூதும் இவ்வாறு அறித்துள் ளார்கள்:„ அர்ஜ்என்ற இடத்தில் நபி(ஸல்)அவர்களைக் கண்டேன்„ அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் தாகத்தினால் அல்லது வெப்பத்தினால்[40] தமது தலையில் தண்ணீர் ஊற்றிக்கொண்டார்கள்„

---

[39] புகாரி இமாம் அவர்கள் அறிவிப்பாளர்களைக் குறிப்படாமல்–உறுதியற்ற வாசகஅமைப் பில் இதனைப் பதிவு செய்துள்ளார்கள் . திர்மிதி இமாம் அவர்கள் இதனை ஹஸன் எனச் சொல்லியுள்ளார்கள் . ஹாபிழ் இப்னு ஹஜர் அவர்கள் தல்கீஸ் எனும் நூதலில் ஓரிடத்தில் இதன் அறிவிப்பத் தொடர் ஹஸன் ஆகும் எனக் குறிப்பிட்டுள்ளார்கள் .

[40] ஸஹீஹ் - ஆதாரப்பூர்வமான ஹதீஸ்

அனஸ்(ரலி)அவர்களிடம் தண்ணீர் தொட்டி வடிவில் உடைத் தெடுக்கப்பட்ட பாறை ஒன்றிருந்தது. நோன்பு வேளையில் அவர் வெப்பத்தை உணர்ந்தால் அதனுள் இறங்கிவிவார்கள். திண்ண மாக அதில்(அல்லாஹ் மிக அறிந்தவன்)தண்ணீர் நிரப்பப்பட்டிருப் பது போன்றிருக்கும்!

ஹஸன் அவர்கள் சொன்னர்கள் : நோன்பு நோற்றவர் வாய் கொப்பளிப்பதால் அல்லது குளிர்ச்சி பெறுவதால் தவறேது மில்லை,, -இமாம் புகாரியும் இந்த விஷயங்களை -அறிவிப்பாளர் களின் பெயரின்றி-தமது ஸஹீஹில் பதிவு செய்துள்ளார்கள்.

சகோதரர்களே! நீங்கள் முழுத்தெளிவுடன்அல்லாஹ்வை வழிபடு வதற்காக இறைமார்க்கம் பற்றிய அறிவுஞானத்தை வளர்த்துக் கொள்ளுங்கள். திண்ணமாக கற்றவர்களும் மற்றவர்களும் சமமாக மாட்டார்கள். யாருக்கு அல்லாஹ் நன்மையை நாடுகிறானோ அவருக்கு இறைமார்க்கம் பற்றிய ஞானத்தை வழங்குகிறான்!

யா அல்லாஹ்! எங்களது தீன் பற்றிய அறிவு ஞானத்தையும் அதன்படி அமல் செய்யும் பாக்கியத்தையும் எங்களுக்கு வழங்கு வாயாக! அதில் எங்களை நிலைத்திருக்கச் செய்யவாயாக! இறை விசுவாசிகளாகவே எங்களை மரணிக்கச் செய்வாயாக!மேலும் உத்த மர்களின் குழவில் எங்களைச் சேர்ப்பாயாக! கருணைமிக்க இறை வனே உனது கருணையினால் எங்ளுக்கும் எங்கள் பெற்றோருக் கும் அனைத்துமுஸ்லிம்களுக்கும் பாவமன்னிப்பு வழங்குவாயாக!

# المجلس السادس عشر في الزكاة

16 வது மஜ்லிஸ்

# ஜகாத்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!அவனே குற்றங்குறைகளை மாய்க்கிறான்., பொறுத்துக் கொள்கிறான்.அதிகப் பிரசங்கித்தனமான பேச்சுக்களை மன்னித்துவிடுகிறான். அவனிடம் பாதுகாப்புத் தேடியோர் அனைவரும் வெற்றிபெற்றனர். அவனுடன் உடன்படிக்கை செய்துகொண்டோர் அனைவரும் லாபம் அடைந்தனர். தூண்கள் எதுவுமின்றி வானத்தை உயர்த்தினான். (உலக மாந்தர்களே!) சிந்தித்துச் செயல்படுவீர்!

நீரைப் பொழியச் செய்தான். அதோ! பயிர்கள் நீரில் நீந்துகின்றன! வரட்சிக்குப் பின்னால் கால்நடைகள் இலைதழைகளை மேய்கின்றன! மேலும் இலைகளை மஞ்சணிக்கச் செய்தான். அவை தஸ்பீஹ் பாடுகின்றன!செளிப்பையும் வறுமையையும் கொடுத்தான். ஏழ்மை – சிலநேரம் பொறுத்தமாகவும் அமைகின்றது!

எத்தனையோ செல்வந்தர்களைத் தற்பெறுமையும் அகம்பாவமும் மிகக்கீழான நிலைக்குத்தள்ளிவிட்டன!இதோ! காரூன் ஏராளமான செல்வத்தைத்திரட்டினான்.ஆனாலும் சிறிதளவுகூட பிறருக்கு வழங்கிட அவனுக்கு மனம் வரவில்லை. அவனுக்கு எச்சரிக்கை விடுக்கப்பட்டது., அதன் பின்பும் அவன் விழிப்படையவில்லை! பழித்துரைக்கப்பட்டான்., எப்பழிப்பும் அவனுக்குப் பயன் அளிக்கவில்லை. அப்போது அவனுடைய கூட்டத்தார் அவனிடம்கூறினர்: „காரூனே! பூரிப்படைந்து விடாதே!„

அல்லாஹ்வை நான் புகழிகிறேன்., காலை புலர்ந்து கொண்டும் மாலை மலர்ந்துகொண்டும் இருக்கும்காலெமெல்லாம்! வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத் தவிர வேறில்லை என்று நான்

சாட்சிஅளிக்கிறேன்!அவன் தன்னிறைவுடையவன்.பெரும் கொடையாளன். பெரும் அளவு கொடைவழங்கி கருணை பொழிந்தவன். அவன் வழங்கியதற்கு அளவே இல்லை!

மேலும் முஹம்மது நபி அவர்கள் அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள் எப்படிப்பட்டவர்களெனில் தமது உயிரையும் உடைமைகளையும் அல்லாஹ்வுக்காக தியாகம் செய்தார்கள்! சத்தியத்தைத் தெளிவாக விளக்கித் தந்தார்கள்!

அவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! மேலும் ஊரிலும் பயணத்திலும் அவர்களுடனேயே இருந்த – அவர்களின் தோழர் அபூ பக்ர் மீதும் – இறைமார்க்கத்தின் கண்ணியத்தை மேலோங்கச் செய்வதற்காகத் தொடர்ந்து உழைத்த உமர் மீதும் – இறைவழியில் ஏராளமான செல்வத்தை ஈந்த உஸ்மான் மீதும் – நபியவர்களின் பெரியதந்தை மகனாரும், தமது விஷயத்தில் வரம்பு மீறிச் சென்றவர்களுக்கும் களங்கம் கற்பித்தவர்களுக்கும் தாம் பொறுப்பல்ல என்று கூறியவருமான அலீ மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அன்புச் சகோதரர்களே! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : وما امروا الا ليعبدوا الله مخلصين له الدين حنفاء و يقيموا الصلاة و يؤتوا الزكاة و ذلك الدين القيمة

“மேலும் தங்களது கீழ்ப்படிதலை அல்லாஹ்வுக்கே உரித்தாக்கியவர்களாயும் ஓர் மனப்பட்டவர்களாயும் அல்லாஹ்வை அவர்கள் வணங்கிவழிபட வேண்டும்., தொழுகையை நிலைநாட்டவேண்டும் ஜகாத் கொடுக்கவும் வேண்டும் என்பதைத்தவிர வேறெந்த கட்டளையும் அவர்களுக்கு இடப்படவில்லை.இதுவே சீரான–செம்மையான மார்க்கமாகும்„ குர்ஆன் (98 : 5) மேலும் கூறுகிறான் :

و اقيموا الصلاة و آتواالزكاة و اقرضوا الله قرضا حسنا و ما تقدموا لانفسكم من خير تجدوه عند الله هو خيرا و أعظم اجرا

"தொழுகையை நிலைநிறுத்துங்கள், ஜகாதும் கொடுங்கள், அல்லாஹ்வுக்கு அழகிய கடனை அளித்துவாருங்கள்.நீங்கள் உங்களுக்காக முன்கூட்டியே அனுப்பும் எந்தநன்மையானாலும் அதை அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும் மகத்தான கூலியாகவும் காண்பீர்கள்" குர்ஆன் (73 : 20) மேலும் கூறுகிறான் :

قال تعالي : وما آتيتم من ربا ليربوا في اموال الناس فلا يربوا عند الله و ما آتيتم من زكاة تريدون وجه الله فاولٓئك هم المضعفون

"மக்களுடைய பொருள்களுடன் கலந்து பெருக வேண்டும் என்பதற்காக நீங்கள் வட்டிக்கு விடும் பணம் அல்லாஹ்விடத்தில் பெருகுவதில்லை. ஆனால் அல்லாஹ்வின் உவப்பைப் பெற நாடியவர்களாய் நீங்கள் வழங்கும் ஜகாத் இருக்கிறதே – அதனை வழங்குவோர்தாம் உண்மையில் தமது செல்வத்தைப் பெருக்கிக் கொள்வோர் ஆவர்!"– குர்ஆன் (30: 39)

ஜகாத் கட்டாய மானதொரு கடமை என்பதற்கு ஆதாரமாக ஒன்றுக்கதிகமான குர்ஆன் வசனங்கள் உள்ளன.அது தொடர்பான நபிமொழிகள் வருமாறு:

☐ அப்துல்லாஹ் பின் உமர்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) கூறினார்கள்: இஸ்லாம் ஐந்து அடிப்படைகள் மீது அமைக்கப்பட்டுள்ளது.

1) அல்லாஹ்வை ஒருமைப்படுத்துவது – இன்னோர் அறிவிப்பில் வந்துள்ளது: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாரும் இல்லை என்றும் முஹம்மத்நபி, அவனுடைய அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சியம் சொல்வது

2) தொழுகையை நிலைநாட்டுவது

3) ஜகாத் வழங்குவது

4) ரமளான் மாதம் நோன்பு நோற்பது

5) ஹஜ் செய்வது – ஒரு மனிதர் கேட்டார் : ஹஜ் செய்வது (பிறகு)ரமளான் மாதம் நோன்பு நோற்பது(எனும்வரிசைப் படியா?) அதற்கு இப்னு உமர் அவர்கள்: இல்லை,ரமளான் மாதம் நோன்பு நோற்பது, ஹஜ் செய்வது– நான் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டது இப்படித்தான். நூல் : முஸ்லிம்

ஜகாத் இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில்–அதன் மகத்தான அடித்தளங்களில் ஒன்றாகும். குர்ஆனில் அதிகமான இடங்களில் தொழுகையின் 'தோழனாய்' ஜகாத் இடம் பெற்றுள்ளது. இது ஒரு கட்டாயக்கடமை என்பதில் முஸ்லிம்கள் அனைவரும் உறுதியாக–ஒருமித்த கருத்துகொண்டுள்ளார்கள்.எனவே ஒருவன் இதனை அறிந்தபிறகும் ஜகாத் கடமையல்ல என மறுத்துக் கூறினால் அவன் இஸ்லாத்தை விட்டும் வெளியேறியவன் ஆவான்! எவன் ஜகாத்தை வழங்காமல் கஞ்சத்தனம்செய்கிறானோ அல்லது அதனைக் குறைத்துக் கொடுக்கிறானோ அவன் அநியாயக்காரனும் தண்டிக்கப்படவேண்டியவர்களில் ஒருவனுமாவான்!

பின்வரும் நான்குபொருட்களில் ஜகாத் கடமையாகும். ஒன்று: பூமியில் உற்பத்தியாகும் தானியங்கள் மற்றும் விளைபொருட்கள். அல்லாஹ் கூறுகிறான் :

لقوله تعالي : يا ايها الذين آمنوا انفقوا من طيبات ما كسبتم و مما أخرجنا لكم من الارض

"இறைநம்பிக்கைகொண்டேவர்களே! நீங்கள்சம்பாதித்த பொருட்களி லிருந்தும் நாம் பூமியிலிருந்து உங்களுக்கு வெளிப்படுத்தித் தந்தவற்றிலிருந்தும் (இறைவழியில்) செலவு செய்யுங்கள் . . ." குர்ஆன் (2 : 267) மேலும் கூறுகிறான் :

وقوله تعالي : و آتوا حقه يوم حصاده

"அவற்றின் அறுவடைநாளில் அவற்றிற்குரியபங்கினைக் கொடுத்து விடுங்கள்" குர்ஆன் (6 : 144)

பொருள் ரீதியான கடமைகளில் ஜகாத் மிக முக்கியமானதும் மகத்தானதுமாகும். மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

فيما سقت السماء او كان عثريا العشر و فيما سقي بالنضح نصف العشر

"மழை நீரினால் விளைந்த அல்லது ஆறு-ஏரிக்கரையோரங்களில் (நீர் பாசனம் செய்யப்படாமல்) விளைந்த பொருள்களில் 10 சதவீதம் ஜகாத் கொடுக்க வேண்டும். நீர் இறைத்து விளைந்த பொருட் களில் 5 சதவீதம் ஜகாத் கொடுக்கவேண்டும்" நூல் : புகாரி

இந்த விளைபொருட்கள் 5 வஸக் ஐ அடைந்தாலே தவிர ஜகாத் கடமையாகாது.ஏனெனில் நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள்:

لقوله ﷺ : ليس في حب و لا ثمر صد قة حتي يبلغ خمسة اوسق - رواه مسلم

"தானியத்திலோ விளைபொருளிலோ-அவை ஐந்து வஸக்-ஐ அடைந்தாலே தவிர ஜகாத் இல்லை" நூல் : முஸ்லிம்

'வஸக்' என்பது நபி(ஸல்)அவர்களின் மரைக்கால் அளவைக் கொண்டு 60 மரைக்கால் ஆகும். அப்படியானால் ஜகாத்தின் குறைந்தபட்ச நிஸாப்(உச்சவரம்பு) 300 மரைக்கால்களாகும். இது நபியவர்களின் மரைக்கால் அளவைக் கொண்ட கணக்கு!அதன் அளவு வருமாறு: நல்ல கோதுமையைக் கொண்ட அதன் எடை 2040 கிராம்-அதாவது 2. 040 கிலோகிராம்.ஆக நல்ல கோதுமையில் ஜகாத்தின் உச்ச வரம்பு 612 கிலோ. இதற்கு குறைவாக இருந்தால் ஜகாத் இல்லை 612 கிலோவில் ஜகாத்தின் பங்கு 10 சத விகிதமாகும். இது நீர் பாசனம் செய்து விளைந்திருந்தால் 5 சத விகிதம் ஜகாத் கொடுக்கவேண்டும்.

பழங்கள், காய்கறிகள், தண்ணீர்க்காய் போன்றவற்றில் ஜகாத் கடமையல்ல. ஏனெனில் உமர் (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள் காய்கறிகளில் ஜகாத் இல்லை.-மேலும் அலீ(ரலி)அவர்கள் சொல்லியுள்ளார்கள்:"ஆப்பிள் பழம் போன்றவற்றில் ஜகாத் இல்லை" -

மேலும் இவை தானியங்களாகவோ சேமித்துவைக்கும் விளை பொருட்களாகவோ இல்லை என்பதும் காரணமாகும்.

ஆனால் இவற்றைப் பணத்திற்கு விற்று அந்தப்பணம் ஒரு வருடம் சேமிப்பாகஇருந்தால்அதற்கு ஜகாத் கொடுக்கவேண்டும்.

இரண்டு : கால்நடைகள் எனும் ஒட்டகம், மாடு, ஆடு ஆகியவை! செம்மறி ஆடானாலும் வெள்ளாடானாலும் சரியே! இவை மேய்ச்சலுக்குச் சென்று மேய்ந்துவரக்கூடியவையாகவும் பால் மற்றும் இனவிருத்திக்காக வளர்க்கப்படக் கூடியவையாகவும் நிஸாப் எனும் உச்ச வரம்பு அளவுக்கு பெருகியும் இருந்தால் இவற்றிலிருந்து ஜகாத் கொடுக்க வேண்டும். நிஸாப்எனும் குறைந்த பட்ச உச்ச வரம்பு ஒட்டகங்களில் 5 மாடுகளில் 30 ஆடுகளில் 40 ஆகும்.

மேய்ந்து வரக்கூடியவை என்றால் மனிதர்கள் யாரும் விதைக்காமல் – தாமாக வளர்ந்தி ருக்கும் இலைதழைகளை மேயக்கூடியவை என்று பொருள். இவ்வாறு இந்த கால்நடைகள் வருடம் முழுவதும் தாமாக மேய்ந்திருந்தால் அல்லது வருடத்தில் பெரும்பா லான நாட்களில்–மேய்ந்திருந்தால் அவை மேயக்கூடிய கால்நடைகளாகும்.

இவ்வாறு கால்நடைகள் வெளியே சென்று மேய்ந்து வரக்கூடியவையாக இல்லையெனில் அவற்றிற்கு ஜகாத் கொடுக்க வேண்டியதில்லை. ஆனால் வியாபாரத்திற்குரிய கால்நடைகளாக இருந்தால் ஜகாத் கொடுக்கவேண்டும். வியாபாரத்திற்குரியவையாக அதாவது வாங்கி விற்பது, கொடுத்து மாற்றுவது ஆகியவற்றின் மூலம் லாபம் சம்பாதிப்பதற்குரிவையாக இருந்தால் அந்தக் கால்நடைகள் வியாபாரப் பொருட்கள் ஆகும். வியாபாரப் பொருட்களுக்கு ஜகாத் கொடுப்பதுபோல் இந்தக்கால் நடைகளுக்கும் ஜகாத் கொடுக்க வேண்டும். அவை வெளியே சென்று மேய்ந்து வரக்கூடியவையாக இருந்தாலும்சரி, அல்லது தீனிபோட்டு வளர்க்கப்படுபவையாக இருந்தாலும் சரியே! வியாபாரப் பொருட்களுக்குரிய ஜகாத்தின் உச்ச வரம்பை அவை தாமாக அடைந்தாலும்

சரி, அல்லது அவனுடைய பிற வியாபாரப்பொருட்களுடன் சேர்த்த பின் நிஸாபை அடைந்தாலும் சரியே!

மூன்று : தங்கம்–வெள்ளி! இவை எந்நிலையில் இருந்தாலும் சரியே! அல்லாஹ் கூறுகிறான் :

لقوله تعالى : و الذين يكنزون الذهب و الفضة و لا ينفقونها في سبيل الله فبشرهم بعذاب اليم يوم يحمي عليها في نار جهنم فتكوي بها جباههم و جنوبهم و ظهورهم هذا ما كنزتم لانفسكم فذوقوا ما كنتم تكنزون

"எவர்கள் தங்கத்தையும் வெள்ளியையும் சேகரித்துவைத்துக் கொண்டு அவற்றை அல்லாஹ் வின் வழியில் செலவு செய்யாமல் இருக்கிறார்களோ அவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனை உண்டு எனும் 'நற்செய்தியினை' அறிவிப்பீராக! ஒருநாள் வரும்., அந்நாளில் இதே தங்கமும் வெள்ளியும் நரக நெருப்பில் பழுக்கக் காய்ச்சப்பட்டு பிறகு அவற்றால் அவர்களின் நெற்றிகளிலும் விலாப் புறங்களிலும் முதுகுகளிலும் சூடுபோடப்படும்–இவைதாம் நீங்கள் உங்களுக்காகச் சேகரித்து வைத்திருந்த கருவூலங்கள்! எனவே நீங்கள் சேகரித்து வைத்திருந்ந செல்வத்தைச் சுவையுங்கள்!" குர்ஆன் (9 : 33–35)

தங்கத்தையும் வெள்ளியையும் சேகரித்துவைத்தல் என்பதன் கருத்து–அவற்றை இறை வழியில் செலவுசெய்யாமல் இருப்பதாகும். இறைவழியில் செலவு செய்வதில் மிகமுக்கியமானது அவற்றிலிருந்து ஜகாத் கொடுப்பதாகும்.

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :"தங்கம்–வெள்ளியின் உரிமையாளன் எவரும் அவற்றிலிருந்து அவற்றின் கடமையை நிறைவேற்றவில்லையானால் மறுமைநாளில் அவருக்காக நரகத்தில் அந்தத் தங்கமும் வெள்ளியும் இரும்புப் பாளங்களாக ஆக்கப்பட்டு அவற்றைக் கொண்டு அவரது விலாப்புறத்திலும் நெற்றியிலும்முதுகிலும் சூடு போடப்படும்.அவை குளிர்ந்திடும் போதெல்லாம் மீண்டும் மீண்டும் சூடேற்றப்பட்டுக் கொண்டே யிருக்கும்! ஐம்பது ஆயிரம் வருடங்

கள் அளவுக்குநீளமான நாளில் இவ்வாறுஅவருக்குத் தண்டனை அளிக்கப்பட்டுக் கொண்டிருக்கும்! மனிதர்களுக்கிடையே இறுதித் தீர்ப்பு வழங்கப்படும் வரையில்!„ நூல் : ஸஹீஹ் முஸ்லிம்

ஹதீஸ்களில் காணப்படும் தங்கம் – வெள்ளியின் கடமையை நிறைவேற்றுதல் எனும் வார்த்தையின் கருத்து ஜகாத் ஆகும். கருவூலத்தின் சொந்தக்காரன் அதன் ஜகாத்தை வழங்கவில்லை யானால் – என்று தொடங்கும் மற்றோர் அறிவிப்பு[41] விளக்குவது போன்று!

– தங்கம், வெள்ளியிலிருந்து ஜகாத் கொடுப்பது கடமை„ அவை நாணயங்களாகவோ கட்டியாகவோ நகைகளாகவோ இருந் தாலும் சரியே! அவைஅணியப்பட்டிருந்தாலும் இரவல் கொடுக்கப் பட்டிருந்தாலும் சரியே!ஏனெனில் தங்கம்–வெள்ளியிலிருந்து ஜகாத் வழங்குவது கடமை என அறிவிக்கும்ஆதாரங்கள் பொதுப்படை யாக உள்ளன. இப்படி – அப்படி என்று விவரிக்கப்படவில்லை!

عن عبدا لله بن عمروبن العاص ﷺ ان امرءة اتت النبي ﷺ ومعها ابنة لها وفي يـد ابنتها مسكتان غليظتان من ذهب أي سواران غليظان فقال النبي ﷺ : اتعطين زكاة هذا ؟ قالت: لا . قال : أ يسرك ان يسورك ا لله بهما يـوم القيامـة سـوارين مـن نـار؟ قـال : فخلعتهما فالقتهما الي النبي ﷺ وقالت: همـا لله و رسـوله – رواه أحمـد و ابـو داؤد والنسائي و ا لترمذي

அம்ர் இப்னு ஆஸ் (ரலி) அவர்களின் மகனார் அப்துல்லாஹ் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் :„நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி வருகை தந்தார். உடன்அவருடைய பெண்பிள்ளை யும் இருந்தாள். மகளின் கையில் கனமாக இரண்டு தங்கக்காப்பு கள் இருந்தன. அப்போது அப்பெண்ணிடம் நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள் : இவற்றிற்கு ஜகாத் கொடுத்துவிட்டாயா? அந்தப் பெண், ,இல்லை ,என்று கூறினாள். அதற்கு நபி (ஸல்) அவர்கள்

[41] அதாவது ஸஹீஹ் முஸ்லிமில் வரும் அறிவிப்பு.

– இவ்விரு தங்கக்காப்புகளுக்குப் பகரமாக நரக நெருப்பினாலான இரு காப்புகளை மறுமை நாளில் அல்லாஹ் உனக்குஅணிவிப் பது உனக்கு சந்தோஷம் அளிக்குமா? என்று கேட்டார்கள். அப்போது அவள் அவ்விரு காப்புகளையும் கழற்றி நபி (ஸல்) அவர்களது முன்னால்வைத்துவிட்டு–இவைஇரண்டும் அல்லாஹ் வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரித்தாகட்டும் என்று கூறி னாள்!„ நூல் : முஸ்னத் அஹ்மத், அபூ தாவூத் நஸாஈ, திர்மிதி

புலூகுல் மராம் எனும் நூலில் அதன் ஆசிரியர் இப்னு ஹஜர் அஸ்கலானி (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :„இந்த நபிமொழி அறிவிப்பின் வரிசைத் தொடர் உறுதியானது„

ஆயிஷா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். எனது கரத்தில் வெள்ளி ஆபரணங்கள் இருப்பதைக் கண்டார்கள். ‚இவை என்ன?‘ என்று கேட்டார்கள். நான் சொன்னேன்:இவற்றை எதற்காக நான் தயார்செய்தேன் எனில், இவற்றை அணிந்து என்னை உங்களுக்காக அலங்கரித்துக் கொள்ளவேண்டும் என்பதற்காகாத்தான்! – அப்போது நபியவர்கள் கேட்டார்கள் :‚இதற்கான ஜகாத்தை வழங்கிவிட்டாயா?‘– ஆயிஷா (ரலி)அவர்கள் இல்லை என்றார்கள்.(அல்லதுவேறொரு வார்த்தை சொன்னார்கள். அதனை அல்லாஹ்தான்அறிவான்)அதற்கு நபியவர் கள்„உன்னை நரகத்தில் சேர்ப்பதற்கு இதுவே போதுமானதாகும்„ நூல் : அபூ தாவூது, பைஹகி, ஹாகிம்

ஹாகிம் அவர்கள் இந்தநபிமொழியை ஸஹீஹ் என்று சொன்ன துடன் இது புகாரி, முஸ்லிம் இரு இமாம்களின் நிபந்தனைப்படி உள்ளது என்றும் கூறியுள்ளார்கள்.

இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் தல்கீஸி–ல், இது ஸஹீஹின் நிபந்தனைப்படி உள்ளது„ என்று கூறியுள்ளார்கள். இப்னு தகீக் அவர்கள் – இது முஸ்லிமின் நிபந்தனைப்படி உள்ளது„ என்று சொல்லியுள்ளார்கள். -

நிஸாப் எனும் குறைந்தபட்ச உச்சவரம்பு அளவுக்குத் தங்கம் கையில் இருந்தாலே தவிர தங்கத்தில் ஜகாத் கடமைஇல்லை.

தங்கத்தின் நிஸாப் இருபது தீனார் – தங்க நாணயங்கள் ஆகும். ஏனெனில் இது குறித்து நபி(ஸல்)அவர்கள் சொல்லியுள்ளார்கள் :

ان النبي ﷺ قال في الذهب : ليس عليك شيء حتى يكون لك عشرون دينار

இருபது தங்க நாணயங்கள் இருந்தாலே தவிர உன் மீது ஜகாத் எதுவும் கடமையில்லை[42]„ நூல் : அபூ தாவூது

தீனார்(தங்க நாணயம்)என்பது ஒருமிஸ்கால் எடை கொண்ட இஸ்லாமியத் தங்க நாணயமாகும். ஒரு மிஸ்கால் எடை4-1/4 கிராம் ஆகும். ஆக தங்கத்தின் நிஸாப் 85 கிராம். இது 11-3/7 சவூதி தங்க நாணயங்களுக்குச் சமமாகும்.[43]

இதுபோன்றே வெள்ளியில் ஜகாத் கடமையாகாது„ நிஸாப் எனும் குறைந்தபட்ச அளவு வெள்ளி இருந்நதாலேதவிர! வெள் ளியின் அளவு: ஐந்து ஊக்கியாக்கள் ஆகும்.ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

قول النبي ﷺ : ليس فيما دون خمس اواق صدقة – متفق عليه

ஐந்து ஊக்கியாக்களுக்குக் குறைவான வெள்ளியில் ஜகாத் இல்லை„ நூல் : புகாரி, முஸ்லிம்–ஒரு ஊக்கியா 40 இஸ்லாமிய திர்ஹம் (வெள்ளி நாணயங்)கள் ஆகும். இதன்படி வெள்ளியின் நிஸாப் 200 திர்ஹம்– வெள்ளி நாணயங்கள் ஆகும்.

---

[42]இதன் அறிவிப்புத் தொடரில் பலவீனம் உள்ளது . ஆயினும் இதற்கு வலு சேர்க்கும் சான்றாக பல அறிவிப்புகள் வந்துள்ளன. அவற்றைக் கொண்டு இந்த அறிவிப்பு ஹஸன் எனும் தரத்தை எட்டுகிறது. எனவே இந்த நபிமொழியை ஆதாரமாகக் கொள்ளலாம் . பெரும்பாலான கல்வியாளர்கள் இதனை ஆதாரமாகக் கொண்டுள்ளனர்.

[43]பொற் கொல்லர்களில் சிலர் நம்மிடம் சொன்னார்கள்: 4-1/4X 20 = 85 கிராம் . ஒரு சவூதி தங்க நாணயம் 8 கிராம் . இதன் படி நிஸாப் அளவு 10 5/8 சவூதி தங்க நாணயங்களாகும் .

ஒரு திர்ஹம் என்பது ஒருமஸ்காலின் 10 பங்கில் 7 பங்குகளாகும். கிராம் கணக்கில் 595 கிராம். இது 56 சவூதி ரியாலுக்குச் சமமாகிறது. – தங்கம் , வெள்ளியின் ஜகாத்தின் அளவு 2. 5% ஆகும்.

ரூபாய் நோட்டுகளாக இருந்தாலும் ஜகாத்கடமையாகும். ஏனெனில் அவை வெள்ளியின் மாற்றாக இருப்பதனால் அவையும் வெள்ளியின் அந்தஸ்தைப்பெறும். ஆக ரூபாய்நோட்டுகள்,வெள்ளியின் நிஸாப்அளவை எட்டினால் அவற்றிலிருந்து ஜகாத் வழங்குவது கடமையாகும்.

–தங்கம், வெள்ளி மற்றும் ரூபாய் நோட்டுகளில் ஜகாத் கட்டாயம் கொடுக்க வேஎன்டும். அவை அவன் கைவசம் இருந்தாலும் சரி, அல்லது பிறமனிதர்களின் பொறுப்பில் இருந்தாலும் சரியே!

இதன்படி கடனாகக் கொடுத்தவற்றில் ஜகாத் கடமையாகும். அது கடனாகவோ விற்றபொருளின் விலையாகவோஅல்லது வாடகையாகவோ–எவ்வாறு இருந்தாலும் சரியே! அந்தக்கடனை வாங்கியவன் பணவசதியுடையவனாக – கேட்டவுடன் மனமுவந்து திருப்பிக் கொடுப்பனாக இருந் தால் ஒவ்வோர் ஆண்டும் தனது பணத்துடன் அந்தக்கடனுக்காகவும் ஜகாத் கொடுப்பான். அல்லது அந்தக் கடன் திரும்பக் கைக்குவரும் வரை அதற்கான ஜகாத்தைப் பிற்படுத்துவான்! சென்று விட்ட ஒவ்வொரு ஆண்டிற்கும் கணக்கிட்டு அதன் ஜகாத்தைக் கொடுப்பான்!

ஆனால் அந்தக் கடனை வாங்கியவன் வசதியற்றவனாகவோ காலம் கடத்துபவனாகவோ இருந்து, அவனிடமிருந்து அதைத் திரும்பப் பெறுவது சிரமமாகஇருந்தால் அதற்கு ஜகாத் கொடுக்க வேண்டியதில்லை. கைக்கு வந்ததும் அதிலிருந்துஅந்த வருடத்திற்கு மட்டும் ஜகாத் கொடுக்கவேண்டும். கடந்துவிட்ட வருடங்களுக்கு ஜகாத் கொடுப்பது அவன் மீது கடமை இல்லை.

தங்கம், வெள்ளி அல்லாத வேறுகனிமப் பொருட்களில் ஜகாத் கடமையாகாது. அவை இந்த இரண்டையும் விட விலை மதிப்பு மிக்கவையாக இருந்தாலும் சரியே! ஆனால் அவை வியாபாரப்

பொருளாக இருந்தால், வியாபாரத்திற்கான ஜகாத்தை அவற்றில் இருந்து கொடுக்க வேண்டும்.

நான்கு : ஜகாத் கடமையாகும் பொருட்களில் நான்காவது வகை வியாபாரப் பொருட்களாகும். சம்பாதிப்பதற்காக- வாணிபத் திற்காக வைத்திருக்கும் ஒவ்வொன்றும் வியாபாரப் பொருட்களே! அவற்றில்-நிலம், உயிர்ப்பிராணிகள், உணவு-பானம், வாகனங்கள் போன்ற எவ்வா வகையான செல்வங்களும் அடங்கும். ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் சரி நிகரான விலைமதிப்பீடு செய்து, மொத்த விலையில் 2.5% வழங்கிட வேண்டும்.அவற்றின் விலை - கொள்முதல் செய்த விலை யாகவோ அதற்குக் குறைவாகவோ கூடுதலாகவோ எவ்வாறு இருந்தாலும் சரியே!

மளிகை வியாபாரிகள், இயந்திரம் மற்றும் உதிரிப்பாகங்கள் (ஸ்பேர் பார்ட்ஸ்) கடைக்காரர்கள் யாவரும் அந்தப்பொருட்களை நுணுக்கமாகக் கணக்கிட்டு சிறிய-பெரிய கருவிகள் எல்லாவற்றை யும் உள்ளடக்கி மதிப்பீடு செய்துஅவற்றிற்குரிய ஜகாத்தை வழங் கிடவேண்டும்!

இவ்வாறு கணக்கிடுவது அவர்களுக்கச் சிரமமாக இருந் தால் பேணுதலான போக்கை க்கடைப்பிடித்துத் தங்களின் மீதுள்ள பொறுப்பு நீங்கும் வகையில் கணக்கிட்டு ஜகாத் வழங்கிடவேண் டும்!

ஒருவர் தன்னுடைய அத்தியாவசியத் தேவைகளுக்காக வைத் துள்ள - உணவு, பானம், விரிப்புகள்,வீடுகள், உயிர்ப்பிராணிகள், வாகனங்கள் மற்றும் ஆடைகள் போன்றவற்றில்-தங்க ஆபரணம், வெள்ளி ஆபரணம் நீங்கலாக உள்ளவற்றில் ஜகாத் கிடையாது. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் சொல்லியுள்ளார்கள் :

لقول النبي ﷺ : ليس علي المسلم في عبده و لا فرسه صد قة - متفق عليه

"ஒரு முஸ்லிமின் மீது- அடிமை மற்றும் குதிரையின் பேரில் ஜகாத் கடமை இல்லை" நூல் : புகாரி, முஸ்லிம்

வாடகைக்கு விடுவதற்காக உள்ள நிலங்கள், கார்கள் போன்ற வற்றில் ஜகாத் கடமையாகாது.அவற்றின் வாடகையில்தான் ஜகாத் கடமையாகிறது.ஆனால் ஒரு நிபந்தனை:அது பணமாக இருந்து ஓராண்டு நிறைவடைந்திருக்க வேண்டும். மேலும் அது மட்டும் நிஸாபை எட்டியிருக்க வேண்டும். அல்லது அவனிடமுள்ள வேறு பணத்துடன் சேர்த்து நிஸாபை எட்டியிருக்க வேண்டும்.

அன்புச் சகோதரர்களே! உங்கள் செல்வங்களுக்கான ஜகாத்தை மனமுவந்து வழங்குங்கள். அது அரிதாகக் கருதி ஆர்வத்துடன் செய்யவேண்டிய வழிபாடே தவிர பளுவல்ல!லாபமே தவிர நஷ்டம் அல்ல! எந்த எந்தச் செல்வங்களுக்கு நீங்கள் ஜகாத் கொடுப்பது அவசியமோ அவற்றையெல்லாம் எண்ணிக்கணக்கிட்டு ஜகாத் வழங்கிடுங்கள்!

நீங்கள் வழங்கிய தர்மங்களை அல்லாஹ் ஏற்றுக் கொள்வதற் கும் உங்களிடம் இருக்கும் செல்வங்களில் பாக்கியம் அளிப்பதற் கும் அல்லாஹ்விடம் இறைஞ்சுங்கள்!

# المجلس السابع عشر في اهل الزكاة

17 வது மஜ்லிஸ்

# ஜகாத் பெறத் தகுதியானவர்கள்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் தாழ்த்தியதை உயர்த்துபவர் யாருமில்லை., அவன் உயர்த்தியதைத் தாழ்த்துபவர் யாருமில்லை! அவன் தடுத்ததைக் கொடுப்பவர் யாருமில்லை., கொடுத்ததைத் தடுப்பவர் யாருமில்லை! அவன் சேர்த்துவைத்த உறவை துண்டிப்பவர் யாருமில்லை., அவன் துண்டித்த உறவைச் சேர்த்துவைப்பவர் யாருமில்லை!

அல்லாஹ்வைத் தூயவன் என்று நான் துதிக்கின்றேன். திட்டமிட்டுச் செயல்படுத்தும் மகத்தான ஆற்றல் கொண்ட, தத்துவ ஞானமுடைய, கிருபையுடைய இறைவன் அவன்! அவனுடைய தத்துவத்தின் அடிப்படையிலேயே தீங்கு நிகழ்ந்தது. அவனுடைய கிருபையைக்கொண்டே பயன் விளைந்தது.அவனுடைய அனைத்துச் செயல்களுக்காகவும் அவனை நான் புகழ்கிறேன்! அவனுடைய விரிவான அருட்கொடைகளின்பேரில் அவனுக்கு நன்றி செலுத்துகிறேன்!

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை என்று சாட்சி சொல்கிறேன்.அவன் தனித்தவன்.அவனுக்கு இணை துணைஇல்லை.தான் வகுத்த ஷரீஅத்–சட்டநெறிகளை விவேகப்படுத்தி உறுதிப்படுத்தினான். தான் படைத்த படைப்புகளை நூதனமாக்கினான்!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சியம் அளிக்கிறேன்! கு∴ப்ர் எனும் இறைநிராகரிப்புப் போக்கு வளர்ந்து மேலோங்கி இருந்தபோது அல்லாஹ் அவர்களைத் தூதராக அனுப்பினான். அதன் மீது நபியவர்கள் விரைந்து தாக்குதல் தொடுத்து உயரத்தில் இருந்து அதனைக் கீழிறக்கி உச்சியில் அறைந்தார்கள்!சூழ்ந்துவந்த அதன்தீமையைச் சிதறடித்தார்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலாத் எனும் கருணை பொழி வானாக! இஸ்லாத்தைவிட்டும் வெளியேறுதல் நிகழ்ந்த நாளில் வீர்கொண்டெழுந்து செயல்பட்ட நபித்தோழர் அபூ பக்ர் மீதும் - எவரைக் கொண்டு இஸ்லாம் கண்ணியமும் பாதுகாப்பும் பெற் றதோ அப்படிப்பட்ட உமர் மீதும் -அநியாயமாகக் கொல்லப்பட்ட போதும் சத்தியத்திற்கு முரண்பாடான எந்தச் செயலும் செய்யாத உஸ்மான் மீதும்-குஃப்ர் எனும் நிராகரிப்பு போக்கின் மீது ஜிஹா தின்மூலம் தாக்குதல் தொடுத்து வீழ்த்திய அலீ மீதும்- நபியவர் களின்குடும்பத்தினர் மீதும் தோழர்கள் மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக.,தொழுது வழிபடுவோர் ஸுஜூதும்ருகூவும் செய்து கொண்டிருக்கும் காலெமெல்லாம்!- அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

அன்புச் சகோதரர்களே! அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான் :

انما الصدقات للفقراء والمساكين و العاملين عليها و المؤلفة قلوبهم وفي الرقاب والغارمين و في سبيل الله وابن السبيل فريضة من الله و الله عليم حكيم

,, இந்த(ஜகாத்எனும்) தர்மங்கள்—ஏழைகள்,எளியவர்கள், இவற்றை வசூலிக்கவும் பங்கிடவும் நியமிக்கப்பட்ட பணியாளர்கள், இதயங் கள் இணக்கமாக்கப்பட வேண்டியவர்கள் ஆகியோருக்கும் அடி மைகளை விடுவிப்பதற்கும் கடனாளிகளுக்கும் இறைவழியில் போர் செய்கிறவர்களுக்கும் பயணிகளுக்கும் உரியனவாகும். இது அல்லாஹ்வினால் விதிக்கப்பட்ட கடமை.மேலும் அல்லாஹ் யாவற் றையும் அறிந்தவன். நுண்ணறிவாளன்,, குர்ஆன் (9 : 60)

இந்த வசனத்தில், ஜகாத் யார் யாருக்குக் கொடுக்கவேண்டும்., அதைப் பெறத் தகுதியா னவர்கள் யார் யார் எனபதை அல்லாஹ் விவரித்துள்ளான். இது அவனது ஞானம்,விவேனம், நீதி மற்றும் அவனது கருணை ஆகியவற்றின் தேட்டத்திற்கு ஏற்ப அமைந்த தாகும்.

இவர்கள் எட்டுப் பிரினர்.,இவர்களுக்குமட்டுமே ஜகாத் வழங்கப் பட வேண்டும் என்று அல்லாஹ் கூறியுள்ளான். அதனை இவர்க ளுக்கு வழங்குவது இன்றியமையாக் கடமையென விளக்கியுள் ளான். இந்தப் பங்கீடு அல்லாஹ்வின் ஞானம் மற்றும் விவேகம் ஆகியவற்றிலிருந்து பிறந்ததாகும்.எனவே இந்தஎட்டுப் பிரிவினரை விடுத்து மற்றவர்களுக்கு ஜகாத் கொடுப்பது கூடாது! ஏனெனில் தன் படைப்பினமாகிய மனிதர்களின் நலன்களை அல்லாஹ்வே மிக

அறிந்தவன். எந்தெந்தப் பொருளை எங்கெங்கு வைக்கவேண்டும் எனும் நியதியில் அவன் மிகவும் உறுதியானவன்!

و من احسن من الله حكما لقوم يوقنون

அல்லாஹ்வைவிட நல்ல தீர்ப்புவழங்கக்கூடியவன் யார்?(அவன் மீது) உறுதியான நம்பிக்கை கொண்ட மக்களுக்கு!„ (5 : 50)

☐ முதல் இரண்டு பிரிவினர் : ஃபுகரா (ஏழைகள்) மஸாகீன் (எளியவர்கள்)– இவர்கள் தங்களுடையவும் தங்கள் குடம்பத்தின ருடையவும் அத்தியாவசியத்தேவைகளை நிறைவுசெய்யப் போதிய வசதியில்லாதவர்கள் ஆவர். ரொக்கப் பணமோ, நிரந்தர ஊதியமோ, நிலையான தொழிலோ, போதிய வருமானமோ இல்லாதவர்கள்!செல வுக்குப் பணம் கொடுத்து உதவக்கடமைப் பட்டவர்கள் யாருமே இல்லாதவர்கள். இத்தகைய மக்கள், பறரின் உதவியை – ஒத்தா சையை எதிர்பார்த்தவர்களாய் உள்ளனர்!

மார்க்க அறிஞர்கள் கூறுவர் : இவர்களுக்கு ஜகாத் வழங்கிட வேண்டும். இவர்களுக்கும் இவர்களின் குடும்பத்தாருக்கும் ஓரா ண்டுக்குப் போதுமான பணஉதவி செய்யவேண்டும்.மறு தடவை ஜகாத்தின் தவணை வரும்வரை போதுமான உதவி அளித்திட வேண்டும். திருமணம் செய்யும் நாட்டமும் தேவையும் உள்ள ஓர் ஏழைக்கு – திருமணத்திற்குப் போதுமான பணம் அளித் திட வேண்டும். ஏழை மாணவருக்கு – தேவையான நூல்கள் வாங்கிக்கொள்ள ஜகாத் வழங்கிடவேண்டும். ஒருவர் தனக்கும் தன் குடும்பத்திற்கும் போதுமாகாத அளவைவிட குறைவாக ஊதியம் பெறுகிறார் எனில் அவருடையவும் அவரது குடும்பத் தாருடையவும் பற்றாக் குறையை நிறைவேற்றக்கூடிய அளவில் ஜகாத் வழங்கிட வேண்டும். ஏனெனில் இவரும் தேவையுடைய வரே ஆவார்!

ஆனால் போதுமான வசதி வாய்ப்பு உள்ளவருக்கு ஜகாத் கொடுக்கக்கூடாது. தனக்கும் வேண்டுமென அவர் கேட்டாலும் சரியே! மாறாக அவருக்கு அறிவுரை கூறுவது நமது கடமை. அவருக் குக் கூடாத ஒன்றை அவர் கேட்பது குறித்து அவரை எச்சரிக்கை செய்வதும் நமது கடமை!

عن عبد الله بن عمر ﷺ ان النبي ﷺ قال : لا تزال المسئلة باحدكم حتي يلقي الله عز وجل و ليس في وجهه مزعة لحم -

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் :„உங்களில் ஒருவர் தொடர்ந்து யாசகம் கேட்டுக் கொண்டே இருப்பார் எனில் இறுதியில் அவரது முகத்தில் சதையின்றி அலங்கோலமான நிலையில் அல்லாஹ்வை அவர் சந்திப்பார்„ நூல் : புகாரி, முஸ்லிம்

மேலும் அபூ ஹுரைரா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„அதிகப் படுத்திக் கொள்வதற்காக யார் மக்களின் பணத்தை யாசிக்கிறாரோ அவர் தீக் கனலைத்தான் யாசிக்கிறார். எனவே குறைத்துக் கொள் வதோ அதிகமாக்கிக்கொள்வதோ அவர்விருப்பம்„ நூல்: முஸ்லிம்

ஹகீம் பின் ஹிஸாம்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„நபி(ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள் : திண்ணமாக இந்த உலகச் செல்வம் பசுமையானது„ இனிமையானது!எவர் அதனைத் தாராள மனத்துடன் பெற்றாரோ அவருக்கு அதில் பரகத் – அபிவிருத்தி அளிக்கப்படுகிறது! யார் அதனைப் பேராவலுடன் பெற்றாரோ அவருக்கு அதில் பரகத் அளிக்கப்படுவதில்லை! அவர் உணவு உட்கொண்டும் பசி தீராத மனிதனைப்போல்ஆகிவிடுகிறார். (வழங் கிட) உயர்ந்த கை தான் (வாங்கிடத்) தாழ்ந்த கையை விடச் சிறந்தது„ நூல் : புகாரி, முஸ்லிம்

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார் கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن عبد الرحمن بن عوف ﷺ ان النبي ﷺ قال : لايفتح عبد باب مسئلة الا فتح الله عليه باب فقر – متفق عليه

„ஓர் அடியான் யாசித்தல் எனும் வாசலைத் திறப்பானாகில் அல்லாஹ் அவன் மீது ஏழ்மை எனும் வாசலைத்திறந்து விடுகி றான்„ நூல் : முஸ்னத் அஹ்மத்[44]

[44] இதேபோல இமாம் திர்மிதி அவர்கள், அபூ கபஷா அல்அன்மாரி என்பாரின் அறிவிப்பை பதிவு செய்துள்ளார்கள். ஹஸன் ஸஹீஹ் தரத்திலானது என்றும் சொல்லியுள் ளார்கள்.

ஒரு மனிதர் ஜகாத் வேண்டுமெனக்கேட்கிறார்.,அவரிடம்-வசதி யானவர் என்பதற்கான அறிகுறி உள்ளது,ஆனாலும் அவருடைய நிலைமை சரியாகத்தெரியவில்லை எனில் அவருக்குஜகாத் கொடுப் பது கூடும். அத்துடன் – இந்த ஜகாத்தில் செல்வந்தர்களுக்கோ சம்பாதிக்க சக்தியுள்ளவனுக்கோ எந்தப்பங்கும் இல்லை என்பதை அவருக்கு அறிவித்துவிட வேண்டும்.ஏனெனில் நபி(ஸல்) அவர் களிடம் இரண்டு மனிதர்கள் வந்தார்கள். ஜகாத் வேண்டுமெனக் கேட்டார்கள். நபியவர்கள் அவ்விருவரையும் ஏறஇறங்கப் பார்த்தார் கள். அவ்விருவரும் திடகாத்திரமாக இருக்கக் கண்டார்கள். பிறகு சொன்னார்கள் : நீங்கள் விரும்பினால் உங்களுக்கு ஜகாத் தருகிறேன். ஆனால் இதில் செல்வந்தனுக்னோ சம்பாதிக்க சக்தி யுள்ளவனுக்கோ எந்தப் பங்கும் இல்லை,, நூல் : அஹ்மத், அபூ தாவூத், நஸாஈ[45]

☐ மூன்றாவது பிரிவனர் ஜகாத்துறை ஊழியர்கள்! இவர்கள் ஜகாத் கடமையானவர்களிடம் இருந்து ஜகாத்தை வசூலித்துப் பாதுகாத்து விநியோகிப்பதற்காக ஆட்சியாளர்களால் நியமிக்கப் பட்டவர்கள். இந்த ஊழியர்களுக்காக அவர்களின் பணிக்கேற்ப ஜகாத்திலிருந்து வழங்கிட வேண்டும். இவர்கள் வசதியுடையவர் களாக இருந்தாலும் சரியே!

ஆனால் ஜகாத்தை விநியோகிப்பதற்காக ஒரு தனி நபரால் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டவர்கள் ஜகாத்துறை ஊழியர்கள் அல்லர். எனவே இவர்களிடம் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது என்பதால் ஜகாத் பணம் பெற இவர்கள் தகுதிபெற மாட்டார்கள். ஆனால்ஜகாத்தை முறையாக விநியோகிக்கும் பணியில் நம்பிக்கை யுடனும் நன்முயற்சியுடனும் ஊதியமின்றியும் இவர்கள் ஈடுபட்டால் அதற்கான மறுமைக் கூலியில் இவர்களுக்கும் பங்குண்டு. அபூ மூஸா-அல் அஷ்அரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

عَنْ اَبِي مُوسَي الاشعري ﷺ ان النبي ﷺ قال : الخازن المسلم الامين الـذي ينفـد (او قال) يعطي ما أمر به كا ملا موفرا طيباً بِـهِ نَفْسُهُ فَيَدْفَعُهُ اِلَي اَلّذِي اَمَرَ بِـهِ اَحَـدُ اَلْمُتَصَدِّقِيْن – رواه البخاري

---

[45] இமாம் அஹ்மத் அவர்கள் சொல்லியுள்ளார்கள் :,, இது எத்துணை ஏற்றமிகு நபிமொழி!,,

நபி(ஸல்)அவர்கள் அருளினார்கள்:„முஸ்லிமான– நம்பிக்கைக் குரிய கருவூலக்காவலர் யாரெனில் அவர் தனக்குஇடப்பட்ட கட்ட ளையைச் செயல்படுத்துவார். (மற்றோர் அறிவிப்பில்) எவ்வளவு வழங்க வேண்டும் எனக்கட்டளையிடப்பட்டதோ அதனை நிறை வாக – முழுமையாக மன திருப்தியோடு வழங்கிவிடுவார். தர்மம் கொடுத்தவர் யாருக்குக் கொடுக்கவேண்டும் எனக் கட்டளையிட் டாரோ அவருக்கு அதனைக் கொடுத்துவிடுவார்!„ நூல் : புகாரி

ஊதியமின்றி விநியோகிக்க அவர்கள் விரும்பவில்லையெனில் ஜகாத் கொடுப்பவர் தனது பணத்திலிருந்து அவர்களுக்குஊதியம் கொடுக்க வேண்டும்„ ஜகாத் பணத்தில் இருந்தல்ல!

□ நான்காவது பிரிவினர்„இதயம் இணைக்கமாக்கப்பட வேண் டியவர்கள்! இவர்கள் ஈமானில் – இறைவிசுவாசதில் பலவீனமான வர்கள் அல்லது தீனம விளைவிப்பவர் என அஞ்சப்படுகிறவர்கள். எனவே இவர்களின் ஈமானை – விசுவாசத்தைப் பலப்படுத்தும் அளவுக்கு ஜகாத்தில் இருந்து இவர்களுக்குக்கொடுத்திட வேண் டும். இவர்களுக்குக் கொடுப்பதன் மூலமேதவிர இவர்களின் தீமை விலகாது என்றிருக்கும் பட்சத்தில்!

□ ஐந்தாவது பிரவினர்„ அடிமைகள்! இவர்களுக்கு விடுதலை சாஸனம் எழுதிக்கொடுக்கப்பட்டிருக்கும். இவர்கள் தங்கள் எஜமா னர்இடம் பணம் கொடுத்துத்தங்களை விடுவிப்பவர்களாவர். இவர் களின் எஜமானர்களுக்குச்செலுத்துகிற பணத்தை ஜகாத்திலிருந்து இவர்களுக்குக் கொடுத்துவிடவேண்டும். அந்தப்பணத்தை எஜமா னர்களுக்குக் கொடுத்து தங்களை அடிமைத் தளையிலிருந்து விடுவித்துக் கொள்வார்கள்!

இதேபோன்று ஓர் அடிமையை விலைக்கு வாங்கி அவருக்கு விடுதலை அளிப்பதும் கூடும். ஜகாத் பணத்தை வழங்கி ஒரு முஸ்லிமைச் சிறையிலிருந்து விடுவிப்பதும் கூடும். ஏனெனில் இவை யாவும் ‘ ஃபிர் ரிகாப் ’ எனும் அடிமைகளை விடுவித்தல் எனும் பொதுச் சட்டத்தில் அடங்கும்.

□ ஆறாவது பிரிவினர் கடனாளிகள்!இவர்கள் கடன் சுமையால் துன்பப்படுகிறவர்களாவர்! இவர்கள் இருவகையில் உள்ளனர். (1) மக்களிடையே சமாதானம் செய்வதற்கும் சண்டை– சச்சரவுகளை யும் குழப்பத்தையும் அடக்குவதற்கும் பொறுக்பேற்றிருப்பவர்கள். அவர்களின் பொறுப்புகளுக்கு ஏற்ப ஜகாத்திலிருந்து வழங்கலாம். இதன் நோக்கம் இந்தச்சிறப்பான பணியில் அவர்களை ஊக்குவிப்

பதாகும். இவர்களது பணியில் மூலம் மக்களின் இதயங்கள் இணக்க மாக்கப்படுகின்றன. உறவுகள் சீர்செய்யப்படுகின்றன. குரோதங்களும் வெறுப்புணர்வுகளும் நீக்கப்படுகின்றன. குழப்பங் கள் அடக்கப்பட்டு சமாதானத்திற்கு வழிபிறக்கிறது!

கபீஸா—அல் ஹிலாலி(ரலி)எனும் நபித்தோழர் அறிவிக்கிறார்கள்: நான் பணரீதியான பொறுப்புகளை ஏற்றிருந்தேன். அதற்காக பண உதவிகேட்டு நபி(ஸல்)அவர்களிடம் வந்தேன். நபியவர்கள் சொன் னார்கள்: நீர் செல்லும்! தர்மப்பணம் வரட்டும். பார்க்கலாம். அதை உமக்கு வழங்கிட ஆணையிடலாம்,,

பிறகு சொன்னார்கள் : கபீஸாவே! இந்த மூவரில் எவரேனும் ஒருவருக்கே தவிர வேறெவருக்கும் அது ஆகுமானதல்ல. ஒருவர் பணரீதியான பொறுப்புகளை ஏற்றிருப்பவர்.,இவர் அந்தப் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்காக யாசகம் கேட்பது கூடும். அது கிடைத்துவிட்டால் அதனை நிறுத்திக்கொள்ளவேண்டும். (இந்த நபிமொழி நீளமாகச் செல்கிறது),, நூல்: முஸ்லிம்

(2) தனது சொந்தப பிரச்னைக்காகக் கடன் சுமைக்கு ஆளாகி யிருப்பவர். அதை நிறைவேற்ற அவரிடம் எதுவும் இருக்க வில்லை. ஜகாத்திலிருந்து அவருக்குக் கொடுக்கவேண்டும். அது அதிகமாக இருந்தாலும் சரியே! இவரிடம் கொடுக்காமல் யாரிடம் இவர்கடன் பட்டிருக்கிறாரோ அவரிடம் கொடுத்திலும் சரியே!ஏனெ னில் இவரைக் கடன்சுமையிலிருந்து விடுவிக்க வேண்டும் என்பதுதான் நோக்கம்.

□ ஏழாவது பிரிவினர், அல்லாஹ்வின் பாதையில் போர் புரியும் வீரர்கள். 'ஃபீ ஸபீலில்லாஹ்' – அல்லாஹ்வின் பாதையில் என்பது வெறித்தனமாகவோ இன மாச்சரியத்திற்காகவோ அல்லாமல் இறை மார்க்கத்தை மேலோங்கச் செய்வதற்காகப் போர் செய்வதைக் குறிக்கும்.

இந்நோக்த்துடன் போர்புரியும் வீரனுக்கு—போதியஅளவு பணம் ஜகாத்திலிருந்து வழங்கிட வேண்டும். அல்லது இஸ்லாத்தைப் பாதுகாப்பதற்காக – இறைவாக்கை மேலோங்கச் செய்வதற்காக இறைவழியில் போர்புரியும் வீரர்களுக்கு ஆயுதங்களும் தளவாடங் களும் வாங்கிக் கொடுக்க வேண்டும்.

☐ எட்டாவது பிரிவினர், கையிலிருந்த பணமெல்லாம் தீர்ந்து போய் இடையிலேயே பயணம் தடைபட்டுவிட்ட பயணிகள்ஆவர். இவர்கள் சொந்த ஊருக்குப்போய் சேரும் அளவுக்குஜகாத் பணம் வழங்கப்படவேண்டும். இவர்கள் தம் சொந்த ஊரில் செல்வந்தர்க ளாக இருந்தாலும் சரியே!

ஆனால் பணம் தீர்ந்து விட்டால் ஜகாத் வாங்கிக் கொள்ளலாம் எனக்கருதிப் பணத்தைக்குறைவாக எடுத்துக்கொண்டுப் பயணம் புறப்படுவது கூடாது! ஏனெனில் தனக்கு உரிமையில்லாததைப் பறித்துக் கொள்ளும் நோக்குடன் செய்யப்படும் தந்திரமாகும் இது!

இறைநிராகரிப்பாளனுக்கு ஜகாத் கொடுக்கப்படமாட்டாது., இத யம் இணைக்கப்பட வேண்டியவர்க ளுள் ஒருவனாக இருந்தாலே தவிர!

இதேபோல் ஜகாத் பெறவேண்டிய தேவையில்லாத வகையில் வியாபாரமோ தொழிலோ உற்பத்தியோ ஊதியமோ விவசாய வருமா னமோ பொறுப்பேற்கப்பட்ட ஜீவனாம்சமோ—ஏதேனும்ஒன்று போதிய அளவுக்கு ஒருவருக்கு உள்ளதெனில் அவருக்கும் ஜகாத் கொடுக்கப்படமாட்டாது. ஆனால் அவர் ஜகாத் துறை ஊழியரா கவோ இறைவழியில் போர்புரிபவராகவோ அல்லது மக்களின் பிணக்கைத் தீர்த்துவைப்பதற்காக் கடன்பட்டவராகவோ இருந் தால் அவருக்கு ஜகாத் கொடுக்கப்படும்.

ஜகாத் அல்லாத வேறொரு கடமையிலிருந்து விடுபடுவதற்காக ஜகாத் வழங்குவது கூடாது – விருந்தாளிக்கு – விருந்துக்குப் பகரமாக ஜகாத் வழங்கக் கூடாது. மனைவி அல்லது உறவினர் போன்று யார் யாருக்குச் செலவுக்குப் பணம் கொடுப்பது தன் மீது கடமையோ அவர்களுக்கு—அந்தச் செலவினங்களுக்குப் பகர மாக ஜகாத் வழங்கப்படமாட்டாது.ஆனால் மனைவிக்கும் நெருங் கிய உறவினருக்கும் கடமையான செலவினங்கள் நீங்கலாக வேறு காரியங் களுக்கு ஜகாத் வழங்குவது கூடும்.

இதன்படி மனைவியின் மீது கடன் சுமை இருந்து அவளால் அதனை நிறைவேற்ற இயலவில்லையென்றால் தனது ஜகாத்தின் மூலம் அந்தக் கடனைத் தீர்க்கலாம். இதைப் போன்று பெற்றோர் மற்றும் உறவினர் மீது கடன் சுமை இருந்து அவர்களால்

அதனை நிறைற்ேற இயல வில்லையானால் அப்பொழுது தனது ஜகாத்தின் மூலம் அந்தக்கடன்களைத் தீர்ப்பது கூடும். ஒருவர் தன் உறவினர்களுக்கு−அவர்களின் செலவினங்களை அடைத்திட ஜகாத் வழங்குவது கூடும்„அந்தச் செலவினம் அவர்மீது கடமை யில்லை எனும் பட்சத்தில்! ஏனெனில் அவரதுபணம் அவர்களின் மீதுள்ள செலவினங்களுக்கோ பிற காரியங்களுக்கோ பொறுப்பேற்றி ருக்கவில்லை!

மனைவி தனது ஜகாத் பணத்தைத் தன் கணவருக்குக் கொடுப்பது கூடும்„அவரது கடனையோ அதுபோன்றபிற தேவை களையோ நிறைவேற்றுவதற்காக! ஏனெனில் அல்லாஹ், ஜகாத் பெறுவதற்கான தகுதியைச் சில பொதுவான தன்மைகளுடன் தொடர்பு படுத்தியுள்ளான். மேலே நாம் குறிப்பிட்டவர்கள் அனை வரையும் அவை உட்படுத்தும்! இந்தத் தன்மைகளுடையவர்கள் ஜகாத் பெறத்தகுதியானவர்களே! எனவே இந்தத் தன்மைகளை உடைய எவரையும் − ஜகாத் பெறும் தகுதி இல்லை எனக்கூறி வெளியேற்ற முடியாது„ நேரடியான ஆதாரமோ இஜ்மாவு எனும் கருத்தொற்று மையோ இருந்தாலே தவிர!

நபித்தோழராகிய இப்னு மஸ்வூது (ரலி) அவர்களின் மனைவி ஜைனப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:„தர்மம் செய்யவேண்டு மென்று பெண்களுக்குக் கட்டளையிட்டார்கள், நபி (ஸல்) அவர் கள்! அப்பொழுது நான்நபியவர்களிடம் கேட்டேன்: அல்லாஹ்வின் தூதரே! தர்மம் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டீர்கள். என் னிடம் கொஞ்சம் நகைகள் உள்ளன„ அவற்றைத்தர்மம் செய்யலா மெனக் கருதுகிறேன். ஆனால் என் கணவர் இப்னு மஸ்வூத் சொல்கிறார் : நான் தர்மம் செய்வதற்கு அவரும் அவருடைய பிள்ளைகளும்தான் தகுதியானவர்கள் என்று!

அதற்கு நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் : இப்னு மஸ்வூது சொல்வதே உண்மை. உன் கணவரும் உன் பிள்ளைகளும் நீ தர்மம் செய்வதற்கு மிகவும் தகுதியானவர்கள் ஆவர்!„

ஸல்மான் பின் ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்)அவர்கள் அருளினார்கள்: ஏழைக்குச் செய்யும் தர்மம் ஒரு தர்மமே! ஆனால் உறவினர்களுக்குச் செய்யும் தர்மம் தர்மமாகவும்

உறவின் இணைப்பாகவும் உள்ளது,,–உறவினர் என்போர் சொந்தக் காரர்களாவர். நேருங்கிய உறவினர்களானாலும் சரி. தூரத்து உறவினர்களானாலும் சரியே!

ஓர் ஏழையின் மீதுள்ள கடனைக் கொடுத்துவிட்டு – ஜகாத் கொடுத்ததாக நிய்யத்– எண்ணிக் கொள்வது கூடாது. ஏனெனில் ஜகாத் என்பது வசூல் செய்வதும் வழங்குவதுமாகும். அல்லாஹ் கூறுகிறான் : "அவர்களின்பொருள்களில் இருந்து தர்மத்தை வசூல் செய்வீராக!,, குர்ஆன் (9: 103)

நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :

قال النبي ﷺ : ان ا لله افترض عليهم صدقة توخذ من اغنيائهم فترد علي فقرائهم

"திண்ணமாக அல்லாஹ் அவர்கள்மீது ஜகாத்தை கடமையாக்கினான். அவர்களில் செல்வந்தர்க ளாய் உள்ளவர்களிடம் இருந்து அதனை வசூல் செய்து அவர்களின் ஏழைகளுக்கு வழங்கப்பட வேண்டும்,,

ஓர் ஏழையின் மீதுள்ள கடனை விட்டுக்கொடுப்பதில்– வாங்குதல் என்பதுமில்லை,, வழங்குதல் என்பதுமில்லை! மட்டுமல்ல ஏழையின் மீது கடனாக உள்ள பணம் தற்போது அவன் கைவசமில்லாத ஒன்றாகும். அதனை அவன் பயன்படுத்தாத நிலையில் இருக்கிறான்.எனவே தற்போதுஅவன் பயன்படுத்தவேண்டிய பணத்துக்கு அது ஈடாகாது!மேலும் கடன் என்பது தற்போது கைவசமுள்ள பணத்தைவிட மதிப்புக் குறைந்ததும் தரம் தாழ்ந்ததுமாகும். எனவே கைவசமுள்ள பொருளுக்குப்பகரமாக கைவசதில்லாததை ஈடாக்குவதென்பது– நல்ல பொருளுக்குப்பகரமாகக் கெட்ட பொருளைக் கொடுப்பது போன்றதாகும்.

– ஜகாத் கடமையான ஒருவர் நன்கு சிந்தித்துச் செயல்பட்டார்,, ஜகாத் பெறுவதற்குத் தகுதியானவர் எனக்கருதி ஒருவருக்கு ஜகாத் வழங்கினார்,, ஆனால் அவர் தகுதியற்றவர் என்பது பிறகுதான் தெரியவந்தது என்றால் அவர் ஜகாத் வழங்கியதாகவே கருதப்படும்.ஏனெனில் தன்னால் இயன்றஅளவு அல்லாஹ்வுக்கு அஞ்சியே அவர் செய்லபட்டுள்ளார்!அல்லாஹ்எந்த மனிதரை

யும் அவருடைய சக்திக்கு அதிகமாக பொறுப்புகளைச் சுமத்தி சிரமப்படுத்துவதில்லை!

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : قـال رجـل و الله لاتصدقـن ( فذكـر الحديـث وفيه ) فوضع صدقته في يد غني فاصبح الناس يتحدثون تصدق علي غني فقال : الحمد لله علي غني فا تي فقيل اما الغني لعله يعتبر فينفق مما أعطاه ا لله متفق عليه

நபி (ஸல்)அவர்கள் அருளினார்கள்: „ஒரு மனிதர் - அல்லாஹ் வின் மீது சத்தியமாக!நான் தர்மம் செய்யப்போகிறேன் என்று கூறி னார். (இது ஒரு நீளமான அறிவிப்பு. அ தில் வருகிறது) அவன் தனது தர்மத்தை ஒரு செல்லந்தனின் கையில் வைத்துவிட்டு வந்தான். காலையில் மக்கள் பேசிக் கொண்டனர்: ஒரு செல்வந் தனுக்கே தர்மம் வழங்கப்பட்டது என்று! தர்மம் கொடுத்த அந்த மனிதன் சொன்னான் : செல்வந்தனுக்கு தர்மம் வழங்கியதானாலும் எல்லாப் புகழு ம் அல்லாஹ்வுக்கே என்று! பிறகு அவனிடம் (கன வில்) சொல்லப்பட்டது: தர்மத்தைப்பெற்ற செல்வந்தன் படிப்பினை பெறலாம்.அல்லாஹ் அவனுக் கு வழங்கிய செல்வத்திலிருந்து அவ னும்(இறைவழியில்) செலவு செய்யலாம்„ நூல் : புகாரி, முஸ்லிம் - ஸஹீஹ் முஸ்லிமில் பதிவாகியுள்ள ஒரு அறிவிப்பில் வந்துள் ளது: உனது தர்மம் இறைவனால் ஒப்புக்கொள்ளப்பட்டது என்று (கனவில் அவரிடம் சொல்லப்பட்டது)

மஅன் பின் யஜீத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

عن معن بن يزيد ﷺ قال : كان ابي يخرج دنا نير يتصدق بها فوضعها عند رجـل في المسجد فجئت فاخذتها فاتيت بها فقـال و الله مـا ايـاك اردت فخاصمتـه الي النبي ﷺ فقال : لك ما نويت يا يزيد ولك ما أخذت يا معن رواه البخاري

„என் தந்தை சில தங்க நாணயங்களை - தர்மம் கொடுப்பதற் காக எடுத்துச் சென்றார். அவற்றைப் பளிளி வாசலில் இருந்த ஒருமனிதரிடம் கொடுத்து விட்டுவந்தார்.நான் சென்று அவற்றை வாங்கிக் கொண்டேன். பிறகு அந்தத் தங்க நாணயங்களை என் தந்தையிடம் கொண்டு வந்தேன். அவர் சொன்னார்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உனக்குக் கொடுக்க வேண்டும் நான் நினைக்க

வில்லை,,நான் இந்தப்பிரச்னையைநபி(ஸல்)அவர்களிடம் கொண்டு சென்றேன். அப்பொழுது நபியவர்கள் சொன்னார்கள்: யஜீதே! (தர்மம் கொடுக்க வேண்டுமென) நீர் எண்ணியது உமக்கு கிட்டும். மஅனே! நீ எடுத்துக் கொண்டது உனக்கே!,, நூல்: புகாரி

சகோதரர்களே! ஜகாத்தை யார்யாருக்கு வழங்கிடவேண்டுமென அல்லாஹ் குறிப்பிட்டு சொல்லியுள்ளானோ அவர்களுக்கு வழங்கவில்லையென்றால் ஜகாத் வழங்கியதாக ஆகாது! அது ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது!

எனவே நன்கு சிந்தித்துச் செய்படுங்கள்! அல்லாஹ் உங்கள் மீது அருள்பாலிப்பானாக! ஜகாத்,அதற்குரிய இடங்களுக்கு முறையாகச் சென்றடைய வேண்டும் என்பதில் ஆர்வம் கொள்ளுங்கள். அப்பொழுதுதான் உங்கள் மீதுள்ள பொறுப்புகள் நீங்கும். மேலும் உங்கள் செல்வங்களை நீங்கள் தூய்மையாக்கியவர்களாகவும் உங்கள் இரட்சகனின் கட்டளையைச் செயல்டுத்தியவர்களாகவும் நீங்கள் ஆகுவீர்கள்!மேலும் உங்களுடைய தர்மங்களும் அல்லாஹ்விடம் ஏற்றுக் கொள்ளப்டும்!நல்லுதவி செய்திட அல்லாஹ் போதுமானவன். அகிலங் கள் அனைத்தையும் படைத்துப் பரிபாலிக்கும் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!

# المجلس الثامن عشر في غزوة بدر

18 வது மஜ்லிஸ்

# பத்று போர்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் வலிமைமிக்கவன். ஆற்றலுடையவன். யாவரையும் அடக்கியாளுபவன். வெளிப்படை யானவன். அரசன் உண்மையானவன். உண்மையை உண்மை யாக்கிக் காட்டுபவன்!

மெல்லிய முனங்கல்கூட அவனுடைய செவியாற்றலைவிட்டும் மறைந்திடாது. கருவிலுள்ள சிசுவின் அசைவுகள்கூட அவனது பார்வையைவிட்டும் தப்பிவிடாது. அவனது பெருமைக்கு எதிரில் ஆணவமிக்க அரசர்கள்கூட பணிந்தாக வேண்டும்! அவனே தன் விவேகத்தால் தீர்ப்பளித்தான். அவனே ஆட்சியாளர்கள் அனைவரி னும் மாபெரும் ஆட்சியாளனாவான்!

நன்றி செலுத்துவோர் புகழ்வதைப்போல் நான் அவனைப் புகழ் கிறேன். பொறுமையாளர்களுக்குச் செய்யும் உதவியை நான் அவ னிடம் யாசிக்கிறேன்.

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவன் தனித்தவன். அவனுக்கு இணைதுணை இல்லை. அவனே முன்னோர்களின் – பின்னோர் களின் வணக்கத்திற்குரிய இறைவன்!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார் கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள் அனைத்துத் தூதர் களிலும் முன்னுரிமை வழங்கப்பட்டு தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். வானிலிருந்து இறக்கப்பட்ட மலக்குகளால் பத்று போரில் உதவி செய்யப்பட்டவர்கள்!

நபியர்களின் மீதும் அவர்களின் குடும்பத்தினர் மீதும் தோழர் மீதும் – வாய்மையுடன் அவர்களைப் பின்பற்றி வாழ்ந்தவர்கள் மீதும் மறுமை நாள் வரையில் அல்லாஹ் கருணை பொழுந்து கொண்டிருப்பானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! பாக்கியமிக்க இந்த மாதத்தில்தான், பத்றுப்பேரில் அல்லாஹ் முஸ்லிம்களுக்கு மாபெரும் உதவி அளித்தான். அவர் களின் எதிரிகளாகிய சிலைவணங்கிகளைத் தோல்வியுறச்செய்தான். பாகுபடுத்தும் நாள் என்று அந்நாளுக்குப்பெயர் சூட்டினான். ஏனெ னில் அந்நாளில் அல்லாஹ் தன் தூதருக்கும் முஸ்லிம்களுக்கும் உதவி பரிந்ததன் மூலமும் சிலை வணங்கிகளான நிராகரிப்பாளர் களைத் தோல்வியுறச் செய்ததன் மூலமும் சத்தியத்திற்கும் அசத்தி யத்திற்கும் இடையே பாகுபடுத்தினான்!

இந்தப்போர் ஹிஜ்ரி 2 ஆம் ஆண்டு ரமளான்மாதம் நடைபெற் றது. இந்தப் போருக்கான காரணம் இதுதான் :

அபூ ஸுஃப்யானின் தலைமையில் குறைஷிகளின்வாணிபக் குழுஒன்று ஷாம் தேசத்திலிருந்து மக்கா நோக்கிவந்து கொண்டி ருந்த செய்தி நபி(ஸல்)அவர்களுக்கு எட்டியது. அந்த வாணிபக் குழு மீது தாக்குதல் தொடுக்கப் புறப்படுமாறு நபி(ஸல்)அவர்கள் தம் தோழர்களை அழைத்தார்கள். ஏனெனில் குறைஷிகள் நபி (ஸல்) அவர்களையும் அவர்களின் தோழர்களையும் எதிர்த்துக் கொண்டிருந்தார்கள். முஸ்லிம்களுக்கும் குறைஷிகளுக்குமிடையே எந்த உடன்படிக்கையும் இருக்கவில்லை. மட்டுமல்ல இவர்கள் நபியவர்களையும் முஸ்லிம்களையும் வீடு – வாசல்கள் மற்றும் உடமைகளை விட்டும் வெளியேற்றயிருந்தார்கள்! முஸ்லிம்கள் மேற் கொண்டிருந்த சத்திய அழைப்புப் பணிக்குத்தடையாகவும் இருந்தார்கள். ஆகையால் குறைஷிகளின் வாணிபக் குழுவை நேருக்கு நேர் சந்தித்திட நபியவர்களும் தோழர்களும் எடுத்த முடிவு முற்றிலும் நியாயமாகவே இருந்தது!

நபி (ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் புறப்பட்டார் கள்., அவர்களின் எண்ணிக்கை 310 க்கும் சற்று அதிகம்! அவர் களிடம் இருந்தது– இரண்டு குதிரைகளும் எழுபது ஒட்டகங்க

ளும்தான்! ஒருவர் பின் ஒருவராக முறைவைத்து அவற்றில் பயணம் செய்தார்கள்! முஹாஜிரீகள் எழுபதுபேர்., மீதிப் பேர் அன்ஸாரிகள்! அவர்கள் வாணிபக் குழுவை நாடிச் சென்றார்களே தவிர போர் தொடுக்க வேண்டும் என்றல்ல! ஆயினும் அல்லாஹ் அவர்களையும் அவர்களின் எதிரிகளையும்– எதிர்பாராத வகையில் சந்திக்க வைத்தான்! தீர்மானிக்கப்பட்டிருந்த விஷயத்தை அல்லாஹ் நிறைவேற்ற வேண்டும் என்பதற்காக!

நபி(ஸல்)அவர்களும் முஸ்லிம்களும் பறப்பட்டுவருவதை அபூ ஸுஃப்யான் அறிந்த போது குறைஷிகளிடம் உதவி கேட்டு ஆள் அனுப்பினார். தங்களின் வாணிபக் குழுவை குறைஷிகள் பாது காத் திடவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். பிறகு வழக்கமா கச் செல்லும் பாதையை விட்டுவிட்டு கடற்கரை ஓரமாக நடை யைக் கட்டினார்., பிழைத்தார்!

ஆனால் குறைஷிகளோ, உதவி தேடி வந்தநபர் அவர்களிடம் வந்தபோது தங்களின் முக்கியமான தலைவர்களையெல்லாம் அழைத்துக் கொண்டு ஒட்டு மொத்தமாக எல்லாரும் போருக்கா கக் கிளம்பிவிட்டார்கள். அவர்களின் எண்ணிக்கை சுமார் ஆயிரம் ஆகும். நூறு குதிரைகளும் எழுநூறு ஒட்டகங்களும் அவர்களி டம் இருந்தன!

بطرا ورئاء الناس و يصدون عن سبيل الله والله بما يعملون محيط

,, இறுமாப்புடனும் (தங்களின்பலத்தை) பிற மக்களுக்குக் காண் பிக்கும் வண்ணமும் புறப்பட்டார்கள்.மேலும் அல்லாஹ்வின் மார்க் கத்தை விட்டும் மக்களைத் தடுத்துக் கொண்டிருந்தார்கள்! அல்லாஹ், அவர்கள் செய்பவைஅனைத்தையும் சூழ்ந்தறிபவனாக இருக்கிறான்!,,(8:47)

முஸ்லிம்களை ஏசிப் பேசி கவிதைகள் பாடக்கூடிய அடிமைப் பெண்களும் அவர்களுடன் வந்திருந்தார்கள்.

இவ்வாறு குறைஷிகள் புறப்பட்டு வருவதை அபூ ஸுஃப்யான் அறிந்தபோது தாம் தப்பி வந்துவிட்ட செய்தியை அவர்களிடம் அறிவிக்க ஆள் அனுப்பினார். மேலும் போர்செய்யவேண்டாம் என்

றும் திரும்பிச் சென்றுவிடவேண்டும் என்றும் அவர்களுக்கு ஆலோ சனை சொல்லி அனுப்பினார்.

ஆனால் குறைஷிகள் இதனைஏற்க மறுத்துவிட்டார்கள்! ஆபூ ஜஹ்ல் சொன்னான் : நாங்கள் பத்று மைதானத்தை அடைந்து அங்கே மூன்று நாட்கள் தங்கியிருப்போம். ஒட்டகங்கள் அறுத்து விருந்து பரிமாறுவோம். மது ஊற்றிக் கொடுப்போம். எங்களைப் பற்றிய செய்தியை அரபுகள் கேள்விப்பட்டால்தான் சதாவும் எங்க ளுக்கு அவர்கள் அஞ்சிக்கொண்டிருப்பார்கள்!

ரஸூலுல்லாஹ்(ஸல்)அவர்கள் குறைஷிகள் புறப்பட்டுவருவதை அறிந்தபோது தம்முடன் வந்திருந்த தோழர்களை ஒன்று திரட்டி ஆலோசனை கலந்தார்கள்: சொன்னார்கள் : திண்ணமாக அல்லாஹ் இரண்டு கூட்டங்களில் ஒன்றைக்குறித்து எனக்கு வாக்களித்துள் ளான்.ஒன்று வாணிபக் கூட்டம். மற்றொன்று குறைஷிகளின்படை!

உடனே முஹாஜிர்களில் ஒருவராகிய மிக்தாத் பின் – அல் அஸ்வத் (ரலி) அவர்கள் எழுந்து கூறினார்கள் : அல்லாஹ்வின் தூதரே!அல்லாஹ் உங்களுக்கு இட்ட கட்டளையை நிறைவேற் றுங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! பனூா இஸ்ராயீல்கள் மூஸா நபியிடம் –நீரும் உம் இறைவனும் சென்று போரிடுங்கள். நாங்கள் இங்கே உட்கார்ந்திருக்கிறோம்!„ என்றுசொன்னது போல் நாங்கள் சொல்லமாட்டோம்.ஆனால் உங்களுடைய வலது புறமும் இடது புறமும் நின்று – உங்களுக்கு முன்னும் பின்னும் நின்று நாங்கள் போரிடுவோம்!„

மதீனாவின் அவ்ஸ் கோத்திரத்தின் தலைவர் ஸஅத் பின் முஆத்(ரலி)அவர்கள் எழுந்து கூறினார் : அல்லாஹ்வின் தூதரே! அன்ஸாரிகள் – அவர்களது ஊருக்குள்ளே வைத்து தங்களுக்கு உதவுவதுதான் அவர்களின் கடமையெனக் கருதிவிடுவர்களோ எனத் தாங்கள் அச்சம் கொள்ளலாம். நிச்சயமாக! நான் அன்ஸாரி கள் சார்பாகக் கூறுகிறேன்: தாங்கள் விரும்பிய இடத்திற்குப் புறப் படுங்கள்!தாங்கள் விரும்பியவர்களோடு உடன்படிக்கை வைத்துக் கொள்ளுங்கள்!தாங்கள் விரும்பாதவர்களைவிட்டும் உடன்படிக்கை யைத் துண்டித்துக் கொள்ளுங்கள்! எங்களின் சொத்துகளில் இருந்து தாங்கள் விரும்பியஅளவு எடுத்துக் கொண்டு தாங்கள்

விரும்பியதை எங்களுக்குத் தாருங்கள்! தாங்கள் எங்களிடம் இருந்து எடுத்துக்கொண்டதுதான் எங்களுக்குப் பிரியமானதாகும்! (அது பற்றி நாங்கள் அடையும் மகிழ்ச்சி) எங்களிடம் தாங்கள் விட்டு வைத்தது பற்றி அடையும் மகிழ்ச்சியைவிட அதிகமாகும். (அல்லாஹ்வின் தூதரே!) எங்களது விஷயத்தில் தாங்கள் ஏதெனும் கட்டளையிட்டால் அதைப் பின்பற்றுகிறவர்களாகவே நாங்கள் இருப்போம்! „

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! ∴கம்தான் எனும் ஊரின் தடாகம் வரை நீங்கள் எங்களை அழைத்துச் சென்றாலும் நிச்சயமாக நாங்கள் உங்களுடன் வருவோம். நீங்கள் எங்களை அழைத்து செல்லும் வழியில் கடல் குறுக்கிட்டு நீங்கள் அதில் குதித்தீர்களானால் நாங்களும் அதில் குதிக்கத் தயார்! எங்களோடு நாளைய தினமே நீங்கள் எதிரிகளைச் சந்தித்தாலும் அதனை நாங்கள் பாரமாகக் கருதமாட்டோம். நிச்சயமாக! நாங்கள் போரின்போது நிலை குலையாமல் நிற்பவர்கள்! வாய்மையோடு களம் காண்பவர்கள்! தாங்களின் கண்களுக்குக்குளிர்ச்சி அளிக்கும் படியானவீரச் செயல் களைஎங்களிடம் இருந்து அல்லாஹ் உங்களுக்குக் காண்பிக்க வேண்டும் என நாங்கள் ஆதரவு வைக்கிறோம்!„

முஹாஜிர்களும்அன்ஸாரிகளும் ஆற்றிய இவ்வுரைகளைக்கேட்டதும் நபி(ஸல்)அவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்.பிறகு சொன்னார்கள் :„புறப்படுங்கள்! மகிழ்வு கொள்ளுங்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எதிரிகள் வெட்டி வீழ்த்தப்படும் இடங்கள் என்கண் முன் தெரிவதுபோல் உள்ளது!„

அல்லாஹ்வின் படைகளை அழைத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டார்கள். பத் றின் தண்ணீர் ஊற்றின் அருகில் தங்கினார்கள்.அப்போது ஹிபாப் பின் முன்திர்(ரலி) என்கிற தோழர் கேட்டார்: அல்லாஹ்வின் தூதரே! நாம் முகாமிட்டுள்ள இந்த இடத்தைப்பற்றி என்ன கருதுகிறீர்கள்?இங்குதங்குவது அல்லாஹ்வின் கட்டளையா? அப்படியாயின் இந்த இடத்தை விட்டுச் சற்று முன்னே செல்லவோ பின்னேநகரவோ நமக்கு அதிகாரம் இல்லை! அல்லது கருத்தின்அடிப்படையில் மற்றும் போர்த்தந்திரம் –போர்ச் சூழலின் அடிப்படையில் இங்கு தங்கியுள்ளோமா?„

நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : இல்லை„ இது எனது கருத்தே ஆகும்.போர்த்தந்திரமும் போர்ச்சூழலை ஒட்டிய விஷயமே ஆகும்!„

பிறகு அந்தத் தோழர் சொன்னார்:„அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக இந்த இடம் நாம் தங்குவதற்கு ஏற்றதல்ல! எங்களை இன்னும் சற்று முன்னே அழைத்துச் செல்லுங்கள். ஜனங்களுக்கு நெருக்கமாக உள்ள கிணற்றருகே சென்று நாம் தங்குவோம். அது தவிர உள்ள ஏனைய கிணறுகளை நாசப்படுத்திவிடுவோம். பிறகு நமது நீரூற்றைச் சீர்படுத்தி அதில் தண்ணீர் நிறைத்துக் கொண்டு அதை நாம் குடி நீராகப் பயன் படுத்துவோம். எதிரிகளுக்கு இந்த வாய்ப்பு இல்லாது போய்விடும்!„

நபி(ஸல்) அவர்கள் இந்தக் கருத்தைச் சரியென ஏற்று அங்கு புறப்பட்டார்கள்![46] நபியர்கள் மதீனாவை அடுத்துள்ள பள்ளத்தாக்குப் பகுதியில் தங்கினார்கள். குறைஷிகள் மக்காவை அடுத்துள்ள பள்ளத்தாக்குப் பகுதியில் தங்கினார்கள். அல்லாஹ் அன்றைய இரவில் மழை பொழியச் செய்தான். சிலைவணங்கிகளின் பகுதியில் மாபெரும் மழைபெய்து அவர்களை முன்னேறிச் செல்ல விடாமல் தடுக்கும் அளவுக்குச் சேரும் சகதியமாகஆனது! முஸ்லிம்களின் பகுதியில் லேசான மழை இருந்தது. அது அவர்களைச் சுத்தப் படுத்தியது. அவர்களின் பகுதியை மென்மைப் படுத்தி மணலை இருக்க மாக்கியது. அவர்கள் தங்கியிருந்த பகுதியைச் சமதளமாக்கி பாதங்களை உறுதிப்படுத்தவும் செய்தது!

போர்த் திடலில் சற்று உயரமான மேட்டின் மீது நபி (ஸல்) அவர்களுக்காக ஒரு பந்தல் அமைத்தார்கள் முஸ்லிம்கள். அதில் நபியவர்கள் தங்கினார்கள்.

நபியவர்கள்தம் தோழர்களின் அணிகளைச் சரிப்படுத்தினார்கள். போர் மைதானத்தில்—எதிரிகள் வீழ்த்தப்படும் பகுதிகளையும் வெட்டிச்சாய்க்கப்படும் இடங்களையும் சுட்டிக்காட்டியவண்ணம் சற்றுத் தூரம் நடந்து சென்றார்கள். „இன்ஷாஅல்லாஹ் இது இன்னார் வீழ்த்தப்படும் இடம்! இன்ஷாஅல்லாஹ் இது இன்னார் வீழ்த்தப் படும் இடம்„என்று கூறிக் கொண்டிருந்தார்கள் நபியவர்கள்!

---

46 இந்தக் கதை அதாவது பத்று மைதானத்திற்கு மிக அருகிலிருந்த ஒரு நீர்நிலையருகில் முஸ்லிகள் முகாமிட்டிருந்தது. அது பற்றி ஹுபாப் பின் முன்திர் (ரலி) அவர்கள் ஆலோசனை அளித்தது பற்றிய அறிவிப்பு ஆதாரத்தின் அடிப்படையில் மிகவும் பலவீனமானதாகும் .

சுட்டிக்காட்டிய இடங்களிலேயே எதிரிகள் வீழ்ந்தார்கள்„அவற்றைக் கடக்கவே இல்லை!

பிறகு நபி(ஸல்)அவர்கள் தம் தோழர்களின் பக்கமும் குறைஷி களின் பக்கமும் ஒரு பார்வை செலுத்திவிட்டுச் – யா அல்லாஹ்! இதோ! குறைஷிகள் ஆணவத்துடனும் அகம்பாவத்துடனும் தம் படைகளைத் திரட்டிக் கொண்டு வந்துவிட்டார்கள். உன்னை எதிர்ப்பதற்கும் உன்னுடைய தூதரைப் பொய்யரென்று தூற்று வதற்கும் வந்துவிட்டார்கள். யா அல்லாஹ்! நீ என்னிடம் வாக்க ளித்த உதவியை உன்னிடம் கோருகிறேன். யா அல்லாஹ்! நீ வாக்களித்த வெற்றியை எனக்கு நிறைவேற்றித் தருவாயாக! யா அல்லாஹ் உன்னுடன் செய்து கொண்ட உடன்படிக்கை மற்றும் வாக்குறுதியின் பேரில் உன்னிடம் நான் பிரார்த்தனை செய்கிறேன்!

நீ நாடியிருந்தால் உனக்கு வழிபாடு செலுத்தப்பட்டிருக்காது! யா அல்லாஹ்! இந்தச் சிறிய கூட் டத்தை இன்று நீ அழித்து விட்டாயானால் பிறகு உன்னை வணங்கிவழிபட யாரும் இருக்க மாட்டார்கள்„

முஸ்லிம்கள் தம் இறைவனிடம் உதவியும்இரட்சிப்பும்தேடினார் கள். அவனும் அவர்களின் இறைஞ்சுதலைஏற்றுக் கொண்டான்!

اذ يوحي ربك الي الملائكة اني معكم ثبتوا الذين آمنوا سألقي في قلوب الذين كفروا الرعب فاضربوا فوق الاعناق و اضربوا منهم كل بنان ذلك بانهم شاقوا الله و رسوله فان الله شديد العقاب ذلكم فذوقوه وان للكافرين عذاب النار

„இதனையும் நினைவு கூரும்: உம் இறைவன் மலக்குமார்களி டம் அறிவித்துக் கொண்டிருந்தான்: நிச்சயமாக நான் உங்களோடு இருக்கின்றேன்.எனவே நம்பிக்கையாளர்களை நீங்கள் உறுதியோடி ருக்கச் செய்யுங்கள். இதோ! நிராகரிப்பாளர்களின் உள்ளங்களில் பீதியை ஏற்படுத்திவிடுகிறேன். ஒவ்வொரு விரல் மூட்டுகிளிலும் அடியுங்கள். – இதற்குக் காரணம் அவர்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் எதிர்த்துக் கொண்டிருந்ததுதான்! மேலும் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் யார் எதிர்க் கிறார்களோ(அவர்களை)நிச்சயமாக அல்லாஹ் கடுமையாகத் தண் டிப்பவனாக இருக்கிறான்.–(அவர்களிடம்சொல்லப்படும்)‚இதுதான் உங்களுக்குரிய தண்டனை. இப்போது இதனைச் சுவையுங்கள்,

மேலும் நிராகரிப்பாளர்களுக்குத் திண்ணமாக நரக வேதனை இருக்கிறது!„ குர்ஆன் (8 : 21 – 14 )

பிறகு இரண்டு படைகளும் மோதின! யுத்தம் சூடு பிடித்தது! போரின் அச்சாணி சுழன்றது! நபி (ஸல்) அவர்கள் தம் கூடாரத்தில் இருந்தார்கள். அங்கே அபூ பக்ர்(ரலி)அவர்களும் ஸஅத் பின் முஆத் (ரலி)அவர்களும் நபியவர்களுக்குப் பாதுகாப்பு அளித்துக் கொண்டிருந்தார்கள். நபி(ஸல்)அவர்கள் இடைவிடாமல்தம் இறைவனிடம் பிரார்த்தனை செய்து கொண்டும் இரட்சிக்கக் கோரிக் கொண்டும் இருந்தார்கள்!

அங்கே லேசாகக் கண்ணயர்ந்துவிட்டு –“இந்தக் கூட்டத்தினர் அதிவிரைவில் தோல்வியுற்று அனைவரும் புறமுதுகிட்டு ஓடப் போகிறார்கள்„ என்று கூறிக் கொண்டு வெளியே வந்தார்கள். போரிடுவதற்குத் தம் தோழர்களை உற்சாகப்படுத்தினார்கள். கூறினார்கள்: „முஹம்மதின் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! இன்று எவர் நிலைகுலையாதவராய்– மறுமைக் கூலியை எதிர்பார்த்து பின்வாங்காமல் முன்னேறிச் செல்பவராய் நின்று எதிரிகளுடன் மோதிப் போரிட்டுக் கொல்லப்படுகிறாரோ அவரை நிச்சயமாக அல்லாஹ் சுவனத்தில்பிரவேசிக்கச் செய்வான்!”

உடனே உமைர் பின் ஹிமாம் (ரலி) என்கிற அன்ஸாரி தோழர் எழுந்தார். அவர் கையில் சில பேரீத்தம் பழங்கள் இருந்தன. அவற்றை அவர் உண்டுகொண்டிருந்தார். – “அல்லாஹ்வின் தூதரே! வானம்–பூமி அளவுக்கு விசாலமான சுவனத்திலா?என்று கேட்டார். அதற்கு நபி(ஸல்)அவர்கள் ‘ஆம்’ என்று சொன்னார்கள். “சபாஷ்! சபாஷ்! அல்லாஹ்வின் தூதரே! அந்தச் சுவனத்தில் நான் பிரவேசிப்பதற்கு(இந்தப் போரில்)இந்த எதிரிகள் என்னைக்கொலை செய்வது மட்டுமே தடையாக உள்ளது! என்னுடைய இந்தப் பேரீத்தம் பழங்களை நான் சாப்பிட்டு முடிக்கும் வரையில் நான் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பது நிச்சயமமாக நீண்டதொரு வாழ்க்கைதான்!„ என்று கூறினார். பிறகு அந்தப் பேரீத்தம் பழங்களைத் தூக்கியெறிந்து விட்டு களம் புகுந்து போரிட்டவாறே கொல்லப்பட்டார் உமைர் பின் ஹிமாம் (ரலி) அவர்கள்!

நபி (ஸல்)அவர்கள் ஒருபிடி மண்ணையோ சிறு கற்களையோ எடுத்து அதனை எதிரிகளை நோக்கி வீசியெறிந்தார்கள். அது அவர்களின் கண்களில் விழுந்தது! அந்த மண்ணால் கண்கள்

தாக்கப்படாதவர்கள் அவர்களில் யாரும் இல்லை. கண்களில் விழுந்த மண்ணை அகற்றுவதிலேயே அனைவரும் ஈடு பட்டனர்! அல்லாஹ்வின் சான்றுகளில் இதுவும் ஒன்றாகும்!

பிறகு சிலைவணங்கிகளின் கூட்டம் தோற்கடிக்கப்பட்டது. அவர்கள் புறமுதுகிட்டு ஓடினார்கள். அவர்களை முஸ்லிம்கள் விரட்டிச் சென்றார்கள். சிலரைக் கொன்றார்கள். வேறு சிலரைக் கைது செய்தார்கள். இவ்வாறு எதிரிகளில் 70 பேரை முஸ்லிம்கள் கொன்றார்கள். 70 பேரைக் கைதுசெய்தார்கள்.

கொலை செய்யப்பட்டோரில் அபூ ஜஹ்ல், ஷைபா பின் ரபீஆ, அவனுடைய சகோதரன் உத்பா, அவனுடைய மகன் வலீது உட்பட பெரும் தலைவர்களாய்த் திகழ்ந்த 24 பேரின் சடலங்கள் பத்று மைதானத்தில் இருந்த ஒரு பாழ் கிணற்றில் வீசி எறியப் பட்டன!

இப்னு மஸ்வூது(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கஅபாவை நோக்கி நின்று கொண்டு இந்நால்வர் மீதும் கேடு விளையட்டுமென பிரார்த்தனை செய்தார்கள். மேலும் அவர்கள் சொல்கிறார்கள் : அல்லாஹ்வை சாட்சியாக்கி நான் கூறு கிறேன்: இவர்கள் வீழ்த்தப்பட்டுக் கிடந்ததை நான் பார்த்தேன். அன்றைய தினம் வெயில் கடுமையாக இருந்ததால் அவர்களின் சடலங்கள் வெயிலினால் உருமாறிப்போயிருந்தன! நூல் : புகாரி

புகாரியில் அபூ தல்ஹா (ரலி) அவர்களின் இந்த அறிவிப்பும் பதிவாகியுள்ளது :„குறைஷி குலப் பெருந்தலைவர்கள் 24 பேரின் சடலங்கள் குறித்து நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்„ அதன்படி அவை பத்று மைதானத்திலிருந்த மிகவும் நாற்ற மெடுத்த மோசமான கிணறு ஒன்றில் வீசியெறியப்பட்டன!„

நபி(ஸல்)அவர்கள் ஒரு கூட்டத்தார் மீது வெற்றி கொண்டால் அதன் பிறகு விசாலமானதொரு மைதானத்தில் மூன்று நாட்கள் தங்கியிருப்பது வழக்கம். பத்றில் மூன்றாவது நாளின்போது தங்க ளது வாகனத்தைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டார்கள். அதன்படி பயணச்சாதனங்கள் எல்லாம் அதில் வைத்துக் கட்டப் பட்டன. பிறகு தோழர்கள் பின்தொடர சிறிதுதூரம் நடந்து சென் றார்கள். அங்கே சுற்றுச் சுவர் எழுப்படாதிருந்த கிணற்றின் ஓரத் தில் நின்று கொண்டு அங்கு வீசியெறியப்பட்ட சடலங்களின் பெயர்களையும் அவர்களின் பெற்றோரின் பெயர்களையும் கூறி அழைக்கலானார்கள்.„ஓ! இன்னாரது மகன் இன்னாரே!ஓ! இன்னா

ரது மகன் இன்னாரே! நீங்கள் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படிந்து நடந்திருந்தால் உங்களுக்கு நலமாக இருந்திருக்குமே! திண்ணமாக எதை எங்களுடைய இறைவன் எங்களுக்கு வாக்களித்திருந்தானோ அதை உண்மையில் நாங்கள் கண்கூடாகக்கண்டு கொண்டோம்.உங்களுக்கு உங்கள் இறைவன் வாக்களித்ததை உண்மையானதாகக் கண்டுகொண்டீர்களா?„

அப்போது உமர் (ரலி) அவர்கள் கேட்டார்கள் :அல்லாஹ்வின் தூதரே!உயிரில்லாத வெறும் சடலங்களிடம் நீங்கள் என்ன பேசுகிறீர்கள்?„

அதற்கு நபி (ஸல்) அவர்கள் – „முஹம்மதின் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! நான் கூறுவதை உங்களைவிடக் கூடுதலாக அவர்கள் செவிமடுப்பவர்களாய் உள்ளனர்!„

கைது செய்யப்பட்வர்களைப் பொறுத்து . . . . . அவர்கள் விஷயத்தில் தம் தோழர்களிடம் ஆலோசனை கலந்தார்கள் நபி (ஸல்) அவர்கள்! கைதிகளின் விஷயம், ஸஅத் பின் முஆத் (ரலி)அவர்களுக்கு மன வருத்தத்தை ஏற்படுத்தியிருந்தது. அவர்கள் சொன்னார்கள்:

„இறைவனுக்கு இணைவைத்து வணங்குவோரின் விஷயத்தில் அல்லாஹ் நிகழ்த்திக்காட்டிய முதல் நிகழ்ச்சியாகும் இது! போரில் கைதான எதிரிகளை உயிரோடு விட்டுவைப்பதைவிட அவர்களை அடியோடு அழித்தொழிப்பதுதான் எனக்கு விருப்பமானதாக உள்ளது„

நபி(ஸல்) அவர்களிடம் உமர் (ரலி) அவர்கள் சொன்னார்கள்: "என்னுடைய கருத்து என்னவெனில், நீங்கள் எங்களுக்குஅதிகாரம் அளிக்க வேண்டும்„ நாங்கள் இவர்களின் கழுத்துகளை வெட்ட வேண்டும்„ அலீக்கு அதிகாரம் அளியுங்கள்„ அவர் உகைலின் கழுத்தை வெட்டுவார். எனக்கு அதிகாரம் அளியுங்கள்.. நான் இன்னார்(அதாவது உமரின் உறவினர்) உடைய கழுத்தை வெட்டுகிறேன். திண்ணமாக இவர்கள்இறைமறுப்புக்கு முன்னோடிகளாயும் தலைவர்களாயும் உள்ளனர்!„

அபூ பக்ர் (ரலி) அவர்கள் சொன்னார்கள் :„எனது கருத்து என்னவெனில், இந்தக் கைதிகள் ஒன்றுவிட்ட சகோதரர்களாகவும் நம்முடைய உறவினர்களாகவும் இருக்கிறார்கள்.நாம் இவர்களிடம் அபராதம் வசூலித்துக் கொள்ளலாம். நிராகரிப்பாளர்களுக்கு எதிரில்

நமக்கு வலிமை சேர்ப்பதாக அது அமையும். அல்லாஹ் இவர்களுக்கு இஸ்லாத்தின் பால் நேர்வழிகாட்டவும் செய்யலாம்!„

இறுதியாக நபி(ஸல்) அவர்கள் அபராதம் வசூல் செய்தார்கள். கைதிகளில் பெரும்பாலோர் ஓராயிரம் முதல் நான்காயிரம் வரையில் திர்கம்களை அபராதமாகச் செலுத்தினார்கள். வேறு சிலர் அபராதம் செலுத்துவதற்குப் பதில் மதீனா வாசிகளின் பிள்ளைகளுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தார்கள்! இன்னும் சிலர் அபராதம் செலுத்துவதற்குப் பதிலாக குறைஷிகளிடம் பிடிபட்ட முஸ்லிம்களை விடுவித்துத்தரவேண்டும் என்று சொல்லப்பட்டது. வேறு சிலகைதிகள் – முஸ்லிம் களுக்குக் கடுமையாகத் துன்பம் இழைத்துக் கொண்டிருந்தவர்கள்; அதன் காரணமாக அவர்களைக் கட்டிவைத்து மரண தண்டனை வழங்குமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்!

இதுதான் பத்று யுத்தம்! இதில்சிறியதொரு குழு பெரியதொரு கூட்டத்தையே வெற்றி கொண்டது. (ஒரு குழுவினர் அல்லாஹ் வுடைய பாதையில் போரிட்டுக் கொண்டிருந்தார்கள். மற்றொரு குழுவினர் இறைவனை நிராகரிப்பவர்களாய் இருந்தார்கள்)

சிறு குழுவினர் வெற்றி கொண்டதற்குக் காரணம், அவர்கள் இறைமார்க்கர்தைக் கடைப்பிடித்து வாழ்பவர்களாய் இருந்தது தான். இறைவாக்கை மேலோங்கச் செய்வதற்காகவும் இறைகமார்க் கத்தைப் பாதுகாப்பதற்காகவும் போர் புரிந்தார்கள். ஆகையால் கண்ணியமும் மகத்துவமுமிக்க இறைவன் அவர்களுக்கு உதவி னான்!

ஆகவே முஸ்லிம்களே! உங்களது இறைமார்க்கத்தை நீங்கள் கடைப்படித்து வாழுங்கள். உங்களின் எதிரிகளின் மீது உங்களுக்கு வெற்றி கிட்டும் பொருட்டு! மேலும்நீங்கள் பொறுமையை மேற்கொள்ளுங்கள்! அசத்தியவாதிகளுக்கு எதிரில் உறுதியாக நில்லுங்கள்! சத்தியத்திற்குத் தொண்டாற்றிட எப்போதும் ஒருங்கிணைந்து முனைப்புடன் செயல்படுங்கள். மேலும் அல்லாஹ்வுக்கு அஞ்சி வாழுங்கள். நீங்கள் வெற்றியாளர்களாய்த் திகழக் கூடும்!

யா அல்லாஹ்! எங்களுக்கு இஸ்லாத்தின் மூலம் உதவி செய்வாயாக இஸ்லாத்தின்அழைப்பாளர்கள் மற்றும்அதன் உதவியாளர்களின் குழுவில் எங்களையும் சேர்ப்பாயாக! இஸ்லாத்தில் எங்களை நிலைத்திருக்கச் செய்வாயாக! உன்னை நாங்கள் சந்தித்திடும் நாள் வரையில்!

المجلس التاسع عشر في غزوة فتح مكة شرفها الله عز وجل

19 வது மஜ்லிஸ்

# மக்கா வெற்றி

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!அவனே ஒவ்வொரு பொருளையும் படைத்து அவற்றின்விதியை நிர்ணயித்தான். ஒவ்வொரு பொருளின் பிறப்பிடத்தையும் உரைவிடத்தையும் அறிகின்றான். தான் நாடியதை மூல ஏட்டில் பதிவு செய்தான். அவன் முற்படுத்தியதைப் பிற்படுத்துவோர் யாருமில்லை. அவன் பிற்படுத்தியதை முற்படுத்துவோர் யாருமில்லை! அவன் யாரை ஏமாற்றத்திற்குள்ளாக்கினானோ அவர்களுக்கு எதவி செய்வோர் யாருமில்லை. அவன் யாருக்கு உதவி செய்தானோ அவர்களை ஏமாற்றுவோர் யாருமில்லை. நீடித்தநிலை, ஆட்சியதிகாரம், கண்ணியம்,பெருமை ஆகியவற்றில் அவனே தனித்துவம் பெற்றுத்திகழ்கிறான். இவற்றில் அவனுடன் யார் மோதினாலும் அவர்களை அவன் கேவலப் படுத்திவிடுவான்!

அவன் ஏகஇறைவன்., தனித்தவன்.,படைத்துப் பரிபாலிப்பவன்., அனைவராலும் நாடப்படுபவன். நூதனமாகப் படைக்கும் ஆற்றலில் அவனுக்கு இணைதுணை யாருமில்லை! நித்திய ஜீவன்., (பேரண்டம் முழுவதையும்) நிர்வகிப்பவன். தன்னுடைய படைப்பினங்களின் பிரச்னைகளை எத்துணை சிறப்பாக அவன் நிர்வகிக்கிறான்! கண்காணிக்கிறான்! அவனே அனைத்தும் அறிந்தவன். எல்லாம் தெரிந்தவன். மனிதன் ரகசியமாகப் பேசுகிற எதுவும்– மனத்துள் மறைக்கிற எந்த விஷயமும் அல்லாஹ்வை விட்டும் மறைந்துவிடாது!அவன் வழங்கிய உபகாரங்கள்–அளித்த சௌகரியங்களுக்காக அவனை நான் புகழ்கிறேன்!

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவன் தனித்தவன், அவனுக்கு யாதொரு இணையுமில்லை. பாவம் செய்தவன் திருந்தி பாவமீட்சி

தேடியதை ஏற்றுக்கொண்டான். அவனது பாவத்தை மன்னித்துப் பொறுத்தருளினான்!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடியார், தூதர் என்று சாட்சி சொல்கிறேன். அவர்களின் மூலம் நேர் வழியை இறைவன் தெளிவாக்கிக்காட்டினான்.அதனைப் பிரகாசமாக்கினான்.அவர்களின் மூலமே ஷிர்க் – இறைவனுக்கு இணைவைத்து வணங்கும் செயலின் இருள்களை அகற்றினான்.அதற்கு நெருக்கடியை ஏற்படுத்தினான். மக்கத்திருநகர் மீது நபியவர்களுக்கு வெற்றியை அளித்தான். அவர்கள் கஅபா ஆலயத்தினுள்ளிருந்த சிலைகளை அகற்றி அதனைத் தூய்மையாக்கினார்கள்.

நபியவர்களின் மீதும் அவர்களிள் குடும்பத்தினர் மீதும் கண்ணியத்திற்கும் சிறப்பிற்கும் உரிய நபித்தோழர்கள் மீதும் வாய்மையுடன் அவர்களைப் பின்பற்றி வாழ்ந்தவர்கள் மீதும் சந்திரன்முழு ஒளியையும் கடைநிலையையும் அடைந்து சுழன்றுவந்து கொண்டிருக்கும் காலெமெல்லாம்–அல்லாஹ் ஸலாத் பொழிந்து கொண்டிருப்பானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளித்துக்கொண்டிருப்பானக!

சகோதரர்களே! பாக்கியமிக்க இந்த மாதத்தில் இஸ்லாத்தின் வெற்றிக்கும் அதன் சிறப்புக்கும் உயர்வுக்கும் அடிப்படையாக அமைந்த பத்று யுத்தம் நடைபெற்றது போன்று, அமைதிப் பூங்காவாகிய மக்கா நகரில் வெற்றிக் கொடி நாட்டிய யுத்தமும் இந்த மாதத்தில்தான் நடைபெற்றது! இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 8 ஆம் ஆண்டில்!

இந்த மகத்தான வெற்றியின் மூலம் கொடிய பாவமாகிய ஷிர்க் – இறைவனுக்கு இணை வைத்து வணங்கும் செயலிலிருந்து இந்நகருக்கு அல்லாஹ் ஈடேற்றம் அளித்தான்.அதனால் இந்நகர் இஸ்லாமிய நாடாக மலர்ந்தது! ஷிர்க் –இல் இருந்து ஏகத்துவமும் நிராகரிப்பில் இருந்து விசுவாச மும் தற்பெறுமையிலிருந்து கீழ்ப்படிதலும் விடுதலை பெற்றன! அனைத்து வல்லமையும் கொண்ட அல்லாஹ் ஒருவனுக்கே வணக்க வழிபாடுகள் உரித்தானவை என்பது அங்கு அறிவிக்கப்பட்டது! இணைவைத்து வணங்கப்பட்டுவந்த சிலைகள் தகர்ப்பட்டன.அதன் பிறகு அவை தலைதூக்கவே இல்லை!

மக்காவை வெற்றிகொண்ட இந்தப்போரின் காரணம் இதுதான்: ஹிஜ்ரி 6 ஆம் ஆண்டு நபி(ஸல்) அவர்களுக்கும் குறைஷிகளுக்

கும் மத்தியில் ஹுதைபிய்யா உடன்படிக்கை ஏற்பட்டபோது நபி யவர்களின் ஒப்பந்த்தில் சேரவிரும்பியவர்கள் சேர்ந்தார்கள்., குறை ஷிகளின் ஒப்பந்தத்தில் சேரவிரும்பியவர்கள் அதில் சேர்ந்தார்கள்!

குஸாஆ எனும் கோத்திரம் நபி (ஸல்) அவர்களின் ஒப்பந்தக் காரர்களாய் ஆனார்கள். பனூபக்ர் என்ற கோத்திரம் குறைஷிகளின் ஒப்பந்தக்காரர்களாய் ஆனார்கள்.

இந்த இரு கோத்திரங்களுக்கிடையே பழிவாங்கும் எண்ணம் ஜாஹிலிய்யாக் காலத்திலிருந்தே இருந்துவந்தது. பனூபக்ர் கோத் திரம் இந்த உடன்படிக்கையை ஒருவாய்ப்பாகப் பயன் படுத்திக் கொண்டது. அமைதியாக இருந்த குஸாஆ கோத்திரத்தார் மீது தாக்குதல் தொடுத்தது!

நபி (ஸல்)அவர்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்ட குஸாஆ கோத்திரத்திற்கு எதிராக குறைஷிகள் செயல்பட்டனர். பனூ பக்ர் கோத்திதைத்தாருக்குப் போர் வீரர்களையும் ஆயுதங்களையும் மறை முகமாக வழங்கி உதவினார்கள்.

குஸாஆ கோத்திரத்தைச் சேர்ந்த சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து–பனூபக்ர் கோத்திரத்தினரின் தாக்குதலையும் அவர்களுக்கு குறைஷிகள் உதவி செய்ததையும் தெரிவித்தார்கள்.

– குறைஷிகள் தமது செயல் குறித்து மனம் வருந்தினார்கள். இவ்வாறு செய்ததன் மூலம் உடன்படிக்கையை முறித்து விட் டோமே என்று கருதினார்கள்.ஆகையால் தங்களின் தலைவர் அபூ ஸுப்யானை, நபி(ஸல்)அவர்களிடம் அனுப்பிவைத்து உடன்படிக் கையைப் புதுப்பிக்கவும் மேலும் சில காலம் அதை நீட்டிக்கவும் முயற்சி மேற்கொண்டார்கள்.

அபூ ஸுப்யான் இது விஷயமாக நபி (ஸல்) அவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்தினார்!அவருக்கு நபியவர்கள் எந்தப் பதிலும் அளிக்க வில்லை. பிறகு அவர் அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) இரு வரையும் அணுகி அவர்கள் நபியவர்களிடம் இது விஷயமாக சிபாரிசு செய்ய வேண்டுமெனக் கோரினார். அதிலும் அவர் வெற்றி பெறவில்லை!பிறகு அலீ(ரலி)அவர்களிடம் பேசிப்பார்த்தார்.அதிலும் அவரது நோக்கம் நிறைவேறவில்லை!

–"ஹஸனின் தந்தையே! உங்களது அபிப்பிராயம் என்ன? என்று அலீ (ரலி) அவர்களிடம் கேட்டார். அதற்கு"எந்த முயற்சி யும் உமக்குப் பயனளிக்கும் என்று நான் கருதவில்லை! ஆயி னும் நீர் பனூ கினானா கோத்திரத்தின் தலைவராக இருக்கிறீர்.,

புறப்பட்டுச்சென்று மக்களுக்கு மத்தியில் பாதுகாப்பு பற்றி பொது அறிவிப்புச் செய்வீராக!,,என்று சொன்னர்கள்!

அவ்வாறு செய்வது எனக்கு ஏதேனும் பயனளிக்கும் என்று கருதுகிறீரா?„ எனக் கேட்டார் அபூ ஸுப்யான்.

பயனளிக்கும் என்று கருதவில்லை. ஆனால் உமக்கு இதைத் தவிர வேறு வழி இருப்ப தாக எனக்குத் தெரியவில்லை„ என்று அலீ (ரலி) அவர்கள் சொன்னார்கள்.

ஆபூ ஸுப்யான் அவ்வாறே செய்தார். மக்காவுக்குத் திரும்பி னார். என்ன ஏற்பாடு செய்து வந்துள்ளீர்? என்று குறைஷிகள் அவரிம் கேட்டார்கள்.

„முஹம்மதிடம் சென்றேன்.அவரிடம் பேசிப்பார்த்தேன். அல்லாஹ் வின் மீது சத்தியமாக! அவர் எந்தப் பதிலும் சொல்லவில்லை. பிறகு அபூ பக்ரிடமும் உமரிடமும் சென்றேன். எந்தப் பயனும் கிடைக்கவில்லை. பிறகு அலீயிடம் வந்தேன். அவர் எனக்குச்சில ஆலோசனைகள் தந்தார். அதன்படி செய்துள்ளேன். மக்களுக்கு மத்தியில் பாதுகாப்பு பற்றி அறிவிப்புச் செய்துள்ளேன்,,என்று அபூ ஸுப்யான் சொன்னார்.

„இதற்கு முஹம்மத் அனுமதி வழங்கினாரா?„ என்று கேட்டனர். அதற்கு அவர் ‚இல்லை‚ என்றார். – நாசம்தான் உமக்கு! அந்த மனிதர் உம்முடன் விளையாடியிருக்கிறார்., வேறொன்றுமில்லை!„ என்றனர் குறைஷிகள்!

நபி (ஸல்)அவர்கள் போருக்கு ஆயத்தமாகும்படி தம் தோழர் களுக்குக் கட்டளையிட்டார்கள். தமது நோக்கம் என்ன என்பதை யும் அவர்களுக்குத் தெரிவித்தார்கள். தமது சுற்றுப் புறங்களில் வாழ்ந்த கோத்திரத்தார்களையும் புறப்பட அழைத்தார்கள்.

இவ்வாறு பிரார்த்தனை செய்தார்கள்:„யா அல்லாஹ்! எங்களைப் பற்றிய தகவல்களும்(உளவு பார்க்கும்)கண்களும் குறைஷிகளைச் சென்றடையாமல் செய்திடுவாயாக! நாங்கள் அவர்களது ஊரில் திடீரெனப் பிரவேசிக்கும் வகையில்!„

பிறகு அப்துல்லா ஹ் பின் உம்மி மக்தூம் (ரலி)அவர்களிடம் மதீனாவைக் கவனித்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டு சுமார் 10 ஆயிரம் போர் வீரர்களுடன் மதீனாவிலிருந்து புறப்பட்டார்கள். வழியில் ஜுஹ்ஃபா எனும் மிடத்தில் நபியவர்களின் பெரிய தந்தை அப்பாஸ் (ரலி)அவர்கள், மனைவி– மக்கள், குடும்பத்தினருடன்

நபியவர்களைச் சந்தித்தார்கள். அவர் இஸ்லாம் மார்க்கத்தை ஏற்று ஹிஜ்ரத் செய்து மதீனா நோக்கி வந்து கொண்டிருந்தார்!

மேலும் அப்வா எனுமிடத்தில் நபியவர்களின் பெரிய தந்தை ஹாரிஸின் மகனாரான அபூ ஸுஃப்யான்(ரலி)என்பவரும் நபியவர்களின் மாமி மகன் அப்துல்லாஹ் பின் அபூ உமைய்யா (ரலி) என்பவரும் நபி(ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். முன்னர் நபியவர்களின் கடும் விரோதிகளாய் இருந்த இவ்விருவரும் இஸ்லாத்தைத் தழுவினார்கள். அதனை நபியவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்!

தம் பெரிய தந்தையின் மகனாகிய அபூ ஸுஃப்யான் (ரலி) என்பவர் குறித்து நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்: இவர் ஹம்ஸாவுக்குப் பகரமா கத் திகழ்வார் என எதிர் பார்க்கிறேன்!

மக்காவுக்கு அருகே மர்ருள் ளஹ்ரான் எனும் இடத்தை நபி (ஸல்) அவர்கள் அடைந்த போது படைவீரர்களுக்குக் கட்டளையிட்டார்கள்: அனைவரும் சுமார் 10 ஆயிரம் நெருப்புகளைப் பற்ற வைத்தார்கள். நபியவர்கள், உமர்(ரலி) அவர்களைப் பாதுகாப்புப் பணிக்கு நியமித்தார்கள். அப்பாஸ(ரலி) – நபியவர்களின் வாகனத்தில் ஏறி – குறைஷிகளிடம் செய்தி கொண்டு சேர்பபதற்கு யாரேனும் கிடைப்பார்களா என்று தேடிச் சென்றார்கள். அதன் நோக்கம்: குறைஷிகள் நபி (ஸல்) அவகளிடம் வந்துப் பாதுகாப்பு கோரிட வேண்டும்,, அமைதிப் பூங்காவாகிய மக்கமா நகரில் யுத்தம் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதே!

அப்பாஸ்(ரலி)அவர்கள் அவ்வாறு சென்றுகொண்டிருந்தபோது அபூ ஸுஃப்யான் பேசும் குரல் அவரது காதில் விழுந்தது! அபூ ஸுஃப்யான், புதைல் பின் வரகாவிடம் இவ்வாறு கூறுகிறார் : இன்றைய இரவைப்போல இவ்வளவு நெருப்புகளை என்றைக்கும் நான் பார்த்ததில்லை! „

அதற்கு புதைல் : அவர்கள் குஸாஆ கோதிதிரத்தினர் ஆவர்„ என்றார்.

குஸாஆ கோத்திரத்தினரிடம் இவ்வளவு ஆட்களில்லை„ அவர்களோ சாமானியர்கள் தானே!„ என்று அபூ ஸுஃப்யான் கூறினார்.

அப்போது அப்பாஸ் (ரலி) அவர்கள் , அபூ ஸுஃப்யானின் குரலை அறிந்தபோது அவரை அழைத்தார்கள். அப்போது அவர், பஸ்லின் தந்தையே! உமது நிலை என்ன? என்று கேட்டார். அதற்கு அப்பாஸ் : இதோ! ரஸூலுல்லாஹ்(ஸல்) அவர்கள் தம்

படைவீரர்களுடன் வந்துவிட்டார்கள். அதற்கு அபூ ஸு:ஃப்யான் , மேற்கொள்ள வேண்டிய ராஜதந்திரம் என்ன? என்று கேட்டார்.

அதற்கு அப்பாஸ்(ரலி)அவர்கள், வாகனத்தில் ஏறும்., உம்மை ரஸூலுல்லாஹ்(ஸல்)அவர்களிடம் கொண்டுசெல்கிறேன். அவர்களிடம் உமக்காகப் பாதுகாப்புக் கோரிடவேண்டும்.,,

அபூ ஸு:ஃப்யான்,நபி(ஸல்)அவர்களிடம் அழைத்து வரப்பட்டார். நபி (ஸல்)அவர்கள் கேட்டார்கள்: "அட நாசமே!அபூ ஸு:ஃப்யானே! இன்னும் உமக்கு நேரம் வரவில்லையா.,வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறுயாருமில்லை என்பதை அறிந்து கொள்ள!,,

அதற்கு அபூ ஸு:ஃப்யான்–என் தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணம் ஆகட்டும்! நீங்கள் சாந்த குணம் கொண்டவர்கள். கண்ணியமிக்கவர்கள்., பந்த பாசத்தில் உயர்ந்தவர்கள் ஆவீர்....! அல்லாஹ்வுடன் வேறு கடவுளர் (யாரும் இல்லை., அப்படி) இருந்திருந்தால் எனக்கு உதவி செய்திருப்பார்களே!இதனை நான் அறிந்து கொண்டேன்.,,

நபி (ஸல்) அவர்கள், ,,திண்ணமாக நான் அல்லாஹ்வின் தூதர் என்பதையும் அறிந்துகொள்ள உமக்குநேரம்வரவில்லையா? என்று கேட்டார்கள்.–அபூ ஸு:ஃப்யான் சற்று தயங்கினார். அவரை நோக்கி –"அட நாசமே! இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும்! ,, என்று அப்பாஸ் (ரலி) அவர் கள் சொன்னார்கள். உடனே அபூ ஸு:ஃப்யான் இஸ்லாத்தை தழுவினார். ஷஹாதத் எனும் சத்தியத்தற்கான சான்றினை மொழிந்தார்!

பிறகு அபூஸு:ஃப்யானை–முஸ்லிம்கள்அவரைக்கடந்து செல்லும் வகையில் – மலை முகப்பிலிருந்த ஓடையின்படுகையில் நிற்க வைக்க வேண்டும் என்று கட்டளை இட்டார்கள் நபி (ஸல்) அவர்கள்!

எல்லாக் கோத்திரத்தார்களும் தங்களின் கொடிகளுடன் அபூ ஸு:ஃப்யானைக் கடந்து சென்ற போது அவர் ஒவ்வொரு கோத்திரத்தைப் பற்றியும் அப்பாஸ்(ரலி)அவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தார். அவருக்கு அப்பாஸ் (ரலி) அவர்கள் விஷயங்களை அறிவித்துக் கொண்டிருந்தார்கள். மேலும் – எனக்கும் இக்கோத்திரத்தாருக்கும் என்ன இருக்கிறது? என்றும் சொல்வார்.

அப்போது தன்னிகரற்ற ஒரு குழுவினர் வந்தார்கள். இவர்கள் யார்? என்று அபூ ஸு:ஃப்யான் கேட்டார். அதற்கு அப்பாஸ்(ரலி)

அவர்கள்− இவர்கள் தாம் அன்ஸாரிகள் என்றார்கள். அன்ஸாரிகள் தளபதியாக ஸஅத்பின் உபாதா(ரலி)அவர்கள் இருந்தார்கள். அவர் கையில் கொடி இருந்தது.அவர் அபூ ஸு∴ப்யானுக்கு நேராகவந்த போது சொன்னார் :

„ஓ! அபூ ஸு∴ப்யானே! இந்நாள் இரத்தக்களறிக்குரிய நாள்! இன்று கஅபா (வில் போர் புரிவது) ஆகுமாக்கப்படுகிறது!„ பிறகு ஒருபடை வந்தது. அது மற்ற படைகளைக்காட்டிலும் கம்பீரமானது.அதில் அல்லாஹ்வின் தூதர்(ஸல்)அவர்களும் அவர்கள் தம் தோழர்களும் இருந்தார்கள். அதன் கொடி ஸுபைர் பின் அவ்வாம் (ரலி) அவர்களிடம் இருந்தது.

நபி(ஸல்)அவர்கள் அபூ ஸு∴ப்யானுக்கு அருகேவந்த போது − ஸஅத் என்ன கூறிச்சென்றார் என்பதை அபூ ஸு∴ப்யான் நபியவர்களிடம் தெரிவித்தார். அதற்கு நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள் :„ஸஅத் பொய்யுரைத்துவிட்டார். இந்நாள் அல்லாஹ் கஅபாவைக் கண்ணியப்படுத்தும் நாள்„[47]

பிறகு கொடியை ஸஅத் (ரலி) அவர்களிடம் இருந்து பறித்து அவர்களின்மகனார் கைஸ் என்பாரிடம் கொடுக்குமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். கொடியை ஸஅத்(ரலி)அவர்களின் மகனாரிடம் கொடுக்கும் பட்சத்தில் கொடி ஸஅத் அவர்களிடம் இருந்து முற்றிலும் பறிக்கப்பட்டதாக ஆகிவிடாது என்று நபியவர்கள் கருதயுள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தொடர்ந்து சென்று கொண்டிருந்தார்கள். தங்களது கொடியை ஹஜூன் எனும் பகுதியில் நாட்டுவதற்குக் கட்டளையிட்டார்கள்.பிறகு வெற்றியாளராய்−இறையுதவியும் ஒத்துழைப்பும் பெற்றவராய் மக்கா நகரினுள் பிரவேசித்தார்கள். தம் நெற்றி தம் வாகனத்தைத் தொடும் அளவுக்குத் தங்களது தலையைத் தாழ்த்தியவாகளாய் மக்காவினுள் பிவேசித்தார்கள்!

திண்ணமாக நாம் உமக்கு மகத்தான வெற்றியை அளித்தோம். எனும் வசனத்தை திரும்பத் திரும்ப ஓதிக் கொண்டிருந்தார்கள். இரண்டு முன்னணிப் படைகளில் ஒன்றுக்கு காலித் பின் வலீத்

---

47 இந்த ஹதீஸை இமாம் புகாரி அவர்கள்,− பிறகு அபூ ஸு∴ப்யானை − முஸ்லிம்கள் அவரைக் கடந்து செல்லும் வகையில் மலைமுகப்பிலிருந்த ஓடையின் படுகையில் நிற்க வைக்க வேண்டும் என்று அப்பாஸுக்குக் கட்டளையிட்டார்கள் என்பதிலிருந்து − இது வரை அறிவித்துள்ளார்கள்.

அவர்களையும் மற்றொன்ருக்கு ஸுபைர் பின் அவ்வாம் அவர்க ளையும் தளபதிகளாய் அனுப்பிவைத்தார்கள்.

மேலும் இவ்வாறுபிரகடனம் செய்தார்கள்:„யார் யார் கஅபாவின் புனித பள்ளிவாசலில் புகுந்தார்களோ அவர்கள் பாதுகாப்புப்பெற்ற வர்கள் ஆவர். யார் யார் அபூ ஸு∴ப்யானின் வீட்டில் புகுந்தார் களோ அவர்களும் பாதுகாப்புப் பெற்றவர்கள் ஆவர். யார் யார் தத்தமது வீட்டில் புகுந்து கதவை அடைத்துக்கொண்டார்களோ அவர்களும் பாதுகாப்புப் பெற்றவர்கள் ஆவர்„

பிறகு நபியர்கள் புனிதமிகு கஅபா பள்ளிவாசலுக்கு வந்து தம் வாகனத்தில் அமர்ந்தபடியே வலம் வந்தார்கள். அப்போது கஅபா வைச் சுற்றிலும் 360 சிலைகள் இருந்தன. தங்களது வில்லினால் அவற்றைக் குத்திச்சாய்க்கலனார்கள். பின் வரும் குர்ஆன் வசனங் களை ஓதிக்கொண்டே!

جاء الحق و زحق الباطل ان الباطل كان زهوقا - جاء الحق وما يبدأ الباطل وما يعيد

„சத்தியம் வந்து விட்டது.அசத்தியம் அழிந்து விட்டது. திண் ணமாக அசத்தியம் அழியக்கூடியதே!–சத்தியம் வந்துவிட்டது. இனி அசத்தியத்தினால் எதுவும் செய்யமுடியாது!„[48]

சிலைகள் முகம்குப்புற வீழ்ந்து கொண்டிருந்தன. பிறகு நபி (ஸல்)அவர்கள் கஅபாவில் நுழைந்தார்கள்.அதன் உள்ளேயும் பல உருவங்கள் இருந்தன. அவற்றை அகற்றுமாறு கட்டளையிட் டார்கள். அவையும் அழிக்கப்பட்டன!

பிறகு அங்கு தொழுதார்கள். தொழுது முடிந்ததும் கஅபாவின் உள்ளே சுற்றிவந்தர்கள். அதன்மூலைகளில் தக்பீரும்– லாஇலாஹ இல்லல்லாஹு வும் சொன்னார்கள்.

பின்னர் நபி (ஸல்) அவர்கள் கஅபாவின் வாசலின் மேலே நின் றார்கள். அவர்கள் என்ன சொல் கிறார்கள் என்பதை எதிர்பார்த்த வண்ணம் கீழே குறைஷிகள் நின்று கொண்டிருந்தார்கள். கஅபா வாசலின் இரண்டு நிலைகளையும் பிடித்துக் கொண்டுநபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

---

48 இதனை இமாம் முஸ்லிம் அறிவித்துள்ளார்கள்.

"வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறுயாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரியதே! அனைத்துப் புகழும் அவனுக்க சொந்தம். மேலும் அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் நிறைந்தவனாக இருக்கிறான். தனது வாக்கை நிறைவேற்றினான். தன்னுடைய அடியாருக்கு உதவி புரிந்நதான்! எதிரிப் படைகளை அவன் தோற்கடித்தான்!

குறைஷிகளே! திண்ணமாக அல்லாஹ் அறியாமைக் காலத்து ஆணவத்தையும் முன்னோர்களைக் கொண்டு பெருமை அடிப்பதையும் உங்ளைவிட்டும் அகற்றிவிட்டான். மனிதர்கள் அனைவரும் ஆதத்திலிருந்து தோன்றியவர்கள்„ஆதமோ மண்ணிலிருந்து படைக்கப் பட்டார்!

அல்லாஹ் கூறுகிறான் :

يا ايها النا س انا خلقناكم من ذكر و انثي وجعلنـاكم شعوبا وقبـائل لتعـارفوا ان اكرمكم عند الله اتقاكم ان الله عليم خبير

"மனிதர்களே! நாம் உங்களை ஓர்ஆண்– பெண்ணில் இருந்து படைத்தோம். பிறகு நீங்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாகிக் கொள்ளும் பொருட்டு உங்களை சமூகங்களாகவும் கோத்திரங்களாகவும் அமைத்தோம். உண்மையில் அல்லாஹ்வின் பார்வையில் உங்களில் அதிகக் கண்ணியமானவர் உங்களில் அதிக இறையச்சம் கொண்டவர்தாம்!திண்ணமாக அல்லாஹ் அனைத்தும் அறிந்தவ னாகவும் தெரிந்தவனாகவும் இருக்கிறான்!„ (49 : 13)

குறைஷிக் குலத்து மக்களே! நான் உங்களை என்ன செய்வேன் என்று எதிர்பார்க்கிறீர்கள்?–அதற்கு குறைஷிகள் சொன்னார்கள் :"நல்லதைச் செய்வீர்கள் என்று எதிர்பார்க்கிறோம். நீங்கள் கண்ணியமிக்க சகோதரர்„ கண்ணியமிக்க சகோதரரின் மகன்!„

நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள்: நபி யூசுப்(அலை) அவர்கள் தம் சகோதரர்களை நோக்கிக் கூறியதைப் போன்று நான் உங்களுக்குச் சொல்கிறேன்: இன்று உங்கள் மீது எந்தக்குற்றச்சாட்டும் இல்லை. அல்லாஹ் உங்கள் மீது மன்னிப்பு வழங்குவானாக!

செல்லுங்கள்; நீங்கள் அனைவரும் விடுதலை பெற்றவர்கள் ஆவீர்கள்![49] ,

மக்கா வெற்றியின் இரண்டாம் நாள் நபி(ஸல்)அவர்கள் மக்களிடையே எழுந்து சொற்பொழிவு ஆற்றினார்கள்.முதலில் அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள்., அவனது மகிமைகளை எடுத்துரைத்தார்கள். பிறகு சொன்னார்கள் :

“திண்ணமாக அல்லாஹ்தான் மக்கா நகருக்குப் புனிதம் வழங்கியவன். மக்கள் அதற்குப் புனிதம் அளிக்கவில்லை. அல்லாஹ்வின் மீதும் மறுமைநாள் மீதும் நம்பிக்கை கொண்டஎந்த மனிதனுக்கும் – இந்த நகரில் இரத்தம் சிந்துவது ஆகுமானதல்ல! இந்நகரின் மரம் –செடிகொடிகளை ஒடிப்பபதும் ஆகுமானதல்ல. அல்லாஹ்வின் தூதர் யுத்தம் செய்ததைக் காரணமாகக் காட்டி – தனக்கும் அனுமதி உண்டென எவரேனும்வாதிட்டால் அவருக்கு நீங்கள் சொல்லுங்கள் : திண்ணமாக அல்லாஹ் தன் தூதருக்கு மட்டும் அனுமதி வழங்கினானே தவிர உங்களுக்கு அல்ல. எனக்கும்கூட பகலின் சில மணிநேரம்தான் அனுமதி வழங்கப்பட்டது. பின்னர் நேற்று இருந்ததுபோன்று இந்நகருக்கு–அதன் கண்ணியம் இன்று திரும்பி விட்டது! எனவே இங்கு வந்திருப்பவர்கள் வராதவர்களுக்கு செய்தியை எடுத்துச் சொல்ல வேண்டும்.”[50]

“மக்காவில் நபி (ஸல்) அவர்களுக்கு யுத்தம் செய்ய அனுமதி அளிக்கப்பட்ட நேரம், அன்றைய தினம் சூரியன் உதயத்திலிருந்து அஸ்ர் தொழுகை வரையாகும்.”[51]

பின்னர் நபி(ஸல்)அவர்கள் 19 நாட்கள் மக்காவில் தங்கியிருந்தார்கள். அந்நாட்களில் (4 ரக்அத்) தொழுகைகளைச் சுருக்கித்

---

[49] இந்த நிகழ்ச்சியில் – கஅபாவின் வாசலின் மீது நின்றார்கள் என்பதற்குப் பின்னுள்ள பகுதி ஸாதுல்மஆத் மற்றும் இதர நபிவரலாற்று நூல்களிலிருந்து பெறப்பட்டது!.துலகா:. (விடுதலை பெற்றவர்கள்)எனும் வார்த்தை தலீக் என்பதன் பன்மையாகும். இதன் கருத்து– மக்கா வெற்றியின் போது நபி (ஸல்) அவர்களால் கருணை வழங்கப் பெற்ற குறைஷிகளும் அவர்களைச் சேர்ந்தோரும் என்பதாகும்.

[50] இமாம் புகாரி இதனை அறிவித்துள்ளார்கள்.

[51] இமாம் அஹ்மத் இதனை அறிவித்துள்ளார்கள்.

தொழுதார்கள். ரமலான் மாதத்தின் மீதி நாட்களில் நோன்பு நோற்க வில்லை.,, [52]

காரணமென்னவெனில் ஏகத்துவக் கொள்கைக்கும் இஸ்லாத் தின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கும் உரமூட்டுதல், ஈமானை (இறைநம்பிக்கையை) உறுதிப்படுத்துதல், மக்களிடம் விசுவாசப் பிரமாணம் வாங்குதல் ஆகிய நோக்கங்களுக்காக - பயணத்தை முறிக்கும் எண்ணமின்றி அப்படியே மக்காவில் தங்கிவிட்டார்கள் நபி (ஸல்) அவர்கள்!

முஜாஷிஃ (ரலி) அவர்களின் அறிவிப்பு இவ்வாறு வந்துள் ளது : மக்கா வெற்றிக்குப் பிறகு நான் என் சகோதரரை அழைத் துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன். (மதீனா நகர் நோக்கி) ஹிஜ்ரத் செய்வதற்கு அவர்களிடம் உறுதிப் பிரமாணம் செய்து கொடுக்க நாடியிருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஹிஜ்ரத் சென்றவர்கள் கூலிமுழுவதையும் கொண்டு சென்றுவிட்டார்கள்.(இப்போது ஹிஜ்ரத் இல்லை)ஆனாலும் இவ ரிடம் - இஸ்லாம், ஈமான், ஜிஹாத் ஆகியவற்றின் பேரில் உறுதிப் பிரமாணம் வாங்கிக் கொள்கிறேன்.,

இந்தப் பகிரங்மான வெற்றியின் மூலம் அல்லாஹ்வின் உதவி நிறைவு பெற்றது. அதனால் மக்கள் இறைமார்க்கத்தில் கூட்டம் கூட்டமாகப் பிரவேசித்தார்கள். மேலும் அல்லாஹ்வின் பூமியாகிய மக்கா நகர் இஸ்லாமிய நாடாக மலர்ந்தது! வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனே எனும் ஏகத்துக் கொள்கையும் முஹம்மத் நபி(ஸல்)அவர்களின் தூதுத்துவமும் குர்ஆன் இறை வேதமே என்கிற உறுதிப்பாடும் அங்கு பிரகடனம் செய்யப்பட்டன! மக்காவின் ஆட்சியதிகாரம் முஸ்லிம்களின் கைக்கு வந்தது! ஷிர்க் எனும் இணைவைப்புக் கொள்கை நிலைகுலைந்து அதன் காரிருள் உருக்குலைந்துபோனது!அல்லாஹு அக்பர்- அல்லாஹ் மாபெரியவன்! வ லில்லலஹில் ஹம்து- அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!-மறுமை நாள் வரையிலும் அல்லாஹ் தன் அடியார்கள் மீது பொழிந்திருக்கும் பேரருளாகும் இது!

யா அல்லாஹ்! இந்த மகத்தான அருட்கொடைக்கு நன்றி செலுத்தும் பாக்கியத்தை எங்களுக்கு வழங்குவாயாக! எப்பொ

---

[52] இமாம் புகாரி அவர்கள் இதனை பரவலாக அறிவித்துள்ளார்கள்.

ழுதும் – எல்லப் பகுதிகளிலும் இஸ்லாமியச் சமுதாயத்திற்கு வெற்றியை உறுதிப் படுத்துவாயாக! கருணையாளர்கள் அனைவரினும் கருணைமிக்கோனே! உனது கருணையால் எங்களையும் எங்கள் பெற்றோரையும்முஸ்லிம்கள் அனைவரையும் மன்னித்தருள்வாயாக!

# المجلس العشرون في اسباب النصر الحقيقية

20 வது மஜ்லிஸ்

# வெற்றி பெறுவது எப்படி?

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே மகத்தான சிறப்புடையவன். அடைக்கியாளுவதில் வல்லமை கொண்டவன். மனிதனின் ரகசியமான– பகிரங்கமான அனைத்து நிலைகளையும் நன்கு அறிந்தவன். ஜிஹாத் எனும் அறப்போர் புரிபவருக்கு உதவி செய்பவன். இறைவனுக்காகப் பணிவை மேற்கொள்பவருக்கு உயர்வு அளிப்பவன்.எழுதுகிறபோது எழுதுகோலின் ஒலியைக்கூட அவன் கேட்கிறான்.பரந்து விரிந்த பொட்டல் வெளியில் ஊர்ந்து செல்லும் எரும்புகளைக்கூட பார்க்கிறான். வானமும் பூமியும் அவனது கட்டளைப்படி நிலைபெற்றிருப்பது அவனுடைய சான்றுகளுள் ஒன்றாகும்.

அவன் விதித்த விதியின் பேரில்– அது இன்பமாயினும் துன்பமாயினும் சரியே!– அதற்காக அவனை நான் புகழ்கிறேன். மேலும் சாட்சி சொல்கிறேன் : வணக்கதிதிற்குரிய இறைவன் அவனைத் தவிர வேறில்லை!அவனுக்கு யாதொரு இணையுமில்லை என்று! இந்த சாட்சியத்தின்நோக்கம் அவனது நினைவை நிலைப்படுத்துவதே யாகும்!

மேலும் முஹம்மது நபியர்கள் அவனுடைய அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள் எப்படிப்பட்டவர்கள் எனில், கடலிலும் திடலிலும் வாழ்கிற எல்லாப்படைப்பினங்களின் பாலும் – நன்மையுடன் அனுப்பிவைக்கப்பட்டவர்கள்! நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலாத் பொழிவானாக! உள்ளத்தில் ஈமான்– நம்பிக்கை ஆழப்பதிந்ததன் பயனாய் நன்மையில் முந்திக் கொண்டவரான அபூ பக்ர் மீதும் – உறுதியிலும் அடக்கியாளும் ஆற்றலிலும் இஸ்லாத்திற்குக் கண்ணியம் சேர்த்த உமர் மீதும் – தமக்கு ஏற்பட்ட கசப்பான சூழ்நிலையில் பொறுமையை

மேற்கொண்ட உஸ்மான் மீதும் – பெரிய தந்தையின் புதல்வரும் மரு மகனாருமான அலீமீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! நபியவர்களின் குடும்பத்தினர் மீதும் தோழர்கள் மீதும் வாய்மை யுடன் அவர்களைப் பின்பற்றி வாழ்ந்தவர்கள் மீதும் – மேகம் பொழிந்துகொண்டிருக்கும் காலமெல்லாகம் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! நிச்சயமாக அல்லாஹ் பல போர்களில் முஸ்லிம் களுக்கு உதவி புரிந்துள்ளான். பத்று, அஹ்ஸாப், மக்கா வெற்றி, ஹுனைன் போன்ற போர்களில் உதவி புரிந்துள்ளான்.–இவ்வாறு முஸ்லிம்களுக்கு உதவி செய்ததன் மூலம் தனது வாக்குறுதியை அல்லாஹ் நிறைவேற்றிவிடான்!

وكان حقا علينا نصر المؤمنين

„இறைநம்பிக்கையாளர்களுக்கு உதவிசெய்வது நம்மீது கடமை யாகிவிட்டது! „

انا ننصر رسلنا و الذين آمنوا في الحياة الدنيا و يوم يقوم الاشهاد يوم لاينفع الظالمين معذرتهم و لهم سوء الدار

„திண்ணமாக நாம் நம்முடையதுாதர்களுக்கும் இறைநம்பிக்கை யாளர்களுக்கும்.– இவ்வுல வாழ்விலும் அவசியம் உதவி செய்கி றோம். சாட்சியாளர்கள் நிற்கும் (மறுமை) நாளிலும் உதவி செய் வோம். அந்நாளில் கொடுமைக்காரர்களுக்கு அவர்களின் சாக்குப் போக்குகள் எந்தப் பயனையும் அளித்திடமாட்டா! அவர்கள் மீது சாபம் உண் டாகும். மேலும் மிக மோசமான தங்குமிடம் அவர்களுக்கு உண்டு!„ குர்ஆன் (40 : 51–52)

அல்லாஹ் அவர்களுக்கு உதவி செய்ததற்குக்காரணம், அவர்கள் அவனது தீனை – மார்க்கத்தைக் கடைப்பிடித்துவாழ்ந்தார்கள். அந்த மார்க்கம் ஏனைய மதங்கள் அனைத்தின் மீதும் மேலோங் கக் கூடியதாய்த் திகழ்கிறது. எனவே அந்தமார்க்கத்தைக் கடைப் பிடித்துவாழும் மக்கள் யாரோ அவர்களும் எல்லாச்சமுதாயங்களை விடவும் மேலோங்கக் கூடியவாகள் ஆவர்!

هو الذي ارسل رسوله بالهدي و دين الحق ليظهره علي الدين كله و لو كره المشركون

"அவனே தன்னுடைய தூதரை நேர்வழியுடனும் சத்திய மார்க்கத்துடனும் அனுப்பிவைத்தான். ஏனைய மார்க்கங்களை விடவும் அதனை அவர் மேலோங்கச் செய்யவேண்டும் என்பதற்காக! இணைவைப்போர்களுக்கு அது எவ்வளவு வெறுப்பாக இருந்தாலும் சரியே!„ (61: 9)

அல்லாஹ், அவர்களுக்கு உதவி செய்ததற்குக் காரணம், அவர்கள் வெற்றிபெறுவதற்குரிய உண்மைக் காரணிகளை – பௌதீக மற்றும் தார்மீக ரீதியிலான எல்லாக் காரணிகளையும் கடைப்பிடித்தார்கள்! எதிரிகளை மிகைத்திடும் அளவிலான மனத்திண்மை அவர்களிடம் இருந்தது! அல்லாஹ் அவர்களுக்குஇட்ட கட்டளைகளை ஏற்று நடந் தார்கள். அவனுடைய வழிகாட்டலுக்கு ஏற்ப வாழ்ந்தார்கள்! அல்லாஹ்வும் அவர்களுக்கு உறுதிப்பாட்டை வழங்கினான்!

ولا تهنوا و لاتحزنوا انتم الاعلون ان كنتم مؤمنين ان يمسسكم قرح فقد مس ا لقوم قرح مثله وتلك الايام نداولها بين الناس

"நீங்கள் மனந்தளர்ந்து விடாதீர்கள்! கவலைப்படாதீர்கள்! இறை நம்பிக்கையுடையோராயின் நீங்களே மேலோங்குவீர்கள்! (இப்பொழுது) உங்களுக்குக் காயம் ஏற்பட்டுள்ளதெனில் இதற்கு முன்னர் (உங்கள்) எதிரணியினருக்கும் இதேபோன்ற காயம் ஏற்படத்தான் செய்தது. இவையெல்லாம் கால(த்தின்மாற்) ங்களாகும்„ (3 : 139)

و لاتهنوا في ابتغاء القوم ان تكونوا تألمون فانهم يألمون كما تألمون و ترجون مـن ا لله ما لايرجون و كان ا لله عليما حكيما

"அந்தக் கூட்டத்தைத் துரத்திச்செல்வதில் தளர்ந்து விடாதீர்கள்! நீங்கள் கஷ்டப்படுகிறீர்கள் என்றால் உங்களைப்போல் அவர்களும்தான் கஷ்டப்படுகிறார்கள். ஆனால் அல்லாஹ்விடம் இருந்து அவர்கள் எதிர்பார்க்காதவற்றை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்! மேலும் அல்லாஹ் நன்கறிபவனாகவும் நுண்ணறிவாளனாகவும் இருக்கிறான்„ (4 : 104)

فلا تهنوا وتدعو الي السلم و انتم الاعلون و ا لله معكم ولن يتركم اعمالكم انما الحياة الدنيا لعب و لهو

"நீங்கள் தைரியமிழந்து விடாதீர்கள்! மேலும் சமாதானத்தைக் கோராதீர்கள். நீங்கள்தாம் வெற்றி பெறக்கூடியவர்கள். அல்லாஹ்

உங்களுடன் இருக்கிறான். மேலும் உங்கள் செயல்களை அவன் ஒருபோதும் வீணாக்கமாட்டான். இந்த உலக வாழ்க்கை விளை யாட்டும் வேடிக்கையுமேயாகும்!„ (47 : 35–36)

இத்தகைய ஊக்கமளித்தல் மற்றும் உறுதியூட்டலின் காரணத் தால் இறைநம்பிக்கையாளர்கள் வலிமையுடனும் ஊக்கத்துடனும் வினைமையுடனும் செயல்பட்டார்கள்.ஆற்றல் முழுவதையும்ஒன்று திரட்டி வைத்திருந்தார்கள். அவர்களுடைய இரட்சகனின் இந்தக் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து செயல்பட்டார்கள்!

و اعدوا لهم ما استطعتم من قوة

„அவர்களை எதிர்ப்பதற்கு உங்களால் முடிந்த அளவு வலிமை களைத் திரட்டிவைத்துக் கொள்ளுங்கள்!„–அதாவது ஆத்மார்த்த மான வலிமைகளையும் அவளிப்படையான – இராணுவ ரீதியான வலிமைகளையும் ஒருசேரத் திரட்டிவைத்திருந்தார்கள்!

இறைநம்பிக்கையாளர்களுக்கு அல்லாஹ் உதவி செய்ததற்கு இன்னொரு காரணம், அவர்கள் அவனது சத்தியமார்க்கத்திற்கு உதவி செய்தார்கள் என்பதாகும்.

و لينصرن الله من ينصره ان الله لقوي عزيز الذين ان مكناهم في الارض اقاموا الصلاة و آتوا الزكاة و امروا بالمعروف و نهوا عن المنكر و لله عاقبة الامور

„திண்ணமாக அல்லாஹ் தனக்கு உதவி செய்வோருக்கு உதவி செய்கிறான். நிச்சயமாக அல்லாஹ் வலிமைமிக்கவனும் யாவற்றை யும் மிகைத்தவனும் ஆவான். அவர்கள் எத்தகையவர்கள் எனில் நாம் அவர்களுக்குப் பூமியில் ஆட்சியதிகாரம் வழங்கினால் அவர் கள் தொழுகையை நிலைநாட்டுவர்கள். ஜகாத் வழங்குவர்கள். மேலும் நன்மை புரியுமாறு ஏவுவார்கள். தீமையிலிருந்து தடுப் பார்கள். மேலும் எல்லாவிவகாரங்களும் அல்லாஹ்வின் கையில் உள்ளது„ குர்ஆன் (22 : 41)

இந்த இரண்டு வசனங்களில்– தனக்கு உதவி செயபவர்களுக் குத் தானும் உதவி செய்வதாக அல்லாஹ் வாக்களித்துள்ளான். வார்த்தைகளைக் கொண்டும் கருத்தின் அடிப்படையலும் அதை உறுதிபடுத்திக் கூறியுள்ளான்.

வார்த்தை ரீதியாக உறுதிப் படுத்துவதென்பது, இந்த வாக்கி யத்தின் தொடக்கத்தில் – அல்லாஹ்வின் மீது சத்தியமாக– எனும்

வாசகம் மறைந்திருப்பதாகும். வாக்கியத்தின் முழு அமைப்பு,

وا لله لينصرن ا لله من ينصره

(அல்லாஹ்வின் மீது சத்தியமாக! தனக்கு உதவி செய்வோருக்கு நிச்சயம் அல்லாஹ் உதவி செய்வான்) என்றிருக்கும். மேலும் (لينصرن) என்பதிலுள்ள லாமும் நூனும் உறுதிப்பாட்டைக் காட்டும் எழுத்துக்களேயாகும்.

கருத்து ரீதியாக உறுதிப்படுத்துவதன்பது, திண்ணமாக அல்லாஹ் வலிமைமிக்கவனும் யாவற்றையும் மிகைத்தவனும் ஆவான் என்பதிலுள்ளது. ஆம்! அல்லாஹ் வலிமைமிக்கவன் – அவனை எந்தப் பலவீனமும் அணுகாது. அவன் யாவற்றையும் மிகைத்தவனே தவிர இழிவடைபவன் அல்லன்! எந்த சக்திகள் அவனை எதிர்க்கின்றனவோ அவைதான் விரைவில் கேவலத்தையும் பலவீனத்தையும் தழுவுகின்றன!

எல்லா விவகாரங்களின் முடிவும் அல்லாஹ்வின் கையிலுள்ளது எனும் வசனம் இறைநம்பிக்கையாளனை உறுதிப்படுத்தக் கூடியதாகும். நமக்கெங்கே வெற்றிகிடைக்கப்போகிறதென்று– உதவியை அவன் தூரமாகக் கருதுகிறபோது அவனுக்கு இந்த வார்த்தை உறுதியைக் கொடுக் கிறது. ஏனெனில் அனைத்து விஷயங்களின் முடிவுகள் அல்லாஹ் ஒருவன் கையிலேயே உள்ளன. அவனே தான் விரும்பியதைத் தனது அறிவு நுட்பத்திற்கு ஏற்ப மாற்றிக் கொண்டிருக்கிறான்!

இந்த இரு வசனங்களிலும் வெற்றி பெறுவதற்குத் தகுதியான பண்புநலன்கள் விளக்கப்பட்டுள்ளன. ஒருமுஸ்லிமுக்கு இப்பூமியில் ஆட்சியதிகாரம் வழங்கப்பட்ட பின்பு அவன் கடைப்பிடிக்க வேண்டிய பண்புகளாகும் அவை! அந்த ஆட்சியதிகாரம் என்பது அவனுக்கு அகம்பாவத்தையும் ஆணவத்தையும் கொடுக்காது. அடக்குமுறையும் அராஜகமும் செய்யுமாறு அவனைத் தூண்டாது. மாறாக இறைமார்க்கத்தில் மேலும் அவனுக்கு வலிமையை அதிகப்படுத்தும். அதனை இன்னும் சிறப்பாகக் கடைப்பிடித்து வாழும்படி செய்திடும்!

☐ முதல்பண்பு: அவர்கள் எத்தகையவர்களெனில், அவர்களுக்குப் பூமியில் நாம் ஆட்சியதி காரம் வழங்கினால் அவர்கள் தொழுகையை நிலைநாட்டுவார்கள்.(22 : 41) – பூமியில் ஆட்சியதிகாரம் வழங்குதல் என்பது, வணக்கவழிபாடு அல்லாஹ் ஒருவனுக்கே

என உறுதியாக்கப்பட்ட பிறகே தவிர ஏற்படாது. குர்ஆனில் அல்லாஹ் கூறியிருப்பது போன்று1

وعد الله الذين آمنوا منكم و عملوا الصالحات ليستخلفنهم في الارض كما استخلف الذين من قبلكم و ليمكنن لهم دينهم الذي ارتضي لهم و ليبدلنهم من بعد خوفهم امنا يعبدونني ولا يشركون بي شيئا

உங்களில் எவர்கள் இறைநம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிந்தார்களோ அவர்களிடம் அல்லாஹ் வாக்குறிதி அளிக்கிறான். ஏன்னவெனில் அவர்களைப் பூமியில் பிரதிநிதிகளாக்குவான்„அவர்களுக்கு முன் வாழ்ந்து சென்ற மக்களைப் பிரதிநிதிகளாக்கியது போன்று! மேலும் அவர்களுக்காக அல்லாஹ் எந்த மார்க்கத்தை விரும்பினானோ ,அந்தமார்க்கத்தை வலுவான அடிப்படைகள் மீது நிலைநாட்டுவான். மேலும் அவர்களின் (இன்று நிலவுகிற) அச்ச நிலையை அமைதி நிலையாய் மாற்றித்தருவான்.எனவே அவர்கள் என்னை மட்டும் வழிபடட்டும். மேலும் என்னுடன் எவறையும் – எதனையும் இணைவைக்காதிருக்கட்டும். „ (24 : 55)

ஓர் அடியான் தனது சொல் – செயல், நாட்டம் அனைத்திலும் வாய்மையாளனாக இருந்து அல்லாஹ்வுக்கு வணக்க வழிபாடு செலுதினால் – தனது வணக்கவழிபாட்டின் மூலம் பதவியையோ மக்களிடம் இருந்து புகழையோ பணத்தையோ எதிர் பார்க்காமல் அல்லாஹ்வின் உவப்பையும் மறுமைநாளையும் மட்டும் நாடினால் – இன்பத்திலும் துன்பத்திலும் மகிழ்விலும் கஷ்டத்திலும்– எல்லா நிலைகளிலும் இத்தகைய வாய்மையுடனான வணக்க வழிபாட்டில் நிலைத்திருந்தால் பூமியில் ஆட்சியதிகாரத்தைஅவனுக்குஅல்லாஹ் வழங்குகிறான்.

ஆக! பூமியில் ஆட்சியதிகாரம் வழங்கப்பட வேண்டுமானால் முதலில் இந்தப்பண்பைக் கண்டிப்பாகக்கடைப்பிடித்திருக்கவேண்டும்„ அதுவே இணைதுணையில்லாதஏக இறைவனுக்கு வழிபடுவது! – நீடித்த நிலையான இறைவழிபாட்டிற்கும் வாய்மைக்கும் பிறகே நம்பிக்கையாளர்களுக்கு ஆட்சியதிகாரம் வழங்கப்படுகிறது!

☐ இரண்டாவது பண்பு தொழுகையை நிலைநாட்டுவதாகும். தொழுகையை எந்த முறையில் நிறைவேற்ற வேண்டுமென வலியுறுத்தப்பட்டுள்ளதோ அந்த முறையில் நிறைவேற்றிட வேண்டும். அதன் நிபந்தனைகள், முதல்நிலைக் கடமைகள், இரண்டாம்

நிலைக் கடமைகள் ஆகிய அனைத்தையும் பேணிட வேண்டும். தொழுகையின் முஸ்தஹப் எனும் விரும்பத்தக்கவை அனைத்தையும் பேணுவது நிறைவேற்றுதலின் முழுமையான நிலையாகும்.

முஸ்லிம்கள் உளூவை அழகாகச் செய்ய வேணடும். ருகூவு, ஸுஜூது, நிலையில் நிற்குதல், அமர்தல் ஆகிய அம்சங்களை நிறைவேற்ற வேண்டும். ஜும்ஆவையும் ஜமாஅத் தொழுகைளயும் பேணிட வேண்டும். மேலும் உள்ளச்சத்தையும் பேணிடவேண்டும். உள்ளச்சம் என்பது மனஓர்மையும் உறுப்புகளின் அமைதியுமாகும். திண்ணமாக தொழுகையின் ஜீவனும்சத்தும் அதன் உள்ளச்சம் தான். உள்ளத்தில் அச்சமில்லாத தொழுகை உயிரில்லா உடலைக் போன்றதாகும்!

அம்ர் பின் யாஸிர்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி(ஸல்) அவர்கள் அருளினார்கள்:„ஒருமனிதன் (தொழுகைளை முடித்துக் கொண்டு)திரும்புகிறான்„ ஆனால் அவனுடைய தொழுகைக்குரிய கூலியில் பத்தில் ஒருபங்கோ ஒன்பதில் ஒருபங்கோ எட்டில் ஒரு பங்கோ ஏழில் ஒருபங்கோ ஆறில் ஒருபங்கோ ஐந்தில் ஒருபங்கோ நான்கில் ஒருபங்கோ மூன்றில் ஒருபங்கோ அல்லது பாதியோ தவிர அவனது பெயரில் எழுதப்படுவதில்லை„ நூல் : அபூதாவூது, நஸாஈ[53]

☐ மூன்றாவது பண்பு ஜகாத் வழங்குவதாகும். அதனைப் பெறத் தகுதியுடையவர்களுக்கு - அவர்கள் மன திருப்தி அடையும் அளவுக்கு - அதனை வழங்குவார்கள். அல்லாஹ்வின் அருளையும் அவனது உவப்பையும் நாடுவார்கள். ஜகாத் வழங்குவதன் மூலம் தங்களது மனத்தைத் தூய்மைப் படுத்துவார்கள். தங்களுடைய சொத்துக்களைச் சுத்தப்படுத்துவார்கள்.வறியவர்கள், ஏழைகள் மற்றும் தேவைகளுடைய தம் சகோாரர்களுக்குப் பயனளிப்பார்கள். ஜகாத் பெறுவதற்குத் தகுதியானவர்கள் யார் யார் என்கிற விளக்கம் முன்னர் 17 வது மஜ்லிஸில் சென்றுள்ளது.

☐ நான்காவது பண்பு, நன்மைபுரிமாறு ஏவுவதாகும். நன்மை (மஃரூஃப்) என்பதில் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் கட்டளையிட்டுள்ள கடமைகள், முஸ்தஹப் (விரும்பத்தக்க செயல்)கள் அனைத்தும் அடங்கும். இவற்றை நிறைவேற்றுமாறு மக்களை

---

53 இராக்கி அவர்கள் இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் என்று சொல்லியுள்ளார்கள்.

அவர்கள் ஏவிட வேண்டும் என்பதன் நோக்கம் அல்லாஹ் வழங்கிய ஷரீஅத் சட்டங்களை உயிர் பெறச்செய்வதும் அவனுடைய அடியார்களைச் சீர்திருத்துவதும் அவனது அருளையும் உவப்பையும் பெறவிழைவதுமாகும்.

ஓர் இறைநம்பிக்கையாளன் மற்றொரு நம்பிக்கையாளனுக்கு - ஒரு பகுதி மற்றொரு பகுதியை இணைத்து வலுவூட்டுகிற ஒரு கட்டடத்தைப் போன்றாவான்.எனவே ஒருநம்பிக்கைளாளன், இறைவனுக்குக் கீழ்ப்படியும் அடியானாகத் திகழ வேணடும்என்று தன்னைப் பொருத்து எவ்வாறு விரும்புகிறானோ அவ்வாறே தன் சகோரர்களும் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிபவர்களாய்த் திகழ்திட வேண்டுமென விரும்பிட வேண்டும். மேலும் நன்மை புரியுமாறு ஏவதல் எனும் இப்பணி உண்மையான நம்பிக்கையுடனும் கொள்கைப் பிடிப்புடனும் மேற்கொள்ளப்பட்டால் அப்பணி செய்பவர், எந்த நன்மை புரியுமாறு ஏவுகிறாரோ அதனை அவரும் அவசியம் செய்திடுவார். ஏனெனில் நன்மை புரியுமாறு அவர் முழு விசுவாசத்துடனும் கொள்கைப் படிப்புடனும்தான் அப்பணியில் இறங்கியுள்ளார். அப்பணியின் பயன் குறித்தும் அதன் உடனடியான விளைவுகள், மறுமையில் கிடைக்கும் நற்கூலிகள் குறித்தும் முழு திருப்தியுடன்தான் அப்பணியை மேற்கொண்டுள்ளார்.

☐ ஐந்தாவது பண்பு தீமையை விட்டும் மக்களைத் தடுப்பதாகும். தீமை(முன்கர்) என்பது அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் தடுத்துள்ள பெரும் பாவங்கள் மற்றும் சிறிய பாவங்கள் அனைத்தையும் உள்ளடக்கும்அவை வணக்க வழிபாட்டில் செய்யப்படுபவையாக இருந்தாலும் சரியே, குணநலன்கள், நடைமுறைகள் - உறவுகள் தொடர்பானவையாக இருந்தாலும் சரியே! இத்தகைய எல்லாத் தீமைகளைவிட்டும் அவர்கள் மக்களைத் தடுத்திட வேண்டும். அப்பணியில் அவர்களின் குறிக்கோள் அல்லாஹ்வின் மார்க்கத்தைப் பாதுகாப்பதாகவும் அவனுடைய அடியார்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதாகவும் இருக்க வேண்டும். மேலும் அராஜகம் மற்றும் தண்டனைக்கான காரணிகளைவிட்டும் ஈடேற்றம் பெறுவதாகவும் இருக்க வேண்டும்.

நன்மை புரியுமாறு ஏவுதல்-தீமையைத் தடுத்தல் எனும் பணிகள் சமுதாயத்தின் நிலைப்பாட்டிற்கும் அதன் கண்ணியத் திற்கும் வலுவான காரணிகளாயத் திகழ்கின்றன! சமுதாய மக்களை - அவர்களின் அபிலாசைகள் கூறுபோடாதவாறு-அவர்களின் செயல்

முறைகள் சிதறிப்போகாதவாறு ஒற்றுமையைப் பாதுகாக்கக் கூடியவையாகவும் உள்ளன! இதனால்தான் நன்மைபுரியு மாறு ஏவதல்—தீமையை விட்டும் தடுத்தல் எனும் பணிகள் முஸ்லிமான ஆண்கள் – பெண்கள் மீதான மார்க்கக் கடமையாக உள்ளன. ஆற்றல் பெற்றிருத்தல் எனும் நிபந்தனையுடன்!

ولتكن منكم امة يدعون الي الخير و يأمرون بالمعروف وينهون عن المنكر واؤلئك هو المفلحون و لاتكونوا كا لذين تفرقوا واختلفوا من بعد ما جاء هم البينات و اؤلئك لهم عذاب عظيم

அல்லாஹ் கூறுகிறான்:„ நல்லவற்றின் பக்கம் அழைக்கக் கூடிய ஒரு குழுவினர் உங் களிடையே அவசியம் இருந்திட வேண்டும். அவர்கள் நன்மை புரியும்படி ஏவிட வேண்டும்., தீமையை விட்டும் தடுத்த வண்ணம் இருக்க வேண்டும்., இப்பணியைச் செய்யக் கூடியவர்களே வெற்றியாளர்கள் ஆவர். எவர்கள் தம்மிடம் தெளிவான அறிவுரைகள் வந்த பின்னர் தங்களுக்குள் கருத்து வேறுபாடு கொண்டு பற்பல பிரிவினராய்ச் சிதறுண்டு போனார் களோ அவர்களைப்போல் நீங்களும்ஆகிவிடாதீர்கள். இப்படிப்பட்ட வர்களுக்கு (மறுமை யில்) கடுமையான தண்டனை உண்டு!„ குர்ஆன் (3 : 104–105)

ஆம்! நன்மை பரியுமாறு ஏவுதல், தீமையைத்தடுத்தல் என்கிற பணிகள் இல்லையானால், மக்கள் பற்பல பிரிவினர்களாய்ப் பிளவு பட்டுப் போவர்! சின்னாப் பின்னமாகச் சிதறிப் போவர்!

كل حزب بما لديهم فرحون

„ ஒவ்வொரு பிரிவினரும் தம்மிடம் எதுவுள்ளதோ அதைக் கொண்டு மகிழ்வடைந்து கொண்டிருப்பார்கள்!„ – மட்டுமல்ல இந்தப் பணிகளின் மூலமாகத்தான் இந்தச்சமுதாயம் ஏனைய சமு தாயங்களைக் காட்டிலும் சிறப்புப் பெற்றுத் திகழ்கிறது!

அல்லாஹ் கூறுகிறான் :

كنتم خير امة اخرجت للناس تأمرون بالمعروف و تنهون عن المنكر و تؤمنون با لله

“ இனி மனித் இனத்தைச் சீர்திருத்தம் செய்வதற்காகத் தோற்று விக்கப்பட்டிருக்கும் சிறந்த சமுதாயமாய் நீங்கள் இருக்கிறீர்கள்., நன்மை புரியும்படி ஏவுகிறீர்கள்., தீமையை விட்டும் தடுக்கிறீர்கள்.

மேலும் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள்!„ குர்ஆன் (3 : 110)

இந்தப் பணியைக் கைவிட்டதனால்தான் முந்தைய சமுதாயத்தவரான பனூ இஸ்ராயீல்கள் இறைமுனிவுக்கு ஆளானார்கள். அல்லாஹ் கூறுகிறான் :

لعن الذين كفروا من بني اسرائيل علي لسان داؤد و عيسي بـن مريـم ذلـك بما عصـوا

وكانوا يعتدون كانوا لا يتناهون عن منكر فعلوه لبئس ما كانوا يفعلون

„பனூ இஸ்ராயீல்களில் யார் நிராகரித்தார்களோ அவர்கள் தாவூத் மற்றும் மர்யத்தின் குமாரர் ஈஸா ஆகியோரின் நாவினால் சபிக்கப்பட்டார்கள்! ஏனெனில் அவர்கள் (இறைக் கட்டளைக்கு) மாற்றமாக நடந்தார்கள். மேலும் இறைவரம்புகளை மீறிய வண்ணமிருந்தார்கள். தாங்கள் செய்துகொண்டிருந்த தீமையிலிருந்துஅவர்கள் ஒருவரையொருவர் தடுக்காமல் இருந்தார்கள். இவ்வாறு அவர்கள் செய்துகொண்டிருந்த செயல்கள் யாவும் கேடு கெட்டவையாக இருந்தன!„ (5 : 77 - 78)

அல்லாஹ்வின் கட்டளைப்படி ஊக்கம் - உறுதியுடனும் ஆயுத வலிமைகளைத் தயார் படுத்துவதுடனும் - மேற்சொன்ன ஐந்து பண்புகளும் எப்போது உறுதிப்படுகிறதோ அப்போது வெற்றி கிட்டிவிடும்„ அல்லாஹ்வின் அனுமதி கொண்டு!

وعد الله لا يخلف الله وعده ولكن الناس لايعلمون يعلمون ظـاهرا مـن الحيـاة الدنيـا

وهم عن الاخرة غافلون

„இது அல்லாஹ் அளித்த வாக்குறுதி ஆகும். அல்லாஹ் ஒரு போதும் தன் வாக்குறுதிக்கு மாற்றமாக நடப்பதில்லை. ஆயினும் மக்களில் பெரும்பாலோர் அறிவதில்லை!„ (30 : 5)

ஆம்! இந்தச் சமுதாயத்திற்கு-அவர்களின் உள்ளத்தில் உதித்திருக்காத அளவு அல்லாஹ்வின் உதவி கிட்டுகிறது! அல்லாஹ்வின் வாக்கை உறுதியாக நம்புகிற நம்பிக்கையாளன் உறுதியாக அறிவான்„ இந்த உலகாயதக்காரணிகள்- அவை எவ்வளவுதான் வலிமைபெற்றிருந்தாலும் அவற்றைப் படைத்து உருவாக்கிய அல்லாஹ்வின் முன்னால் அவற்றிற்கு எந்த மதிப்புமில்லை என்பதை!

ஆத் சமூகத்தினர் தங்களது ஆற்றல் பற்றி பெருமை கொண்டனர். எங்களைவிட வலிமை மிக்கவர்கள் யார் என்று கேட்டனர்! அல்லாஹ் கூறினான் :

او لو يروا ان الله الذي خلقهم هو اشد منهم قوة و كانوا بآياتنا يجحدون فارسلنا عليهم ريحا صرصرا في ايام نحسات لنذيقهم عذاب الخزي في الحياة الدنيا و لعذاب الاخرة اخزي و هم لاينصرون

"அவர்களைப் படைத்த இறைவன் அவர்களைவிட வலிமை மிக்கவன் என்பது அவர்களுக்குப் புலப்பட வில்லையா? மேலும் அவர்கள் நம்முடைய சான்றுகளை மறுத்துக் கொண்டிருந்தார்கள். இறுதியில் அபசகுனமுடைய சில நாட்களில் கடும் புயற்காற்றை அவர்களின் மீது நாம் அனுப்பினோம்,, இவ்வுலக வாழ்விலேயே இழிவான வேதனையை அவர்ளுக்குச் சுவைக்கக் கொடுக்கவேண்டும் என்பதற்காக! மேலும் மறுமையின் வேதனை இதைவிடவும் இழிவு தரக் கூடியதாகும். அங்கு அவர்களுக்கு உதவி செய்யப்பட மாட்டாது! ,, அல் குர்ஆன் (41 : 15-16)

ஃபிர்அவ்ன் எகிப்து நாட்டின் ஆட்சியைக் கொண்டும் அதன் கீழ் ஓடிக்கொண்டிருந்த நதிகளைக் கொண்டும் பெருமையடித்தான். எந்த நதிகளைக்கொண்டு ஃபிர்அவ்ன் பெருமைபேசினானோ அந்த நதிகளிலேயே அவனை அல்லாஹ் மூழ்கடித்தான். பிறகு அவனது ஆட்சியதிகாரத்திற்கு மூஸா நபியையும் அவர்களுடைய சமுதாயத்தாரையும் வாரிசுகள் ஆக்கினான்! அந்த மூஸா தான் ஃபிர்அவ்ன் பார்வையில் இழிந்தவராகவும் எந்தக் கருத்தையும் தெளிவாக எடுத்துரைக்க இயலாதவராகவும் இருந்தார்!

குறைஷிகள் தங்களது கௌரவம் மற்றும் அதிகார பலம் குறித்து பெருமையடித்தார்கள். த ங்களின் இல்லங்களில் இருந்து தங்கள் தலைவர்ளும் முக்கியஸ்தர்களும் புடைசூழ ஆணவத்துடனும் மக்களுக்குக் காட்டிக் கொள்ளும் வண்ணமும் புறப்பட்டார்கள்.- நாங்கள் பத்று மைதானம் சென்று தங்கியிருந்த பிறகே மக்கா திரும்புவோம்,, அங்கு ஒட்டகங்களை அறுப்போம்,, மது பானங்கள் புகட்டுவோம்,,அடிமைப்பெண்கள் எங்களுக்குக் கவிதை பாடுவார்கள்! எங்களைப் பற்றி இதர அரபு மக்கள் கேள்விப்பட்டு காலாகாலம் எங்களைக் கண்டு பயப்படவேண்டும் - என்று சொன்னார்கள்!

ஆனால் என்ன நடந்தது? நபி (ஸல்) அவர்களுடைய கரங்களாலும் அவர்களுடைய தோழர்களுடைய கரங்களாலும் மிகக்கேவலமான முறையில் குறைஷிகள் தோற்றகடிக்கப்பட்டார்கள்!
கொல்லப்பட்ட அவர்களின் சடலங்கள் பத்றின் பாழ் கிணற்றிலும் படுகுழிகளிலும் வீசியெறிப்பட்டன! மறுமை நாள் வரையில் மக்களால் இழிவோடும் கேவலத்தோடும் பேசப்படுபவர்களாய் ஆயினர்!

இன்றைய காலகட்டத்தில் முஸ்லிம்களாகிய நாம் வெற்றிக்கான காரணிகள் அனைத்தையும் கையாண்டோமானால், நமது இறைமார்கத்தின் கடமைகளை நிறைவேற்றிவந்தோமானால், நாம் பிறர் பின்னால் செல்லும்போக்கை மாற்றி மற்றவர்கள் நம்மைப் பின்பற்றி வரும் வகையில் முன்னோடிகளாக வாழ்ந்தோமானால் – தற்காலத்துப் போர்ச் சாதனங்கள் அனைத்தையும் உண்மையுடனும் வாய்மையுடனும் நாம் கையாண்டோமானால் அல்லாஹ் நிச்சயம் நம்முடைய எதிரிகளின் மீது நமக்கு வெற்றியைத் தருவான்., நம்முடைய முன்னோர்களுக்கு வெற்றியும் உதவியும் அளித்தது போன்று!

صدق الله وعده ونصر عبده و هزم الاحزاب وحده

"அல்லாஹ் தனது வாக்குறுதியை உண்மைப்படுத்தினான். தன் அடியாருக்கு உதவிபுரிந்தான்.,எதிரிப்படைகளை அவன் ஒருவனே தோல்வியடையச் செய்தான்!"

سنة الله التي قد خلت من قبل و لن تجد لسنة الله تبديلا

"முன்பிருந்தே நடைபெற்று வருகிற அல்லாஹ்வின் நயதியாகும் இது. மேலும் அல்லாஹ்வின் நியதியில் எந்த மாறுதலையும் நீர் காணமாட்டீர்!"

யா அல்லாஹ் வெற்றிக்கான காரணிகளை எங்களுக்குத் தயார் படுத்தித் தருவாயாக! வேற்றிக்கான எந்தக் காரணிகளின் மூலம் எங்களுக்கு உதவியும் கண்ணியமும் கௌரவமும் கிடைக்குமோ – இஸ்லாத்தின் உயர்வு கிட்டுமோ மேலும் கு.்.ப்ர் எனும் இறைமறுப்பும் பாவம்புரிதலும் இழிவடைந்துபோகுமோ அந்தக் காரணிகளை எங்களுக்குத் தயார் படுத்தித் தருவாயாக! நிச்சயமாக நீ கொடையாளனும் கண்ணியமிக்கவனும் ஆவாய்!

المجلس الحادي و العشرون

# في فضل العشر الاخير من رمضان

21 வது மஜ்லிஸ்

# ரமளானின் கடைசி பத்து நாட்களின் சிறப்பு

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே– மாண்பு, மகத்துவம், ஸ்திரத்தன்மை, பெருமை, கண்ணியம் ஆகியற்றில் தனித்துவம் பெற்றுத் திகழ்பவன். ஒரே இறைவன்., ஏகன்., வல்லமை மிக்க அதிபதி. எவரிடத்தும் எத்தேவையும் இல்லாத அரசன். கற்பனையால்கூட நெருங்முடியாத அளவு உயர்ந்தவன். அறிவாலும் சிந்தனையாலும்கூட அறிந்திட முடியாத அளவு மகத்துவமும் மாண்பும் மிக்கவன். தன்னுடைய அனைத்துப் படைப்புகளைவிட்டும் தேவைகள் அற்றவனாய்–தன்னிறைவுடையவனாய்த் திகழ்பவன்! அவனல்லாதார் அவனிடம் என்றென்றும் தேவையுடையவராய் உள்ளனர்!

தான் நாடியவர்களுக்கு நல்லருள் பாலிப்பவன்! அப்படிப்பட்டவர்கள் அவன் மீது விசுவாசம் கொண்டனர்., நேர்வழியில் நிலைத்து நின்றனர். பிறகு தம்முடைய இறைவனோடு உரையாடும் இன்பத்தைப்பெற்றனர்.,நித்திரையின் இன்பத்தைத் துறந்தனர்! ஆனாலும் நல்லவர்களோடு தோழமை கொண்டனர்! அவர்கள் இரவில் – தொழுவதற்காக படுக்கைகளை விட்டும் எழுகின்றனர். உயர் அந்தஸ்தைப் பெற ஆாவம் கொள்கின்றனர்.

இருள் சூழ்ந்த இரவு நேரத்தில் இதோ! அவர்கள் ஆன்மீகப் பயணம் புறப்பட்டிருப்பதை நீங்கள் பார்க்க வேண்டுமே! அங்கே ஒருவர், தன்னுடைய குற்றங்குறைகளைப் பொறுத்தருளுமாறு இறைவனிடம் இறைஞ்சிக் கொண்டிருக்கிறார். மற்றொருவர் தனது ஆற்றாமையை முறையிட்டுக்கொண்டிருக்கிறார். இன்னொருவரோ எதையும் இறைவனிடம் இறைஞ்சாமல் அவனை திக்ர்

செய்வதிலேயே ஈடுபட்டிருக்கிறார். மக்களெல்லாம் நித்திரையில் மூழ்கியிருக்கும்போது இவர்களைமட்டும் விழித்தெழச்செய் திருக் கும் அந்த இறைவனை நான் துதிக்கிறேன்!மன்னித்துப் பொறுத் தருளிய இறைவன் மிகவும் அருட்பாக்கியமுடையவன்! அவனே குற்றங்குறைகளை மறைத்து உதவி புரிந்தான். எல்லா மக்கள் மீதும் அனைத்து உபகாரங்களையும் பொழிந்தான்!

அவன் பொழிந்த மகத்தானஅருட்கொடைகளின்பேரில் அவனை நான் புகழ்கிறேன்.,அவனுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்., இஸ் லாம் எனும் அருட்கொடையைப் பாதுகாக்குமாறு அவனிடம் இறைஞ்சுகிறேன்!

வணக்கதிற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவன் தனித்தவன்., அவனுக்கு யாதொரு இணையுமில்லை. அவனது உதவியால் யார் கண்ணி யம் பெற்றாரோ அவர் வலிமை பெற்றுவிட்டார். எவ்வித அநீதிக் கும் அவர் ஆளாக மாட்டார். அவனுக்கு அடிபணியாமல் ஆண வம் கொண்டவர் – பாவங்கள் புரிந்தவர் இழிவுக்கும் கேவலத் துக்கும் ஆளாகிவிட்டார்.

மேலும் முஹம்மத் நபி அல்லாஹ்வின் அடிமையும் (ஹலால்– ஹராம்) ஆகுமான, விலக்கப்பட்ட எல்லா விஷயங்களையும் தெளி வுபடுத்திய தூதரும் ஆவார்கள் என்றும் நான் சாட்சி சொல்கி றேன்.

நபியவர்கள் மீதும் – குகையில் சிறந்த பயணத்தோழராய்த் திகழ்ந்த அபூ பக்ர் ஸித்தீக் மீதும் – சீரான கருத்துகளின் பால் வழிகாட்டப்பட்வரான உமர் மீதும்– துன்பங்களைப் பொறுமை யோடு சகித்துக் கொண்டவரும் எதிரிகளின் கரங்களால் ஷஹாதத் (உயிர்த் தியாகம்)எனும் பெரும் சிறப்புப்பெற்றவருமான உஸ்மான் மீதும் – நபியவர்களுடைய பெரிய தந்தை அபூ தாலிபின் புதல் வர் அலீயின் மீதும் – அனைத்து ஸஹாபாக்கள் மீதும் அவர் களை வாய்மையுடன் பின்பற்றிய தாபிஈன்கள் மீதும் கீழ்வானில் தாரகைகள் மறைந்து கொண்டிருக்கும்காலெமெல்லாம் அல்லாஹ் ஸலவாத் பொழிந்து கொண்டிருப்பானாக!அனைவருக்கும் ஈடேற் றம் அளிப்பானாக!

சகோதரர்களே! இப்போது ரமளான் மாதத்தின் கடைசிபத்து நாட் கள் உங்களிடம் வந்திருக்கின்றன. இந்நாட்களில் அதிகமான நன்மைகளும் நற்கூலிகளும் உள்ளன! இவற்றிற்குப் பல சிறப்புத்

தன்மைகளும் உண்டு„ அவை பிரபலமானவையும் மகத்தானவை யும் ஆகும்.

அத்தகைய சிறப்புகளில் ஒன்று என்னவெனில்,„நபி(ஸல்)அவர் கள் இந்நாட்களில் அமல் செய்வதில் அழுத்தமான முயற்சியுடன் ஈடுபடுபவர்களாய் இருந்தார்கள். மற்ற நாட்களைக் காட்டிலும் அதிகமாக!

في صحيح مسلم عن عائشة رضي الله عنها ان النبي ﷺ كان يجتهد في العشر الاواخر ما لا يجتهد في غيره

ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:„நபி(ஸல்)அவர்கள் (ரமளாளன்) கடைசி பத்து நாட்களில் அமல் செய்வதில் அழுத்த மான முயற்சியுடன் ஈடுபடுபவர்களாய் இருந்தார்கள். வேறு நாட்க ளில் இதுபொன்ற முயற்சியை அவர்கள் மேற்கொண்டதில்லை„ நூல் : முஸ்லிம்

في الصحيحين عنها قالت : كان النبي ﷺ اذا دخل العشر شد مئزره و احيا ليله و ايقظ اهله

மேலும் ஆயிஷா (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„(ரமளானின் கடைசி)பத்து வந்து விட்டால் நபி(ஸல்)அவர்கள் கச்சைகட்டிக் கொண்டு அவற்றின் இரவுகளை விழித்திருந்து கழிப்பார்கள்„ தம் குடும்பத்தினரையும் விழித்தெழச் செய்வார்கள்„ நூல்: புகாரி, முஸ்லிம்

في المسند عنها قالت : كان النبي ﷺ يخلط العشرين بصلاة و نوم فاذا كان العشر شمر و شد المئزر

மேலும் ஆயிஷா(ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக்கப்படு கிறது:„நபி (ஸல்) அவர்கள் முந்தைய இருபது நாட்களி (ன் இரவுகளி)ல் தொழவும் செய்வார்கள்„ தூங்கவும் செய்வார்கள். ஆனால் கடைசி பத்து நாட்கள் வந்துவிட்டால் கச்சை கட்டிக் கொண்டு (அமல்களில்) முழுமையாக ஈடுபாடுவார்கள்!„ நூல் : முஸ்னத் அஹ்மத்

ரமளான் மாதத்தின் இறுதிப் பத்து நாட்களுடைய சிறப்புக்கு இந்த நபிமொழிகள் ஆதாரமாக உள்ளன. நபி (ஸல்) அவர்கள் இந்த பத்து நாட்களில் அமல்கள் செய்வதில் அழுத்தமான முயற் சியுடன் ஈடுபாடு கொள்வது,முந்தைய நாட்களில் அப்படி ஈடுபாடு

கொள்வதைவிடவும் அதிகமாக இருந்தது! --- குர்ஆன் ஓது வது, திக்ர் செய்வது, தர்மம் வழங்குவது, போன்ற எல்லா வித மான ஈடுபாட்டையும் இது உள்ளடக்கும்.

- மேலும் நபி (ஸல்) அவர்கள் இறுதிப் பத்தின் இரவுகளில் வரிந்து கட்டிக் கொண்டு செயல்படுகிறவர்களாய் இருந்தார்கள். இதன் பொருள், நபி(ஸல்) அவர்கள் தொழுகையிலும் திக்ரிலும் முழுமையாக ஈடுபடுவதற்காகத் தம் மனைவியரை விட்டும் விலகி யிருப்பார்கள் என்பதாகும்.

- மேலும் நபி(ஸல்) அவர்கள் இந்த நாட்களில் இரவு முழு வதும் விழித்திருந்து தொழுகையிலும் குர்ஆன் ஓதுவதிலும் திக்ர் செயவதிலும் ஈடுபாட்டிருப்பார்கள்! அவர்கள் திக்ர் செய்வது - உள்ளம், நாவு, மற்றும் உறுப்புகளால் மேற்கொள்ளப்படுவதாக இருந்தது! நபியவர்கள் இவ்வாறு ஈடுபட்டற்குக் காரணம் இந்த இரவுகளின் சிறப்பேயாகும். லைலதுல் கத்ர் இரவைத்தேடிப் பெறு வதும் ஒரு காரணமாகும். அது எத்தகைய இரவு எனில் அதில் இறைவிசுவாசத்துடனும் மறுமைக் கூலியை எதிர்பார்த்தும் எவர் நின்று தொழுகிறாரோ அவருடைய முந்தைய பாவங்கள் அனைத் தையும் அல்லாஹ் மன்னித்துவிடுகிறான்!

மேலே சொன்னநபிமொழியின் வெளிப்படையான கருத்து என்ன வெனில் நபி (ஸல்) அவர்கள் ரமளானின் நாட்களில் இரவு முழு வதும் தன் இரட்சகனுக்கு வணக்கவழிபாடுகள் செலுத்துவதில் ஈடுபட்டிருப்பார்கள் அதாவது, திக்ர் செய்வதில், குர்ஆன்ஓதுவதில் தொழுவதில், இவற்றிற்காக தயாராகுவதில் - இவை போன்றவற் றில் இரவு முழுவதும் ஈடுபட்டிருப்பார்கள்., ஸஹர் எனும் பின்னி ரவு நேரத்தில் உண்பதும் இவற்றில் அடங்கும்.

-இந்த விளக்கத்தின் மூலம்-இந்த நபிமொழிக்கும்-நபி (ஸல்) அவர்கள் எந்த இரவிலும் காலைவரை தொழுது கொண்டிருந்த தாக நான் அறியவில்லை என்கிற ஆயிஷா (ரலி)அவர்களின் மற் றோர் அறிவிப்புக்கும் (நூல்: ஸஹீஹ் முஸ்லிம்)கருத்தொற்றுமை ஏற்படுகிறது! ஏனெனில் கடைசிப் பத்தில் கடைப்படிக்கப்பட்ட இஹ்யாவுல் லைல் - இரவு முழுவதும் விழித்திருந்து வழிபடு தல் என்பது, தொழுவதைக் கொண்டும் பிறவகை வழிபாடுகளில் ஈடுபடுவதைக் கொண்டும் அமைவதாகும். ஆனால் ஆயிஷா(ரலி) அவர்கள் மறுத்திருப்பது நபியவர்கள் தொழுகையில் மட்டும்

ஈடுபட்டு இரவைக் கழித்தார்கள் என்பதைத்தான்! – அல்லாஹ் மிக அறிந்தவன்!

மேலும் கடைசிப் பத்து நாட்களின் சிறப்பு குறித்து இந்நபி மொழிகள் எடுத்துரைப்பது என்னவெனில், நபி (ஸல்) அவர்கள் இந்த நாட்களின் இரவுகளில் தொழுகைக்காகவும் திக்ர் செய்வதற்காகவும் – தங்களுடைய குடும்பத்தினரைத் தூக்கத்திலிருந்து எழுப்புவார்கள் என்பதாகும். அந்தஅளவுக்கு– பாக்கியமிக்க இந்த இரவுகளை அரிதாகக் கருதுவதிலும் பொறுத்தமான வழிபாடுகளை நிறைவேற்றுவதிலும் ஆர்வமுள்ளவர்களாக இருந்தார்கள்!

எனவே இந்த இரவுகள் – அல்லாஹ்வின் நற்பாக்கியம் பெற்ற மக்களுக்கு வாழ்நாளின் அரிய சந்தர்ப்பமாகும். பெறற்கரிய பொக்கிஷமாகும். மதிப்புமிக்க இந்த சந்தர்ப்பத்தை தானும் அடையாமல் தன் குடும்பத்தினரும் அடையாமல் கைநழுவிப்போகச் செய்வது அறிவுடைய இறைநம்பிக்கையாளருக்கு உகந்ததல்ல! இவை ஒருசில குறிப்பிட்ட இரவுகள்தாம்! இந்த இரவுகளில் தன் இரட்சகன் புறத்திலிருந்து வீசும் சுகந்தங்களில் ஒன்றைச்சில நேரம் மனிதன் பெற்றிடலாம்! அது இவ்வுலகிலும் மறுமையிலும் அவனுக்குப் பெரும் பாக்கியமாக அமைந்துவிடும்!

ஆனால் முஸ்லிம்களின் நிலை அதிகக் கவலைக்குரியதாகவும் பெரிய துர்ப்பாக்கியமாகவும் உள்ளது. அவர்கள் மதிப்புமிக்க இந்த இரவுகளை எவ்விதப்பயனுமின்றி கழித்துக் கொண்டிருப்பதை நீங்கள் காணலாம்! இரவில் வெகுநேரம் வரை கண்விழித்திருந்து வீணான கேளிக்கைகளில் மூழ்கியிருக்கிறார்கள். தொழுகையில் நிற்கும் நேரம் வந்துவிட்டால் தூங்கச்சென்று விடுகிறார்கள்! ஏராளமான நன்மைகளை வீணாக்கிவிடு கிறார்கள். இந்த வருடம் போய்விட்டால் இனியொரு தடவை அவர்களால் இந்த ரமளானைப் பெறமுடியாமல் போகலாம்! இது ஷைத்தான் அவர்களை விளையாடிவிட்டதன் விளைவாகும். ஷைத்தான் தனது சூழ்ச்சி வலையில் அவர்களைச் சிக்கவைத்ததனால் – அல்லாஹ்வின் வழியைவிட்டு அவர்களைத் தடுத்து திசைதிருப்பியதனால் நேர்ந்த தீயகதியாகும்!

قال ا لله تعالي : ان عبادي ليس لك عليهم سلطان الا من اتبعك من الغاوين

“அல்லாஹ் கூறுகிறான்: (ஷைத்தானை நோக்கி) திண்ணாக என்னுடைய (வாய்மையான) அடியார்கள் மீது உனது அதிகாரம்

செல்லுபடியாகாது. ஆனால் எவர்கள் உன்னைப் பின்பற்றி வழி கெட்டுப்போகிறார்களோ அவர்களின் மீதே தவிர!„ குர்ஆன் (15:42)

ஓர் அறிவாளி அல்லாஹ்வை விடுத்து ஷைத்தானை தனது பாதுகாவலனாக - நேசத்திற்குரியவனாக ஆக்கிக்கொள்ளமாட்டான். தன்னோடு அவன் பகைமை கொண்டிருப்பதை அறிந்துகொண்டே! அப்படிச் செய்வது திண்ணமாக அறிவுக்கும் இறைவிசுவாசத்திற்கும் முரணானதாகும். அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : افتتخذونه و ذريته اولبياء من دوني وهم لكم عدو بئس للظالمين بدلا

„ நீங்கள் என்னை விடுத்து அவனை(அதாவது ஷைத்தானை) யும் அவனுடைய சந்ததிகளையும் உங்களுடைய பாதுகாவலர்களாக ஆக்கிக் கொண்டீர்களா? அவர்களோ உங்களின் பகைவர்களாய் உள்ளனரே! எத்தனை மோசமான மாற்றை இந்தக் கொடுமையாளர்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்!„ குர்ஆன் (18 : 50)

وقال الله تعالي : ان الشيطان لكم عدو فـاتخذوه عـدوا انما يدعـو حزبـه ليكونـوا مـن اصحاب السعير

“திண்ணமாக ஷைத்தான் உங்களின் பகைவனாவான். ஆகையால் நீங்கள் அவனை உங்களின் பகைவனாகக் கருதுங்கள். அவன் தன்னைப் பின்பற்றுபவர்களை அழைத்துக் கொண்டிருப்பது- அவர்கள் நரக வாசிகளாய் ஆகிவிடவேண்டும் என்பதற்காகத் தான்!„ (35 : 6)

இந்த இறுதிப்பத்து நாட்களின் இன்னொரு சிறப்பு என்னவெனில், நபி (ஸல்) அவர்கள் இந்த நாட்களில் இஃதிகாஃப் இருந்துள்ளார்கள் என்பதாகும். இஃதிகாஃப் என்பது அல்லாஹ்வின் வழிபாட்டிலேயே முழுமையாக ஈடுபடுவதற்காக மஸ்திலில் தங்கிவிடுவதாகும். இப்படிச் செய்வது குர்ஆன் மற்றும் ஹதீஸின் மூலம் உறுதிப் படுத்தப்பட்ட நெறிமுறைகளின்பாற்பட்டது!

قال الله تعالي : ولا تباشروهن و انتم عاكفون في المساجد

அல்லாஹ் கூறுகின்றான்: „ஆனால் மஸ்ஜித்களில் நீங்கள் இஃதிகாஃப் இருக்கும் நிலையில் மனைவியரோடு வீடு கூடாதீர்கள்!„ (2 : 187)

மேலும் நபி(ஸல்)அவர்கள் இ∴திகா∴ப் இருந்தார்கள். நபியவர் களுடன் நபித்தோழர்களும் இ∴திகா∴ப் இருந்தார்கள். நபியவர்க ளுடனும் இருந்தார்கள். அவர்களுக்குப் பிறகும் இருந்தார்கள்.

فعن ابي سعيد الخدري ﷺ ان ا لنبي ﷺ اعتكف العشر الاول من رمضان ثم اعتكف العشر الاوسط ثم قال اني اعتكف العشر الاول التمس هذه الليلة ثم اعتكف العشر الاوسط ثم اتيت فقيل لي : انها في العشر الاواخر فمن احب منكم ان يعتكف فليعتكف - رواه مسلم

அபூ ஸயீத்- அல் குத்ரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.„நபி (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தின் முதல் பத்தில் இ∴திகா∴ப் இருந்தார்கள். பிறகு நடுப்பத்தில் இ∴திகா∴ப் இருந்தார்கள். பிறகு சொன்னார்கள் : நிச்சயமாக நான் முதல் பத்தில் இந்த (லைலதுல் கத்ர்) இரவைத் தேடிப்பெறுவதற்காக இ∴திகா∴ப் இருந்தேன். பிறகு நடுப்பத்தில் இருந்தேன். பிறகு எனது கனவில் வானவர் தோன்றி அறிவித்தார்: அந்த இரவு கடைசிப்பத்துநாட்களில் உள் ளது என்று! உங்களில் யார் (இந்தக் கடைசி நாட்களில்) இ∴தி கா∴ப் இருக்க விரும்புகிறாரோ அவர் இ∴திகா∴ப் இருக்கட்டும்„ நூல் : முஸ்லிம்

في الصحيحين عن عائشة رضي ا لله عنها قالت : كان النبي ﷺ يعتكف العشر الاواخر من رمضان حتي توفاه ا لله عز وجل ثم اعتكف ازواجه من بعده

ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:„நபி(ஸல்) அவர்கள் ரமளான் மாதம் கடைசி பத்து நாட்கள் இ∴திகா∴ப் இருந்துவந் தார்கள். அல்லாஹ், அவர்களை மரணம் அடையச்செய்யும் வரை யில்! அவர்களுக்குப் பிறகு அவர்களின் மனைவியர் இ∴திகா∴ப் இருந்தார்கள்„, நூல் : புகாரி

في صحيح البخاري عنها ايضا قالت كان النبي ﷺ يعتكف في كل رمضان عشرة ايام فلما كان العام الذي قبض فيه اعتكف عشرين يوما

மேலும் ஆயிஷா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் :„நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு ரமளானிலும் பத்து நாட்கள் இ∴திகா∴ப் இருப்பார்கள். ஆனால் எந்த ஆண்டில் மரணம் அடைந்தார் களோ அந்த ஆண்டில் இருபது நாட்கள் இ∴திகா∴ப் இருந்தார் கள்„, நூல்: புகாரி

அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் ரமளான் மாதம் இறுதிப் பத்து நாட்கள் இ∴திகா∴ப் இருப்பார்கள். பிறகு ஓர் ஆண்டில் அவர்கள் இ∴திகா∴ப் இருக்கவில்லை. ஆனால் அதற்கு அடுத்த ஆண்டு இருபது நாட்கள் இ∴திகா∴ப் இருந்தார்கள்„ நூல்: முஸ்னத் அஹ்மத், திர்மிதி, (இமாம் திர்மிதி அவர்கள் இதனை ஸஹீஹ் என்றார்கள் )

ஆயிஷா (ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக்கப்படுகிறது: நபி (ஸல்)அவர்கள் இ∴திகா∴ப் இருக்கவிரும்பினால் ஸுப்ஹு தொழு வார்கள்.பிறகு தமது இ∴திகா∴ப் இடத்திற்குச்சென்றுவிடுவார்கள். ஆயிஷாவும் இ∴திகா∴ப் இருக்க நபியவர்களிடம் அனுமதி கேட் டார்கள்.அவர்களுக்கு நபியவர்கள் அனுமதி அளித்தார்கள். எனவே ஆயிஷாவுக்கென ஒரு கூடாரம் அடிக்கப்பட்டது. ஹப்ஸா (ரலி) அவர்கள், தமக்காகவும் அனுமதி வாங்கித்தருமாறு ஆயிஷாவிடம் கேட்க ஆயிஷா அவ்வாறே செய்தார்கள். எனவே ஹப்ஸாவுக்காக வும் கூடாரம் அடிக்கப்பட்டது. ஜைனப்(ரலி)அவர்கள் இதனைக் கண்டபோது தமக்கும் ஒரு கூடாரம் அடிக்கச் சொன்னார்கள். அதன்படி அவர்களுக்கும்ஒருகூடாரம் அடிக்கப்பட்டது. நபி(ஸல்) இந்த கூடாரங்களைக் கண்டபோது– இது என்ன? என்று கேட் டார்கள். – ஆயிஷா, ஹப்ஸா, ஜைனப் ஆகியோரின் கூடாரங்கள் என்று தோழர்கள் பதிலளித்தார்கள்.அப்போது நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் : இதன் மூலம் புண்ணியம் செய்ய நாடுகிறார்களா? இவற்றை அகற்றுங்கள். இனிமேல் நான் இவற்றை காணக் கூடாது!„–அந்தக்கூடாரங்கள் அகற்றப்பட்டன!மேலும் நபி (ஸல்) அவர்கள் ரமளானில் இ∴திகா∴பை விட்டுவிட்டார்கள். பிறகு ஷவ்வால் மாதத்தில் முதல் பத்து நாட்களில் இ∴திகா∴ப் இருந் தர்கள். நூல் : புகாரி, முஸ்லிம்

இமாம் அஹ்மத்(ரஹ்)அவர்கள் சொல்லியுள்ளார்கள் : இ∴திகா∴ப் இருப்பது ஸுன்னத்–நபிவழி என்பதில் மாற்றுக்கருத்து எதனை யும் மார்க்க அறிஞர்களிடம் நான் அறியவில்லை„

இ∴திகா∴ப் இருப்பதன் நோக்கம் ஒருவன் பிற மனிதர்களை விட்டும்விலகி அல்லாஹ்வின் பள்ளிவாசல் ஒன்றில் அல்லாஹ்வை வழிபடுவதற்காக இருந்து விடுவதாகும்.அவனது கிருபையையும் நற்கூலியையும் லைலதுல் கத்ர் எனும் மாண்புமிகு இரவையும் அடைந்திடும் பொருட்டு!

இதனால்தான் இ∴திகா∴பில் ஈடுபடுகிறவர்கள் திக்ர் செய்வதில், குர்ஆன் ஓதுவதில், தொழுகை தொழுவதில், பிற வழிபாடுகள் செய்வதில் ஈடுபட்டிருப்பது அவசியமாகும். மேலும் உலக விசயங்களைப் பேசுவதுபோன்ற தேவையற்ற காரியங்களைவிட்டும் விலகிவிட வேண்டும்.ஆனால் இ∴திகா∴ப் இருப்பவர் ஏதேனும் நலனை முன்னிட்டு தன் குடும்பத்தாருடன் அல்லது மற்றவர்களுடன் ஆகுமான பேச்சுகளைக் குறைவாகப் பேசுவதில் குற்றமில்லை. ஏனெனில் நபி(ஸல்)அவர்களின் மனைவி ஸ∴பிய்யா(ரலி)அவர்கள் அறிவித்துள்ளார்கள் :

لحديث صفية ام المؤمنين رضي ا لله عنها قالت : كان النبي ﷺ معتكفا فاتيته ازوره ليلا

فحدثته ثم قمت لانقلب (لانصرف الي بيتي) فقام النبي ﷺ معي – متفق عليه

„ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் இ∴திகா∴ப் இருந்தார்கள்: நான் அவர்களைச்சந்திப்பதற்காக இரவுநேரத்தில் சென்றேன். அவர்களிடம் பேசிக்கொண்டிருந்தேன். பிறகு (வீட்டுக்குத்) திரும்புவதற்காக எழுந்தேன். நபி(ஸல்)அவர்களும் (சிறிது தூரம்) என்னுடன் வருவதற்காக எழுந்தார்கள்!„ நூல் : புகாரி, முஸ்லிம்

உடலுறவும் அதற்கு முன்னுள்ள காரியங்களான– முத்தமிடுதல், ஆசையுடன் தொடுதல் போன்றவையும் இ∴திபா∴ப் இருப்பவருக்கு ஹராம் – விலக்கப்பட்டவையாகும். அல்லாஹ் : கட்டளையிட்டுள்ளான் :„ஆனால் மஸ்ஜித்களில் நீங்கள் இ∴திகா∴ப் இருக்கும் நிலையில் மனைவியருடன் வீடுகூடாதீர்கள்!„ (2: 187)

ஆனால் இ∴திகா∴ப் இருப்பவர் மஸ்ஜிதில் இருந்து வெளியே வருவதெனில் அதில் சிறயதொரு விளக்கம் உள்ளது. அதாவது தலையையோ கால்களையோ வெளியே நீட்டுகிறார் என்றால் அதில் குற்றமில்லை. ஆயிஷா (ரலி)அவர்கள் அறிவித்துள்ளார்கள் :„நபி (ஸல்)அவர்கள் இ∴திகா∴ப் இருக்கும்போது மஸ்ஜிதில் இருந்து கொண்டு தங்களது தலையை வெளியே நீட்டுவார்கள். அவர்களது தலையை கழுவிவிடுவேன். அப்போது நான் மாதவிடாய் உடையவளாய் இருந்தேன்„ நூல் : புகாரி

மற்றோர் அறிவிப்பில்– பள்ளிவாசலில் இ∴திகா∴ப் இருந்த நபி (ஸல்) அவர்களுடைய தலைமுடியை ஆயிஷா (ரலி) அவர்கள் சீவிவிடுவார்கள். அப்போது ஆயிஷா அவாகள் மாதவிடாய் உடையவாகளாய் இருந்தார்கள்„–ஆயிஷா(ரலி) அவர்கள் அறைமி

னுள் இருக்கவே அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் தங்களது தலையை நீட்டியிருக்கிறார்கள்.,,

ஆனால் மஸ்ஜிதை விட்டு வெளியே செல்வதென்றால் அதில் மூன்றுவகை உள்ளன.

ஒன்று : இயற்கையாக அல்லது ஷரீஅத்தின் அடிப்படையில் இன்றியமையாத ஒருகாரியத்திற்காக வெளியே செல்வது. மலம்–ஜலம் கழிப்பது, கடமையான உளூ, பெருந்துடக்கினாலோ வேறு காரணத்தினாலோ கடமையான குளிப்பு, உண்பது, பருகுவது ஆகியவை போன்று! – மஸ்ஜிதில் இவற்றிற்கு வசதி இல்லை எனில் வெளியே செல்வது கூடும். மஸ்ஜிதில் கழிப்பறையும் குளியலறையும் இருக்கிறது எனில் அங்கு அவர் தனது தேவையை நிறைவேற்றிக் கொள்ளமுடியும்., குளித்துக் கொள்ளவும் முடியும் எனில் மேலும் அவருக்கு உணவும் தண்ணீரும் கொண்டு வர ஒருவர் இருக்கிறார் எனில் அப்போது மஸ்ஜிதைவிட்டு வெளியே செல்வது கூடாது. ஏனெனில் அதற்கு தேவையே இல்லை!

இரண்டு : கடமையல்லாத ஒருகாரியத்துக்கு வெளியே செல்வதாகும் இது. நோயாளியை நலம் விசாரிப்பது போன்று! மேலும் ஜனாஸாவைச் சென்று பார்ப்பது போன்று! இவற்றிற்காக அவர் வெளியே செல்லக் கூடாது. இஃதிகாஃபை தொடங்கும்போது இதனை ஒரு நிபந் தனையாக அவர் விதித்திருந்தாலே தவிர! எடுத்துக்காட்டாக, அவருடைய உறவினறோ நண்பரோ நோய் வாய்ப்பட்டுள்ளார்., அவரை இவர் நலம் விசாரிக்க விரும்புகிறார். அல்லது அந்த நோயாளி மரணம் அடைந்துவிடுவாரோ என்று அஞ்சுகிறார் எனில் தனது இஃதிகாஃபின் தொடக்கத்தில் – அதற்காக வெளியே செல்வதற்கு நிபந்தனை விதித்திருந்தால் வெளியே செல்வதில் குற்றமில்லை!

மூன்று : இஃதிகாபுக்கு முரணாக உள்ள காரியத்துக்காக வெளியே செல்வது. விற்பது – வாங்குவது, மனைவியுடன் வீடு கூடுவது, கூடிப்பழகுவது போன்ற காரியங்களுக்காக மஸ்ஜிதை விட்டும் வெளியே செல்வது போன்று! இஃதிகாஃப் இருப்பவர் இவற்றிற்காக வெளியே செல்லக்கூடாது. தொடக்கத்தில் நிபந்தனை விதித்திருந்தாலும் சரி விதிக்காவிட்டாலும் சரி! இது இஃதிகாஃபிற்கு எதிரானதும் அதன் இலட்சியத்திற்கு முரணானதுமாகும்.

இந்த கடைசி பத்து நாட்களின் மற்றொரு சிறப்புயாதெனில் லைலதுல் கத்ர்எனும் மாண்புமிக்கஇரவு இந்நாட்களில் உள்ளது. அது ஆயிரம் மாதங்களைவிடவும் சிறந்த இரவாகும். – எனவே சகோதரர்களே! இந்நாட்களின் சிறப்பை அறிந்துகொள்ளுங்கள். இவற்றை வீணாக்கிவிடாதீர்கள். இவற்றின்காலம் மதிப்புமிக்கது. இவற்றின் நன்மை வெளிப்படையானது!

யா அல்லாஹ்! எங்களது தீன் – இறைமார்க்கம் மற்றும் உலக வாழ்க்கையின் நன்மை எவற்றில் உள்ளதோஅவற்றை அடைந்திட எங்களுக்கு நல்லருள் புரிவாயாக! எங்களது இறுதி நிலையை அழகாக்கவாயாக! கருணைமிக்க இறைவா! உனது கருணையால் எங்களுக்கும் எங்க்கள் பெற்றோர்க்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் நீ மன்னிப்பு வழங்குவாயாக!

المجلس الثاني و العشرون

# في الاجتهاد في العشر الاواخر وليلة القدر

22 வது மஜ்லிஸ்

# இறுதிப் பத்தும் லைலதுல் கத்ரும்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே, அந்தரங்கமான, பகிரங்கமான எல்லாவற்றையும் அறிபவன். முரடர்களின் முதுகை வல்லமை கொண்டு முறிப்பவன். நீர்த்துளிகளைக்கூட எண்ணிக் கணக்கிடுபவன்., அவை பெருவெள்ளமாகி நதியில் ஓடுகிறது. இருவில் இருள் படரச்செய்பவன்.,அதிகாலை வெளிச்சம் அதனை அகற்றிவிடுகிறது! வழிபாடு செய்பவர்களுக்கு ஏராளமாய் நன்மை வழங்குபவன்., நிறைவாகக் கூலி கொடுப்பவன்! கண்களின் கள்ளத்தனத்தையும் நெஞ்சத்தில் மறைந்திருக்கும் ரகசியத்தை யும் அறியக்கூடியவன்! எல்லாப் படைப்பினங்களுக்கும் பரவலாக உணவு வழங்குபவன். மணலில் ஊர்ந்து செல்லும் எறும்புக்கும் கூடுகளிலுள்ள குஞ்சுகளுக்கும் உணவளிக்காமல் அவன் விட வில்லை. அவனே செல்வத்தை வழங்குகிறான். ஏழ்மையைக் கொடுக்கிறான். செழிப்பும் வறுமையும் ஏற்படுவது அவனுடைய ஞானத்தின் அடிப்படையிலேயே!

படைப்புகளில் சிலவற்றிற்கு வேறு சிலவற்றைக்காட்டிலும் அவன் சிறப்பளித்தான். கால - நேரங்களுக்கும்கூட இது பொருந் தும். இதோ! லைலதுல் கத்ர்-இரவு ஆயிரம் மாதங்களை விடச் சிறந்ததாகத் திகழ்கிறது!

அல்லாஹ்வை அதிகமதிகம்புகழ்கிறேன்.,நன்றி செலுத்துகிறேன். இது அவனது உதவியை இன்னும் அதிகம் ஈர்த்துவரக் கூடிய தாகும்.

வணகத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இல்லை.,அவன் தனித்தவன்.,அவனுக்குயாதொரு இணையுமில்லை என்று சாட்சி சொல்கிறேன். இது வாய்மையான கொள்கையுடை யவனின் தூய்மையான சாட்சியமாகும்.

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன். கை விரல்களிடயே இருந்து தண்ணீர் பீரிட்டது எனும் அற்புதம் அவர்களுடையயதே!

நபியவாகளின் மீதும்—இன்பத்திலும் துன்பத்திலும்அவர்களுடன் தோழமை கொண்டிருந்த அபூபக்ர் மீதும் – இஸ்லாத்தின் பாது காப்பு அரணாகத்திகழ்ந்த உமர் மீதும்—குர்ஆனின் ஒரே உச்சரிப்பின் கீழ் மக்களை ஒன்றுதிரட்டிய உஸ்மான் மீதும்— தனியொருவராய் நின்று போரில் எதிரிகளைச் சமாளித்த அலீ மீதும் – நபியவர்களின் குடும்பதினர் மீதும் – செயலிலும் லட்சியத்திலும் வாய்மையாளர்களாய்த் திகழ்ந்த நபித்தோழர்கள் அனைவர் மீதும் அல்லாஹ் ஸலவாத் பாழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

அன்புச் சகோதரர்களே! பாக்கியமிக்க இந்தப் பத்து நாட்களில் தான் லைலதுல் கத்ர் எனும் அந்த இரவு உள்ளது. அல்லாஹ் இதனை ஏனைய இரவுகளைக் காட்டிலும் சிறப்பாக்கியுள்ளான். இந்த இரவில் ஏராளமான சிறப்புகளையும் நன்மைகளையும் வழங்கி இந்தச் சமுதாயத்தின் மீது அல்லாஹ் கருணை பொழிந்துள்ளான். தெளிவான தனது வேதமாகிய குர்ஆனில் இதன் சிறப்பைத் வெகுவாகப் பாராட்டியுள்ளான்!

قال تعالي : انا انزلناه في ليلة مباركة انا كنا منذرين فيها يفرق كل امر حكيم امرا من عندنا انا كنا مرسلين رحمة من ربك انه هو السميع العليم رب السموات الارض و ما بينهما ان كنتم موقنين لااله الا هو يحيي و يميت ربكم ورب آبائكم الاولين

“இதனை,அருள்பாலிக்கப்பட்ட ஓர் இரவில் நாம் இறக்கி வைத்தோம். ஏனெனில் மக்களை எச்சரிக்கை செய்ய நாம் நாடியிருந்தோம். அது எத்தகைய இரவு எனில், அதில்தான் உறுதி மிக்க ஒவ்வொரு விவகாரத்திற்கும் தீர்ப்பு பெறப்படுகிறது! இது நம்மிடத்தில் நின்றும் உண்டான கட்டளையின் அடிப்படையிலானது. திண்ணமாக நாம்தான்(தூதரை) அனுப்பக்கூடியவர்களாய் இருந்தோம். இது உம்முடைய இறைவனின் கருணையாகும். திண்ணமாக அவன் அனைத்தையும் கேட்கக்கூடியவனாகவும் அறியக் கூடியவனாகவும் இருக்கிறான்.அவனே, வானங்களுக்கும் பூமிக்கும் அவ்விரண்டுக்குமிடையே உள்ள அனைத்திற்கும் அதிபதியாவான் (என்பதை) உறுதியான நம்பிக்கையுடையவர்களாய் இருந்தால்

நீங்கள்(காண்பீர்கள்!)அவனைத்தவிர வணக்கதிற்குரிய இறைவன் வேறுயாருமில்லை. அவனே உயிரையும் மரணத்தையும் கொடுக்கிறான். உங்களுடைய இரட்சகனும் அவனே. முன்னர் வாழ்ந்து சென்ற உங்கள் மூதாதையர்களின் இரட்சகனும் அவனே!„(44:2-)

இந்த இரவு அருள்பாலிக்கப்பட்ட இரவு என்று அல்லாஹ் குறிப்பிடுகிறான்„இதன் நன்மையும் பாக்கியமும் சிறப்பும் ஏராளமாக இருப்பதன் காரணத்தால்! இந்த இரவின் பாக்கியம் என்னவெனில், சிறப்பமிக்க குர்ஆன் இந்த இரவில்தான் இறக்கியருளப்பட்டது என்பதாகும்.

மேலும் இந்த இரவில் உறுதிமிக்க ஒவ்வொரு விவகாரமும் பெறப்படுகிறது என்று அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். அதாவது, இந்த ஆண்டு முழுவதும்-அல்லாஹ்வின் கட்டளையினால் நிகழவிருக்கும் ரிஜ்க்கள் (வாழ்வாதாரங்கள்) வாழ்க்கைத்தவணைகள், நன்மைகள்-தீமைகள் போன்ற அனைத்தும் லௌஹுல் மஹ்ஃபூழ் எனும் மூலஏட்டிலிருந்து பெறப்பட்டு எழுத்தர்களிடம் சேர்ப்பிக்கப்படுகின்றன! உறுதிமிக்க ஒவ்வொரு விவகாரம் என்பது அல்லாஹ்வுடைய உறுதிமிக்க கட்டளைகளாகும். எப்படிப்பட்ட உறுதியான கட்டளைகளெனில், அவற்றில் எவ்வித இடையூறோ குறைபாடோ மூடத்தனமோ வீண்நிலையோ கிடையாது. யாவற்றையும் மிகைத்தவனும் பேரறிவாளனுமாகிய அல்லாஹ்வினால் நிர்ணமிக்கப்பட்டவையாகும் அவை!

قال تعالي : انا انزلناه في ليلة القدر و ما ادراك ما ليلة القدر ليلة القدر خـير مـن الـف

شهر تنزل الملا ئكة والروح فيها باذن ربهم من كل امر سلام هي حتي مطلع الفجر

மேலும் அல்லாஹ் கூறுகிறான் :„திண்ணமாக நாம் இதனை (குர்ஆனை) மாட்சிமைமிக்க- லைலதுல் கத்ர் -இரவில் இறக்கிவைத்தோம். மாட்சிமைமிக்க அந்தஇரவு என்னவென்று உமக்குத் தெரியுமா? மாட்சிமைமிக்க இரவு ஆயிரம்மாதங்களைவிடச் சிறந்ததாகும். அதில் மலக்குகளும் ரூஹும் தம் இறைவனின் அனுமதியுடன் அனைத்துக் கட்டளைகளையும் ஏந்தியவண்ணம் இறங்குகிறார்கள். அந்த இரவு முழுவதும் சாந்திமய மாகத் திகழ்கிறது„ வைகறை உதயமாகும் வரை!„ ( 97 : 1-5)

(லைலதுல் கத்ர் என்பதிலுள்ள)கத்ர் என்பதன் பொருள், சிறப்பு -கண்ணியம் என்பதாகும். அல்லது இறைவன் நிர்ணமித்த விதி - தீர்ப்பு என்பதாகும். ஏனெனில் லைலதுல் கத்ர் இரவு சிறப்பும்

மாண்பும் உடையதாய் இருக்கிறது.மேலும் அந்தஆண்டு முழுவதும் நிகழவிருக்கும் தன்னுடைய உறுதி மிக்க கட்டளைகளை அல்லாஹ் இந்த லைலதுல் கத்ர் இரவில் நிர்ணயிக்கிறான்., தீர்ப்பளிக்கிறான்.

லைலதுல் கத்ர் ஆயிரம் மாதங்களைவிடவம் சிறந்ததாகும் – அதாவது, சிறப்பு, மாட்சிமை, ஏராளமான நன்மை–நற்கூலி ஆகியவற்றைப் பொறுத்து சிறந்த இரவாகும். இதனால்தான் எவர் லைலதுல் கத்ர் இரவில் ஈமானுடனும் மறுமையின் நற்கூலியை எதிர்பார்த்தும் தொழுகிறாரோ அவருடைய முந்தைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுகின்றன.

மலக்களும் ரூஹும் அதில் இறங்குகிறார்கள் – மலக்குகள் என்பவர்கள் அல்லாஹ்வுடைய அடியார்களில் ஒருபிரிவினர்! இரவு பகல் எந்நேரமும் அல்லாஹ்வின்வழிபாட்டில் ஈடுபட்டுக் கொண்டே இருப்பவர்கள்.

لا يستكبرون عن عبادته و لايستحسرون يسبحون الليل و النهار لايفترون

“அவர்கள் கர்வம்கொண்டு அவனுக்கு இபாதத்–வழிபாடு செய்ய மறுப்பதில்லை., களைத்துப் போவதுமில்லை. இரவு–பகல் எந்நேரமும் அவனைப் புகழ்ந்து துதிபாடிக் கொண்டேயிருக்கிறார்கள்., சோர்வடைவதில்லை!,,

அவர்கள் லைலதுல் கத்ர் இரவில்–நன்மைகள், அருட் பாக்கியங்கள், அருட்கொடைகள் ஆகியவற்றைக் கொண்டு பூமியில் இறங்குகிறார்கள். ரூஹ் என்பது ஜப்ரீல் ஆவார்.அவரது சிறப்பையும் உயர்வையும் கவனித்து பிரத்தியேகமாகக் குறிப்பிடப்பட்டுள்ளார்!

அந்த இரவு முழுவதும் சாந்திமயமாகத் திகழ்கிறது அதாவது அனைத்து விதமான அச்சுறுத்தல்களைவிட்டும் இறைவிசுவாசிகளுக்கு நிம்மதியும் சாந்தியும் அளிக்கக்கூடியதாய்இந்த லைலதுல் கத்ர் இரவு திகழ்கிறது. இதில் ஏராளமாக மனிதர்கள் நரகத்தில் இருந்து விடுதலை பெறுகிறார்கள்., அதன் வேதனையிலிருந்து ஈடேற்றம் அடைகிறார்கள் எனும் அடிப்படையில்!

வைகறை உதயமாகும் வரை – அதாவது, லைலதுல் கத்ர் எனும் இரவு வைகறையின் உதயத்துடன்முடிவடைகிறது., இரவு அமல்கள் அத்துடன் முடிவடைந்து விடுவதனால்!

இந்த அத்தியாயத்தில் லைலதுல் கத்ருக்கு பல்வேறு சிறப்பு கள் எடுத்துரைக்கப்படுள்ளன!

(1) மனிதர்களுக்கு வழிகாட்டக் கூடிய– அவர்களின் இம்மை மறுமையின் நற்பேறாகத் திகழக்கூடிய திருக்குர்அனை அல்லாஹ் இந்த இரவில்தான் இறக்கியருளினான்!

(2) மாட்சிமைமிக்க இரவு என்னவென்று உமக்குத் தெரியுமா? எனும் வசனத்தில் கேள்விகேட்டு அதன் கண்ணியத்தையும் மகத் துவத்தையும் அல்லாஹ் எடுத்துரைக்கின்றாள்.

(3) அது ஆயிரம் மாதங்களைவிட சிறந்த இரவு.

(4) அந்த இரவில் மலக்குகள் இறங்குகிறார்கள். நன்மைகள் அருட்பாக்கியங்கள், கருணைகள் ஆகியவற்றுடன் அது அமை கிறது!

(5) அந்தஇரவு சாந்திமயமாகத் திகழ்கிறது,,அதில் தண்டனை யிலிருந்தும் சோதனையிலிருந்தும் அதிகஅளவு ஈடேற்றம்கிடைக் கிறது. அடியான் அதில் மேற்கொள்ளும் வழிபாட்டின் விளைவாக!

(6) இந்தஇரவின் சிறப்பு குறித்து எடுத்துரைக்கும் ஓர் அத் தியாயத்தை அல்லாஹ் இறக்கியருளி அது மறுமை நாள் வரை ஓதப்பட்டுவருகிறது!

லைலைதுல் கத்ரின் மற்றொரு சிறப்பு ஸஹீஹுல் புகாரியிலும் ஸஹீஹ் முஸ்லிமிலும் பதிவாகியுள்ள நபிமொழியில் கூறப்பட்டி ருப்பதாகும்.

عن ابي هريرة ﷺ الن النبيﷺ قال : من قام ليلة القدر ايمانا و احتسابا غفر له ما تقدم من ذنبه

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :„நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் : விசுவாசத்துடனும் மறுமை நன்மையை எதிர்பார்த்தும் எவர் லைலதுல் கத்ர் இரவில் தொழுதாரோ அவ ருடைய முந்தைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுகின்றன,, நூல் : புகாரி, முஸ்லிம்

ஈமானுடன் தொழுவது என்றால் அல்லாஹ்வின் மீதும் இந்த இரவில் தொழக்கூடியவர்களுக்கு அல்லாஹ் தயார்செய்து வைத் துள்ள மறுமை நலன்கள் மீதும் நம்பிக்கை கொண்டு என்று பொருள்.

எதிர்பார்ப்புடன் தொழுவது என்றால், நற்கூலியையும் நன்மை யையும் எதிர்பார்த்து என்று பொருள். இந்த இரவை அறிந்தவர்

களுக்கும் இந்தச்சிறப்பு கிடைக்கும்.அறியாதவர்களுக்கும் கிடைக்கும். ஏனெனில் இந்தக்கூலி கிடைக்கும் விஷயத்தில்இந்தஇரவை அறிந்திருக்க வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் நிபந்தனை விதிக்கவில்லை!

லைலதுல் கத்ர்எனும்இரவு ரமளான் மாதத்தில் உள்ளது. ஏனெனில் அந்த இரவில் அல்லாஹ் குர்ஆனை இறக்கியருளினான். மேலும் அதை இறக்கியது ரமளான் மாதத்தில்தான் என்றும் அறிவித்துள்ளான்.

அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான் :,,திண்ணமாக நாம் அதை லைலதுல் கத்ர் இரவில் இறக்கியருளினோம்,,- வேறோரிட த்தில், -ரமளான் மாதம் எத்தகையதெனில் அதில்தான் குர்ஆன் இறக்கியருளப்பட்டது,, என உள்ளது - இதன் மூலம் லைலதுல் கத்ர் என்பது ரமளான் மாதத்தில்தான் உள்ளதுஎன்பது தெளிவாகிறது.

லைலதுல் கத்ர் இரவு முந்தைய எல்லாச் சமுதாயங்களிடமும் இருந்தது. இந்தச்சமுதாயத்திலும்-மறுமைநாள் வரையலும் நீடித்திருக்கும். ஏனெனில் அபூதர்ரு(ரலி)அவர்கள் அறிவித்துள்ளார்கள்:

நான் கேட்டேன் : ,,அல்லாஹ்வின் தூதரே! லைலதுல் கத்ர் இரவைப் பற்றி எனக்கு அறிவித்துத்தாருங்கள்,, அது ரமளான் மாதத்தில் உள்ளதா?வேறு மாதத்தில் உள்ளதா? என்று! அதற்கு நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள் : இல்லை,, அது ரமளான் மாதத்தில்தான் உள்ளது.

பிறகு கேட்டேன் : நபிமார்கள் வாழும்வரையில் அவர்களுடன் அது இருக்கும். அவர்கள் மரணம் அடைந்து விட்டால் அத்துடன் அந்தஇரவும் எடுபட்டுவிடுமா?அல்லது மறுமை நாள் வரை நீடிக்குமா? நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள : இல்லை,, அது மறுமை நாள் வரையிலும் நீடிக்கும்.நூல்: முஸ்னத்அஹ்மத், நஸாஈ[54]

ஆனாலும் (அல்லாஹ்வே மிக அறிந்தவன்) லைலதுல் கத்ர் இரவின் சிறப்பும்கூலியும் இந்தச் சமுதாயத்திற்கு மட்டுமே சொந்தம். ஜும்ஆ நாளின் சிறப்பு உள்ளிட்ட சில சிறப்புகள் இந்தச்

---

[54] இமாம் ஹாகிம் அவர்கள் இதனை அறிவித்துள்ளார்கள். மேலும் சொன்னார்கள் : இது முஸ்லிம் இமாமின் நிபந்தனையின்படி ஸஹீஹ் ஆகும். ஆயினும் புகாரியும் முஸ்லிமும் இதனை அறிவிக்கவில்லை. தஹபி அவர்கள் இதனை ஆமோதித்துள்ளார்கள்.

சமுதாயத்திற்குமட்டும் சொந் தமாக இருப்பதுபோன்று! அல்லாஹ் வுக்கே எல்லாப் புகழும்!

ரமளான் மாதத்தில் கடைசிப்பத்து நாட்களில்தான் லைலதுல் கத்ர் இரவு உள்ளது. ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் சொன் னார் கள் :

لقول النبي ﷺ تحروا ليلة القدر في العشر الاواخر من رمضان

"லைலதுல் கத்ர் இரவை ரமளானின் பிந்திய பத்து நாட்களில் முனைந்து தேடிப்பெறுங்கள்" நூல் : புகாரி, முஸ்லிம்

அந்த இரவு, இரட்டைப்படை இரவுகளைவிட ஒற்றைப்படை இரவுகளில் இருப்பதற்கு அதிகமான சாத்தியக்கூறுகள் உள்ளன. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

تحروا ليلة القدر في الوتر من العشر الاواخر من رمضان رواه البخاري

"ரமளானின் கடைசிப் பத்து நாட்களின் ஒற்றைப் படை இரவு களில் லைலதுல் கத்ர் இரவை முனைந்து தேடிப் பெறுங்கள்" நூல் : புகாரி

அதுவும்- அந்த இரவு கடைசி ஏழுநாட்களில் இருப்பதற்கு அதிகமான சாத்தியக்கூறு உள்ளது.ஏனெனில் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்:"லைலதுல் கத்ர்இரவு கடைசிஏழு நாட்களில் இருப்பதாக நபித்தோழர்கள் சிலருக்கு கனவு காண்பித் துக் கொடுக்கப்பட்டது. அது குறித்து நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : உங்கள் அனைவரின் கனவும் கடைசி ஏழு நாட் களில் என ஒத்திருப்பதை நான் காண்கிறேன். எனவே லைலதுல் கத்ர் இரவை முனைந்து தேடிப்பெறுபவர் கடைசி ஏழுநாட்களில் அதை முனைந்து தேடிப்பெற்றுக் கொள்ளட்டும்" நூல் : புகாரி, முஸ்லிம்

இப்னு உமர் (ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பு ஸஹீஹ் முஸ்லிமில் பதிவாகியுள்ளது : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "அதனை(லைலதுல்கத்ர் இரவை)கடைசிப்பத்து நாட்களில் தேடுங் கள். ஆயினும் உங்களில் ஒருவர் பலவீனம் அடைந்தாலோ இய லாது போனாலோ மீதி ஏழு நாட்களில் அவர் தோற்றுப் போய்விட வேண்டாம்."

லைலதுல் கத்ர் இரவென்பது எல்லா ஆண்டுகளிலும் ஒரு குறிப்பிட்ட இரவுக்குமட்டும் சொந்மமல்ல., அது மாறிமாறி வந்து கொண்டிருக்கிறது என்பதைதே உண்மை!எடுத்துக்காட்டாக, ஓர்

ஆண்டில் 27ம் இரவுலைலதுல் கத்ர் இரவு என்றால்மறு ஆண்டு 25 ம் இரவில் வரும். இப்படி வருவது அல்லாஹ்வின் நாட்டப் படியும் அவனது அறிவுஞானத்தின் படியும் அமைவதாகும். பின் வரும் நபிமொழி எடுத்துரைக்கிறது:

قول النبي ﷺ التمسوا ها في تاسعة تبقي في سابعة تبقي في خامسة تبقي – البخاري

,,லைலதுல் கத்ர் இரவை எஞ்சியுள்ள ஒன்பதாவது நாளிலோ எஞ்சியுள்ள ஏழாவது நாளிலோ எஞ்சியுள்ள ஐந்தாவது நாளிலோ தேடுங்கள்!,,நூல் : புகாரி

ஸஹீஹுல் புகாரியின் விரிவுரையான ∴பத்ஹுல் பாரியில் சொல் லியுள்ளார்கள்: மிகையான கருத்து என்னவெனில், கடைசிப்பத்தில் ஒற்றைப்படையில் லைலதுல் கத்ர் இரவு உள்ளது.,அது (ஆண் டுக்கு ஆண்டு) மாறிவருகிறது என்பதாகும்.

அது எந்த இரவு என்கிற விவரத்தை அல்லாஹ்தன் அடி யார்களைவிட்டும் மறைத்துவிட்டான். இது ஒருவகையில் அவர் களுக்குச் செய்த கருணையாகும். இதன் நோக்கம் சிறப்புக்குரிய அந்த இரவில் தொழுகை, திக்ர், துஆ ஆகியவற்றின் மூலம் லைலதுல்கத்ர் இரவைத் தேடிப் பெறுவதற்காக அவர்கள் அதிக அளவில் அமல்கள் செய்யவேண்டும்., அல்லாஹ்வின் பால் நெருக் கத்தையும் நன்மையையும்அவர்கள் அதிகப்படுத்திக்கொள்ளவேண் டும் என்பதாகும்.

அல்லாஹ் இந்தஇரவை மறைத்துவைத்ததன் மற்றொரு நோக் கம் அவர்களைச் சோதிக்கவேண்டும் என்பதாகும்.அந்த இரவைத் தேடுவதில் வினையமாகவும் ஆர்வத்துடனும் செயல்படுகிறவர் யார்? என்பது தெளிவாகத் தெரியவேண்டும்! ஒருபொருளில் ஆர் வம் கொள்பவர் அதனைத் தேடுவதில் முனைப்பாக ஈடுபடுவார்., அதனை அடையும் வழியில் களைத்துப்போவதைப் பெரிதுபடுத்த மாட்டார்.

லைலதுல் கத்ர் இரவு எதுஎன்பதை அடியார்களில் சிலருக்கு அல்லாஹ் வெளிப்படுத்துவான்., அவர்கள் காணக்கூடியதான சில அடையாளங்களின் மூலம்!நபி(ஸல்)அவர்கள் அதன் அடையாளத் தைக் கனவில் கண்டதுபோன்று! அந்த இரவின் அதிகாலையில் தண்ணீரிலும் மண்ணிலும் தாம் ஸுஜூது செய்வதாக நபி (ஸல்) அவர்கள் கனவுகண்டார்கள்.அவ்வாறேஅந்தஇரவில் மழை பொழிந்

தது! ஃபஜ்ர் தொழுகையில் மழை நீரிலும் மண்ணிலும் அவர்கள் ஸுஜூது செய்தார்கள்!

அன்புச் சகோதரர்களே! லைலதுல்கத்ர் இரவில் வாசல் திறக் கப்படுகிறது. நேசர்களுக்கு (இறைவன்பால்) நெருக்கம் ஏற்படுத் தப்படுகிறது. பிரார்த்தனைகள் செவியேற்கப்பட்டு பதிலும்அளிக்கப் படுகிறது. இந்த இரவில் அமல் செய்பவர்களுக்கு மகத்தான கூலி எழுதப்படுகிறது. லைலதுல்கத்ர் இரவு ஆயிரம் மாதங்களைவிடச் சிறந்தது!எனவே அதனைத் தேடுவதில் அழுத்தமான முயற்சியை மேற்கொள்ளுங்கள்! இதுதான் தேடுவதற்கான காலம்! அலட்சியத் தைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்!அலட்சியத்தில் அழிவு உள்ளது!

மறதி, பராமுகம், இழப்பு
இவற்றுடன்தானே கழிந்தது வாழ்வு!
இப்படி வாழ்ந்து கழித்த நாட்கள் அனைத்தும்
அந்தோ! வீணாகிப்போனதே!

ஏன் வீணடித்தேன் வாழ்நாளை?
என்பதற்கு என்ன பதிலை நான் சொல்வேன்?

நாயனைப் புகழ்ந்து நன்றி செலுத்தும்
நற்கடமைகளை விட்டும்
இத்துணை பராமுகம் – எமக்கு
எங்கிருந்து வந்தது?

எத்துணை சிறந்த மாதத்தை வழங்கி
எம்மை அல்லாஹ் சிறப்பித்துள்ளான்!
கவின்மிகு குர்ஆனை அருளினான்
கருணைமிக்க நாயன் இம்மாதத்தில்!

ரமளானுக்கு நிகர் மாதம் வேறெதுவுமில்லை
ரம்மியமான கதிரிரவு வேறெங்குமில்லை!

இதன் நன்மைகளை எடுத்தியம்பும்
ஏற்றமிகு நபிமொழிகள் ஏராளமுள.

ஒற்றைப்படை இரவுகளில் – இந்த

ஒளியிரவைத் தேடுவீரென
நம்பகமான நபிமொழியை நாமுரைத்தோம்!

உறுதியுடனிதனை
இறுதிப் பத்தில் தேடும்
இறையடியாருக்கே சோபனம்!

இதன் அதிகாலை உதயம் வரை
எங்கும் அமைதி! எங்கும் சாந்தி!
என்றுரைத்ததே இறைவசனம்!

தேடிக் கொள்வீர் இவ்விரவை
சிறந்த பொக்கிஷம் கிடைத்ததென்றே!
கோடிக் கணக்கில் விடுதலை பெறுவர்
கொடிய நரகிலிருந்து இவ்விரவில்!
ஆயினும் அதனை அவரே அறியார்!

யா அல்லாஹ்!யார் இந்தமாதத்தில் நோன்பு நோற்று லைலதுல் கத்ர் இரவைஅடைந்து ஏராளமானநன்மைகளையும் நற்கூலிகளையும் வென்றார்களோ அவர்களின் குழுவில் எங்களையும் சேர்த்து வைப்பாயாக!

யா அல்லாஹ்! நன்மையின் பக்கம் விரைந்த செல்லக்கூடிய, தீமைகளைவிட்டும் விலகிச்செல்லக்கூடிய,சுவனத்து மாளிகைகளில் நிம்மதியாகத்தங்கிவாழக்கூடிய மக்களுடன் எங்களைச்சேர்ப்பாயாக! எவர்கள் மீது நீ கருணை பொழிந்தாயோ– தீமைகளை விட்டும் எவர்களைக் காத்தாயோ அவர்களின் குழுவில் எங்களைச் சேர்ப்பாயாக!

யா அல்லாஹ்! வழிகேட்டில் ஆழ்த்தக்கூடிய குழப்பங்களைவிட்டும் எங்களைக் காத்தருள்வாயாக! வெளிப்படையான மற்றும் அந்தரங்க மான அனைத்து மானக்கேடான செயல்களை விட்டும் எங்களைத் தூரப்படுத்துவாயாக!

யா அல்லாஹ்! உனது அருட்கொடைகளுக்கு நன்றிசெலுத்தக் கூடிய, அழகாய் உனக்கு வழிபடும் பாக்கியத்தை எங்களுக்கு வழங்குவாயாக!மேலும் உனக்கு வழிபட்டு நடந்து உனது நேசத்தைப் பெற்றோரின் குழுவில் எங்களை இணைத்து வைப்பாயாக! இம்மையிலும் எங்களுக்கு நன்மைவழங்குவாயாக! மறுமையிலும்

எங்களுக்கு நன்மை வழங்குவாயாக! மேலும் நரக வேதனையிலிருந்து எங்களைக் காத்தருள்வாயாக!கருணைமிக்க இறைவனே! உனது கருணை கொண்டு–எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் எல்லா முஸ்லிம்களுக்கும் நீ மன்னிப்பு வழங்குவாயாக!

المجلس الثالث و العشرون

# في وصف الجنة جعلنا الله من اهلها

23 வது மஜ்லிஸ்

# சுவனத்தின் வர்ணனை!

எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்க!அவனே,தன்னை நம்பி ஆதரவு வைத்தவரை,அவரது எதிர்பார்ப்புக்கும் மேலானஅந்தஸ்தில் சேர்த்துவைப்பவன்.,பிரார்த்தனை செயபவருக்கு,அவரது பிரார்த்தனைக்கும் அதிகமாக வழங்கக்கூடியவன்! பாவமீட்சி தேடுபவனின் பாவமீட்சியை ஏற்று மன்னித்து கருணை பொழியக்கூடியவன்!

மனிதனைப் படைத்தான்.,அவன் வசிப்பதற்கென ஒருவீட்டை அமைத்தான். பயணத்திடையே இறங்குமிடமாக அவனுக்கு இவ்வுலகை ஆக்கினான். மறுவுலகம் என்பது மறைவாய் இருப்பதால் அதன் சிறப்பை அறியாதவன் இவ்வுலகத்தையே உறைவிட மாக்கிக்கொண்டான்!அப்படிப்பட்டவன் தனது அபிலாசைகளை அடையுமுன்பே பலவந்தமாக அங்கிருந்து பிடிக்கப்பட்டான். அவன் சம்பாதித்து வைத்த செல்வங்களோ பிள்ளைகளோ அவனுக்கு எவ்விதப் பயனும் அளிக்கவில்லை! இறுதியில் வலிமையிழந்து அவன் தோல்வியுற்றான்! அதோ! அவனது வீட்டு முகடுகளின் மீது காக்கைகள் அமர்ந்து கரைந்து கொண்டிருப்பதை நீங்கள் காணவில்லையா, என்ன?

ஆனால் இறையுதவி பெற்றவனோ உலகத்தின் ஏமாற்று நிலையை அறிந்தான். அதன் தோற்றத்தைக்கண்டு அவன் மயங்கவில்லை.அல்லாஹ்வின் மன்னிப்பை நோக்கியும்சுவனத்தை நோக்கியும் அவன் விரைந்தான். அந்தச் சுவனம்—வானம், பூமி அளவுக்கு விரிவானது! அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதரின் மீதும் நம்பிக்கை கொண்ட மக்களுக்காக அது தயார் செய்து வைக்கப்பட்டுள்ளது!

வணக்கத்திற்குரியஇறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை., அவன் தனித்தவன்.,அவனுக்கு யாதொரு இணையுமில்லை என்று

– ஆதாரங்களையும் அவற்றின் மூலாரங்களையும் அறிந்தவன் சாட்சி அளிப்பதுபோல் சாட்சி அளிக்கிறேன்!

முஹம்மது நபி ,அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி அளிக்கிறேன். நான்கு திசைகளில் இருந்தும் தென்றல் வீசிக்கொண்டிருக்கும் காலெமல்லாம் இந்தச் சாட்சியம் நான் வழங்குகிறேன்!

நபியவர்கள் மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! ஊரிலும் பயணத்தின்போதும்–எல்லாநேரங்களிலும் அவர்களின் இணை பிரியாத் தோழராய் இருந்த அபூ பக்ர் மீதும் – உடைந்த வாள் என்று கூட அஞ்சாமல் வாளேந்தி இஸ்லாத்தைக் கட்டிக்காத்த உமர் மீதும் – துன்பம் வந்துற்றபோது பொறுமைக் கடலாகத் திகழ்ந்த உஸ்மான் மீதும்–கூர்வாள்கொண்டு பாய்வதற்கு முன்பே தமது தீரத்தைச் செயல்படுத்திக்காட்டிய அலீ மீதும் – நபியவர்களின்குடும்பத்தினர் மீதும் தோழர்கள் மீதும்–அவர்களை வாய்மையுடன்பின்பற்றி வாழ்ந்தவர்கள் மீதும் காலம்முழுவதும் அல்லாஹ் ஸலவாத் பொழிந்து கொண்டிருப்பானாக!அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! உங்கள் இரட்சகனிடம் இருந்து வழங்கப்படும் மன்னிப்பை நோக்கியும் சுவனத்தைநோக்கியும் விரைந்து செல்லுங்கள். அதன் அகலம் வானம்– பூமி அளவுக்கு விசாலமானதாகும். எந்தக் கண்ணும் கண்டிருக்காத, எந்தக் காதும் கேட்டிருக்காத, எந்த மனிதனின் உள்ளத்திலும் உதித்திருக்காத இன்பங்களும் அருட்பேறுகளும் அங்குண்டு!

قال لله تعالي : مثل الجنة التي وعد المتقون تجري من تحتها الانهار اكلها دائم و ظلها

அல்லாஹ் கூறுகிறான் :„பயபத்தியாளர்களுக்காக வாக்களிக்கப்பட்டுள்ள சுவகத்தின்தன்மை என்னவெனில், அதன் கீழே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும். அதன் கனிகளும் நிரந்தரமானவை. அதன் நிழலும் நிலையானவை!,,(13 : 35)

وقال تعالي : مثل الجنة التي وعد المتقون فيها انهار من ماء غير آسن و انهار من لبن لم يتغير طعمه و انهار من خمر لذة للشاربين و انهار من عسل مصفي و لهم فيها من كل الثمرات و مغفرة من ربهم –

மேலும் அல்லாஹ் கூறுகிறான் :„பயபக்தியாளர்க்ளுக்காக வாக்களிக்கப்பட்டுள்ள சுவனத்தின் உன்னதத்தன்மை என்னவெனில்,

அதில் தூய்மையான நீராறுகளும் சிறிதும் சுவை குன்றாத பாலாறுகளும் குடிப்பவாகளுக்குச் சுவையூட்டும் மது ஆறுகளும் சுத்தமான தேனாறுகளும் ஓடிக்கொண்டிருக்கும். மேலும் அங்கே அவர்களுக்கு எல்லா விதமான கனிகளும் இருக்கும். அவர்களின் இறைவனிடம் இருந்து மன்னிப்பும் கிடைக்கும்,, (47 : 15)

قال تعالي : و بشر الذين آمنوا و عملوا الصلحات ان لهم جنات تجري من تحتها الانهار كلما رزقوا من ثمرة رزقا قالوا هذا الذي رزقنا من قبل و اتوا به متشابها و لهم فيها ازواج مطهرة و هم فيها خالدون البقرة ٢٥

வேறோரிடத்தில்,– மேலும் (நபியே, இவ்வேதத்தில்) நம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிவோருக்கு – கீழே ஆறுகள் ஓடிக் கொண் டிருக்கும் சுவனங்கள் நிச்சயம் உண்டு என்று நற்செய்தி கூறுவீராக! அங்கு ஏதேனும் ஒரு கனி அவர்களுக்கு உணவாக வழங்கப்படும் போதெல்லாம்– அக்கனிகள் பூமியின் கனிகளுக்குத் தோற்றத்தில் ஒத்திருப்பதால் – இத்தகைய கனிகள் தாம் முன்பு (உலகில்) நமக்கு உணவாக வழங்கப்பட்டதாக அவர்கள் கூறு வார்கள். இன்னும் அங்கு அவர்களுக்குத் தூய்மையான துணை களும் உண்டு. மேலும் அங்கு அவர்கள் நிரந்தரமாக வாழ்வார் கள்!,, குர்ஆன் (2 : 25)

وقال تعالي : ودانية عليهم ظلالها و ذللت قطوفها تذليلا و يطاف عليهم بآنية من فضة و اكواب كانت قواريرا قوارير من فضة قدروها تقديرا و يسقون فيها كأسا كان مزاجها زنجبيلا عينا تسمي سلسبيلا ويطوف عليهم ولدان مخلدون اذا رأيتهم حسبتهم لؤلؤا منثورا – واذا رأيت ثم رأيت نعيما وملكا كبيرا

„சுவனத்தின் நிழல்கள் அவர்கள் மீது தாழ்ந்திருக்கும். மேலும் அதன் கனிகள் எப்போதும்(அவர்கள் விருப்பப்படி பறித்துக்கொள் ளும் அளவில்)அவர்கள் அருகில் இருக்கும். வெள்ளிப்பாத்திரங் களும் கண்ணாடிக் குவளைகளும் அவர்களுக்கு முன்னிலையில் சுற்றி வருமாறு செய்யப்பட்டிருக்கும். அதன் கண்ணாடிகளும் வெள்ளிவகையைச் சேர்ந்தவையாக இருக்கும். அவற்றைச் (சுவ னத்தின் ஊழியர்கள்) சரியான அளவில் நிரப்பியிருப்பார்கள். அந்தக் கிண்ணஙகளில் இஞ்சிச்சுவை கலந்த பானங்கள் அவர்களுக்கு அங்குக் குடிப்பதற்கு வழங்கப்படும். அது சுவனத்திலுள்ள ஒரு

நீரூற்றாகும். அதன் பெயர் ஸல்ஸபீல். மாறாத இளமையுடைய சிறுவர்கள் அவர்களுக்(கு ஊழியம் புரிவதற்)காகச் சுற்றி வந்து கொண்டே இருப்பார்கள். நீர் அவர்களைப் பார்த்தால் தெறித்துக் கிடக்கும் முத்துக்கள் என்று எண்ணுவீர்!அங்கு நீர்எந்தப் பக்கம் நோக்கினாலும் அருட்கொடைகள் நிறைந்திருப்பதையும் மாபெரும் பேரரசுக்கான அத்தனை சாதனங்களையும் காண்பீர்!„ (76:14– 20)

وقال تعالي: في جنة عالية لا تسمع فيها لاغية فيها عين جارية فيها سرر مرفوعة و اكواب موضوعة و نمارق مصفوفة و زرابي مبثوثة

மற்றோர் இடத்தில்,«(வேறுசில முகங்கள்)உன்னதமான சுவனத்தில் இருக்கும்.அவை அங்கு வீணானவற்றைச் செவியுறமாட்டா. ஓடிக்கொண்டிருக்கும் நீருற்று அங்குண்டு.உயர்ந்த கட் டில்கள் அங்கிருக்கும்.கிண்ணங்களும் வைக்கப்பட்டிருக்கும்.தலையணைகளும் வரிசையாக அடுக்கப்பட்டிருக்கும். எழிலான விரிப்புகளும் விரிக்கப்பட்டிருக்கும்!,. குர்ஆன் (88 : 10 – 16)

وقال تعالي : ان الله يدخل الذين آمنوا و عملوا الصالحات جنات تجري من تحتها الانهار يحلون فيها من اساور من ذهب و لؤلؤا و لباسهم فيها حرير – الحج ٢٣

இன்னோர் இடத்தில், «எவர்கள் இறைநம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிந்தாகளோ அவர்களை, கீழே ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும் சுவனங்களில் அல்லாஹ் நுழைவிப்பான். அங்கு அவர்களுக்குத் தங்கக்காப்புகளும் முத்துக்களும் அணிவிக்கப் படும். மேலும் பட்டு அங்கு அவர்களின் ஆடையாக இருக்கும்.„ (22 : 23)

وقال تعالي : متكين فيها علي الارائك لا يرون فيها شمسا و لا زمهريرا

"அங்கு அவர்கள் உயர்ந்த கட்டில்களில் தலையணைகள் வைத்து சாய்ந்திருப்பார்கள். வெயிலின் வெப்பமோ கடும் குளிரோ அங்கு அவர்களைத் துன்புறுத்தாது!„ (76 : 13)

وقال تعالي : عاليهم ثياب سندس خضر و استبرق و حلوا اساور من فضة و سقاهم ربهم شرابا طهورا – الانسان ٢١

மேலும் சொல்கிறான் :«மென்மையான மற்றும் கனமான பச்சை நிறப்பட்டாடைகள் அவர்களின் மீதிருக்கும். மேலும் அவர்களுக்கு

வெள்ளிக்காப்புகள் அணிவிக்கப்படும்.அவர்களின் அதிபதி அவர்களுக்குத் தூய்மைமிக்க பானம் புகட்டுவான்„ (76 : 21)

قال تعالي : متكين علي رفرف خضر و عبقري حسان

இன்னும் சொல்கிறான் :„(அந்தச்சுவனவாசிகள்) பச்சைக் கம்பளங்களிலும் விலைமதிப்பற்ற அழகிய விரிப்புகளிலும் தலையணை வைத்து சாய்ந திருப்பார்கள்„ (55 : 76)

قال تعالي: ان ا لمتقين في مقام امين في جنات و عيون يلبسون من سندس و استبرق متقابلين كذلك و زوجناهم بحور عين يدعون فيها بكل فاكهة آمنين

மேலும் சொல்கிறான் :„இறையச்சமுடையவர்கள் அமைதியான இடத்தில் இருப்பார்கள். தோட்டங்களிலும் நீரூற்றுகளிலும் இருப்பார்கள்.தடித்த மற்றும் மெல்லிய பட்டாடைகள் அணிந்து எதிரெதிரே அமர்ந்திருப்பார்கள்.இதுவேஅவர்களின் வெற்றியாகும்.மேலும் நாம் அழகிய தோற்றமுள்ள எழில்விழி மங்கையரை அவர்களுக்கு ஜோடிகளாக்கிக் கொடுப்போம். அங்கு அவர்கள் மன நிம்மதியுடன் எல்லாவிதமானருசியான பொருட்களையும் கேட்பார்கள்„(44:51–55)

قال تعالي: ادخلوا الجنة انتم و ازواجكم تحبرون

இன்னோரிடத்தில், „செல்லுங்கள், சுவனத்தில்! நீங்களும் உங்கள் மனைவியரும்! அங்கு நீங்கள் மகிழ்விக்கப்படுவீர்கள்! (என்று அவர்களிடம் சொல்லப்படும்) குர்ஆன் (43 : 70)

قال تعالي: فيهن قاصرات الطرف لم يطمثهن انس قبلهم ولا جان فباي آلاء ربكما تكذبان كانهن الياقوت و المرجان

மேலும் சொல்கிறான் :„இந்த அருட்கொடைகளுக்கு மத்தியில் நாணும் விழிகளைக்கொண்ட பெண்களும் இருப்பார்கள். இந்தச் சுவனவாசிகளுக்கு முன்னர் எந்தமனிதனும் எந்த ஜின்னும் அவர்களைத் தொட்டுக்கூடப் பார்த்திருக்கமாட்டார்கள்! உங்கள் இறைவனின் எந்தெந்த வெகுமதிகளை நீங்கள் பொய்யெனக் கூறுவீர்கள்? அந்தப்பெண்கள் அழகுமிக்கவர்களாய் இருப்பார்கள்.மாணிக்கத்தையும் முத்தையும் போன்று!„ (55 : 56–57)

قال تعالي: فيهن خيرات حسان فباي آلاء ربكما تكذبان حور مقصورات في الخيام

வேறோர் இடத்தில் —"இந்த அருட்கொடைகளுடன் நன்னடத்தையும் பேரழகும் கொண்ட மனைவிகளும் இருப்பர். உங்கள் அதிபதியின் எந்தெந்த வெகுமதிகளை நீங்கள் பொய்யெனக் கூறுவீர்கள்? கூடாரங்களில் தங்கவைக்கப்பட்ட எழில்விழி மங்கைகள்!" அல்குர்ஆன் (55 : 70 — 72)

قال الله: فلاتعلم نفس ما اخفي لهم من قرة اعين جزاء بما كانوا يعملون

இன்னோர் இடத்தில்—"அவர்களுடைய செயல்களின் பயனாகக் கண்களைக் குளிரச்செய்யும் எத்தகையஇன்பங்கள் அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டுள்ளது என்பதை யாரும் அறியமாட்டார்கள்!" குர்ஆன் (32 : 17)

قال تعالى: للذين احسنوا الحسنى و زيادة و لايرهق وجوههم قتر ولاذلة اولئك اصحاب الجنة هم فيها خالدون

மேலும் கூறுகிறான் : "எவர்கள் நற்செயல்கள் புரிந்தார்களோ அவர்களுக்கு (கூலி) மிக அழகிய நன்மையாகும். இன்னும் அதிகப்படியான அருளும் கிடைக்கும். அவர்களின் முகங்களில் பாவப் புழுதியும் இழிவும் படியமாட்டா! அவர்கள் சுவனதிற்குரியவர்கள் ஆவர். அவர்கள் அதில் நிலையாகத் தங்கிவாழ்வார்கள்," (10: 26)

மிகஅழகிய நன்மை என்பது சுவனமாகும். ஏனெனில் அதனை விடவும் அழகிய இல்லம் வேறொன்றுமில்லை! அதிகப் படியான அருள் என்பது அல்லாஹ்வின் திருமுகத்தைத் தரிசிப்பதாகும். தனது கருணை மற்றும் கிருபை கொண்டு அல்லாஹ் அந்தப் பாக்கியத்தை நமக்கு வழங்குவானாக!

சுவனத்தைப் பற்றி கூறுகிற வசனங்கள் — அதன் அருட்கொடைகளையும் மகிழ்ச்சியையும் இனிமையையும் அதன் எழிலையும் எடுத்துரைக்கக்கூடிய வசனங்கள் திருக்குர்ஆனில் ஏராளம் வந்துள்ளன!

சுவனத்து இன்பங்கள் பற்றி கூறும் நபிமொழிகள் வருமாறு:

☐ அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : "நாங்கள் கேட்டோம்: அல்லாஹ்வின் தூதரே!சுவனத்தைப்பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள். அதன் கட்டட அமைப்பு எத்தகையது? அதற்கு நபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள் : செங்கற்கள் தங்கம் —வெள்ளியினால் செய்யப்பட்டவை., அதன் பூச்சு கஸ்தூரியாகும். அதன் கற்கள், முத்து— மாணிக்கத்தினால் ஆனவை., அதன் மணல்

குங்குமமாகும். சுவனத்தினுள் பிரவேசித்தவர் இன்பத்தில் திளைத்திருப்பார். கஷ்டத்துக்கு ஒருபோதும் ஆளாகமாட்டார்., நிரந்தரமாக வாழ்வார்.,என்றைக்கும் மரணம் அடையமாட்டார்! அவருடைய ஆடைகள் கந்தலடையமாட்டா! அவரது இளமை என்றைக்கும் முடிவடையாது!„ நூல்: முஸ்னத் அஹ்மத், திர்மிதி

உத்பா பின் கஸ்வான் (ரலி) அவர்கள் ஒருதடவை சொற்பொழிவு நிகழ்த்தினார்கள் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தார்கள். பிறகு சொன்னார்கள்:„அறிந்து கொள்ளுங்கள்! திண்ணமாக இந்த உலகம் முடிவுறும் தருவாய்க்கு வந்துவிட்டது. விரைவாகக் கழிந்து கொண்டிருக்கிறது. கவிழ்க்கப்பட்ட பானையில் எவ்வளவு நீர் மீதியிருக்குமோ அவ்வளவு குறுகிய காலம்தான் எஞ்சியிருக்கிறது! நீங்கள் இங்கிருந்து–முடிவே இல்லாத ஓர் இல்லத்திற்குச் செல்லக்கூடியவர்களாய் இருக்கிறீர்கள். எனவே உங்களோடு வரக்கூடிய ஒருசில நன்மைகளையேனும் கையோடு எடுத்துச் செல்லுங்கள்!

எங்களுக்கு விளக்கிச் சொல்லப்பட்டது : அதாவது, சுவனக் கதவின் நிலைகளில் இரண்டு நிலைகளுக்கிடையில் நாற்பதாண்டு பயண தூரம் உள்ளது. அவ்வளவு விசாலமான இடத்திலும் – மறுமையின் ஒருநாள் வரும்போது அது மக்கள் கூட்டத்தால் நிறைந்துவழியும்!„ நூல் : முஸ்லிம்

عن سهل بن سعد ﷺ ان النبي ﷺ قال: في الجنة ثمانية ابواب فيها باب يسمي الريان لايدخله الا الصائمون

ஸஹ்ல் பின் ஸஅத்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் : சுவனத்திற்கு எட்டு வாசல்கள் உள்ளன. அவற்றில் ஒருவாசலின் பெயர் ரய்யான்.அதில் நோன்பாளிகள் தவிர வேறு யாரும் பிரவேசிக்கமாட்டார்கள்!„ நூல் : புகாரி, முஸ்லிம்

உஸாமா பின் ஜைத்(ரலி)அவர்கள் அறிவிகிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் : இதோ! பாருங்கள்! சுவனம் செல்ல யார் தயாராகப் போகிறீர்கள்? திண்ணமாக சுவனத்திற்கு நிகர் எதுவுமில்லை. கஅபாவுடைய இரட்சகனின் மீது சத்தியமாக! சுவனம் என்பது இலங்கிக் கொண்டிருக்கும் ஒளி., அசைந்தாடும் மலர்., நெடிதுயர்ந்த மாளிகை., நிறைந்தோடும் நதி., கனிந்து நிற்கும் பழம்.,அழகு சௌந்தர்யமான மனைவி., ஏராளமான ஆபரணங்கள்., அமைதிமிகு–நிறைந்த இல்லத்தில் நிரந்தரமான ஓய்விடம்., சுவை

மிகு பொருட்கள்,பசுமைகள்,உல்லாசமான—உயர்வான மாளிகையில் மகிழ்வுகள், அருட்பாக்கியங்கள் ஆகியவையாகும்!,, தோழர்கள் சொன்னார்கள்:அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அதற்காகத் தயாரா கக் கூடியவர்கள்தாம்!

அதற்கு நபியவர்கள் சொன்னார்கள் : இன்ஷாஅல்லாஹ் என்று சொல்லுங்கள்.—அவ்வாறே மக்கள் இன்ஷாஅல்லாஹ் என்று சொன் னார்கள்! நூல் : இப்னு மாஜா, பைஹகி – இப்னு ஹிப்பான்[55] தமது ஸஹீஹில் இதனை அறிவித்துள்ளார்கள்.

அபூ ஹுரைரா (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :"நிச்சயமாக சுவனத்தில் நூறு படித்தரங் கள் உள்ளன.இறைவழியில் போர் புரியும் வீரர்களுக்காக அல்லாஹ் அவற்றைத் தயார்செய்து வைத்துள்ளான்.இரண்டு படித்தரங்களுக் கிடையே உள்ள தூரம், வானம் –பூமியின் தூரம் போன்றதாகும். நீங்கள் இறைவனிடம் இறைஞ்சுவதாயின் ஃபிர்தௌஸை கேட்டு இறைஞ்சுங்கள்!திண்ணமாக அது சுவனத்தின் நடுவிலும் சுவனத் தின் உச்சியிலும் உள்ளது.அங்கிருந்துதான் சுவனத்தின் ஆறுகள் பெருக்கெடுத்து ஓடுகின்றன.அதன்மேலே கருணைமிக்க இறைவ னின் அர்ஷ் உள்ளது!,, நூல் : புகாரி

அபூ ஸயீதுல் குதிரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :"சுவனவாசிகள் தங்களுக்கு மேலே பால்கனிகளில் இருப்போரைக் காண்பார்கள். கிழக்குஅல்லது மேற் கின் அடிவானத்தில் இலங்கக்கூடிய ஒளிரும் நட்சத்திரத்தை நீங்கள் பார்ப்பது போன்று பார்ப்பார்கள்!அதுஅவர்களின் படித்தரத் தின் ஏற்றதாழ்வினாலாகும்!,,

தோழர்கள் கேட்டார்கள் : அல்லாஹ்வின் தூாரரே! இவை நபி மார்களின் அந்தஸ்துகளாயிற்றே! அவர்களல்லாதவர்கள் யாரும் இவற்றை அடைந்திட முடியாதே!அதற்கு நபி(ஸல்)சொன்னார்கள்: "சரிதான்! எனது உயிரை தன் கைவசம் வைத்திருக்கும் இறை வன் மீது சத்தியமாக! எவர்கள் அல்லாஹ்வின் மீது விசுவாசம் கொண்டு ரஸூல்மார்களை உண்மைப் படுத்தினார்களோ அவர்க ளும் இவற்றை அடைவார்கள்!,, நூல் : புகாரி

---

[55] இதன் அறிவிப்புத் தொடர் பலவீனமானதாகும்.

அபூ மாலிக்–அல் அஷ்அரி (ரலி) அவர்கள் அறிவித்தார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: திண்ணமாக சுவனத்தில் உயர மான பால்கனிகள் உள்ளன. அவற்றின் வெளிப்பகுதியை உட்புறத் புறத்தில் இருந்து காணலாம். உள் நிலையை வெளிப்புறத்தில் இருந்தும் காணலாம்! யார் ஏழைக்கு உணவளித்தார்களோ நோன்பை நிரந்தாமாகக் கடைப்பிடித்தார்களோ, இரவில் மக்கள் அனைவரும் தூங்கிக் கொண்டிருக்கும்போது தொழுதார்களோ அவர்களுக்கு அல்லாஹ் இவற்றைத்தயார் செய்துவைத்துள்ளான். நூல் : தபரானி,[56]

அபூ மூஸா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: இறைநம்பிக்கை யாளனுக்குச் சுவனத்தில் ஒருகூடாரம் உள்ளது. நடுப்பகுதி காலி யான ஒருமுத்தினால் அமைந்ததாகும் அது! வானத்தில் அதன் நீளம் அறுபது மைல்களாகும். இஐறநம்பிக்கையாளனுக்கு அங்கு மனைவியர் இருப்பர். அவர்களிடம் அவன் போய்வந்து கொண்டி ருப்பான். அவர்கள் சிலர் வேறுசிலரைக் காணமுடியாது„ நூல் : புகாரி, முஸ்லிம்

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: சுவனம் செல்கிற முதல் குழுவினர் பௌர் ணமி இரவின் சந்திரனைப்போன்று (பிரகாசமாகவும் அழகாகவும்) தோற்றமளிப்பார்கள்! பிறகு அவர்களைத் தொடர்ந்து வரக்கூடிய குழுவினர் வானத்தில் அதிக அளவு இலங்குகிற தார கையைப் போல் தோற்றமளிப்பார்கள். அதன் பிறகு வரக்கூடியவர்கள் பல படித்தரங்களில் இருப்பார்கள். சுவனவாசிகள் மல – ஜலம் கழிக்க மாட்டார்கள். மூக்குச் சிந்தமாட்டார்கள்„ எச்சில் துப்பமாட்டார்கள். (அதாவது, எவ்வித அசுத்தமும் செய்யமாட்டார்கள்) அவர்களின் சீப்புகள் தங்கத்தினாலானவை„ அவர்களின் (நறுமணப் புகை போடும்) தூபக் கலசங்கள் அகிலால் எரிக்கப்படும். அவர்களின் வியர்வை கஸ்தூரி மணம்கமழும்! அவர்கள் அனைவரின் உடல் அமைப்பு ஒரே ஒருமனிதனின் உடல் அமைப்பில் இருக்கும். (அனைவரும் ஒரே உடலமைப்பைப் பெற்றிருப்பார்கள்) தங்களின்

---

[56] இமாம் அஹ்மத் அவர்களும் இதனை அறிவித்துள்ளார்கள். அதில் – மேலும் கனிவாகவும் பேசினாரோ எனும் வாக்கியமும் உள்ளது.

ஆதிபிதா ஆதத்தின் 60 அடி உயரத்தைப் பெற்றிருப்பார்கள்!„ நூல் : முஸலிம்

மற்றோர் அறிவிப்பில்:«சுவனவாசிகளிடையே கருத்து வேறுபாடு இருக்காது. அவர்கள் பரஸ்பரம் கோபப்படமாட்டார்கள். அனை வரும் ஓர் இதயம் உடையவர்கள் போல் இருப்பார்கள்! காலை யிலும் மாலையிலும் தங்கள் இரட்சகனைத் துதித்துக் கொண்டி ருப்பார்கள்.„

இன்னுமோர் அறிவிப்பில் – «அவர்களின் மனைவியர் ஹூருல் ஈன் எனும் எழில்விழி மங்கையராய் இருப்பர்!„ என உள்ளது.

ஜாபிர் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) கூறினார்கள்: சுவனவாசிகள் சுவனதில் உண்பார்கள்„ பருகுவார்கள்! ஆனால் எச்சில் துப்பமாட்டார்கள்„ மல ஜலம் கழிக்கமாட்டார்கள். மூக்கு சிந்தமாட்டார்கள்!தோழர்கள் கேட்டார்கள்:அப்படியானால் உணவின் நிலை என்ன? அதற்கு நபியவர்கள் சொன்னார்கள் : ஒரு ஏப்பம் வரும்„ வியர்வை வெளிப்படும்! அவ்வளவுதான்! அந்த வியர்வை கஸ்தூரி மணம் கமழும்!–மூச்சு விடுவது போன்று – அல்லாஹ் வைத் துதிப்பதற்கும் புகழ்வதற் கும் அவர்களுக்கு உள்ளுதிப்பு அளிக்கப்படும்!„ நூல்: முஸ்லிம்

ஜைத் பின் அர்கம்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :«முஹம்மதின் உயிர் யார் கைவசம் உள் ளதோ அவன் மீது சத்தியமாக! ஒரு சுவனவாசிக்கு– உண்பது, பருகுவது, உடலுறவு கொள்வது, ஆசைப்படுவது ஆகியவற் றில் நூறு மனிதர்களின் சக்தி கொடுக்கப்படும். அவர்களின் இயற்கைத் தேவை என்பது வியர்வையாகி மேனிகளின் வழியாக வெளியேறும்! அது கஸ்தூரி மணம்போன்று கமழும்! அவர்க ளது வயிறு ஒட்டியிருக்கும்„. நூல் : முஸ்னத் அஹ்மத், நஸாஈ[57]

அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்)அவர்கள் கூறினாகள் : «உங்களில் ஒருவருக்கு தனது வில் அளவுக்கு அல்லது ஒருகால்பாதம் அளவுக்கு ஓர்இடம் சுவனத்தில் கிடைப் பது உலகத்தையும் அதிலுள்ள அனைத்தையும் விடச் சிறந்தா

---

[57] முன்திரி அவர்கள், அத் தர்ஃகீப் வத் தர்ஹீப் எனும் நூ லில் கூறியுள்ளார்கள்: இதன் அறிவிப்பாளர்கள் ஸஹீஹ் ஹதீஸில் ஆதாரப்பூர்வமாய் ஏற்கப்படுபவர்களாய் உள்ளனர். . இமாம் தபரானியும் ஆதாரப்பூர்வமான அறிவிப்புத் தொடர் கொண்டு இதனை அறிவித்துள் ளார்கள். இப்னு ஹிப்பானும் ஹாகிமும்கூட அறிவித்துள்ளார்கள்.

கும். மேலும் சுவனவாசிகளிலுள்ள ஒருபெண் சொர்க்கத்திலிருந்து பூமியை எட்டிப்பார்த்தால் சொர்க்கத்திற்கும் பூமிக்கும் இடையே உள்ள அனைத்தையும் பிரகாசிக்ச் செய்வாள்! மேலும் அவ்விரண் டுக்கும் இடையே உள்ள அனைத்தையும் மணம் கமழவும் செய் திடுவாள்! அவளது முக்காடு உலகத்தையும் அதிலுள்ள அனைத் தையும் விடச் சிறந்தாகும்!„நூல்: புகாரி

அனஸ் (ரலி)அவர்கள் மேலும் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:‟சுவனத்தில் அங்காடி ஒன்றுள்ளது. சுவன வாசிகள் ஒவ்வொரு ஜும்ஆ நாளிலும் அங்கு வருவார்கள். தென் றல் காற்றடித்து அவர்களின் முகங்களிலும் ஆடைகளிலும் புழுதி வாரிப்போடும். அதனால் அவர்கள் அதிக அழகையும் பிரகாசத் தையும் பெறுவார்கள். தங்கள் குடும்பத்தாரிடம் திரும்பிச் செல் வார்கள். மேலும் அவர்களிடம் கூறுவார்கள் : அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் வெளியே சென்றபிறகு நீங்கள் அதிக அழ கையும் பிரகாசத்தையும் பெற்றுவிட்டீர்கள் என்று! அதற்கு அவர்கள் பதில் கூறுவார்கள் : அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்களும்தான் இங்கிருந்து சென்றபிறகு அதிக அழகையும் பிரகா சத்தையும் பெற்றுள்ளீர்கள்!„ நூல் : முஸ்லிம்

அபூ ஸயீத் – அல் குதிரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :‟சுவனவாசிகள் சுவனத்தினுள் சென்றதும் ஓர் அழைப்பாளர் இவ்வாறு அறிவிப்பார் : நீங்கள் இங்கு ஆரோக்கியமாக வாழ்வீர்கள்„ ஒரு போதும் நோயுறமாட் டீர்கள். இங்கு என்றென்றும் உயிர் வாழ்வீர்கள்„ ஒருபோதும் மரணம் அடையமாட்டீர்கள். இங்கு வாலிபத்துடன் இருப்பீர்கள்„ ஒருபோதும் முதுமை அடையமாட்டீர்கள். சேழிப்புடன் இருப் பீர்கள்„ ஒருபோதும் வறுமைக்குள்ளாக மாட்டீர்கள்!„ – இது இந்த இறைவசனத்தின் கருத்தாகும் : (அந்நேரம்) அவர்களி டம் கூறப்படும் : நீங்கள் வாரிசுகளாக்கப்பட்ட சுவனம் இதுதான். நீங்கள் செய்து வந்த நல்லமல்களுக்குப் பகரமாக இது உங்க ளுக்குக் கிடைத்திருக்கிறது!„ (7:43) நூல் : முஸ்லிம்

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:‟எந்தக்கண்ணும் பார்த்திராத, எந்தக்காதும் கேட்டிருக்காத, எந்தமனிதனின் உள்ளதிலும் உதித்திருக்காத இன் பங்களை என் நல்லடியார்ளுக்காக நான் தயார் செய்து வைத்துள்

ளேன் என்று அல்லாஹ் கூறுவான். விரும்பினால் இந்த குர்ஆன் வசனத்தை ஓதுங்கள்:

فلا تعلم نفس ما اخفي لهم من قرة اعين جزاء بما كانوا يعملون

அவர்களுடைய செயல்களின் கூலியாக கண்களைக் குளிரச் செய்யும் எத்தகைய இன்பங்கள் அவர்களுக்காக மறைத்து வைக் கப்பட்டுள்ளன என்பதை யாரும் அறியமாட்டார்! ( 32 : 17)

நபி(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்: சுவனத்தில் சென்ற தும் ஓர் அறிவிப்பாளர் கூறுவார்: சுவனவாசிகளே!நிச்சயமாக! அல்லாஹ் விடத்தில் உங்களுக்கென ஒருவாக்குறுதி உள்ளது. அதனை உங்களுக்கு நிறைவேற்றித்தர அல்லாஹ் விரும்புகிறான் –அதற்கு அவர்கள் சொல்வார்கள்: என்ன அது? அவன் எங்களின் எடைத் தட்டுகளைக் கனப்படுத்தவில்லையா? மேலும் எங்களுடைய முகங் களை வெண்மையாக்கவில்லையா? மேலும் அவன் எங்களைச் சுவனத்தில் பிரவேசிக்கச்செய்து, நரகத்தை விட்டும் எங்களைத் தூரமாக்கவில்லையா?– நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : அப்போது அவர்களுக்குத் திரை விலக்கப்படும். இறை வனை அவர்கள் காண்பார்கள். அல்லாஹ் வின் மீது சத்தியமாக! அல்லாஹ்வைப் பார்க்கும் பாக்கியத்தை விடவும் அதிக விருப்ப மான–அதிகக் கண் குளிர்ச்சியான எதனையும் அல்லாஹ் அவர்க ளுக்கு வழங்கியிருக்கமாட்டான்!, நூல் : முஸ்லிம்

அபூ ஸயீத் அல் குத்ரி (ரலி) அவர்களுடைய இந்த அறிவிப் பும் ஸஹீஹ் முஸ்லிமில் பதிவாகியுள்ளது : சுவன வாசிகளிடம் அல்லாஹ் கூறுவான் : எனது உவப்பை உங்களுக்கு நான் அரு ளுகிறேன்! இனி ஒருபோதும் உங்களின் மீது நான் கோபம் கொள்ளமாட்டேன்!„

யா அல்லாஹ்! உன்னுடைய சுவனங்களில் நிரந்தரமாகத் தங்கி வாழும் பாக்கியத்தை எங்களுக்கு வழங்குவாயாக! அங்கு உனது உவப்பை எங்கள் மீது அருள்வாயாக! உனது முகத்தைக் காண்பதன் இன்பத்தையும் உனது சந்திப்பின் ஆர்வத்தையும் எங்களுக்கு வழங்குவாயாக!

المجلس الرابع و العشرون

# في اوصاف اهل الجنة-جعلنا الله منهم بمنه و كرمه

24 வது மஜ்லஜஸ்

# சுவனம் செல்வோரின் பண்பு நலன்கள்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே எல்லாப் பொருட்களையும் உருவாக்கினான். அவற்றின் படைப்பமைப்பைச் செம்மையாக்கினான். வானங்களும் பூமியும் (ஆதியில்) ஒன்றோடென்று சேர்ந்திருந்தன.பின்னர் அவற்றைத்தனித்தனியே பிரித்தவன்அவனே! தனது விவேகத்தின் அடிப்படையில் மனிதர்களை நற்பேறுடையவர்கள் – துர்பேறுடையவர்கள் என இரு பிரிவினர்களாக்கினான். நற்பேற்றை அடைந்திட சிலநெறிகளை–காரணிகளை வகுத்தான். அதிக இறைபக்தி உடையவர்கள் அவற்றைக் கடைப்பிடித்து வாழ்ந்தார்கள். இறுதி விளைவுகளை அகப்பார்வையால் பார்த்தான். நீடித்து நிற்பவை எவையோ அவற்றைத்தேர்ந்தெடுத்துக் கொண்டான்!

அவனை நான் புகழ்கிறேன்., இந்தப் புகழைக் கொண்டு அவனுக்குரிய கடமையை முழுமையாக நான் செலுத்திடவில்லை. அவனுக்கு நன்றி செலுத்துகிறேன். நன்றி செலுத்தப்படுவதற்கு என்றென்றும் தகுதியுடையவனாக அவன் திகழ்கிறான்.

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை என்றுசாட்சி சொல்கிறேன்.அவன் தனித்தவன்.அவனுக்கு யாதொரு இணையுமில்லை. எல்லா மனிதர்களின் அடிமைத்தளையையும் தன் பிடியில் வைத்திருக்கும் எஜமானன்!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்கி சொல்கிறேன். குணத்திலும் உடலமைப்பிலும் எல்லா மனிதர்களிலும் நிறைவானவாகள் அவர்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! மேலும் நபியைப் பின்பற்றிவாழ்வதன் அனைத்துச் சிறப்புகளையும் முந்திச்

சென்று சேகரித்துக் கொண்ட நபித்தோழர் அபூபக்ர் மீதும் - நீதியை நிலைநாட்டிய, நீதியின் விஷயத்தில் எவரிடத்திலும் தயவு தாட்சண்யம் காட்டாத உமரின் மீதும்- ஷஹாதத் எனும் உயித்தியாகத்திற்குத் தம்மை ஒப்படைத்த, அதிலிருந்து தற்காப்புகூட மேற்கொள்ளாத உஸ்மான் மீதும்-அழியக்கூடிய(உலக) வாழ்வை விற்றுவிட்டு நிலைத்திருக்கக்கூடிய (மறுமை)வாழ்வை வாங்கிக் கொண்ட அலீ மீதும் - நபியவர்களின் குடும்பத்தினர் மீதும் - இறைமார்க்கத்திற்கு மெய்யான உதவியை நல்கிய நபித்தோழர்கள் மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

அன்புச் சகோதரர்களே! சுவனத்தின் வர்ணனைகளைப் பார்த்தீர்கள். அதன் அருட்கொடைகளையும் அங்குள்ள மகிழ்ச்சியையும் ஆனந்தத்தையும் கேட்டீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அமல்கள் செய்கிறவர்கள் இதற்காகத்தான் அமல் செய்ய வேண்டும்., போட்டிபோட்டுக் கொண்டு முந்துபவர்கள் இவற்றிற்காகத்தான் போட்டிபோடவேண்டும்! அதற்கான தகுதி நிச்சயமாக இவற்றிற்கே உண்டு! மனிதன் சாதாரணமான ஆசைகளை விட்டு விட்டு இவற்றை அடைவதில் ஆசைகொண்டு வாழ்நாள் முழுவதையும் தியாகம் செய்வதற்கு இவையே தகுதியானவை! சுவனத்தை அடைவதற்காக அமல் செய்வது எப்படி? அதன்பால் கொண்டு சேர்க்கும் வழி எது? என்று நீங்கள் கேட்டால் இதோ! அல்லாஹ் அவற்றை விளக்கி கூறுகிறான்., தன்னுடைய சிறப்புக்குரிய ரஸூல் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது இறக்கியருளிய திருக் குர்ஆனில்!

قال الله تعالي: و سارعوا الي مغفرة من ربكم و جنة عرضها السموات و الارض اعدت للمتقين الذين ينفقون في السراء و الضراء و الكاظمين الغيظ و العافين عن الناس و الله يحب المحسنين و الذين اذا فعلوا فاحشة او ظلموا انفسهم ذكروا الله فاستغفروا لذنوبهم و من يغفر الذنوب الا الله و لم يصروا علي ما فعلوا وهم يعلمون

“இறைவனிடம் இருந்து வழங்கப்படும் மன்னிப்பை நோக்கியும் சுவனத்தை நோக்கியும் விரைந்து செல்லுங்கள். அதன் அகலம் வானங்கள் பூமியின் அளவுக்கு விரிவானது. அது இறையச்சம் உடையோருக்காகத் தயார் செய்து வைக்கப்பட்டுள்ளது. அவர்கள் எத்தகையோர் எனில், வசதியுள்ள நிலையிலும் வசதியற்ற

நிலையிலும் அவர்கள் செலவழிப்பார்கள்.மேலும்அவர்கள் சினத்தை அடக்கிக் கொள்வார்கள். மேலும் மக் (களின் தவறு) களை மன்னித்து விடுவார்கள். --- அல்லாஹ் இத்தகைய உயர்ந்த பண்பாளர்களை நேசிக்கிறான் --- மேலும் அவர்கள் எத்தகை யோர் எனில், மோசமான செயலைச் செய்துவிட்டாலோ (ஏதேனும் பாவங்கள்செய்து)தமக்குத்தாமே அநீதி இழைத்துக்கொண்டாலோ உடனே அவர்கள் அல்லாஹ்வை நினைத்துத் தம் பாவங்களுக் காக அவனிடம் மன்னிப்புக் கோருவார்கள். ஏனெனில் அல்லாஹ் வைத் தவிர பாவங்களை மன்னித்தருள்பவன் வேறு யார்?--தாம் செய்தவற்றில் அறிந்துகொண்டே அவர்கன் படிவாதமாக இருக்க மாட்டார்கள்!„ (3 : 33 - 35)

இவைதாம் சுவனத்திற்குச் செல்பவர்கள் மேற்கொள்ள வேண் டிய பண்புகள்.

□ முதல் பண்பு : இறையச்சம். -- அவர்கள் தங்கள் இரட் சகனுக்குப் பயந்து வாழக்கூடியவர்கள்„ அவன் தரும் வேதனை யில் இருந்து பாதுகாப்பு மேற்கொள்கிறார்கள்„அவன் நன்மையை ஆதரவு வைத்து, அவன் இட்ட கட்டளைகளை நிறைவேற்று வதில் நாட்டம் கொள்கிறார்கள்„ அவனது தண்டனைக்கு அஞ்சி அவன் விலக்கிய காரயங்களை விட்டுவிடுகிறார்கள்! - இப்படி அல்லாஹ்வுக்குப் பயந்து அவனுக்குக் கீழ்ப்படிந்து வாழ்பவர்களே பயபக்தியாளர்கள்!

□ இரண்டாவது பண்பு, செல்வத்தைச் செலவு செய்தல்! எவற்றைச் செலவு செய்ய வேண்டும்„ எவ்வாறு செலவு செய்ய வேண்டுமென அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டதோ அவற்றை - அந்த முறைப்படி அவர்கள் செலவு செய்வார்கள்! செல்வத் தைச் செலவு செய்தல் என்பது, ஜகாத் கொடுப்பதாகும். தர்மங்கள் செய்வதுமாகும். மேலும் யார் யாருக்குக் கொடுத்துதவ அவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்களோ அவர்களுக்குத் கொடுத்துதவுவது, ஜிஹாத் எனும் இறைவழிப்போருக்காக வழங்குவது,இதர நன்மை யான வழிகளில் செலவுசெய்வது ஆகியவற்றையும் உள்ளடக்கும்.

வசதியிலும் சரி வறுமையிலும்சரி இவ்வாறே அவர்கள் செல் வத்தை செலவு செய்துகொண்டிருப்பார்கள். அவர்களின் வளவாழ் வும் செழிப்பும் -செல்வத்தை நேசிக்கும்படி அவர்களைத் தூண் டாது„ செல்வத்தை மேலும்மேலும் பெருக்கிக் கொள்ளும் ஆசை யில் கருமித்தனம் செய்யவும் சொல்லாது. இன்னும் வசதியற்ற

நிலை யும் கஷ்டமும் அவர்களுக்கு வந்தால், அது – தேவைக் குப் பணமில்லாமல் போய்விடுமோ எனப்பயந்து செல்வத்தைத் தேக்கிவைக்கும்படியும் அவர்களை ஏவாது!

□ மூன்றாவது பண்பு சினத்தை அடக்கிக்கொள்வது. அவர்கள் கோபம் வரும் வேளையில் அதனை அடக்கிக் கொள்வார்கள்., வரம்பு மீறிச் செயல் படமாட்டார்கள்., கோபத்தின் காரணத்தால் பிறர் மீது பொறாமை கொள்ளவுமாட்டார்கள்!

□ நான்காவது பண்பு மக் (களின் தவறு) களை மன்னிப்பதாகும். தங்களுக்கு அநீதி இழைத்தவர்களை அவர்கள் மன்னிப்பார்கள். புழிக்குப்பழி வாங்கும் சக்தி இருந்தாலும் தங்களுக்காப்பழிக்குப்பழி வாங்கமாட்டார்கள்!

அழகிய முறையில் பணிசெய்வோரை அல்லாஹ் நேசிக்கின்றான் என்கிற வசனத்தில், மன்னிப்பதென்பது அழகிய முறையுடன் இருந்தால்தான் அது புகழுக்குரியதுஎனும் சைக்கினை உள்ளது. மன்னிப்பதற்கு ஏற்ற நேரம், ஏற்ற இடம் என்றால்தான் மன்னிக்க வேண்டும். அது சீர்திருத்தத்துடன் அமையவேண்டும். மன்னிப்பதன் மூலம் – வரம்பு மீறுபவனின் குற்றம் மேலும் அதிகரிக்கும் என்றால் அது புகழுக்குரிய மன்னிப்பு அல்ல! நற்கூலியைப் பெறுகிற மன்னிப்பு அல்ல! குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான் :„எவர் மன்னிக்கிறாரோ மேலும் சீர்திருத்தம் செய்கிறாரோ அவரது கூலி அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது!„ (42 : 40)

□ ஐந்தாவது பண்பு : மேலும் அவர்கள் எத்தகையோர் எனில் மோசமான செயலைச் செய்துவிட்டாலோ தமக்குத் தாமே அநீதி இழைத்துக் கொண்டாலோ உடனே அல்லாஹ்வை நினைத்துத் தம்முடைய பாவங்களுக்கு அவனிடம் மன்னிப்பு் கோருவார்கள்„

– தமக்குத் தாமே அநீதி இழைத்தல் என்பது பொதுவாக சிறிய – பெரிய பாவங்கள் அனைத்தையும் உட்படுத்தும். அவற்றுள் ஒன்றை அவர்கள் செய்தால் உடனே– இறைக்கட்டளையை நாம் மீறிவிட்டோமே எனஅஞ்சி இறைவனின் மாண்பை நினைவு கூர்வார்கள்! அவனது மன்னிப்பையும் கிருபையையும் நினைப்பார்கள். அவற்றிற்கான காரணிகளை மேற்கொள்ள முயலுவார்கள்! தங்கள் பாவங்களுக்கு மன்னிப்புப் தேடுவார்கள்., அவற்றிற்குத் தண்டனை வழங்காமல் அல்லாஹ் அவர்களைப் பொறுத்துக் கொள்ளவும் அவற்றை மறைத்திடவும் கோருவார்கள்!

அல்லாஹ்வைத் தவிர பாவங்களை மன்னிப்பவன் வேறு யார்? எனும் இறைவாக்கில் இது பற்றிய சைக்கினை உள்ளது. அதாவது, அவர்கள் அல்லாஹ்வை விடுத்துவேறு யாரிடமும் மன்னிப்பு கேட்பதில்லை., அவனைத் தவிர வேறு யாரும் பாவங்களை மன்னிப்பவன் இல்லை என்பதனால்!

☐ ஆறாவது பண்பு: தாம் செய்தவற்றில்–அறிந்து கொண்டே அவர்கள் பிடிவாதமாக இருக்கமாட்டார்கள் என்பதாகும். – அதாவது, பாவச் செயலை – அது பாவம் என அறிந்து கொண்டே தொடர்ந்து செய்ய மாட்டார்கள். தாம் யாருக்குப் பாவம் செய்கிறோம்., அந்த இறைவனின் மகத்துவம் என்ன என்பதை அறிவார்கள். அவனது மன்னிப்பு அருகிலேயே உள்ளது என்றும் அறிவார்கள். உடனே தமது பாவச்செயலைவிட்டும் முற்றாக விலகிடவும் பாவமன்னிப்புத் தேடவும் விரைவார்கள்!

பாவத்தைப்பாவமென அறிந்து கொண்டே அதில் தொடர்ந்து ஈடுபடுவதென்பது சிறிய பாவங்களைக்கூட பெரிய பாவங்களாக மாற்றுவதுடன் கடுமையான,அபாயகரமான தீமைகளின்பால் மனிதனைப் படிப்படியாக இழுத்துச் சென்று தள்ளிவிடும்!

மேலும் அல்லாஹ் கூறுகிறான்:

قد افلح المؤمنون الذين هم في صلاتهم خاشعون والذين هم عن اللغو معرضون والذين الذين هم للزكاة فاعلون والذين هم لفروجهم حافظون الا علي ازواجهم او ما ملكت ايمانهم فانهم غير ملومين فمن ابتغي وراء ذلك فأولئك هم العادون و الذين هم لاماناتهم و عهدهم راعون والذين هم علي صلواتهم يحافظون أولئك هم الوارثون الذين يرثون الفردوس هم فيها خالدون

திண்ணமாக இறைநம்பிக்கையாளர்கள் வெற்றிபெற்றுவிட்டார்கள். அவர்கள் எத்தகையவாகள் எனில், தங்களது தொழுகையில் பயபக்தியை மேற்கொள்கிறார்கள். மேலும் வீணானவற்றை விட்டும் விலகியிருக்கிறார்கள். இன்னும் ஜகாத்தை (முறைப்படி) செயல்படுத்தக் கூடியவர்களாய் இருக்கிறார்கள். மேலும் தங்களுடைய வெட்கத்தலங்களைப் பாதுகாக்கக்கூடியவர்களாய் இருக்கிறார்கள்., தங்களுடைய மனைவியரிடமோ தங்களுடைய வலக்கரங்கள் சொந்தமாக்கிக் கொண்ட பெண்களிடமோ தவிர! அத்தகைய நிலையில்

அவர்கள் பழிப்புக்குரியவர்கள் அல்லர். ஆனால் எவர்கள் இதற்கப் பாலும் ஆசைபட்டார்களோ அவர்களே வரம்பு மீறக் கூடியவர்கள் ஆவர். மேலும் அவர்கள் தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட அமானி தங்களையும் தங்களுடைய வாக்குறுதிகளையும் பேணிக்காக்கக் கூடியவர்களாய் இருக்கிறார்கள். மேலும் தங்களுடைய தொழுகை களையும் பேணிவருபவர்களாய் இருக்கிறார்கள். இவர்கள்தாம் ஃபிர்தௌஸ் எனும் சொர்க்கத்தைப் பெறும் வாரிசகளாவர். அங்கு என்றென்றும் தங்கிவாழ்வார்கள்„ (23 : 1–11)

☐ முதல் பண்பு : இறைநம்பிக்கை கொண்டவர்கள் என்பதா கும். இவர்கள் அல்லாஹ்வின்மீது ஈமான் கொண்டார்கள். மேலும் அவனுடைய மலக்குகள், அவனுடைய வேதங்கள், தூதர்கள், மறுமை நாள், விதி – அதன் நன்மை, தீமை – என எவற்றின் மீதெல்லாம் நம்பிக்கை கொள்வது கடமையோ அவை அனைத் தின் மீதும் நம்பிக்கை கொண்டார்கள். ஒப்புதலையும் உறுதிப் பாட்டையும் வலியுறுத்தக்கூடியதான – சொல்லிலும் செயலிலும் கீழ்ப்படிதலை வலியுறுத்தக்கூடிய வகையில் ஆழமான நம்பிக்கை கொண்டார்கள்.

☐ இரண்டாவது பண்பு : தங்களது தொழுகையில் பயபக்த தியை மேற்கொள்வார்கள் என்பதாகும். தொழுகையில் அவர்களின் உள்ளம் ஆஜராகியிருக்கும். உறுப்புகள் அமைதியாக இருக்கும். தொழுகையில் அல்லாஹ்வின் முன்னிலையில் நின்று கொண்டிருக் கிறோம் என்கிற எண்ணத்துடன் இருப்பார்கள். அவனது வேதத் தைக் கொண்டு அவனுடன் உரையாடுவார்கள். அவனது திக்ரை கொண்டு அவன் பக்கம் நெருங்குவார்கள்.அவனிடம் பிரார்த்தனை செய்து அவனிடம் தஞ்சம் புகுவார்கள். இவ்வவாறாக அவர்கள் அகத்திலும் புறத்திலும் பயபக்தியுடனிருப்பார்கள்!

☐ மூன்றாவது பண்பு: வீணானவற்றை விட்டும் விலகிடுவார் கள் என்பதாகும். வீணானவை என்பது எவ்விதப்பயனும் நன்மை யுமில்லாத பேச்சுகளும் செயல்களுமாகும். தங்களது கண்டிப்பான போக்கு, ஆற்றல்மிக்க உறுதிப்பாடு ஆகியவற்றால் இவை அனைத்தை விட்டும் விலகிநிற்பார்கள். மதிக்கத்தக்க தங்களது நேரங்களை பயனுள்ள காரியங்களிலே தவிர வேறெதிலும் செல வழிக்கமாட்டார்கள். தங்களது தொழுகையைப் பயபக்தியுடன் அவர்கள் பாதுகாத்தது போன்று தங்களுடைய நேரங்களையும் வீணாகாமல் பாதுகாத்தார்கள். விணானவற்றை விட்டுவிடுவது

என்பது அவர்களின் குணமாக இருக்கும்போது தீங்களிக்கும் காரியங்களை விட்டுவிடுவார்கள் என்பது இன்னும் தெளிவான விஷயமாகும்.

□ நான்காவது பண்பு, ஜகாத்தை (முறைப்படி) செயல்படுத்தக்கூடியவர்களாய் இருக்கிறார்கள் என்பதாகும். இங்கு ஜகாத் என்பது, எந்தச் சொத்தில் ஜகாத் கொடுப்பது கடமையோ அந்தச் சொத்திலிருந்து கட்டாயமாகக் கொடுக்கக்கூடிய நிதி என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது எந்தெந்தச் சொல்–செயல்களைக் கொண்டு அவர்களின் உள்ளம் தூய்மை அடையுமோ அவை அனைத்துமாகும் என்றும் பொருள் கொள்ளலாம். (ஜகாத் என்றால் தூய்மை எனும் அகராதிப் பொருளின் அடைப்படையில்!)

□ ஐந்தாவது பண்பு, தம்முடைய வெட்கத்தலங்களைப் பாதுகாக்கக் கூடியவர்களாய் இருக்கிறார்கள் என்பதாகும். – தங்களுடைய வெட்கத்தலங்களை விபச்சாரம் மற்றும் ஓரினச் சேர்க்கையை விட்டும் பாதுகாக்கக்கூடியவர்கள்.ஏனெனில் இந்தச்செயல்களில் – அல்லாஹ்வுக்குப் பாவம் செய்வதுமட்டுமல்ல ஒழுக்கச் சீரழிவும் சமூகச் சீரழிவும் உள்ளன!

வெட்கத்தலத்தைப் பாதுகாத்தல் என்பது இதனைவிடவும் விரிந்த பொருள் கொண்டதாகவும் இருக்கலாம். அதன்படி வெட்கத்தலத்தைப் பார்ப்பது, தொடுவது ஆகியவற்றை விட்டுப் பாதுகாப்பதையும் அது உள்ளடக்கும்.

அத்தகைய நிலையில் அவர்கள் பழிப்புக்குரியவர்கள் அல்லர் எனும் சொற்றொடரில் இந்தக் கருத்தின் பக்கம் சைக்கினை உள்ளது. அதாவது, (பெண்களைப் பார்ப்பது, தொடுவது போன்ற) செயல்களுக்காகப் பொதுவாக மனிதன் பழிப்புக்குள்ளாகுவதே வார்த்தையின் அசல் பொருளாகும். ஆனால் . மனைவியிடமும் அடிமைப் பெண்களிடமும் இப்படி நடப்பதால் பழிப்பு வராது. ஏனெனில் இவர்களிடம் அப்படி நடக்க வேண்டியதுள்ளது. மனித இயல்பின் வேட்கையை நிறைவேற்றிக் கொள்வதும் சந்ததி உருவாக்கமும் இன்னபிற நலன்களும் இதில் உள்ளன!

எவர்கள் இதற்கப்பாலும் ஆசைப்படுகிறார்ளோ அவர்களே வரம்பு மீறக்கூடியவர்கள் ஆவர்,, இந்தச் சொற்றொடரில்– இரகசியப் பழக்கம் எனும் சுய இன்பம் அனுபவித்தல் கூடாது என்பதற்கு ஆதாரம் உள்ளது. காரணம் அது, மனைவி – அடிமைப் பெண் ஆகியோருக்கு அப்பால் ஆசைப்படுகிற செயலாகும்.

☐ ஆறாவது பண்பு, அவர்கள் தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட அமானிதங்களையும் வாக்குறுதிகளையும் பாதுகாக்கக்கூடியவர் களாய் இருக்கிறார்கள் என்பதாகும். அமானத் என்பது, நம்பி ஒப்படைக்கப்பட்ட ஒன்றாகும். சொல் – செயல், பொருள் எது வாகவும் அது இருக்கலாம். உங்களிடம் ஒருவர் ஒரு இரகசியத் தைச் சொன்னால் அது உங்களிடம் ஒப்படைக்கப்பட்ட அமானி தம் ஆகும். ஒருவர் உங்கள் முன்னிலையில் ஒருசெயலைச் செய தால்., அது வேறு யாருக்கும் தெரியக்கூடாது என்றும் அவர் விரும்பினால் அதுவும் உங்களிடம் ஒப்படைக்கப்பட்ட அமானி தம்தான்! ஒருவன் தனது பணத்தை உங்களிடம் கொடுத்து அதை நீங்கள் பாதுகாக்க வேண்டுமென்று சொன்னால் அதுவும் உங்களிடம் ஒப்படைக்கப்பட்ட அமானிதம்தான்!

வாக்குறுதி என்பது ஒருவர் மற்றொருவருக்கு ஏதாவது ஒரு காரியத்தைச் செய்து தருவதாக – அதனைத் தன் மீது கட்டா யமாக்கிக் கொள்வதாகச் சொல்வதாகும். அல்லாஹ்வின் பெயரில் நேர்ச்சை செய்து கொள்வது இதற்கு ஓர் எடுத்துக் காட்டாகும். மக்களிடையே நடைபெறும் ஒப்பந்தங்களும் இதில் அடங்கும்.

☐ ஏழாவது பண்பு, தொழுகையைப் பேணுவதாகும். தொழு கையை – வீணடிக்காமலும் அதனை அலட்சியம் செய்யாமலும் நிரந்தரமாக அவர்கள் பேணிவருவார்கள். இதன் கருத்து, தொழு கையை உரிய நேரத்தில் முறையாக நிறைவேற்றுவதாகும். அதற் குரிய நிபந்தனைகள், அடிப்படை அம்சங்கள், கடமைகள் ஆகியவற்றைப் பேணிவருவதாகும்.

சுவனவாசிகளுக்குரிய பண்புகளில் சிலவற்றைத்தான் இங்கு நாம் எடுத்துரைத்துள்ளோம். இவை தவிர இன்னும் பல பண்பு நலன்கள் பற்றி குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. இப்பண்பு நலன் களை குர்ஆனில் அல்லாஹ் கூறியிருப்பதன் நோக்கம், சுவனம் சென்றடைய விரும்புகிறவர்கள் அப்பண்புகளைத் தம் வாழ்வில் மலரச் செய்ய வேண்டும் என்பதாகும்!

இவை பற்றி நபி (ஸல்) அவர்களின் ஹதீஸ்களிலும் ஏராளம் சொல்லப்பட்டுள்ளது!

عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : من سلك طريقا يلتمس فيه علما سهل الله به طريقا الي الجنة – رواه مسلم

நபி(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள் : ஒருவர் கல்வியைத் தேடி ஏதேனும் வழியில் நடந்தால் அதன் மூலம் அவருக்கு சுவனத்திற்குச் செல்லும் வழியை அல்லாஹ் எளிதாக்கிக் கொடுக்கிறான்,, அறிவிப்பு: அபூ ஹுரைரா (ரலி) நூல் : முஸ்லிம்

وله ايضا ان النبي ﷺ قال: الا ادلكم علي ما يمحـو ا لله بـه الخطايـا و يرفـع بـه الدرجات ؟ قالوا : بلي يا رسول ا لله قال: اسباغ الوضوء علي المكـاره و كـثرة الخطـا الي المساجد و انتظار الصلاة بعد الصلاة

மேலும் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள், எந்த அமல்களின் மூலம் அல்லாஹ் தவறுகளை மன்னிப்பானோ, மேலும் அந்தஸ்துகளை உயர்த்துவானோ அந்த அமல்களை உங்களுக்கு நான் அறிவித்துத்தரட்டுமா? எனக்கேட்டார்கள். தோழர்கள் சொன்னார்கள்: ஆம், அல்லாஹ்வின் தூதரே!—அப்போது நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : மனம் விரும்பாதிருக்கும் நிலையில் முழுமையாக உளூ செய்வது, பள்ளிவாசல்களுக்கு அதிக எட்டுகள் வைத்து நடந்து செல்வது, ஒரு தொழுகைக்குப் பின் மற்றொரு தொழுகைக்காகக் காத்திருப்பது ,, நூல் : முஸ்லிம்

وله ايضا عن عمر بن الخطاب ﷺ ان النبيﷺ قال: مـا منكـم مـن احـد يتوضـأ فيسبغ الوضوء ثم يقول اشـهد ان لااه الا ا لله وحـده لا شـريك لـه واشـهد ان محمـدا عبده و رسوله الا فتحت له ابواب الجنة الثمانية يدخل من ايها شاء

உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் : உங்களில் ஒருவர் உளூ செய்து, அதனைப் பூரணமாகவும் செய்து பிறகு அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக லஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரஸூலுஹு (பொருள் : வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை., அவன் தனித்தவன்., அவனுக்கு யாதொரு இணையுமில்லை. என்று நான் சாட்சியம் சொல்கிறேன். மேலும் முஹம்மத் நபி, அவனுடைய அடிமையும் தூதருமாவார்கள் என்றும் சாட்சியம் சொல்கிறேன்) என்று கூறினார் எனில் சுவனத்தின் எட்டு வாசல்களும் அவருக்காக நிச்சயம் திறக்கப்படும்., அவர் விரும்பிய வாசல் வழியாக அதில் பிரவேசிக்கலாம்! ,, நூல்: முஸ்லிம்

மேலும் உமர் (ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக்கப்பட்டுள்ளது: நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்:எவர் பாங்கு சொல்பவரைத் தொடர்ந்து உளப்பூர்வமாகப் பதில் சொல்கிறாரோ அவர் நிச்சயம் சுவனம் புகுவார்,, நூல் : முஸ்லிம்

عن عثمان بن عفان ﷺ ان النبي ﷺ قال : من بنى مسجدا يبتغي به وجه الله بنى الله له بيتا في الجنة – متفق عليه

உஸ்மான்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்: எவர் அல்லாஹ்வின் முகத்தை நாடி(அவன் உவப்பைத்தேடியவராகப்)பள்ளிவாசல் கட்டினாரோ அவருக்கு அல்லாஹ் சுவனத்தில் ஒரு இல்லம் கட்ட நிச்சயம் ஏற்பாடு செய்கிறான்,.
நூல் : புகாரி, முஸ்லிம்

عن عبادة بن صامت ﷺ ان النبي ﷺ قال: خمس صلوات كتبهن الله علي العباد فمن جاء بهن و لم يضيع منهن شيأ استخفافا بحقهن كان له عند الله عهد ان يدخله الجنة رواه الامام أحمد و ابو داؤد و النسائي

உபாதா பின் ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஐந்து தொழுகைகளை அடியார்கள் மீது அல்லாஹ் கடமையாக்கினான். எவர் அவற்றை நிறைவேற்றி வருகிறாரோ மேலும் எந்த ஒருதொழுகையையும்– அதன் கடமையை லேசாகக் கருதி வீணாக்கவில்லையோ அவருக்கு அல்லாஹ்விடம் – அவரைச் சுவர்க்கத்தில் புகுத்துவதற்கு ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டுவிடுகிறது!,, நூல்: முஸ்னத் அஹ்மத், அபூ தாவூத், நஸாயி[58]

عن ثوبان ﷺ انه سال النبي ﷺ عن عمل يدخله الله به الجنة فقال: عليك بكثرة السجود فانك لاتسجد لله سجدة الا رفعك الله بها درجة و حط عنك بها خطيئة – رواه مسلم

ஸெளபான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : எந்த அமலை கொண்டு அல்லாஹ் என்னைச்சுவனம் புகுத்துவான் என்று நான்

---

58 இதற்கு இன்னும் பல அறிவிப்புத் தொடர்கள் உள்ளன்., அவை ஒவ்வொன்றும் பரஸ்பரம் வலிமை கூட்டுகின்றன!

நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்குநபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : நீர் அதிகம் ஸுஜூது செய்வீராக! (தொழுவீராக!) நீர் அல்லாஹ்வுக்காக எந்த ஒரு ஸுஜூது செய்தாலும் அதன் மூலம் உமக்கு ஓர் அந்தஸ்தை அல்லாஹ் உயர்த்தியே தீருவான்., உம்மை விட்டும் ஒருதவறை அகற்றவும் செய்வான்!„ நூல் : முஸ்லிம்

عن ام حبيبة رضي الله عنها ان النبي ﷺ قال : ما من عبـد يصلي في كـل يـوم اثـني

عشرة ركعة تطوعا غير فريضة الا بني الله له بيتا في الجنة – رواه مسلم

உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:„முஸ்லிமான ஓர் அடியார் தினமும் கடமை யான தொழுகை நீங்கலாக 12 ரக்அத் அதிகப்படியாகத் தொழுது வந்தால் அல்லாஹ் அவருக்காகச் சுவனத்தில் ஓர் வீடு கட்டக் கண்டிப்பாக ஏற்பாடு செய்வான்!„ நூல் : முஸ்லிம்

– அவை ளுஹர் தொழுகைக்கு முன் 4 ரக்அத், அதற்குப் பின் 2 ரக்அத், ம.ஃ.ரிப் தொழுகைக்குப் பின் 2 ரக்அத், இஷா தொழுகைக்குப் பின் 2 ரக்அத், ஃபஜ்ர் தொழுகைக்கு முன் 2 ரக்அத் ஆகும்.

عن معاذ بن جبل ﷺ انه قال لرسول الله ﷺ : اخبرني بعمل يدخلني الجنـة و

يبعدني عن النار؟ قال : لقد سألتني عن عظيم و انه ليسير على من يسره الله عليه تعبد

الله و لاتشرك به شيأ وتقيم الصلاة و تؤتي الزكاة و تصوم رمضـان و تحـج البيـت –

رواه أحمد و الترمذي وصححه

முஅத் பின் ஜபல் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„நான் நபி யிடம் கேட்டேன்: என்னைச்சுவனத்தில் சேர்க்கக்கூடிய ஓர்அமலை அறிவித்துத்தாருங்கள் என்று! அதற்கு நபி(ஸல்)அவர்கள் சொன் னார்கள்: முக்கியமான ஒருவிஷயத்தைக்கேட்டு விட்டீர். அல்லாஹ் யாருக்கு அதனை இலகுவாக்கினானோ அவருக்குத் திண்ணமாக அது இலகுவானதாகும். அல்லாஹ்வை நீர் வணங்கவேண்டும்., அவனுடன் எதனையும் இணையாக்கக்கூடாது. மேலும் நீர் தொழு கையை நிலைநாட்ட வேண்டும்., ஜகாத் கொடுக்க வேண்டும். ரமளான் மாதம் நோன்பு நோற்க வேண்டும்., கஅபா ஆலயத்தை ஹஜ் செய்யவும் வேண்டும்!„ நூல் : முஸ்னத் அஹ்மத், திர்மிதி

عن سهل بن سعد ﷺ ان النبي ﷺ قال: ان في الجنة بابا يقال له الريان يدخله الصائمون يوم القيامة لا يدخل منه أحد غيرهم – متفق عليه

ஸஹ்ல் பின் ஸஅத்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: சுவனத்தில் ஒருவாசல் உள்ளது., அதற்கு ரய்யான் என்று சொல்லப்படும். மறுமை நாளில் நோன்பாளிகள் அதன் வழியாக வருவார்கள். அவர்கள் அல்லாத யாரும் அதன் வழியாக வரமாட்டார்கள்!,, நூல் : புகாரி, முஸ்லிம்

عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : العمرة الي العمرة كفارة لما بينهما و الحج المبرور ليس له جزاء الا الجنة – متفق عليه

நபி(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்: ஓர் உம்ராவுடன் மற்றோர்உம்ரா செய்வது–அவ்விரண்டிற்கும் இடைப்பட்ட பாவங்களுக்குப் பரிகாரமாகும். ஒப்புக் கொள்ளப்பட்ட புண்ணியமான ஹஜ்ஜுக்கு சுவனமே கூலியாகும். ,, நூல் : புகாரி, முஸ்லிம்

عن جابر ﷺ قال : قال رسول الله ﷺ : من كا لـه ثلاث بنات يؤويهن و يرحمهن و يكفلنهن وجبت له الجنة البتة قيل : يا رسول الله فان كانتا اثنتان قال : و ان كانتا اثنتان قال : فرأي بعض القوم ان لو قال : واحدة لقال : واحدة – رواه احمد

ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒருவருக்கு மூன்றுபெண்மக்கள் இருந்து –அவர்களுக்கு அவர் பாதுகாப்புக் கொடுத்து, இரக்கம் காட்டி அவர்களைப் பொறுப்புடன் கண்காணித்து வந்தாரெனில், கண்டிப்பாக அவருக்குச்சுவர்க்கம் கடமையாகிவிடுகிறது.அப்பொழுது கேட்கப் பட்டது: அல்லாஹ்வின் தூதரே! அவர்கள் இரண்டு பெண்மக்களாய் இருந்தால்?,, அதற்கு நபியவர்கள் : இரண்டு பெண்மக்களாய் இருந்தாலும் சரியே!,, என்றார்கள். அறிவிப்பாளர் சொல்கிறார்: ஒரேஒரு பெண்மகள் இருந்தால்?,, என்று கேட்டிருந்தால்கூட – ஒரே ஒரு பெண்மகள் என்றாலும் சரியே அவர் சுவனம் புகுவார் என்றே நபியவர்கள் சொல்லியிருப்பார்கள் எனக் கருதப்பட்டது!,, நூல் : முஸ்னத் அஹ்மத்[59]

---

59 இதன் அறிவிப்புத் தொடர் பலவீனமானதாகும். ஆயினும் ஆதாரப்பூர்வமான அறிவிப்புகள் பல இதற்குச் சான்றாக உள்ளன. அவற்றுள் ஒன்று வருமாறு: நபி (ஸல்) அவர்கள்

عن ابي هريرة ﷺ ان النبي ﷺ سئل عن اكثر ما يدخـل النـاس الجنـة ؟ قـال : تقوي الله و حسن الخلق - رواه الترمذي و ابن حبان

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: பெரும்பாலும் மக்களை சுவனத்திற்குக் கொண்டு சேர்க்கும் நற்பணிகள் யாாவ என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது, அதற்கு நபிய வர்கள் சொன்னார்கள்: அல்லாஹ்வுக்குப் பயந்து வாழ்வதும் நற் குணமும் என்று!„ நூல்: திர்மிதி, இப்னு ஹிப்பான[60]

عن عياض بن حمار المجاشعي ان النبي ﷺ قال : اهل الجنـة ثلاثـة : ذو سـلطان مقسط متصدق موفق و رجل رحيم رقيـق القلـب لكـل ذي قربـي و مسـلم و عفيـف متعفف ذو عيال رواه مسلم

இயாழ்(ரலி)அவர்கள்அறிவிக்கிறார்கள்:நபி(ஸல்)அவர்கள் சொன் னார்கள்: மூன்றுபேர் சுவனம் செல்லக்கூடியவர்களாவர். ஒருவர்: நீதி செலுத்தக்கூடிய,தர்ம சிந்தையுடைய, இறையுதவி வழங்கப பட்ட ஆட்சியாளர்.இரண்டாமவர்: இரக்க சிந்தையும் இளகிய மன மும் கொண்ட—எல்லா உறவினர்களிடமும் முஸ்லிம்களிட மும் கனிவுடன் நடந்து கொள்கிறமனிதர். மூன்றாமவர்:குழந்தை குட்டி களையுடையவனாயினும் யாரிடமும்கையேந்தாமல தன்மானத்துடன் வாழக்கூடிய முஸ்லிம் (இது நீளமானஹதீஸின் ஒரு பகுதி)

சகோதரர்களே! நபி(ஸல்)அவர்களின் ஒருசில அருள்மொழிக ளாகும் இவை!சுவனத்திற்குச் செல்லும் மக்களின் நடைமுறை களில் பெரும்பாலானவற்றை இவை விளக்குகின்றன„ சுவனம் செல்வதற்கு யார் விரும்புகிறார்ளோ அவர்களுக்கு! இத்தகைய பண்பு களைக்கடைப்பிடித்து வாழ்வதை எமக்கும் உங்களுக்கும் அல்லாஹ் இலகுவாக்கித்தர வேண்டும் என்றும் அவற்றில் நம்மை நிலைப்படுத்த வேண்டும் என்றும் அல்லாஹ் விடம் நான் இறைஞ்சுகிறேன்! திண்ணமாகஅவன்பெரும்கொடை யாளன்„ கண்ணியமிக்கவன்!

---

கூறினார்கள் : எவரேனும் ஒருவருக்குப் பெண்பிள்ளை(கள் இருந்து அவர்)களின் மூலம் அவர் சோதனைக்குள்ளாக்கப்பட்டும் அவர்களிடம் அவர் நல்லமுறையில் நடந்து கொண் டால் அவர்கள் இவருக்கு நரகத்தை விட்டும் திரையாக அமைவார்கள்„ நூல்: முஸ்லிம்

60 இதன் அறிவிப்புத் தொடர் ஸஹீஹ் அல்ல„ ஆனால் இதன் வாசகம் ஸஹீஹ்.

المجلس الخامس و العشرون

# في وصف النار أعاذنا الله منها

25 வது மஜ்லிஸ்

# நரகத்தின் கொடூரம்!

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே நித்திய ஜீவன்!., (பேரண்டம் முழுவதையும்) நன்கு நிர்வகிப்பவன்! நிலைத்திருப்பவன்., அவனல்லாதார் எவருமே நிலைத்திருக்கமாட்டார்கள். வானத்தை உயர்த்தினான். அதனை நட்சத்திரங்களைக் கொண்டு அலங்கரித்தான்! எல்லைக் கற்கள் போன்ற மலைகளை ஊன்றி பூமியை நிலைப்படுத்தினான். தனது ஆற்றல் கொண்டு (மனிதர்களின்) உடல்களை வடிவமைத்தான். பிறகு அவர்களை மரணிக்கச் செய்தான். அத்துடன் அடிச்சுவடுகளைக்கூட அழித்துவிடுகிறான். பிறகு எக்காளத்தில் ஊதச்செய்வான். மரணித்தவர்கள் அனைவரும் அப்பொழுது எழுந்துவருவார்கள். ஒருபிரிவினர் அருட்பேறுகள் நிறைந்த சுவனம் செல்வார்கள்.மற்றொரு பிரிவினர் அணற்காற்று வீசும் நரகம் செல்வர்! அந்நரக வாசிகளில் ஒவ்வொரு பிரிவினர்க்கும் ஒவ்வொருவாசல் ஒதுக்கப்பட்டுள்ளது. உயர உயரமான தூண்களில் அவர்கள் கட்டப்பட்டிருக்கும் நிலையில் நரக நெருப்பு அவர்களின் மீது சூழப்பட்டு பெருந்துயரங்களுக்கும் கவலைகளுக்கும் அவர்கள் ஆளாகியிருப் பார்கள்! மேலிருந்தும் பாதங்களுக்குக்கீழிருந்தும் வேதனை அவர்களைச் சூழ்ந்திருக்கும் நாளில் இறையருளைப்பெற்றோர் யாரும் இருக்கமாட்டார்கள்.

வணக்கத்திற்குரிய இறைவன்அல்லாஹ்வைத்தவிர வேறில்லை. அவன் தனித்தவன்.அவனுக்கு இணையேதுமில்லை என்று சாட்சி சொல்கிறேன். ஈடேற்றத்தை நாடுபவனின் சாட்சிய மாகும் இது!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடியாரும் தூத ரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்களுடைய மார்க்கத்திற்கு பாரசீகம் மற்றும் ரோமாபுரியின் மீது அல்லாஹ் வெற்றியைக் கொடுத்தான்.

நபியவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தினர் மீதும் தோழர்கள் மீதும் அவர்களை வாய்மையுடன் பின்பற்றிவந்தவர்கள் மீதும்— மேகங்கள் மழையைக் கொட்டிக் கொண்டிருக்கும் காலமெல்லாம் அல்லாஹ் ஸலவாத் பொழிந்து கொண்டிருப்பானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே!அல்லாஹ் தனதுவேதத்தில் நரகத்தைக் குறித்து நம்மை எச்சரிக்கை செய்துள்ளான். அங்குள்ள பலவகையான வேதனைகள் குறித்து — ஈரல்கள் பிளந்து, இதயங்கள் பொங்கியெழும் அளவுக்கு நமக்கு அறிவித்துள்ளான். இவ்வாறு நரகத்தைப் பற்றி நமக்கு அவன் எச்சரிக்கை செய்ததும் அதன் விதவிதமான வேதனைகள் குறித்து நமக்கு அறிவிப்புச் செய்ததும் நம் மீது அவன் பொழிந்த கருணையேயாகும். ஏனெனில் அப்போதுதான் நாம் அதிக எச்சரிக்கையுடனும் அச்சத்துடனும் இருக்க முடியும்!

சகோதரர்களே! இறைவேதத்திலும் தூதரின் வாக்குகளிலும் நரக வேதனையின் பல வகைகள் குறித்து வந்துள்ள செய்திகளைக் கேளுங்கள்! அதன் மூலம் நீங்கள் படிப்பினை பெறக் கூடும்! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : واتقوا النار التي اعدت للكافرين

„இறைநிராகரிப்பாளர்களுக்காகத் தயார் செய்யப்பட்டதான நரக நெருப்புக்கு அஞ்சுங்கள்„ அல்குர்ஆன் (3 : 131)

قال تعالي : انا اعتدنا للكافرين سلاسل و اغلالا وسعيرا

“நிச்சயமாக இறைநிராகரிப்பாளர்களுக்கு,சங்கிலிகளையும் விலங்குளையும் கொழுந்துவிட்டெரியும் நெருப்பபையும் தயார் செய்து வைத்துள்ளோம். „ (76 : 4)

قال تعالي : انا اعتدنا للكافرين نارا أحاط بهم سرادقها.

„கொடுமையாளர்களுக்காகத் திண்ணமாக நாம் ஒருநெருப்பைத் தயார் செய்துவைத்திருக்கிறோம்.அதன் சுவாலைகள் அவர்களைச் சுற்றிவளைத்தாகிவிட்டது!„ (18 : 29)

قال مخاطبا ابليس : الامن اتبعك من الغاوين و ان جهنم لموعدهم أجمعين لها سبعة أبوابٍ لكل باب منهم جزء مقسوم

(ஓரிடத்தில் இப்லீஸை முன்னோக்கிக் கூறுகிறான்:) „ஆனால் எவர்கள் உன்னைப் பின்பற்றி வழிகெட்டுப் போகிறார்களோ அவர்களிடம் மட்டும் உனது அதிகாரம் செல்லுபடியாகும். நிச்சயமாக அப்படிப்பட்டவர்கள் அனைவருக்கும் நரகம் உண்டு என எச்சரிக்கை செய்யப்பட்டுள்ளது! (இப்லீஸைப்பின்பற்றுவோருக்கு எச்சரிக்கை செய்யப்பட்டுள்ள) அந்நரகத்திற்கு ஏழு வாயில்கள் உள்ளன.ஒவ்வொரு வாயிலும் ஒவ்வொரு பிரிவினருக்கென ஒதுக்கப்பட்டுள்ளது.(15 : 42 –44)

قال نعالي: وسيق الذين كفروا الي جهنم زمرا حتي اذا جاؤاها فتحت ابوابها

(இறுதித்தீர்ப்புக்குப் பிறகு)இறைவனை நிராகரித்துக் கொண்டிருந்தவர்கள் நரகத்தைநோக்கிக் கூட்டம்கூட்டமாகஓட்டிச் செல்லப்படுவார்கள். அவ்வாறாக அவர்கள் அந்நரகத்தை நெருங்கியதும் அதன் வாயில்கள் திறக்கப்படும்„ (39 : 71)

قال تعالي : و للذين كفروا بربهم عذاب جهنم و بئس المصير اذا القوا فيها سمعوا لها شهيقا و هو تفور تكاد تميز من الغيظ

„எவர்கள் தங்களுடைய இரட்சகனை நிராகரித்தார்களோ அவர்களுக்கு நரகத்தின்வேதனை இருக்கிறது!அதுமிகவும் கேடுகெட்ட இருப்பிடமாகும். அதில் அவர்கள் வீசியெறியப்படும் போது அதன் கடுமையான கர்ஜனையைக்கேட்பார்கள்.அதுகொதித்துக் கொண்டிருக்கும். கடுமையான கோபத்தால் வெடித்து விடும்போலிருக்கும்!„ (67 : 61–63)

يوم يغشاهم العذاب من فوقهم و من تحت ارجلهم

அந்நாளில் வேதனை இவர்களின்மேலிருந்தும் இவர்களின் கால்களுக்குக் கீழிருந்தும் இவர்களைச் சுற்றிவளைத்துக் கொள்ளும்„ (29 : 55)

قال تعالي : لهم من فوقهم ظلل من النار و من تحتهم ظلل ذلك يخوف الله عباده يا عبادي فاتقون

„அவர்களின்மீது நெருப்புக்குடைகள் மேலிருந்தும் கீழிருந்தும் மூடியிருக்கும். இத்தகைய முடிவைக் குறித்துத்தான் அல்லாஹ்

தன் அடியார்களை அச்சுறுத்துகிறான். என் அடியார்களே! என் கோபத்திலிருந்து தப்பித்துக் கொள்ளுங்கள்!„(39 : 16)

قال تعالي : و اصحاب الشمال ما اصحاب الشمال في سموم و حميم و ظل من يحموم لا بارد ولا كريم

"மேலும் இடது பக்கத்தார்„இடது பக்கத்தார்(உடைய துர்ப்பாக் கயம்) பற்றி என்ன சொல்வது?அவர்கள் அனற்காற்றிலும் கொதிக் கும் நீரிலும் கரும்புகைகளின் நிழலிலும் கிடப்பார்கள். அது குளிர்ச்சியாகவும் இராது„ சுகமாகவும் இராது!„(56: 41–44)

قال تعالي: و قالوا لاتنفروا في الحر قل نار جهنم أشد حرا

"மேலும் கடுமையான இந்த வெப்ப காலத்தில் போருக்குப் புறப் படாதீர்கள் என்று (மக்களிடம்)கூறினார்கள். (இவர்களிடம்) கூறு வீராக: நரக நெருப்பு இதைவிடஅதிக வெப்பமுடையது„(9 : 81)

قال تعالي: وما أدراك ماهية نار حامية

"அது என்னவென்று உமக்குத் தெரியுமா என்ன? கொழுந்து விட்டெரியும் நெருப்பு„ (101 : 11)

قال تعالي: ان المجرمين في ضلال و شعر يوم يسحبون في النار علي وجوههم ذوقوا مس سقر

இந்தக் குற்றவாளிகள் உண்மையில் தவறான கருத்துக்களில் உழல்கின்றார்கள். மேலும் இவர்களின் புத்தி பேதலித்திருக்கிறது. இவர்கள் நரக நெருப்பில் முகங்குப்புற இழுத்துச் செல்லப்படும் நாளில் அவர்களிடம் கூறப்படும்: இப்பொழுது சுவையுங்கள்„ நரக நெருப்பின் தீண்டுதலை!„ (54: 47–48)

قال تعالي: وما أدراك ما سقر لا تبقي ولا تذر لواحة للبشر

"மேலும் அந்த நரகம் என்னவென்று நீர்அறிவீரா என்ன? அது இருக்கவும் விடாது„ விட்டும் வைக்காது! அது சருமத்தைக் கரித்துவிடக்கூடியது!„ (74 : 26–29)

قال تعالي: يا ايها الذين آمنوا قوا انفسكم و اهليكم نارا وقودها الناس و الحجارة عليها ملائكة غلاظ شداد لا يعصون الله ما امرهم و يفعلون ما يؤمرون

"இறைநம்பிக்கை கொண்டவர்களே! மனிதர்களும் கற்களும் எரி பொருள்களாகக்கூடிய அந்த நரக நெருப்பில் இருந்து உங்களை

யும் உங்கள் மனைவி –மக்களையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள்! அதன் மீது கடும் சீற்றமுடைய வானவர்கள் நியமிக்கப் பட்டிருப் பார்கள். அவர்கள், அல்லாஹ்வின் கட்டளையை ஒருபோதும் மீற மாட்டார்கள்.அவர்களுக்கு எந்தக்கட்டளைஇடப்பட்டாலும்அதனை அவர்கள் நிறைவேற்றுவார்கள்!„ (66 : 6)

قال تعالي: انها ترمي بشرر كالقصر كانه جمالة صفر

“அந்த நெருப்பு, மாளிகைகளைப் போன்ற பெரும்பெரும் தீக் கங்குகளைக் கக்கும். அது(குமுறி எழும்போது)மஞ்சள் நிற ஒட் டகங்களைப் போலிருக்கும்„ (77: 32–34)

قال تعالي: وتري المجرمين يومئذ مقرنين في الاصفاد سرابيلهم من قطران و تغشـي وجوههم النار

“அந்நாளில் குற்றவாளிக (ளின் கை கால்) கள் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருப்பதை நீர் காண்பீர். அவர்கள் தார் ஆடை களை அணிந்திருப்பார்கள்.மேலும் அவர்களின் முகங்களைத் தீக் கொழுந்துகள் சூழ்ந்திருக்கும்„ (41 : 48–50)

قال تعالي: اذ الاغلال في اعناقهم و السلاسل يسحبون في الحميم ثم في النار يسجرون

„அப்பொழுது அவர்களுடைய கழுத்துகள் விலங்குளாலும் சங்கிலிகளாலும் பிணைக்கப்பட்டிருக்கும். அவர்கள் கொதி நீரின் பக்கம் இழுத்துக் கொண்டு வரப்படுவார்கள். பின்னர் நெருப்பில் போட்டு தீ மூட்டப்படுவார்கள்!„ (40:72)

قال تعالي: فالذين كفروا قطعت لهم ثياب من نار يصـب مـن فـوق رؤوسـهم الحميـم يصهر به ما في بطونهم و الجلود ولهم مقامع مـن حديـد كلمـا ارادوا ان يخرجـوا منهـا اعيدوا فيها و ذوقوا عذاب الحريق

“எவர்கள் சத்தியத்தை நிராகரித்தார்களோ அவர்களுக்கு நெருப் பாடைகள் தயார் செய்து வைக்கப்பட்டுள்ளன. அவர்களின் தலை களின் மேலிருந்து கொதிக்கும் நீர் ஊற்றப்படும். அதனால் அவர் களின் தோல்கள் மட்டுமல்ல; வயிற்றினுள் இருக்கும் பகுதிகளும் வெந்து உருகி விடும்! மேலும் அவர்களுக்குத் தண்டனை வழங்குவதற்காக இரும்புச் சம்மட்டிகள் இருக்கின்றன. மன வேதனையினால் நரகத்தில் இருந்து வெளியேற அவர்கள் முயற்சி

செய்யும் போதெல்லாம் - சுட்டெரிக்கும் தண்டனையைச் சுவை யுங்கள் என்று மீண்டும் அதிலேயே தள்ளப்படுவார்கள்!„ (22 : 22)

قال تعالي: ان شجرة الزقوم طعام الاثيم كالمهل يغلي في البطون كغلي الحميم

"திண்ணமாக ஸக்கூம்-கள்ளி மரம் பாவிகளின்உணவாகஇருக் கும். அது எண்ணைக் கசடு போலிருக்கும். சூடேறிய நீர் கொதிப்பது போன்று வயிற்றில் கொதிக்கும்!„ (44 : 43 - 45)

قال في تلك الشجرة : انها شجرة تخرج في اصل الجهيم طلعها كانه رؤوس الشياطين

"மற்றோரிடத்தில் அந்த மரத்தைப் பற்றி இவ்வாறு கூறுகிறான் அது நரகத்தின்அடித்தளத்தில் இருந்து முளைத்துவருகிற ஒரு மரம். அதன் பாளை ஷைத்தான்களின் தலைகளைப் போன்றிருக் கும்!„ (37 : 64-65)

قال تعالي: ثم انكم ايها الضالون المكذبون لآكلون من شجر من زقوم فمالئون منها البطون فشاربون عليه من الحميم فشاربون شرب الهيم

"பின்னர் ஓ! வழிகெட்டவர்களே! பொய்யென்று தூற்றியவர்களே! நீங்கள் ஸக்கூம் - கள்ளி மரத்தினுடையதையே உண்ணப் போகி றீர்கள்! நீங்கள் அதைக் கொண்டே வயிற்றை நிரப்புவீர்கள். அதற்கு மேல் கொதிக்கும் நீரைக் குடிப்பீர்கள். அடங்கா தாகம் கொண்ட ஒட்டகத்தைப் போன்று! „ (56 : 51-55)

قال تعالي: و ان يستغيثوا يغاثوا بماء كالمهل يشوي الوجوه بئس الشراب وساءت مرتفقا

"அங்கு அவர்கள் தண்ணீர் கேட்பார்களாயின் உருக்கிய உலோ கம் போன்ற நீர் அவர்களுக்குக் கொடுக்கப்படும். அது அவர்க ளின் முகங்களைக் கரித்துவிடும். அது மிகவும் கேடுகெட்ட பானமாகும். மேலும் அவர்களின் ஓய்விடம் தீயதாகும்.(18 : 29)

قال تعالي: وسقوا ماء حميما فقطع امعاءهم

"(நரகத்தில் நிரந்தரமாகவீழ்ந்து கிடக்கும்)அவர்களுக்கு கொதிக் கும் நீர் புகட்டப்படும். அது அவர்களின் குடல்களை யெல்லாம் துண்டுதுண்டாக்கிவிடும்!„ (47 : 15)

قال تعالي: و يسقي من ماء صديد ولايكاد يسيغه و يأتيه الموت من كل مكان ومـاهو بميت و من ورائه عذاب غليظ.

“அந்நரக வாசிக்குச் சீழ் புகட்டப்படும். அதனை அவன் கஷ்டப் பட்டு விழுங்க முயல்வான். எனினும் அதனை அவன் எளிதில் விழுங்கிட அவனால் முடியாது. அனைத்துத் திசைகளில் இருந் தும் மரணம் அவனை நோக்கி வரும்! ஆயினும் அவனால் மரணம் அடைய முடியாது. அதைப் தவிர ஒருகடும் வேதனை அவனது உயிரை வதைத்துக் கொண்டிருக்கும்„ (14 : 16– 17)

قال تعالي: ان المجرمين في عذاب جهنم خالدون لا يفتر عنهم و هـم فيـه مبلسـون و مـا ظلمنا هم ولكن كانوا هم الظالمين و نادوا يا مالك ليقض علينا ربك قال انكم ماكثون

„குற்றவாளிகளோ நரக வேதனையில் நிரந்தரமாக வீழ்ந்து கிடப் பார்கள். அவர்களின் வேதனை கொஞ்சமும் குறைக்கப்பட மாட் டாது. அவர்கள் அதில் நிராசையுற்றிருப்பார்கள். நாம் அவர்களுக் குக் கொடுமை இழைக்கவில்லை. அவர்கள்தாம் தமக்குத் தாமே கொடுமை இழைத்துக் கொண்டார்கள்! அவர்கள் மன்றாடுவார் கள்„ மாலிகே! உம் அதிபதி எங்களது பிரச்னையை முடிக்கட் டுமே! என்று! அதற்கு அவர்: நீங்கள் இப்படியேதான் கிடப்பீர்கள் . . . என்று பதிலளிப்பார்„ (43 : 73–77)

قال تعالي: مأواهم جهنم كلما خبت زدناهم سعيرا

“அவர்களின் இருப்பிடம் நரகமாகும். அதன் வெப்பம் தணியத் தொடங்கும்போதெல்லாம் நாம்அதனை இன்னும்அதிகம் கொழுந்து விட்டெரியச் செய்வோம்! „ (17 : 97)

قال تعالي: ان الذين كفروا و ظلموا لم يكن الله ليغفرلهـم و لاليهديهـم طريقـا الا طريق جهنم خالدين فيها ابداً و كان ذلك علي الله يسيرا

“நிச்சயமாக எவர்கள் இறைவனை நிராகரித்தார்களோ மேலும் அக்கிரமம் புரிந்தார்களோ அவர்களை அல்லாஹ் ஒருபோதும் மன்னிக்கமாட்டான். அவர்களுக்கு நரகத்திற்கான வழியைத் தவிர வேறெந்த வழியையும் காண்பிக்கமாட்டான். அதில் அவர்கள் கால மெல்லாம் வீழ்ந்து கிடப்பார்கள். அவ்வாறு செய்வது அல்லாஹ் வுக்கு மிக எளிதான காரியம்தான்!„ ( 4 : 168)

قال تعالي: ان الله لعن الكافرين و اعد لهم سعيرا خالدين فيها ابدا لا يجدون وليا ولا نصيرا

“நிராகரிப்பாளர்களை நிச்சயமாக அல்லாஹ் சபித்துவிட்டான். மேலும் அவர்களுக்காக, கொழுந்து விட்டெரியும் நெருப்பபைத் தயார் செய்துள்ளான். அதில் அவர்கள் நிரந்தரமாக என்றென்றும் வீழ்ந்து கிடப்பார்கள். எந்த ஓர் ஆதரவாளரையும் உதவியாள ரையும் அவர்கள் பெறமாட்டார்கள்„ (33 : 64-65)

قال تعالي: ومن يعص الله و رسوله فان له نار جهنم خالدين فيها ابدا

“எவரேனும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்தால் திண்ணமாக அவருக்கு நரக நெருப்பு இருக்கிறது. இப்படிப்பட்டவர்கள் அதில் நிரந்தரமாக -காலாகாலமாக வீழ்ந்து கிடப்பார்கள்„ (72 : 23)

قال تعالي: و ما ادراك ما الحطمة نار الله الموقدة التي تطلع علي الافئدة انها عليهم مؤصدة في عمد ممد د ة

“சிதைத்துச் சின்னாப்பின்னமாக்கும் அந்த இடம் எதுவென்று உமக்குத் தெரியுமா? அது அல்லாஹ்வின் நெருப்பு„ அதுஉக்கிரம மாக மூட்டப்பட்டிருக்கக்கூடியது„அது இதயங்கள் வரை சென்று பரவும்„ உயர உயரமான தூண்களில் (அவர்கள் கட்டப்பட்டிருக் கும் நிலையில்)நிச்சயமாக அவர்கள் சூழப்பட்டு மூடப்படுவார்கள்„ (104 : 5-8)

நரகத்தின் கொடூரத்தை வர்ணிக்கக்கூடிய- ஓயாமல் துன்புறுத் தும் அதன் பல்வேறு வேதனைகளைச் சுட்டிக்காட்டக்கூடிய் குர்ஆன் வசனங்கள் ஏராளம் உள்ளன்!

நபிமொழிகள் வருமாறு: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்„ நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மறுமைநாளில் நரகம் கொண்டுவரப்படும்.அதற்குஎழுபது ஆயிரம் கடிவாளம் இருக்கும். ஒவ்வொரு கடிவாளத்துட னும் எழுபது ஆயிரம் மலக்குகள் இருப்பார்கள்„ அதனை அவர்கள் இழுத்துக் கொண்டு வருவார்கள்„ நூல் : முஸ்லிம்

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :“உலகில் மனிதர்களால் மூட்டப்படுகிற நெருப்பானது, நரக நெருப்பின் எழுபது பங்கில் ஒரு பங்காகும்.

அதற்கு தோழர்கள் சொன்னார்கள் : நிச்சயமாக இது போதியஅள விலானதே!அதற்கு நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒவ்வொரு மடங்கும் இங்குள்ள நெருப்பின் வெப்பத்தைப் போன்றிருக்கும்படி யான 69 மடங்குகளைக் கொண்டு நரக நெருப்பு அதி கமாக்கப் பட்டுள்ளது!„ நூல் : புகாரி, முஸ்லிம்

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :„நாங்கள் நபி (ஸல்) அவர்களின் சமூகத்தில் அமர்ந்திருந்தோம். அப்போது ஒரு பொருள் விழுவது போன்று சப்தம் கேட்டது. அது என்ன வென்று அறிவீர்களா?என நபி(ஸல்)அவர்கள்எங்களிடம் கேட்டார் கள். அப்பொழுது –அல்லாஹ்வும் அவனுடைய தூதரும்தான் மிக அறிந்தவர்கள் என்று நாங்கள் சொன்னோம். அப்பொழுது நபி (ஸல்)அவர்கள் சொன்னார்கள்: அது ஒருகல்„அல்லாஹ் அதனை நரகத்தில் அனுப்பினான்„ எழுபது இலையுதிர் காலம் தொட்டு (அதாவது எழுபதுஆண்டுகளாக)அது வீழ்ந்துகொண்டே இருந் தது. இப்போது அது நரகத்தின் ஆழத்தில் வந்துசேர்ந்துள்ளது„ நூல் : முஸ்லிம்

உத்பா பின் ∴கஸ்வான் (ரலி) அவர்கள் ஒரு சொற்பொழிவில் கூறினார்கள் : “எங்களுக்குச் சொல்லப்பட்டுள்ளது : நரகத்தின் மூலையில் இருந்து ஒரு கல் வீசப்படுமானால் எழுபது ஆண்டு கள் வரையில் நரகினுள்அதுபோய்கொண்டேயிருக்கும்.அப்போதும் அதன் ஆழத்தை அதுஎட்டாது!அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அத்தகைய (ஆழமான) நரகம் நிரப்பப்பட்டே தீரும்! இது உங்க ளுக்கு ஆச்சரியமாக இருக்கிறதா, என்ன?„ நூல்: முஸ்லிம்

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் : (நரகத்தின்) கள்ளிச் செடியில் இருந்து ஒரு துளி இவ்வுலகத்தில் விழுந்தால் உலக மக்களின் வாழ்வா தாரங்களையே அது நாசமாக்கிவிடும்„ நூல் : நஸாயி, திர்மிதி, இப்னு மாஜா[61]

நு∴மான் பின் பஷீர்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: „நரகத்தில் வீழ்ந்து கிடப்பவர்களில் மிக லேசான தண்டனையைஅனுபவிப்பவன் நெருப்பினால் செய்யப்பட்ட

---

[61] இதனை ஹாகிமும் அறிவித்துள்ளார்கள்: மேலும் சொன்னார்கள்: இது புகாரி, முஸ் லிமின் நபந்தனையின் படி ஸஹீஹ் ஆகும்.

இரண்டு செருப்புகளையும் இரண்டு வார்களையும் அணிந்திருப் பான்., அவற்றின் வெப்பத்தினால் அவனது மூளை கொதிக்கும்., அடுப்பில் சட்டி கொதிப்பதுபோன்று!அனைவரை விடவும் லேசான வேதனையை அனுபவிப்பவன் அவனாகவே இருப்பான். ஆயினும் தன்னை விடவும்கடமையான வேதனையை எவரும் பெற்றிருக்க மாட்டார் எனக் கருதுவான்!,, நூல் : முஸ்லிம் – இதே போன்ற வாசகம் புகாரியிலும் பதிவாகியுள்ளது.

அனஸ் பின் மாலிக்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் : உலக மக்களில் மிகவும் சுக போகமாக வாழ்நதவன்– நரகம் செல்ல வேண்டுமெனத் தீர்ப்பளிக்கப்பட்டு நர கில் போடுவதற்காகக்கொண்டுவரப்படுவான்.நரகத்தில் ஒருதடவை அவனைப் போட்டு எடுக்கப்படும்.,பிறகு கேட்கப்படும் : மனிதனே! நீ எப்போதாவது இன்பநிலையை கண்டதுண்டா? உனது வாழ் வில் ஏதாவது சுகத்தை நீ அனுபவித்ததுண்டா? என்று! அவன் சொல்வான்: என் இரட்சனகனே! உன் மீது ஆணையாக! எந்த இன்பத்தையும் நான் அனுபவிக்க வில்லை!

இதேபோன்று உலக மக்களில் அதிகஅளவுகஷ்டம் அனுபவித் தவர் – சுவனம் செல்லலாம் எனத் தீர்ப்பளிக்கப்பட்டு – சுவனத் தில் பிரவேசிப்பதற்காகக் கொண்டு வரப்படுவார். சுவனத்தில் ஒரு தடவை அவர் புகுத்தப்பட்டு வெளியே கொண்டு வந்து அவரிம் கேட்கப்படும்: மனிதனே!நீ எப்போதாவதுஉனது வாழ்வில் துன்பம் அனுபவித்ததுண்டா? என்று! அதற்கு அவர், என் இரட்சகனே! உன் மீது சத்தியமாகச் சொல்கிறேன்: எந்த வறுமையையும் நான் பார்த்ததில்லை., எந்த கஷ்டத்தையும் நான் அனுப வித்ததில்லை!,, நூல் : முஸ்லிம்

– அதாவது, நரகவாசிகள் உலகில் அனுபவித்தஎல்லா இன்பங் களையும் மறந்துவிடுவார்கள். சுவனவாசிகள் உலகில் அனுபவித்த எல்லாக் கஷ்டங்களையும் மறந்துவிடுவார்கள்!

அனஸ் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நரக வாசிகளைச் சேர்ந்த ஒருமனிதனிடம் கேட்கப் படும்: நீஎன்ன சொல்கிறாய்?பூமியிலுள்ள பொருள்கள் அனைத்தும் உன்னிடம் இருந்திருந்தால்அவற்றை ஈடாகக்கொடுத்து வேதனை யிலிருந்து நீ விடுபடலாம் எனக் கருதுகி றாயா, என்ன? அதற்கு அவன் ஆம் என்பான்! இறைவன் சொல்வான்: இதனைவிட எளி தானதைத்தானே உன்னிடமிருந்து நான் எதிர்பார்த்தேன்!ஆதத்தின்

முதுகில் நீ இருந்தபோது என்னோடு எதுஒன்றையும் நீ இணை யாக்கக்கூடாதுஎன்று உன்னிடம் வாக்குறுதிவாங்கினேன். ஆனால் எனக்கு இணைகற்பிப்பதில்தான் நீ பிடிவாதமாக இருந்தாய்!„ நூல் : அஹ்மத்–ஸஹூஹ் முஸ்லிமிலும் ஸஹூஹூல் புகாரியிலும் இது போல் பதிவாகியுள்ளது!

ய:லா இப்னு முன்யா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„(இவர் உமையாவின் மகன்„ முன்யா என்பது அவருடைய தாய்) : நரக வாசிகளின் மீது ஒரு மேகக்கூட்டத்தை அல்லாஹ் உருவாக்கிக் கொண்டுவருவான். அது அவர்களுக்கு மேல்நேராக வரும்போது அவர்களை நோக்கி இறைவன் கூறுவான் : நரக வாசிகளே! நீங்கள் விரும்புவதென்ன?கேட்பதென்ன?–அதனைப் பார்த்தவுடன் உலகத்து மேகங்களும் அவர்கள் மீது பொழிந்து கொண்டிருந்த மழையும் அவர்களின் நினைவுக்கு வரும்–இரட்சகனே! நாங்கள் கேட்பது மழையைத் தான் என்று அவர்கள் சொல்வார்கள். பிறகு விலங்குகளை அவர்கள் மீது அவன் பொழியச்செய்வான்„ அது, அவர்களின் மீது பூட்டப்பட்டிருக்கும் விலங்குகளுடன் விலங்கு களாய் அதிகரிக்கச் செய்யும்! சங்கிலிகளைப் பொழியச் செய்வான்„ அது, அவர்களைப் பிணைத்துக் கொள்ளும்! தீப்பிழம்புகளை யும் பொழியச் செய்வான்„ அது, அவர்களின் மீது தீயை நன்கு கொழுந்துவிட்டு எரியச் செய்யும்!„ நூல் : இப்னு மர்தவைஹி

அபூ மூஸா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: மூன்று பேர் சுவனம் புகமாட்டார்கள். (1) குடிகாரன் (2) இரத்தபந்தத்தை முறிப்பவன் (3) சூனியத்தி(ன் செய்தியி)னை உண்மைப்படுத்துபவன்!– எவன் குடிகாரனாக இருந்து மரணம் அடைந்தானோ அவனுக்கு அல்லாஹ் :கூதா எனும் நதியிலி ருந்து நீர்புகட்டுவான்..:கூத்தா நதி என்பதுஎன்ன?என்று கேட்கப் பட்டது. நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்: அது விபச்சாரிகளின் மர்ம உறுப்புகளில் இருந்து வழிந்தோடும் நீர் ஆகும். அவர்களு டைய மர்ம உறுப்புகளின் துர்நாற்றம் நரக வாசிகளைச் சங்கட்த் தில் ஆழ்த்தும்„நூல்: அஹ்மத்[62]

ஜாபிர் பின் அப்துல்லாஹ்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்: எவன் போதைப்பொருள்களை உட்

---

[62] ஹாகிம் இதனை ஸஹீஹ் என்று சொல்லியுள்ளார்கள். தஹபி அதனை ஏற்றுள்ளார்கள்.

கொண்டானோ அவனுக்கு அல்லாஹ் - த்தீனதல் கபால் - இல் இருந்து நீர் அருந்தச்செய்வான்.இது அல்லாஹ்செய்து கொண்ட ஒரு வாக்குறுதியாகும். த்தீனதுல் கபால் என்றால் என்ன என்று தோழர்கள் கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்: அது நரக வாசிகளின் வியர்வை அல்லது பிழிவு ஆகும்„ நூல்: முஸ்லிம்

பின் வரும் அறிவிப்புகள் ஸஹீஹுல் புகாரி - முஸ்லிமில் பதிவாகியுள்ளன: நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் :„யூதர்களிடமும் கிறிஸ்தவர்களிடமும் (மறுமை நாளில்) கேட்கப்படும் : நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்? என்று! அதற்கு அவர்கள் எங்கள் இரட்சகனே! எங்களுக்குத் தண்ணீர் கொடு என்று சொல்வார்கள். நீர் நிலைக்கு நீங்கள் வரக்கூடாதா? என்று! அவர்களிடம் சுட்டிக் காட்டப்படும். பிறகு நரகத்தின் பக்கமாக அவர்கள்ஓட்டிச் செல்லப் படுவார்கள். அது கானல் நீர்போன்றிருக்கும்!ஒன்றுக்குள் ஒன்றாக பின்னிப் பிணைந்துகொண்டிருக்கும். அவர்கள் நரகத்தில் ஒருவர் மேல் ஒருவராக வீழ்வார்கள்!„

ஹஸன் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:„இந்தக் கூட்டத்தாரைப் பற்றி நீர் என்ன நினைக்கிறீர்? அவர்கள் எந்த உணவும் உண்ணாமல், எந்த பானமும் அருந்தாமல் ஐம்பது ஆயிரம் ஆண்டுகள் கால் கடுக்க நின்று கொண்டிருப்பார்கள்! இறுதியில் தாகத்தால் அவர்களின் தொண்டை வரண்டுபோய்விடும். பசியால் வயிறு பொசுங்கிப்போய்விடும்.பிறகு அவர்கள் நரகத்தின் பால் அழைத்துச் செல்லப்படுவார்கள். கொதித்துக் கொண்டிருக்கும் ஊற்றிலிருந்து அவர்களுக்குத் தண்ணீர் புகட்டப்படும். அந்த ஊற்று நன்கு சூடேறிக் கடுமையாகப் பழுத்து விட்டிருக்கும்!„

இப்னு ஜௌஸி (ரஹ்) அவர்கள் நரகத்தை இப்படி வர்ணிக்கிறார்கள்:„அது எப்படிப்பட்ட இருப்பிடம் எனில், அதில் வீசியெறிப்பட்டவர்கள் நன்மைகள் அனைத்தைவிட்டும் தூரமாக்கப்படுவார்கள்„ இன்பத்தை நுகரலாம் எனும் அபிலாசைகளை விட்டும் நற்பாக்கியங்களை விட்டும் தடுக்கப் படுவார்கள். அவர்களுடைய முகத்தின் செழுமை மாற்றப்பட்டு கருமையாக்கப்பட்டிருக்கும்! மலைகளைவிட வலுவான சம்மட்டிகள் கொண்டு அவர்கள் அடிக்கப்படுவார்கள். கடுமையான சீற்றமுடைய மலக்குகள் அந்நரகத்தின் மீது நியமிக்கப்பட்டிருப்பார்கள்!

அந்நரக வாசிகளை நீங்கள் பார்க்கவேண்டுமே! கொதிக்கும் நீரில் அவர்கள் மேய்ந்து கொண்டிருப்பார்கள்.மேலும் கடுமையான குளிரின் மீது வீசியெறிப்படுவார்கள். அவர்களின் துயரம் நீடித்து நிற்கும். ஒருபோதும் மகிழ்வு இருக்காது.அவர்களின் தங்குமிடம் உறுதி செய்யப்பட்டதாகும். காலாகாலம்– நிரந்தர மாக அங்கு அவர்கள் வீழ்ந்துகிடக்க வேண்டியிருக்கும். கடுமையான சீற்ற முடைய மலக்குகள் அங்கு நியமிக்கப்பட்டிருப்பார்கள்!

நரக வாசிகளுக்கு விடுக்கப்படும் அச்சுறுத்தல் (நரகின்) வேத னையை விடக் கொடுமையானது!அவர்களின் கைசேதம் துன்பத் தைவிடக் கடுமையானது!தங்களின் வாலிபப்பருவத்தை வீணாகக் கழித்தது குறித்துஅவர்கள் அழுது கொண்டிருப்பார்கள். அழுது அழுது கண்ணீர் பெருக்கெடுத்த பின்பும் அழுகை நிற்காது., அதிகரிக்கும்! கடுமைய ான சீற்றமுடைய மலக்குகள் அந்நரகின் மீது நியமிக்கப்பட்டிருப்பார்கள்!

அந்தோ! நரக வாசிகளின் நிலைமை பரிதாபத்திற்குரியது., படைத்த இறைவனின் கோபத்தினால்! அந்தோ!அவர்களைப் பீடித் திருக்கும் தொல்லை எத்துணை கடுமையானது., தீங்குகளின் பெருக்கத்தினால்! அந்தோ!படைப்பினங்களுக்கு மத்தியில்– சாட்சி யாளர்களின்முன்னிலையில் அவர்களுக்குநேரும்இழிவு எத்துணை பெரியது!!!

பதர்களை அள்ளிக் குவிப்பது போன்ற அவர்களின் சம்பாத் தியம் எங்கே? பாவமான காரியங்களில் மேற்கொண்ட அவர்களின் முயற்சிகள் எங்கே? அவைஎல்லாம் மனத்தைக் குழப்பிய வீணான கனவுகள் போன்றாகிவிட்டனவே!– பின்னர் அவர்களின் உடல்கள் சுட்டுப்பொசுக்கப்படும்!சுட்டுப்பொசுக்கப்படும் ஒவ்வொரு முறையும் மீண்டும் பழைய நிலைக்கு அவ்வுடல்கள் மீட்கப்படும்!,,

யா அல்லாஹ்! நரகத்திலிருந்து எங்களைக் காப்பாற்றுவாயாக! இழிவுமற்றும் அழிவின்இல்லத்திலிருந்து எங்களுக்குப் பாதுகாப்பு அளிப்பாயாக! மேலும் சான்றோர்களான பயபக்தியாளர்களின் இல்லத் தில்– உனது அருள் கொண்டு எங்களைத் தங்கச் செய்வாயாக! எங்களுக்கும் எங்கள் பெற்றோர்க்கும் எல்லா முஸ்லிம்களுக்கும் – கருணைமிக்கோனே, உனது கருணையால் – மன்னிப்பு வழங்கு வாயாக!

# المجلس السادس و العشرون في اسباب دخول النار

26 வது மஜ்லிஸ்

## நரகம் செல்ல வழிவகுக்கும் காரணிகள் (1)

அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும்.அவன் வலிமையும் உறுதியும் நிறைந்தவன். வெளிப்படையானவன். யாரையும் அடக்கியாளுப வன். உண்மையைத் தெளிவுபடுத்துபவன்!

மெல்லிய முனங்கல்கூட அவனால் கேட்டுக் கொள்ளப்படும்! கருவிலுள்ள சிசுவின் அசைவுகூட அவனுடைய பார்வையை விட்டும் மறைந்திடாது. வல்லமைமிக்க மன்னர்கள்கூட அவனு டைய பெருமைக்கு எதிரில் பணிந்தாக வேண்டும். அவனுடைய ஆற்றலுக்கு எதிரில் சூழ்ச்சியாளர்களின் சூழ்ச்சி வீணாகிப்போகும்!

தவறிழைத்தவர்கள் மீது தனது நாட்டப்படி தீர்ப்பளித்தான். உலகத்தார்களில் இருந்து யார்யாரை இறைத்தூதர்களாக அவன் தேர்வு செய்தானோ – அந்தத் தேர்வு முன்பே நடந்து முடிந்து விட்டது!

'இவர்கள் இடது பக்கத்தார்.அவர்கள் வலது பக்கத்தார்,'- இந்த விதி–வழிபாடு செலுத்துவோரின் வழிபாட்டிற்கு முன்பே நிர்ணயிக் கப்பட்டுவிட்டது!

வலது பக்கத்தார் – இடது பக்கத்தார் என்கிற இந்தப்பங் கீடு இல்லையானால் இறைவழிப் போராளிகள் புரிந்த அறப்போர் வீணா கிப் போயிருக்கும். இறைநிராகரிப்பாளர்கள் யார், விசுவாசிகள் யார் என்றும் சந்தேகத்தில் உழல்வோர் யார் உறுதிப்பாடு உடையோர் யார் என்றும் அறியப்பட்டிருக்காது! இந்தப்பங்கீடு இல்லையானால் பாவிகளை நரகத்தில்போட்டு நிரப்புதல் என்பது இருந்திருக்காது!

நாம் நாடியிருந்தால் ஆரம்பத்திலேயே ஒவ்வோர் ஆன்மாவுக்கும் அதற்குரிய நேர்வழியைக் காண்பித்திருப்போம்.ஆயினும் ஜின்கள்– மனிதர்கள் அனைவரைக்கொண்டும் நரகத்தை நிரப்புவேன் என்று கூறியிருந்த எனது வாக்கு நிறைவேறிவிட்டது!,,குர்ஆன்(32: 13)

சகோதரரே! அல்லாஹ்வின் நுட்பமான தீர்ப்பாகும் இது!அவன் தீர்ப்பமிப்போர் யாவரினும் நேர்த்தியாகத் தீர்ப்பளிப்போன் ஆவான்!

தூய்மையாளனாகிய அந்த இறைவனை – நன்றி செலுத்து வோர் புகழ்வதுபோல் நான் புகழ்கிறேன். பொறுமையாளர்களுக்குக் கிட்டும் உதவியை அவனிடம் நான் யாசிக்கிறேன். இழிவுபடுத்தக் கூடிய தண்டனையிலிருந்து அவனைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன்!

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை என்று சாட்சி சொல்கிறேன். அவன் அரசன்., உண்மையை உண் மையாக்கிக் காட்டுபவன்! முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமை யும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட வர்கள்., நம்பிக்கை நாணயத்திற்குரியவர்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! இறை மார்க்கத்தைப் பின்பற்றும் முதல் ஆண்மகனாகத் திகழ்ந்த நபித் தோழர் அபூ பக்ர் மீதும்–அல்லாஹ்வின் கட்டளைகளைச் செயல் படுத்துவதில் உறுதியாக இருந்தவரும் யாரிடமும் குழைந்து போகாதவரமான உமர் மீதும் – நபியவர்களின் இரண்டு பெண் மக்களை ஒருவர் பின் ஒருவராக மணம் புரிந்தவரும் சிறந்த கணவராகத் திகழ்ந்தவருமான உஸ்மான் மீதும்–கல்விக்கடலாய் விளங்கிய, நிறைஞானமும் வாதத்திறனும் பெற்றுத்திகழ்ந்த அலீ மீதும்–பரிசுத்தமானவர்களான நபியவர்களின் குடும்பத்தினர் மீதும் – அவர்களைப் பின்பற்றி இறைநெறியைக் கடைப்பிடித்து வாழ்ந் தோர் மீதும்– மறுமைநாள் வரையில் அல்லாஹ் ஸலவாத் பொழி வானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

அன்புச் சகோதரர்களே! அறிந்து கொள்ளுங்கள்: நரகம் செல்ல வழிவகுக்கக்கூடிய காரணிகள் சில உள்ளன.அவற்றை அல்லாஹ் தனது வேதத்தில் விவரித்துள்ளான்.தன்னுடைய தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் நாவின் மூலமாகவும் விளக்கியுள்ளான். அவை குறித்து மக்கள் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும்., அவற்றை விட்டு விலகிடவும் வேண்டும் என்பதே நோக்கம்!

இந்தக் காரணிகள் இரண்டு வகைப்படும்.ஒன்று: குஃப்ர் எனும் இறைநிராகரிப்பில் கொண்டுசேர்க்கக்கூடிய காரணிகள்.இந்தவகைக் காரணிகள் ஈமான்எனும் இறைவிசுவாசத்தில்இருந்து வெளியேற்றி விடும். நரகத்தில் நிரந்தரமாக வீழ்ந்து கிடக்கக் கட்டாயம் வழி வகுத்து விடும்!

இரண்டு: பாவத்திலும் தீமையிலும் ஆழ்த்தக்கூடிய காரணிகள். இவைமனிதனை நீதியிலிருந்து வெளியேற்றி பாவத்தில் கொண்டு

போய் சேர்த்துவிடும்.இதனால் அவன் நரகம்தான் செல்ல நேரிடும்! ஆனாலும் (முதல் வகைக்காரணிகளைப்போல்) அவன் நரகத்தில் நிரந்தரமாக வீழ்ந்துகிடக்க இவை வழிவகுக்காது!

முதல் வகைக் காரணிகள் வருமாறு:

ஒன்று : அல்லாஹ்வுக்கு இணை ஏற்படுத்துவதாகும். இது –படைத்துப் பரிபாலிக்கும் தன்மையிலும் வணக்கத்திற்குத் தகுதியாகும் விஷயத்திலும் அல்லாஹ்வின் ஸி∴பாத்து (தன்மைகள்) விஷயத்திலும் இணைக்கடவுளை ஏற்படுத்துவதாகும்.

☐ அல்லாஹ்வுடன், வேறொரு படைப்பாளன் – கூட்டாகவோ தனியாகவோ – உண்டு என்று ஒருவன் நம்பினால்,

☐ வணக்கவழிபாடுகளுக்குத் தகுதியான வேறொரு இறைவன் இருக்கிறான் என்றுஒருவன் நம்பினால் அல்லது அல்லாஹ்வுடன் வேறொரு கடவுளையும் வணங்கி வழிபட்டால் அல்லது வழிபாட்டின் ஒரு பகுதியை இதர கடவுள்களுக்கும் செலுத்தினால்,

☐ அல்லாஹ்வின் ஞானமும் ஆற்றலும் மகத்துவமும் பிரத்தியேகமானவை., இத்தகைய தன்மைகள் அவனுக்கு இருப்பது போன்று வேறொருவருக்கும் இருப்பதாக ஒருவன் நம்பினால்,

– இப்படி நம்புகிறவர்கள் – செய்கிறவர்கள் அல்லாஹ்வுக்கு இணைவைத்தல்எனும் கொடியகுற்றத்தைப்பெரிய அளவில் செய்தவர்களாகிறார்கள். அதனால் நரகத்தில் நிரந்தரமாகவே வீழ்வதற்கு ஆளாகிவிடுகிறார்கள்!

قال الله تعالى: انه من يشرك با لله فقد حرم الله عليه الجنة و مأواه النار و ما للظالمين من انصار

அல்லாஹ்கூறுகிறான்:„எவன்அல்லாஹ்வுடன் இணைக்கடவுளை ஏற்படுத்துகிறானோ அவனுக்குத் திண்ணமாக அல்லாஹ் சுவனத்தைத் தடைசெய்யப்பட்டதாக ஆக்கிவிட்டான். அவனது இருப்பிடம் நரகமாகும்.இத்தகைய அக்கிரமக்காரர்களுக்கு உதவி செய்வோர் யாருமில்லை!„ குர்ஆன்(5 : 72)

இரண்டு: அல்லாஹ்வை ஏற்கமறுப்பது அல்லது அவனுடைய மலக்குகளையோ வேதங்களையோ தூதர்களையோ மறுவுலகத்தையோ அல்லாஹ் நிர்ணயித்துள்ள விதிகளையோ ஏற்கமறுப்பது! இவற்றுள் ஒன்றை–பொய்ப்படுத்துபவனும் மறுப்பவனும் சந்தேகிப்பவனும் நிராகரிப்பாளன்தான்!அவன் நரகத்தில் நிரந்தரமாக வீழ்ந்து கிடப்பான்! அல்லாஹ் கூறுகிறான் :

قال تعالى: ان الذين يكفرون با لله و رسله ويريدون ان يفرقوا بين ا لله و رسله و يقولون نؤمن ببعض و نكفر ببعض و يريدون ان يتخذوا بين ذلك سبيلا اولئك هم الكافرون حقا و اعتدنا للكفرين عذابا مهينا

« யார்அல்லாஹ்வையும் அவனுடையதூதுர்களையும் நிராகரித்து அல்லாஹ்வுக்கும் அவனுடையதூதர்களுக்கும் இடையில் வேற்று மையை ஏற்படுத்த விரும்புகிறார்களோ, நாங்கள் இறைத் தூதர் களில் சிலரை ஏற்றுக்கொள்வோம்., வேறு சிலரை ஏற்கமாட்டோம் என்று கூறுகிறார்களோ மேலும் இறைநம்பிக்கைக்கும் நிராகரிப்புக் கும் இடைப்பட்ட வழியொன்றை அமைதிட விரும்புகிறார்களோ அவர்கள்தாம் உண்மையில் அப்பட்டமான நிராகரிப்போர் ஆவர்! இந்நிராகரிப்பாளர்களுக்கு இழிவுபடுத்தும் தண்டனையை நாம் தயார் செய்து வைத்திருக்கிறோம்.,, (4 : 150-151)

قال تعالى: ان ا لله لعن الكافرين واعد لهم سعيرا خالدين فيها ابدا لا يجدون وليا ولا نصيرا يوم تقلب وجوههم في النار يقولون يا ليتنا اطعنا ا لله و اطعنا الرسولا و قالوا ربنا انا اطعنا سادتنا و كبرائنا فاضلونا السبيلا ربنا آتهم ضعفين من العذاب و العنهم لعنا كبيرا

« திண்ணமாக, நிராகரிப்பாளர்களை அல்லாஹ் சபித்துவிட்டான். மேலும் கொழுந்துவிட்டெரியும் நெருப்பையும் அவர்களுக்காகத் தயார் செய்துள்ளான். அதில் அவர்கள் என்றென்றும் வீழ்ந்து கிடப் பார்கள். எந்த ஓர் ஆதரவாளரையும் உதவியாளரையும் அவர்கள் பெறமாட்டார்கள். எந்நாளில் அவர்களுடைய முகங்கள் நெருப்பில் புரட்டி எடுக்கப்படுமோஅந்நாளில் அவர்கள் கூறுவார்கள்: அந்தோ! நாங்கள் அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் கீழ்ப்படிந்தோமில்லையே! மேலும் கூறுவார்கள்: எங்கள் இறைவனே! நாங்கள் எங்களுடைய தலைவர்களுக்கும் பெரியார்களுக்கும் கீழ்ப்படிந்து விட்டோமே! அவர்கள் எங்களை நேரிய வழியிலிருந்துபிறழச் செய்து விட்டார் களே! எங்கள இறைவனே!இவர்களுக்கு இரு மடங்கு வேதனை கொடுப்பாயாக! மேலும் இவர்களைக் கடுமை யாகச் சபிப்பாயாக!,, குர்ஆன் (33 : 64 - 68)

☐ மூன்றாவது : இஸ்லாத்தின் ஐந்து அடிப்படைக் கடமை களில் ஏதேனும் ஒன்றை - அது கடமையல்ல என்று மறுப்பது.

– அல்லாஹ்வை மட்டுமே வணக்கத்திற்குரியவனாக ஏற்றுக் கொள்வதன் கடமையை ஒருவன் மறுத்தால்,அல்லது முஹம்மத் நபியவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று சாட்சியம் சொல்வதன் கடமையை மறுத்தால் அல்லது நபியவர்கள்,மக்கள் அனைவருக் காகவும் அனுப்பப்பட்ட உலகத்தூதர் என்பதைமறுத்தால்அல்லது ஐவேளைத் தொழுகைகள் கடமையென்பதையோ ஜகாத் கடமை யென்பதையோ ரமளான் மாத நோன்பு கடமையென்பதையோ ஹஜ் கடமையென்பதையோ ஏற்கமறுத்தால் அவன் கா∴பிர்– நிராகரித்த வன் ஆவான். ஏனெனில் அவன், அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் முஸ்லிம்களின் ஏகோபித்த முடிவையும் பொய்ப்படுத் தியவனாவான்!

இதுபோல ஷிர்க் – இறைவனுக்கு இணைவைப்பது ஹராம் (விலக்கப்பட்டது) என்பதை ஒருவன் ஏற்கமறுத்தால், அல்லாஹ் மதிப்பளித்துள்ள மனிதஉயிரைக் கொலை செய்வது ஹராம் என்ப தையோ விபச்சாரம் ஹராம் என்பதையோ ஓரினச் சேர்க்கை மூலம் சுகம்அனுபவிப்பது ஹராம் என்பதையோ மது ஹராம்என்பதையோ மேலும் குர்ஆனில் அல்லது நபிமொழியில் ஹராம் என்று வெளிப் படையாக – தெளிவாகக் குறிப்பிட்டவற்றை ஹராம் என்பதையோ ஏற்க மறுத்தால் அவனும் கா∴பிர் – நிராகரிப்பாளனே ஆவான்! ஏனெனில் அவன் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் ஏற்க மறுத்தவனாகிறான்.

ஆனால் ஒருவன் இஸ்லாத்தைப் புதிதாக ஏற்ற காரணத்தால் இவற்றை ஒப்புக்கொள்ளவில்லையானால் அவனை கா∴பிர் என்று சொல்லப்படமாட்டாது.,அவனுக்கு அறிவுறை வழங்கி–முறையான அறிவை அவன் பெற்ற பின்பும் இவற்றை அவன் ஏற்க மறுத் தால் – நிராகரித்தால் அவன் கா∴பிர் என்று தீர்ப்பளிக் கப்படும்!

☐ நான்காவது : அல்லாஹ்வையோ அவனுடைய மார்க்கத்தை யோ அவனுடைய தூதரையோ பரிகாசம் செய்வது!

قال الله تعالى: ولئـن سألتهم ليقولـوا انمـا كنـا نخـوض و نلعـب قـل ابـا لله و آياتـه ورسوله كنتم تستهزؤون لا تعتذروا و قد كفرتم بعد ايمانكم

“(நீங்கள் என்ன பேசிக் கொண்டிருந்தீர்கள் என்று)அவர்களிடம் நீர் கேட்பீராயின் உடனேஅவர்கள் கூறுவர்: நாங்கள் நகைச்சுவை யாகவும் விளையாட்டாகவும்தான் பேசிக்கொண்டிருந்தோம் என்று! – அவர்களிடம் நீர் கூறும் : அல்லாஹ்வையும் அவனுடைய

வசனங்களையும் அவனுடைய தூதரையும்தான் நீங்கள் பரிகாசம் செய்துகொண்டிருக்க வேண்டுமா? உங்கள் தவறுகளை நீங்கள் நியாயப்படுத்த வேண்டாம் நீங்கள் இறைநம்பிக்கை கொண்ட பின் திண்ணமாக நிராகரித்து விட்டீர்கள்„ குர்ஆன் (65 : 66)

பரிகாசம் செய்வதென்பது அல்லாஹ்வையும் அவனது மார்க்கத்தையும் தூதரையும் கேவலப்படுத்துவதாகவும் இழிவுபடுத்துவதாகவும் சிறுமைப்படுத்துவதாகவும் உள்ளது. – அல்லாஹ் இவற்றை விட்டும் பெரிதும் உயர்ந்தவன் ஆவான்!

☐ ஐந்தாவது: அல்லாஹ்வையும் அவனுடைய மார்க்கத்தையும் தூதரையும் திட்டுவது! திட்டுவதென்பது, அவர்களைக் களங்கபடுத்துவதும குறை கூறுவதுமாகும். அவர்களைச சாதாரணமாகக் கருதி குறைகாணும் நிலையில் பேசுவதாகும். எடுத்துக்காட்டாக, அவர்களைச் சபிப்பது, கெடுமொழி கூறுவது போன்று!

ஷைகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா(ரஹ்) அவர்கள் சொல்கிறார்கள் : அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் ஒருவன் திட்டினால் அவன், வெளிப்படையாகவும் அந்தரங்கமாகவும் கா∴பிர் – நிராகரிப்பாளன் ஆவான். இப்படித் திட்டுவது ஹராம் என்பதைக்கொள்கையளவில் அவன்ஏற்றுக்கொண்டிருந்தாலும் சரி அல்லதுஅலட்சியமுடையவனாக இருந்தாலும்சரியே!–நம அறிஞர்கள் சொன்னார்கள்:இப்படிப்பட்டவன் கா∴பிர் ஆவான். விளையாட்டாகத் திட்டினாலும் சரியே!–இந்தக்கருத்துமுற்றிலும் சரியானதும் உறுதியானதும் ஆகும்.–இப்னு தைமிய்யாஅவர்கள் மேலும் சொல்கிறார்கள்: ஏனைய நபிமார்களைத் திட்டுவதன் சட்டம் என்னவெனில் நம்முடைய முஹம்மத் நபி(ஸல்)அவர்களைத் திட்டுவது போன்றுஹராம–தடுக்கப்பட்டதேயாகும்!அப்படித்திட்டுபவன் கா∴பிர் ஆவான். எனவே குர்ஆனில் கூறப்பட்ட பிரபலமான நபிமார்களில் ஒருவரை பெயர் கூறிஒருவன் திடடினால் அல்லது பொதுவாக நபியெனக்கூறப்பட்டவரை ஒருவன் திட்டினால்–அப்படிக் கூறப்படுவது எவ்வாறெனில், நபி ஒருவர்இப்படிச்செய்தார்„ இப்படிச்சொன்னார்எனஹதீஸிலஅறிவிக்கப்பட்டிருப்பதுபோன்று!–அப்படிச் செய்தவர் அல்லது அப்படிச் சொன்னவர் ஒரு நபிதான் என அறிந்துகொண்டே ஒருவன் அவரைத் திட்டினால் அவன் கா∴பிர்தான்!

ஆனால் நபிமார்கள் அல்லாதவர்களைத் திட்டுவதன் சட்டம் என்னவெனில், திட்டுவதன் நோக்கம் நபியைத் திட்டுவதாக இருந்

தால்—எடுத்துக்காட்டாக, ஒருவர் நபி (ஸல்) அவர்களின் தோழர் களைத் திட்டுவதுபோன்று!ஏனெனில் தோழமைகொண்டவர், யாரு டன் தோழமைகொண்டாரோ அவரையே பின்பற்றுகிறார்.

– நபி(ஸல்)அவர்களின் மனைவிமார்களில் ஒருவர் மீது விபச் சாரக் குற்றம் சுமத்துவது போன்று! – இப்படிச் செய்பவனும் கா.:.பிர்தான்! ஏனெனில் இது நபி (ஸல்) அவர்களைக் களங்கப் படுத்துவதும் திட்டுவதுமாகும்!அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:

قال الله تعالي: الخبيثات للخبيثين

ஒழுக்கங்கெட்ட பெண்கள் ஒழுக்கங்கெட்ட ஆண்களுக்குரிய வர்கள் ஆவர்„ குர்ஆன் : (24 : 26)

□ ஆறாவது, அல்லாஹ் இறக்கியருளிய சட்டங்களை விட்டு விட்டு வேறு சட்டத்தைக்கொண்டு தீர்ப்பு வழங்குவது., அதுவே சத்தியத்திற்கு நெருக்கமானது., மக்களின் நலனுக்கு உகந்தது அல்லது அது அல்லாஹ்வின் சட்டத்திற்கு நிகரானது., மேலும் அதனைக் கொண்டு தீர்ப்பு வழங்குவது கூடும் என்றெல்லம் கருதித் தீர்ப்பு வழங்குவது! அவ்வாறு தீர்ப்பு வழங்குபவன் கா.:.பிர் ஆவான்!

لقوله تعالي: و من لم يحكم بما أنزل الله فاؤلئك هم الكافرون

அல்லாஹ் இறக்கியருளிய சட்டங்களைக் கொண்டு யார் தீர்ப்பு அளிக்கவில்லையோ அவர்கள் நிராகரிப்பாளர்கள் ஆவர்„ (5 : 44)

இவ்வாறே அல்லாஹ் அல்லாதவர்களின் தீர்ப்பு அல்லாஹ்வின் தீர்ப்பைவிடச் சிறந்தது என்றோ அதற்கு நிகரானது என்றோ அத னைக்கொண்டு தீர்ப்பு வழங்குவதுகூடும் என்றோ ஒருவன் நம்பி னால்அவனும் நிராகரித்தவனேயாவான்.மற்றசட்டங்களைக் கொண்டு அவன்தீர்ப பெதுவும் வழங்கவில்லையானாலும் சரி! ஏனெனில் அவன் இந்த இறைவசனத்தைப் பொய்ப்படுத்தியவன் ஆகிறான் :

ومن أحسن من الله حكما لقوم يوقنون

(அல்லாஹ்வின்மீது)உறுதியான நம்பிக்கை கொண்டமக்களைப் பொறுத்தவரை அல்லாஹ்வைவிட அழகிய தீர்ப்பு வழங்குபவன் யார்?„ குர்ஆன்(5 : 50) அப்படிப்பட்டவன் நிராகரிப்பாளன் என்ப தையே பின்வரும் இறை வசனம் வலியுறுத்துகிறது :

و من لم يحكم بما انزل الله فا ولئك هم الكا فرون

அல்லாஹ் இறக்கியருளிய சட்டத்திற்கேற்ப எவர்கள் தீர்ப்பு அளிக்கவில்லையோ அவர்கள்தாம் நிராகரிப்பவர்கள் ஆவர்„ (5:44)

☐ ஏழாவது: நயவஞ்சகம்! இது, உள்ளத்தால் நிராகரித்துக் கொண்டு,தான் ஒருமுஸ்லிம் என சொல்லாலும்செயலாலும் வெளிக் காட்டிக்கொள்வதாகும். அல்லாஹ் கூறுகிறான்:

ان المنا فقين في الدرك الاسفل من النار و لن تجد لهم نصيرا

திண்ணமாக நயவஞ்சகர்கள் நரகத்தின்மிகவும் அடித்தட்டிற்கே செல்வார்கள்„அவர்களுக்கு உதவி செய்வோர் யாரையும் நீர் காண மாட்டீர்!„ (4 : 145)

முன்னர் குறிப்பிட்டவர்களைவிடவும் இந்த வகையினர் மிகவும் கொடியவாகளாவர். இதனால்தான் நயவஞ்சகர்ளின் தண்டனையும் மிகவும் கடுமையாக உள்ளது. அவர்கள், நரகத்தின் மிக அடித் தட்டிற்கே செல்லக்கூடியயவர்களாவர்.இதற்குக்காரணம், நிராகரிப்பு, ஏமாற்றுதல், அல்லாஹ்வையும் அவனுடைய வசனங்களையும் தூதரையும் பரிகாசம் செய்தல் ஆகிய அனைத்தையும் இவர்க ளின் நிராகரிப்பு உள்ளடக்கியுள்ளது!இவர்களைப் பற்றி அல்லாஹ் இவ்வாறு கூறியுள்ளான் :

இன்னும் அல்லாஹ்வையும் இறுதித் தீர்ப்பு நாளையும் நம்பு கிறோம் எனக் கூறுவோர் சிலர் மக்களில் உள்ளனர். ஆயினும் அவர்கள் நம்பிக்கைகொண்டோர் அல்லர்.(இப்படிக்கூறி) அல்லாஹ் வையும் நம்பிக்கையாளர்களையும் அவர்கள் ஏமாற்றுகின்றனர். உண்மையில் அவர்கள் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்கின்றனரே தவிர வேறில்லை. எனினும் அவர்கள்(இதனை) உணர்வதில்லை. அவர்களுடைய நெஞ்சங்களில் நோய் உள்ளது. அல்லாஹ் (அந்) நோயை அவர்களுக்கு இன்னும் அதிகப்படுத்திவிட்டான். மேலும் அவர்கள் பொய்யுரைத்துக் கொண்டிருந்த காரணத்தால் கொடிய தண்டனையும் அவர்களுக்கு உண்டு. பூமியில் குழப்பம் விளை விக் காதீர்கள் என்று அவர்களிடம் சொல்லப் பட்டால் நிச்சயமாக நாங்கள் சீர்திருத்தம்செய்பவ ரே!என்று கூறுகிறார்கள்.எச்சரிக்கை! நிச்சயமாக அவர்கள்தாம் குழப்பவாதிகள். ஆயினும் அவர்கள் உணர்வதில்லை. மேலும் மற்ற மனிதர்கள் ஈமான் – நம்பிக்கை கொண்டதுபோல் நீங்களும் நம்பிக்கைகொள்ளுங்கள் என்று அவர் களிடம் சொல்லப்பட்டால் மூடர்கள் நம்பிக்கை கொள்வதுபோல் நாங்களும் நம்பிக்கை கொள்வதா? என்றே பதில் சொல்கிறார்கள்.

– எச்சரிக்கை! நிச்சயமாக இவர்கள்தாம் மூடர்கள். ஆயினும் அவர்கள் அறிவதில்லை. இறைநம்பிக்கை கொண்டவர்களை அவர்கள் சந்தித்தால் நாங்க ளும் நம்பிக்கை கொண்டிருக்கிறோம் எனச்சொல்கிறார்கள். தங்களுடைய ஷைத்தான்களுடன் அவர்கள் தனிமையில் இருக்கும்போது நிச்சயமாக நாங்கள் உங்களுடன் தான் இருக்கிறோம்.,உ ண்மையில் நாங்கள்அவர்களைப் பரிகாசம் தான் செய்துகொண்டிருக்கிறோம். என்கின்றனர்!–அல்லாஹ் அவர் களைப்பரிகாசம் செய்துகொண்டிருக்கிறான். மேலும் அவர்களுக்கு அவகாசம் அளித்துக் கொண்டிருக்கிறான். அவர்களோ தமது வரம்பு மீறிய நடத்தையில் கண்மூடித்தனமாக உழன்றுகொண்டே யிருக்கிறார் கள்!,, அல்குர்ஆன்(2 : 8–19)

நயவஞ்சகத்திற்கு அதிகமான அடையாளங்கள்உ ள்ளன. அவற் றுள் ஒன்று அல்லாஹ் இறக்கியருளிய (வழிகாட்டலில், வேதத்) தில் சந்தேகம் கொள்வது!தானும் ஒருவிசுவாசியே எனமக்களுக்கு வெளிரங்கத்தில் அவன் காண்பித்துக் கொண்டிருந்தாலும் சரியே! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي: انما يستأذنك الذين لا يؤمنون با لله واليوم الآخر و ارتابت قلوبهم فهم في ريبهم يترددون

"யார் அல்லாஹ் மீதும் மறுமைநாள் மீதும் நம்பிக்கைகொள்ள வில்லையோ மேலும் யாருடைய உள்ளங்களில் ஐயம் உள்ளதோ அவர்கள்தாம் (போரில் கலந்து கொள்ளாதிருக்க) உங்களிடம் அனுமதி கேட்கிறார்கள். அத்தகையவர்கள் தங்களது சந்தேகத்தி லேயே தடுமாறிக் கொண்டிருக்கிறார்கள்,, குர்ஆன் (9 :46)

நயவஞ்சகத்தின் மற்றொரு அடையாளம் அல்லாஹ்வும் ரஸூம் அளித்த தீர்ப்பை வெறுப்பது! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي: الم تر الي الذين يزعمون انهم آمنوا بما أنزل اليك وما انزل من قبلك يريدون ان يتحاكموا الي الطاغوت و قد امروا ان يكفروا به و يريد الشيطان ان يضللهم ضلالا بعيدا و اذا قيل لهم تعالوا الي ما انزل الله والي الرسول رأيت المنافقين يصدون عنك صدودا

"(நபியே) நீர் இவர்களைப் பார்க்கவில்லையா? உமக்கு இறக் கியருளப்பட்ட வேதத்தையும் உமக்கு முன்னால் இறக்கியருளப் பட்ட வேதங்களையும் நாங்கள் நம்பிக்கை கொண்டோம் என்று

சொல்கிறார்கள்.எனினும் அவர்கள் தீர்ப்புக்காகத் தம்முடைய விவகாரங்களை தா:கூத்திடம் (ஷைத்தானியத் தலைவர்களிடம்) கொண்டு செல்லவே விரும்புகிறார்கள். ஆனால் தா:கூத்தை நிராகரிக்குமாறுதான் அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டிருந்தது! -- ஷைத்தான் அவர்களை முற்றிலும் வழிகெடுத்து வெகு தூரம் கொண்டு செல்ல விரும்புகிறான். மேலும் 'அல்லாஹ் இறக்கி வைத்த (சட்டத்) தின் பக்கமும் தூதரின் பக்கமும் வாருங்கள் என்று அவர்களுக்குக் கூறப்பட்டால் இந்த நயவஞ்சகர்கள் உம்மிடம் வராமல் விலகிச் செல்வதையே நீர் பார்க்கிறீர்,,(4 : 61- 62)

☐ அந்த அடையாளங்களில் மற்றொன்று இஸ்லாம் மேலோங்குவதையும் முஸ்லிம்கள் வெற்றி பெறுவதையும் வெறுப்பதும் அவர்களின் தோல்வி குறித்து மகிழ்வதுமாகும். அல்லாஹ் கூறுறான் :

قال الله تعالي: ان تصبك حسنة تسؤهم و ان تصبك سيئة يقولوا قد أخذنا امرنا من قبل و يتولوا وهم فرحون

,,உமக்கு ஏதேனும் நன்மை கிடைத்தால் அது அவர்களுக்கு வருத்தத்தை ஏற்படுத்துகிறது. மேலும் உமக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்தால்-நாங்கள் முன்னரே எங்கள் விஷயத்தில் எச்சரிக்கையாய் இருந்து கொண்டோம்,,என்றுகூறிக்கொண்டுமிகவும் மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்கின்றனர்,, ( 9 : 50)

قال تعالي : واذا لقوكم قالوا آمنا واذا خلوا عضوا عليكم الانامل من الغيظ قل موتوا بغيظكم ان الله عليم بذات الصدور ان تصبهم حسنة تسؤهم و ان تصبهم سيئة يفرحوا بها و ان تصبروا و تتقوا لا يضركم كيدهم شيئا ان الله بما يعملون محيط

அவர்கள் உங்களைச் சந்திக்கும் போது (உங்களுடைய தூதரையும் வேதத்தையும்) நாங்ளும் நம்பிக்கை கொண்டோம் என்று சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் உங்களைவிட்டுப் பிரிந்து சென்றதுமே உங்கள் மீது மன எரிச்சல் கொண்டு தம் விரல் நுனிகளைக் கடிக்கிறார்கள். -அவர்களிம் நீர் கூறுவீராக : நீங்கள் உங்கள் எரிச்சலிலேயே சாகுங்கள். திண்ணமாக அல்லாஹ் உங்கள் நெஞ்சங்களில் மறைந்திருப்பவற்றையும் நன்கு அறிந்தவனாக இருக்கிறான்,, -- உங்களுக்கு நன்மை ஏதும் கிட்டிவிட்டால் அது அவர்களை வருந்தச் செய்கிறது. மேலும் உங்களுக்

குத் துன்பம் நேர்ந்த விட்டாலோ அது அவர்களை மகிழ்வுறச் செய்கிறது! ஆனால் நீங்கள் நிலைகுலையாமலும் அல்லாஹ்வுக்கு அஞ்சியும் வாழ்ந்தால் (உங்களுக்கு எதிராக) அவர்கள் கையாளுகிற சூழ்ச்சி எந்தப் பயனையும் தரப்போவதில்லை. திண்ணமாக அவர்கள் செய்து கொண்டிருக்கிற அனைத் தையும் அல்லாஹ் சூழ்ந்து கொண்டிருக்கிறான்„ (3 : 119–20)

☐ நயவஞ்சகத்தின் மற்றோர் அடையாளம், முஸ்லிம்களிடையே குழப்பம் விளைவிக்க முயல்வதும் அவர்களுடைய ஒற்றுமையைக் குலைப்பதும் அதில் ஆர்வம் காட்டுவதும் ஆகும். அல்லாஹ் கூறியுள்ளான் :

قال الله تعالي : لو خرجوا فيكم ما زادوكم الا خبالا و لاوضعوا خلالكم يبغونكم الفتنة و فيكم سماعون لهم

“உங்களோடு அவர்கள் புறப்பட்டிருந்தால் குழப்பத்தைத் தவிர வேறெதையும் உங்களுக்கு அவர்கள் அதிப்படுத்தியிருக்கமாட்டார்கள். மேலும் உங்களிடையே கோள் மூட்டிருப்பார்கள். குழபத்தையும் உங்களுக்கு விரும்பியிருப்பார்கள். அவர்களின் கூற்றைச் செவியேற்பவர்களும் உங்களில் இருக்கிறார்கள்„ (9:46)

☐ அதன் இன்னோர் அடையாளம், இஸ்லாத்தின் எதிரிகளையும் நிராகரிப்புக் கொள்கையின் முன்னோடிகளையும் நேசிப்பதும் அவர்களைப் புகழ்வதும் இஸ்லாத்திற்கு எதிரான – அவர்களின் கருத்துக்களைப் பரப்புவதுமாகும். அல்லாஹ் கூறியுள்ளான் :

قال الله تعالي: الم تر الي الذين تولوا قوما غضب الله عليهم ما هم منكم ولا منهم و يحلفون علي الكذب وهم يعلمون

“அல்லாஹ்வின் சினத்திற்குள்ளான ஒருகூட்டத்தாருடன்தோழமை பாராட்டியவர்களை நீர் பார்க்கவில்லையா? அவர்கள் உங்களைச் சேர்ந்தவர்களும் அல்லர்„ அவர்களைச் சேர்ந்தவர்களும் அல்லர்! மேலும் அவர்கள் அறிந்துகொண்டே பொய்யான விஷயத்தின்மீது சத்தியம் செய்கிறார்கள்„ (58 : 14)

☐ நயவஞ்சகத்தின் பிறிதோர் அடையாளம் முஸ்லிம்களைக் குறித்து புறம் கூறுவதும் இறைவழிபாடுகளில் அவர்களைக் குறை பேசுவதுமாகும். குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالى: الذين يلمزون المطوعين من المؤمنين في الصدقات و الذين لا يجدون الا جهد هم فيسخرون منهم سخر الله منهم ولهم عذاب اليم

"முஸ்லிம்களில் தாராளமாகத் தர்மம் செய்பவர்களையும் பொருள் வசதியில்லாததால் தங்கள் உழைப்பபைத் தானமாகக் கொடுப்பவர் களையும் இந்நயவஞ்சகர்கள் குறை கூறுகிறார்கள். அவர்களை ஏளனமும் செய்கிறார்கள் –அல்லாஹ் இவர்களை ஏளனம் செய்கி றான்.நோவினைதரும் வேதனையும் இவர்களுக்கு உண்டு"(9: 79)

ஆம்! வணக்கவழிபாட்டில் அழுத்தமான முயற்சியுடன் ஈடுபடு பவர்களின் ஈடுபாட்டை முகஸ்துதியென இந்த நயவஞ்சகர்கள் குறை சொல்கிறார்கள். அப்படி ஈடுபட இயலாதவர்களையோ குறை பாடு செய்துவிட்டதாகக் குறைபேசுகிறார்கள்!

☐ நயவஞ்சகர்களின் மற்றோர்அடையாளம்என்னவெனில், "பிரார்த் தனை செய்கிறோம்" வாருங்கள், என்று முஸ்லிம்கள் அழைத்தால் இந்நயவஞ்சகர்கள் அதை ஆணவத்தால் புறக்க ணிக்கிறார்கள்" அதைக் கேவலமாகக்கருதுகிறார்கள்! அல்லாஹ்அதை இவ்வாறு குறிப்பிடுகிறான் :

قال الله تعالى: و اذا قيل لهم تعالوا يستغفر لكم رسول الله لووا رؤوسهم و رأيتهم يصدون و هم مستكبرون

"வாருங்கள்! அல்லாஹ்வின் தூதர் உங்களுக்காகப் பாவமன்னிப் புப் கோரி இறைஞ்சுவார் என்று அவர்களிடம் கூறப்பட்டால் தங்க ளது தலையை அவர்கள் திருப்பிக்கொள்வதையும் ஆணவத்தால் வராமல் நின்று விடுவதையும் நீர் காண்பீர்!" (63 : 5)

☐ நயவஞ்சகர்களின் மற்றோர் அடையாளம், தொழுகையைப் பாரமாகக் கருதுவதும் சோமபல் பட்டுக் கொண்டு தொழவராமல் இருப்பதுமாகும். அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالى: ان المنافقين يخادعون الله وهوخادعهم و اذا قاموا الي الصلاة قاموا كسالي يراؤون الناس و لايذكرون الله الا قليلا

"நிச்சயமாக இந்நயவஞ்சகர்கள் அல்லாஹ்வைஏமாற்ற நினைக் கிறார்கள். ஆனால் அவன்தான் அவர்களை ஏமாற்றத்திற்குள்ளாக் கிக் கொண்டிருக்கிறான்.மேலும் தொழுகையில் அவர்கள் நின்றால் சோம்பல்பட்டுக்கொண்டே நிற்கிறார்கள். பிறருக்குக் காண்பிக்கவே

தொழுகிறார்கள். இன்னும் குறைவாகவே தவிர அல்லாஹ்வை அவர்கள் நினைவுகூர்வதில்லை!„ (4 : 142)

மேலும் அண்ணல் நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள் :„நயவஞ்சகர்களுக்கு மிகவும் பாரமான தொழுகைகள் இஷாதொழுகையும் ∴பஜ்ர் தொழுகையுமாகும்„ நூல்: புகாரி, முஸ்லிம்

☐ நயவஞ்சகர்களின் மற்றோர் அடையாளம், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் முஸ்லிம்களுக்கும்தொல்லை கொடுப்பதாகும். அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي: ومنهم الذين يؤذون النبي

“இந்நயவஞ்சகர்களில் சிலர் நபிக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள்„

قال تعالي: ان الذين يؤذون الله ورسوله لعنهم الله في الدنيا والاخرة و أعد لهم عذابا مهينا و الذين يؤذون المؤمنين و المؤمنات بغير ما اكتسبوا فقد احتملوا بهتانا و اثما مبينا

“யார் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் தொல்லை கொடுக்கிறார்களோ அவர்களை, இம்மையிலும் மறுமையிலும் அல்லாஹ் சபிக்கிறான். மேலும் இழிவு படுத்தும் வேதனையையும் அவர்களுக்காகத் தயார்செய்து வைத்திருக்கிறான். மேலும் இறை நம்பிக்கை கொண்ட ஆண்கள் மற்றும் பெண்களுக்கு–அவர்கள் குற்றம் புரியாதிருக்கவே யார் துன்பம் கொடுக்கிறார்களோ அவர்கள் ஒருமாபெரும் அவதூறையும் வெளிப்படையான பாவத்தையும் தம் மீது சுமந்துகொள்கிறார்கள்„ (33 : 57–58)

நயவஞ்சகர்களின் அடையாளங்களில் ஒருபகுதியாகும் இவை. நாம் இவற்றைக் கூறியிருப்பதன் நோக்கம் இவற்றைக் குறித்து எச்சரிக்கை செய்வதும் நயவஞ்சகப்போக்கை விட்டும் மனத்தைத் தூய்மைப் படுத்துவதுமாகும்.

யா அல்லாஹ்! எங்களை நயவஞ்சகத்தில் இருந்து பாதுகாப்பாயாக! உனது உவப்பை எங்களுக்குப் பெற்றுத்தரும் வகையில் ஈமான்–விசுவாசத்தை உறுதிப்படுத்தும் பாக்கியத்தை எங்களுக்கு வழங்குவாயாக! மேலும் எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் நீ பாவமன்னிப்பு வழங்குவாயாக! அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபாலிக்கும் இரட்சகனே!

المجلس السابع و العشرون

في النوع الثاني من اسباب دخول النار

27 வது மஜ்லிஸ்

# நரகம் செல்ல வழிவகுக்கும் காரணிகள்(2)

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே தனது ஆற்றலால் மனிதர்களை உருவாக்கினான்.தனது அறிவு நுட்பத்தின் அதிசயங் களை அவர்களில் வெளிப்படுத்தினான்! தான் மட்டுமே வணக்கத் திற்குரிய இறைவன் என்று தன்னுடைய சான்றுகளின் மூலம் நரூபித்தான்!

பாவம் செய்தவனுக்கு –இறைக்கட்டளையை அவன் மீறியதால் தண்டனை கொடுத்துத் தீர்ப்பளித்தான்.பிறகு பாவமன்னிப்புத் தேடு மாறு அவனை அழைத்தான். அவனது பாவமன்னிப்புக் கோரிக் கையை ஏற்றுக் கொண்டு அவன் மீது கருணை புரிந்தான்!

(உலக மாந்தரே!) அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவருடைய அழைப்புக்குப் பதில் அளியுங்கள்! அவனது சுவனத்தை நோக்கி விரைந்து செல்லுங்கள். உங்கள் பாவங்களை அல்லாஹ் மன்னிப் பான். தனது அருள்களிலிருந்து இருமடங்கு உங்களுக்கு வழங் குவான்.

அவனுடைய மாண்புக்குரிய முழுமையானஆற்றல்களின் பேரில் அவனை புகழ்கிறேன். அவன் அளித்த நல்லுதவிக்காகவும் நிறை வான அருட்கொடைகளுக்காகவும் அவனுக்கு நன்றி செலுத்து கிறேன்.

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவன் தனித்தவன். வழிபாட்டுக்குரியவன் என்கிற தகுதியிலும் படைத்துப் பரிபாலிக் கும் ஆற்றலிலும் அவனுக்கு இணையேதுமில்லை!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமையும் தூதருமாவார்கள் என்றும் நான்சாட்சி சொல்கிறேன். இறைவிசுவாசிகளுக்கு சுவனம் கொண்டு நற்செய்தி சொல்பவர்களாகவும் நிராகரிப்பாளர்களுக்கு

இறைவனின் நரகத்தைக் கொண்டும் கடும்பிடியைக் கொண்டும் எச்சரிக்கை விடுப்பவர்களாகவும் அவர்கள் அனுப்பப்பட்டார்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக!அவர்களுடைய பிரதிநிதியாக சமுதாயத்தில் பணியாற்றிய அபூபக்ர் மீதும் – நிராகரிப்பாளர்களின் மீது கடுமையாக நடப்பதிலும் அதிகாரம் செலுத்துவதிலும் பிரபலமானவரான உமர் மீதும் – தமக்கு எற்பட்ட சோதனையில் தமது இலட்சியத்தை நிறைவேற்றியவரான உஸ்மான் மீதும்– நபியவர்களின் சகோதரராகவும் மருமகனாகவும் திகழ்ந்த அலீ மீதும்– நபியவர்களின் குடும்பத்தினர் – தோழர்கள் – அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வாழ்ந்தோர் அனைவர் மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அனைவர்க்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

அன்புச் சகோதரர்களே! நரகம் புகுவதற்கும் அதில் நிரந்தரமாக வீழ்ந்துகிடப்பதற்கும் வழிவகுக்கக்கூடிய முதல்வகைக் காரணிகளில் பலவற்றை முந்தைய மஜ்லிஸில் விளக்கினோம். இதோ! அல்லாஹ்வின் உதவியால் –இந்த மஜ்லிஸில் இரண்டாம் வகைக் காரணிகள் யாவை எனக்கூற இருக்கிறோம். இவை எத்தகைய காரணிகள் எனில் இவற்றைச் செய்பவன் கண்டிப்பாக நரகம் சென்றே தீர வேண்டியது வரும்! ஆயினும் இவை நரகில் நிரந்தரமாக வீழ்ந்து கிடப்பதற்கு வழிவகுக்காது!

ஒன்று: பெற்றோரை நிந்திப்பது! அவர்கள் தாயும் தந்தையுமாவர். அவர்களை நிந்திப்பதென்பது அவர்களுக்குச் செய்வேண்டிய பணிவிடை, பந்த உறவு போன்ற கடமைகளை நிறுத்திவிடுவதாகும். அல்லது சொல்லால்– செயலால் அவர்களுக்குத் தீங்கிழைப்பதாகும். அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالى: وقضي ربك الا تعبدوا الا اياه و بالوالدين احسانا اما يبلغن عندك الكبر احدهما او كلاهما فلا تقل لهما اف و لاتنهرهما وقل لهما قولا كريما واخفض لهما جناح الذل من الرحمة وقل رب ارحمهما كما ربياني صغيرا

“உம் இறைவன் (ஷரீஅத்தில்)விதி வகுத்துள்ளான் : அல்லாஹ்வைத் தவிர வேறொரு கடவுளை வணங்காதீர்கள்! தாய்தந்தையரிடம் அன்பாதரவாக நடந்து கொள்ளுங்கள். அவர்களில் ஒருவரோ இருவருமோ முதுமை அடைந்த நிலையில் உம்மிடம் இருந்தால் அவர்களை ‘ சீ ’ என்றுகூட கூறாதீர்! மேலும்

அவர்களைக் கடிந்து பேசாதீர்! அவர்களிடம் கண்ணிமான வார்த்தை பேசுவீராக! கருணையோடு பணிவு எனும் இறக்கையினை அவர்களின் முன்னால் தாழ்த்துவீராக! மேலும் இவ்வாறு இறைஞ்சிய வண்ணம் இருப்பீராக: என் இறைவனே! சிறுவயதில் எவ்வாறு என்னை அவர்கள் கருணையுடனும் பாசத்துடனும் வளர்த்தார்களோ அவ்வாறு அவர்கள் மீது நீ கருணை புரிவாயாக! குர்ஆன் (17 : 23 – 24)

قال تعالي: ان اشكر لي و لوالديك والي المصير

(இதனால்தான் மனிதனுக்குஅறிவுரை கூறினோம்)எனக்கு நன்றி செலுத்து. உன் பெற்றோர்க்கும் நன்றி செலுத்து. திரும்பி வர வேண்டியது என் பக்கமேயாகும்„ (31 : 14)

قال النبي ﷺ : ثلاثة قد حرم الله عليهم الجنة مدمن الخمر والعاق لوالديه والديوث الذي يقر الخبث في اهله

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். மூன்று பேருக்கு அல்லாஹ் சுவனத்தை ஹராம் – விலக்கப்பட்டதாக்கிவிட்டான். மதுவுக்கு அடிமையானவன்„ தம் பெற்றோரை நிந்திப்பவன்„ தன் மனைவியிடம் பிறர் மானக்கேடாக நடந்து கொள்வதை ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு மானம் இழந்தவன்„நூல் : முஸ்னத் அஹ்மத், நஸாஈ

இரண்டாவது : உறவை முறித்துக்கொள்வது!மனிதன் தன்னுடைய சொந்தக்காரர்களுடனான உறவை முறித்துக் கொள்வதும் உடல் மற்றும் பொருள் ரீதியில் அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் உரிமைகளையும் தடுத்துக் கொள்வதுமாகும்.

عن جبير بن مطعم ان ان النبيﷺ قال : لايدخل الجنة قاطع

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: முறித்துக் கொள்பவன் சுவனம் புகமாட்டான்„ நூல் : புகாரி, முஸ்லிம் – ஸுஃப்யான் (ரஹ்) அவர்கள் சொன்னார்கள்: இதன் கருத்து பந்த உறவை முறித்துக் கொள்பவன் என்பதாகும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இரத்த பந்தம் எழுந்து அல்லாஹ்வை நோக்கிக் கூறியது : இறைவா! உறவை முறிப்பதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுபவனின் இடமாகும் இது!„அதற்கு அல்லாஹ் சொன்னான்: ஆம்! எவன் உன்னுடன் இணைந்து வாழ்கிறானோ அவனோடு நான் இணக்கமாகிறேன்„எவன் உன்னைத்துண்டித்து வாழ்கிறானோஅவனை நானும்

துண்டித்துக்கொள்கிறேன்!இதை நீ திருப்தி கொள்ளவில்லையா?„ அதற்கு அது 'ஆம்' நான் திருப்தி கொண்டேன்„ என்று கூறியது. இறைவன்–இதுதான் உனக்குரியதாகும்„ என்றான்!– பிறகு நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் : நீங்கள் விரும்பினால் இந்த குர்ஆன் வசனத்தை ஓதுங்கள்:

فهل عسيتم ان توليتم ان تفسدوا في الارض و تقطعوا أرحامكم اؤلئك الذيـن لعنهـم الله فاصمهم و اعمي ابصارهم

“(அல்லாஹ்வின் கட்டளையை ஏற்று போர் செய்வதிலிருந்து) நீங்கள் பின்வாங்கிச் சென்றால், பூமியில் மீண்டும் அராஜகம் செய்வீர்கள் என்பதையும் உங்கள் உறவுகளைப் பரஸ்பரம் துண்டித்துக் கொள்வீர்கள் என்பதையும் தவிர வேறெதையும் உங்களிடம் இருந்து எதிர் பார்க்க முடியுமா, என்ன? இப்படிச் செய்பவர்களை அல்லாஹ் சபித்து விட்டான். அவர்களைச் செவிடர்களாயும் குருடர்களாயும் ஆக்கிவிட்டான்!„ (47 : 22–23)

இன்றைய காலத்தில் பெற்றோர் மற்றும் இரத்தபந்துக்களின் உரிமைகளை நிறைவேற்றுவதில் பெரும்பாலான முஸ்லிம்கள் அலட்சியமாக இருக்கிறார்கள். சொந்த பந்தத்தின் பிணைப்பைத் துண்டித்துக் கொள்கிறார்கள் என்பது மிகவும் மனவேதனைக்குரிய விஷயமாகும். அவர்களில் சிலர் ஒருவாதத்தை எடுத்துவைக்கிறார்கள்: எங்களுடைய உறவினர்கள் எங்களுடன் இணைந்து வாழவில்லையே என்று! இந்த வாதம் எவ்விதப் பயனும் அளிக்காது. ஏனெனில் எங்களுடன் இணைந்து வாழ்பவர்களுடன் மட்டும்தான் இணைந்துவாழ்வோம் என்றுசொன்னால்அது அல்லாஹ்வுக்காக என்கிற தூயஎண்ணம் கொண்டதாக ஆகாது. பதிலுக்குப் பதிலாகச் செய்யப்பட்டதாகத்தான் ஆகும்!நபி(ஸல்) அவர்கள் கூறியிருப்பது போன்று!

„பதிலுக்குப்பதில் எனும் வகையில் உறவுமுறையை இணைப்பவன் சொந்தபந்தத்தை இணைத்து வாழ்பவன் அல்லன். சொந்த பந்தத் தைப் பேணுபவன் யார் எனில், உறவினர்கள் உறவைத் துண்டித்துக் கொண்டாலும்கூட அதை இணைத்துவாழ்கிறானே அவன்தான்!„ நூல் : புகாரி

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஒரு மனிதர் கேட்டார்: அல்லாஹ்வின் தூதரே! எனக்கு உறவினர் சிலர் உள்ளனர். நான் அவர்களுடன் இணைந்து வாழ்ந்தாலும் அவர்கள்

என்னை விட்டும் துண்டித்து வாழ்கிறார்கள். நான் அவர்களுக்கு உபகாரம் செய்தாலும் அவர்கள் எனக்கு உபத்திரவம்தான் செய்கி றார்கள். நான் அவர்களுடன் சீராக நடந்துகொண்டாலும் அவர் கள் என்னுடன் அபத்தமாகவே நடக்கின்றனர்„

அதற்குநபி(ஸல்)அவர்கள் சொன்னார்கள்:நீர்சொல்வது போன்றே நடந்து கொள்கிறீர் எனில், அவர்களுடைய வாயில் சூடான சாம்ப லைத் திணித்தபோல் ஆகிறீர்! நீர் அவ்வாறு தொடர்ந்து நடந் தீராயின் அல்லாஹ்வின் சார்பில் ஓர் உதவியாளர் உம்முடன் இருந்து கொண்டே இருப்பார்!„ நூல் : முஸ்லிம்

உறவினர்கள் அவனை விட்டும் விலகிச்செல்வார்களாயின் நல்ல முடிவு நிச்சயம் அவனுக்கே உண்டு.விரைவில் அவர்கள்வருவார் கள். அவன் அவர்களுடன் இணைந்து வாழ்வதுபோல் அவர்க ளும் அவனுடன் இணைந்து வாழ்வார்கள்„அல்லாஹ்நலனை நாடி னால்!

மூன்று: வட்டி உண்பது! குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالي: يا ايها الذين آمنوا لاتأكلوا الربا أضعافا مضاعفة واتقوا الله لعلكم تفلحون و اتقوا النار التي أعدت للكافرين واطيعوا الله والرسول لعلكم ترحمون

இறைநம்பிக்கை கொண்டவர்களே!பன்மடங்காகப் பெருகி வள ரும் வட்டியை உண்ணாதீர்கள்„ அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். நீங்கள் வெற்றி பெறக்கூடும்! மேலும் இறைநிராகரிப்பாளர்களுக்கா கத் தயார் செய்து வைக்கப்பட்டுள்ள நெருப்புக்கு அஞ்சுங்கள். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியுங்கள்! உங்களுக்கு கருணை வழங்கப்படலாம்!„ (3:130-133)

அல்லாஹ்வின் அறிவுரையும் எச்சரிக்கையும் கிடைத்த பிறகு எவன் மீண்டும் வட்டிக்குத்திரும்புகிறானோ அவனுக்கு அல்லாஹ் கடுமையான எச்சரிக்கை விடுக்கிறான்„அப்படிப்பட்டவன் நரகத்தில் நிரந்தரமாக வீழ்ந்து கிடக்க நேரும் என்று சொல்கிறான்!

قال الله تعالي: الذين يأكلون الربا لا يقومون كما يقوم الـذي يتخبطه الشيطان من المس ذلك بانهم قا لوا انما البيع مثل الربا واحل الله البيع وحرم الربا فمن جائه موعظة من ربه فانتهي فله ما سلف و امره الي الله و من عاد فاولئك اصحاب النار هم فيها خالدون

வட்டி உண்பவர்கள் ஷைத்தானால் தீண்டப்பட்டு பைத்தியங் கொண்டவன் எழுவது போலல்லாது எழமாட்டார்கள்! அதற்குக் காரணம், வியாபாரமும் வட்டியைப்போன்றதுதான் என்று அவர்கள் கூறியதேயாகும். உண்மையில் அல்லாஹ் வியாபாரத்தை ஹலால்– ஆகுமானதாகவும் வட்டியை ஹராம் – தடுக்கப்பட்டதாகவும் ஆக்கியுள்ளான்.ஆகவே எவர் தம் இறைவனிடமிருந்து அறிவுரை வந்த பிறகு (வட்டி வாங்குவதைவிட்டு) விலகிக் கொள்கிறாரோ அவர் முன்னர் வாங்கியது வாங்கியதுதான். என்றாலும் அவரது விவகாரம் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது. ஆனால் இதன் பிறகும் எவரேனும் வட்டிக்குத் திரும்பினால் அவர்கள் நரகவாசி களேயாவர். அதிலேயே அவர்கள் என்றென்றும் வீழ்ந்துகிடப்பார் கள்,, (2 : 275)

நான்காவது : அநாதைகளின் சொத்தை உண்பது! அந்த அநாதைகள் ஆணாயினும் சரி பெண்ணாயினும் சரியே! அதில் கையாடல் செய்வது!

قال الله تعالى: ان الذين يأكلون اموال اليتامى ظلما انما يأكلون في بطونهم نارا و سيصلون سعيرا

“அநாதைகளின் சொத்துக்களை யார் அநியாயமாக உண்கிறார் களோ அவர்கள் உண்மையில் தங்கள் வயிறுகளில் நெருப்பைத் தான் நிரப்பிக் கொள்கிறார்கள். அதிவிரைவில் கொழுந்து விட்டெ ரியும் நரகம் செல்வார்கள்!,, (4 : 10)

அநாதைகள் என்றால் பருவ வயதை அடையாத நிலையில் தந்தையை இழந்தவர்கள் ஆவர்!

☐ ஐந்தாவது: பொய்ச்சாட்சியம் சொல்வது!இப்னு உமர் (ரலி) அறிவிக்கிறார்கள்., நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள் :

عن ابن عمر ﷺ عن النبي ﷺ انه قال : لن تزول قدم شاهد الزور حتى يوجب الله له النار

“பொய்ச்சாட்சியம் சொல்பவன்– (மறுமை நாளில்) அவன் நரகம் சென்றேயாக வேண்டும் என அல்லாஹ் தீர்ப்பளிக்கும்வரை–தனது இடத்தை விட்டும் நகரமுடியாது!,, நூல்: இப்னுமாஜா, ஹாகிம் –

ஹாகிம் மேலும் சொன்னார்கள்: இதன் அறிவிப்புத்தொடர் ஆதாரப் பூர்வமானது,,[63]

பொய்ச்சாட்சியம் என்பது, அறியாத ஒருவிஷயத்தைக் குறித்து அதைநான் அறிந்துள்ளேன் என்றோ அறிந்திருக்கும் ஒருவிஷயத் தைக்குறித்து அது எனக்குத் தெரியாது என்றோ சொல்வதாகும். நியாயமான சாட்சியம் என்பது, சாட்சியம் அளிப்பவன் எந்த விஷயத்தை அறிந்திருக்கிறானோ அதைக் கொண்டு சாட்சியம் அளிப்பதேயாகும்!

في الحديث قال لرجل ترى الشمس ؟ قال نعم قال : علي مثلها فاشهد او دع

நபி (ஸல்) அவர்கள் ஒருமனிதரிடம் கேட்டார்கள்: சூரியனைப் பார்க்கத்தானே செய்கிறாய்? அதற்கு அவர் 'ஆம்' என்று சொன்னார். நபியவர்கள் சொன்னார்கள்: சாட்சியம் சொல்வதாயின் இது போன்ற விஷயத்தில் சாட்சியம் சொல்., இல்லையெனில் பேசாமல் இரு,,

☐ ஆறாவது : சாதகமான தீர்ப்பைப் பெறுவதற்காக லஞ்சம் கொடுப்பதாகும். அல்லது வாங்குவதா கும்.

عن عبد الله بن عمرو ﷺ ان النبي ﷺ قال : الراشي و المرتشي في النار

அப்துல்லாஹ் பின் அமர்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: லஞ்சம் கொடுப்பவனும் வாங்குபவ னும் – இருவரும் நரகம்தான் செல்வர்!,, நூல்: தபராணி

அந்நிஹாயா எனும் நூலில் அதன் ஆசிரியர் சொல்கிறார் : லஞ்சம் கொடுப்பவன் என்றால் ஒருதீமையில் தனக்கு உதவுவதற் காக கையூட்டு கொடுப்பவன் ஆவான். அதனைப் பெறுபவன் லஞ்சம் வாங்குபவன் ஆவான். ஆனால் தனது உரிமையைப் பெறுவதற்காக அல்லது ஓர் அநீதியைத்தடுப்பதற்காக வழங்கப்படு வது இதன் கீழ்வராது,,

ஏழாவது : பொய்ச் சத்தியமாகும்.

---

[63] இது ஹாகிம் அவர்களின் கவனக்குறை வாகும். இதன் அறிவிப்புத் தொடர் மிகவும் பலவீனமானதாகும் என்பதே சரி! ஆயினும் இமாம் அஹ்மத் அவர்கள், நம்பிக்கைக்குரிய அறிவிப்பாளர்களின் தொடர் கொண்டு இதனை அறிவித்து வலிமை சேர்த்துள்ளார்கள்., ஆனால் இப்னு உமர் அவர்களிடம் இருந்து கேட்ட தாபிஈன்களின் பெயர்களைக் குறிப்பிடவில்லை!

عن الحارث بن مالك ﷺ قال : سمعت النبي ﷺ في الحج بين الجمرتين وهو يقـول : من اقتطع مال اخيه بيمين فاجرة فليتبوأ مقعده مـن النـار , ليبلـغ شـاهدكم غـائبكم – مرتين او ثلاثا

ஹாரிஸ் பின் மாலிக்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஹஜ்ஜின் போது கல்லெறியும் இரண்டு தூண்களுக்கிடையே நபி (ஸல்) அவர்கள் இவ்வாறுகூறியதை நான் கேட்டுள்ளேன்:பொய்ச் சத்தியம் செய்து தன் சகோதரனின் சொத்தை அபகரித்துக் கொண்டவன் (நாளை மறுமையில்) தனது இருப்பிடத்தை நரகமாக்கிக் கொள் ளட்டும்! உங்களில் இங்கு வந்திருப்பவர்கள் வராதவர்களுக்கு இதனை அறிவித்துவிடுங்கள்!„நூல்: முஸ்னத் அஹ்மத் ஹாகிம்

இதற்கு அரபி மொழியில் அல் யமீனுல் ஃகமூஸ்– மூழ்கடிக் கும் சத்தியம் எனும் வார்த்தை பயன்படுத்தப்படுகிறது: ஏனெனில் இப்படிச் சத்தியம் செய்பவனை, அவனது சத்தியம் பாவத்தில் மூழ்கடிக்கிறது.பிறகு நரகத்தில் மூழ்கடிக்கிறது! அவன் வாதிடும் விஷயத்தில் பொய்ச்சத்தியம் செய்து அதன் மூலம் அவனுக்குச் சாதகமாகத் தீர்ப்பளிக்கப்பட்டாலும் சரி அல்லது அவன் மறுக்கிற விஷயத்தில் அவனது சத்தியத்தைக் கொண்டு அவன் நிரபராதி எனத் தீர்ப்பளிக்கப்பட்டாலும் சரி! இரண்டுமே பொய்ச் சத்தியங்கள் தான்!

எட்டாவது : அறியாமையுடனும் அநீதியுடனும் மக்களிடையே தீர்ப்பு வழங்குவது!

لحديث بريدة بن حصيب ﷺ ان النبي ﷺ قال : القضـاة ثلاثـة واحـد في الجنـة و اثنان في النار فاما الذي في الجنة فرجل عرف الحق و قضي به و رجل عرف الحق فجار في الحكم فهو في النار ورجل قضي للناس علي جهل فهو في النار

புரைதா பின் ஹுஸைப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :«நீதி வழங்குபவர்கள் மூன்று விதமாய் உள்ளனர். ஒருவர் சுவனம் செல்வார். இருவர் நரகம் செல்லக்கூடியவர்களாவர். சுவனம் செல்லக்கூடியவர் சத்தியத்தை அறிந்து அதன்படி தீர்ப்பு வழங்கியவர். எவர் சத்தியத்தை அறிந் தும் அநீதியாகத் தீர்ப்பளித்தாரோ அவர் நரகம் செல்வார். எவர்

அறிமையுடன் மக்களுக்குத் தீர்ப்பு வழங்கினாரோ அவரும் நரகம் செல்வார்!„ நூல் : அபூதாவூது, திர்மிதி, இப்னு மாஜா[64]

☐ ஒன்பதாவது: தனது பொறுப்பின் கீழ் உள்ளவர்களை ஏமாற்றுவது, அவர்களின் நலனை நாடாதிருப்பது! அவர்களின் நலனுக்கோ தான் ஏற்றுக் கொண்ட பணிகளுக்கோ இசைவில் லாத காரியங்களை ஒருபொறுப்பாளர் செய்வது! மஅகல் பின் யஸார்(ரலி) அவர்கள் அறிவிக்கறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

لحديث معقل بن يسا ر ﷺ قا ل سمعت النبي ﷺ يقول : ما من عبد يسترعيه ا لله علي رعية يموت يوم القيامة وهو غاش لرعيته الا حرم ا لله عليه الجنة

அல்லாஹ் ஒருமனிதனை சில மக்களின் மீது பொறுப்பாளராக் குகிறான்„ அந்த மனிதன்தன் பொறுப்பின் கீழ் உள்ளவர்களுக்கு மோசடி செய்யக்கூடியவனாகவே மரணம் அடைகிறான் எனில் அல்லாஹ் சுவனத்தை அவன் மீது ஹராம் – விலக்கப்பட்டதாக் கியே தீருவான்!„ நூல் புகாரி, முஸ்லிம்

ஒருமனிதன் தன் குடும்பத்தினர் மீது பொறுப்பாளராய் இருப்ப தையும் ஓர் அரசன் தன் நாட்டு மக்களுக்குப் பொறுப்பாளராய் இருப்பதையும் ஏனைய பொறுப்பாளர்கள் அனைவரையும் இது உள்ளடக்கும்.

ஏனெனில் இப்னு உமர்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்)அவர்கள்கூறினார்கள்:உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பா ளர்களாகவே இருக்கிறீர்கள். உங்கள் பொறுபிபின் கீழ் உள்ளவர் கள் குறித்து உங்களிடம் விசாரணை செய்யப்படும். அரசன் ஒரு பொறுப்பாளன்„ அவனது பொறுப்பின் கீழ் உள்ளவர்கள் குறித்து அவனிடம் விசாரணை செய்யப்படும்.ஓர்ஆண் தன் குடும்பத்தினர் மீது பொறுப்பாளர்„அவரது பொறுப்பின்கீழ் உள்ளவர்கள் குறித்து அவரிடம் விசாரணை செய்யப்படும்.ஒரு பெண் தனது கணவன் வீட்டிற்குப் பொறுப்பாளர்„அவளது பொறுப்பின் கீழ் உள்ளவர்கள் குறித்துஅவளிடம் விசாரணை செய்யப்படும். ஒரு பணியாள் தன்

64 பலுகுல் மறாமில் இப்னு ஹஜர் அவர்கள் சொல்கிறார்கள் : இதனை புகாரி, முஸ்லிம் நீங்கலாக மீதி நால்வரும் அறிவித்துள்ளார்கள„ ஹாகிம் அவர்கள் இதனை ஸஹீஹ் என்று சொல்லியுள்ளார்கள்.

எஜமானனின் உடமைகளுக்குப்பொறுப்பாளர். அவனது பொறுப்பி லுள்ளவை குறித்து அவனி டம் விசாரணை செய்யப்படும்.–உங் களில் ஒவ்வொருவரும் பொறுப்பார்களே! உங்கள் பொறுப்பின் கீழ் உள்ளவர்கள் குறித்து உங்களிடம்விசாரணை செய்யப்படும்!„ நூல் : புகாரி, முஸ்லிம்

☐ பத்தாவது: மனிதனுக்கோ பிற உயிர்ப்பிராணிகளுக்கோ படம் வரைவது!

عن ابن عباس ﷺ سمعت النبي ﷺ يقول: كل مصور في النار يجعل له بكل صورة صورها نفسا فتعذبه في جهنم

„இப்னு அப்பாஸ் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதை நான் கேட்டேன்: உருவப் படம் வரைகிற ஒவ்வொருவருக்கும் நரகம்தான்.அவன்தீட்டிய உருவப் படத்துக்குப் பகரமாக ஓர் உயிரை அவன்மீது அல்லாஹ் சாட்டு வான். அது அவனை நரகத்தில் வேதனைப் படுத்திக் கொண்டே யிருக்கும்„ நூல் : முஸ்லிம்

ஸஹீஹுல் புகாரியின் மற்றோர்அறிவிப்பில் உள்ளது :„யாராவது உருவப்படம் வரைந்தால் அதிலே அவன் உயிர் ஊதுகிற வரை அல்லாஹ் அவனை வேதனைப் படுத்திக் கொண்டேயிருப்பான் – அதனுள் அவனால் ஒருக்காலும் உயிரை ஊதமுடியாது!„

ஆனால் மரங்கள், செடிகொடிகள், பழங்கள் போன்று – அல்லாஹ்வின் படைப்புகளில் வளரும் தன்மை கொண்டபொருள் களை ஓவியம் தீட்டுவதில் குற்றமில்லை., இது மார்க்க அறிஞர் களில் பெரும்பாலோரின் கருத்தாகும். அறிஞர்களில் வேறு சிலர் இதனையும் தடைசெய்துள்ளார்கள். ஏனெனில் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் அருளி னார்கள் : அல்லாஹ் கூறுகிறான் : என்னுடைய படைப்புகளைப் போன்று படைப்பதற்குப் புறப்பட்டவர்களை விடவும் கொடுமைக் காரர் யார் இருக்க முடியும்? அவர்கள் ஓர் எறும்பைப் படைக் கட்டும் பார்க்கலாம்! அல்லது ஒரு தானியத்தை–ஒரு கோதுமை யைப் படைக்கட்டும் பார்க்கலாம்!„ நூல் : புகாரி

☐ பதினொன்றாவது : ஹாரிஸ் பின் வஹ்ப் (ரலி) அவர்கள் அறிவித்துள்ள நபிமொழியில் கூறப்பட்டதாகும். அதாவது,

عن حارث ين وهب ان انبي ﷺ قال : الا اخبركم باهل النار ؟ كـل عتـل جـواظ مستكبر

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : நரக வாசிகள் யார் என்று உங்களுக்கு அறிவித்துத் தரட்டுமா? இரக்கமற்ற கொடுமைக்கார னாகவும் பெரும் கஞ்சனாகவும் ஆணவக்காரனாகவும் இருக்கிற ஒவ்வொருத்தனும் நரகவாசிதான்!,, நூல்: புகாரி, முஸ்லிம்

அல்உதுல்லு : இரக்கமற்ற கொடுமைக்காரன் - அதாவது, கடினமானவனாகவும் வன்நெஞ்சம் கொண்டவனாகவும் இருப்ப வன். சத்தியத்திற்கு பணியமாட்டான்., மக்களுக்கும் பணியமாட் டான்.

ஜவ்வாழ்- பெரும்கஞ்சன்-அதாவது, எல்லாவற்றையும் தனக் கென சேமித்துக் கொள்பவன்., எவருக்கும் எதுவும் கொடுக்க மாட்டான்!

முஸ்தக்பிர் - ஆணவக்காரன்., அதாவது, சத்தியத்தை ஏற்க மறுப்பவன். மக்களுடன் பணிவுடன் பழகாதவன். அனைவரைவிட வும் தானே உயர்ந்தவன் என நினைப்பான். சத்தியத்தை விட தனது கருத்துதான் சரியானது எனக் கருதுவான்!

- □ பனிரெண்டாவது: உண்ணவும் பருகவும் தங்கம்- வெள் ளிப் பாத்திரங்களைப் பயன்படுத்துவது!ஆண்களுக்கும் சரி பெண் களுக்கும் சரி (இதுவும் நரகம் சேர்க்கக் கூடியதே!)

عن ام سلمة رضي ا الله عنها ان النبي ﷺ قال :الذي يشـرب في آنيـة الفضـة انما تجرجر في بطنه نار جهنم

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: வெள்ளிப் பாத்திரங்களில் நீர் அருந்துபவன் யாரோ அவன் தனது வயிற்றில்நரக நெருப்பை ஊற்றியவன் ஆவான்!,,அறிவிப்பு: உம்மு ஸல்மா நூல்: பகாரி,

ஸஹீஹ் முஸ்லிமின் மற்றோர் அறிவிப்பில் வந்துள்ளது : தங்கம்-வெள்ளிப் பாத்திரங்களில் நீர் அருந்துபவன் யாரோ அவன் தனது வயிற்றினுள் நாக நெருப்பை ஊற்றியவன் ஆவான்!,,

சகோதரர்களே! நரகம் செல்ல வழிவகுக்கும் காரணிகளைக் குறித்து எச்சரிக்கையாக இருங்கள். நரகத்தைவிட்டும்உங்களைத் தூரமாக்கக்கூடிய அமல்கள் புரியுங்கள்! மறுமையெனும் நிலை யான உலகில் வெற்றி அடைவீர்கள்!

அறிந்து கொள்ளுங்கள் : திண்ணமாக இவ்வுலகம் ஒரு சில நாட்களின் சுகவாழ்வேயாகும். இது விரைவாக மறையக்கூடியது., அழியக்கூடியது! எனவே மரணம் அடையும் வரையில் சத்தியத் தில் நிலைத்திருப்பதற்கு உங்கள் இறைவனிடம் இறைஞ்சுங்கள்! அல்லாஹ் எவர்களின் மீது அருள் புரிந்தானோ அத்தகைய இறைவிசுவாசிகளுடன் மறுமையில் ஒன்றுசேர்ப்பதற்கும் இறைஞ் சுங்கள்!

யா அல்லாஹ்! சத்தியத்தின் மீது எங்களை நிலைத்திருக்கச் செய்வாயாக! அதன் மீதே எங்களை மரணம் அடையச் செய்வா யாக!கருணைமிக்க இறைவனே!உனது கருணையால் எங்களுக் கும் எங்கள் பெற்றோர்க்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் நீ மன்னிப்பு வழங்குவாயாக!

المجلس الثامن و العشرون في زكاة الفطر

28 வது மஜ்லிஸ்

# ஜகாதுல் ஃபித்ர்—பெருநாள் தர்மம்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவன் யாவும் அறிந்தவன். நுண்ணறிவுடையவன்., உயர்ந்தவன்., மாண்பு மிக்கவன்! அவனே ஒவ்வொரு பொருளையும் படைத்து அவை ஒவ் வொன்றுக்கும் விதியை நிர்ணயித்தான்!தனது நிறைவான நுண்ணறிவால் தன்னு டைய ஷரீஅத்— நெறிமுறைகளைச் செம்மையாக்கினான்! மனிதர்க ளுக்கு விளக்கமாகவும் விவேகமூட்டக் கூடியயவையாகவும் அவற்றை அமைத்தான்!

அவனுடைய நிறைவான ஆற்றல்களின் பேரில் அவனை நான் புகழ்கிறேன். அவனுடைய பூரணமான அருட்கொடைகளுக்காக அவனுக்க நன்றி செலுத்துகிறேன்.

வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். அவன் தனித்தவன்., அவனுக்கு யாதொரு இணையுமில்லை., ஆட்சியதிகாரம் அவனுக்குரியதே! அனைத்துப் புகழும் அவனுக்கே! அவன் அனைத்துப் பொருள் களின் மீதும் ஆற்றல்மிக்கவன்!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார் கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள் நற்செய்தி சொல்பவர் கள்., எச்சரிக்கை விடுப்பவர்கள்!

நபியவர்கள் மீதும் அவர்களின் தோழர்கள் மீதும் குடும்பத்தி னர் மீதும் நபித்தோழர்கள் மீதும் வாய்மையுடன் அவர்களைப் பின்பற்றியோர் மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அனை வருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

இந்த மாத இறுதியில்—பெருநாள் தொழுகைக்கு முன்பு ஜகாத் துல் ஃபித்ர் எனும் தர்மத்தை வழங்கிட வேண்டுமென அல்லாஹ் உங்கள் மீது கடமையாக்கியுள்ளான்.

இன்றைய மஜ்லிஸில் இந்தத் தர்மத்தின் சட்டம், அதன் தத்துவம், அதன் அளவு,அது கடமையாகும் நேரம்,கொடுக்க வேண்டியநேரம், கொடுக்க வேண்டிய இடம் ஆகியவைபற்றி கூறுவோம்!

☐ <u>ஜகாத்துல் ஃபித்ர் உடைய சட்டம்</u> : திண்ணமாக இது ஒருகடமை. நபி (ஸல்) அவர்கள் இதனை முஸ்லிம்கள் மீது கடமையாக்கியுள்ளார்கள்! நபி(ஸல்)அவர்கள் ஒன்றைக் கடமையாக்கினார்கள் அல்லது கட்டளையிட்டார்கள் எனில் அதற்கு– அல்லாஹ் கடமையாக்கிய அல்லது. கட்டளையிட்ட சட்ட அந்தஸ்து உள்ளது. அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي: ومن يطع الله و الرسول فقد أطاع الله و من تولي فما ارسلناك عليهم حفيظا

"யார் அல்லாஹ்வின் தூதருக்குக் கீழ்ப்படிகிறாரோ அவர் உண்மையில் அல்லாஹ்வுக்கக்கீழ்ப்படிந்துவிட்டார்!யாரேனும் புறக்கணித்துச் சென்றால் – உம்மை அவர்களின் பாதுகாவலராக நாம் அனுப்பிவைக்கவில்லை!" குர்ஆன் (4 : 80)

மேலும் கூறுகிறான்:

ومن يشاقق الرسول من بعد ما تبين له الهدي و يتبع غير سبيل المسلمين نوله ما تولي و نصله جهنم و ساءت مصيرا

"மேலும் யார் தனக்கு நேர் வழி தெளிவாகிவிட்ட பின்னரும் இறைத்தூதரிடம் பகைமை காட்டுவதில் முனைப்பாக இருக்கின்றானோ – இறைநம்பிக்கையாளர்களின் போக்கிற்கு மாறான பாதையில் செல்கிறானோ அவனை, அவன் திரும்பிவிட்ட திசையிலேயே நாம் செலுத்துவோம். பின்னர் அவனை நரகத்தில் வீசியெறிவோம். அது மிகவும் கெட்ட தங்குமிடமாகும்." (4 : 115)

மேலும் அல்லாஹ் கூறுகிறான் :

و ما آتاكم الرسول فخدوه و ما نهاكم عنه فانتهوا

"இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுக்கிறாரோ அதைப் பெற்றுக் கொள்ளுங்கள். அவர் எதனைவிட்டும் உங்களைத் தடுக்கிறாரோ அதனைவிட்டு விலகி விடுங்கள்." (59 : 7

இந்தத் தர்மம் – முஸ்லிம்களில் பெரியவர், சிறுவர், ஆண், பெண்,சுதந்திரன், அடிமைஆகிய அனைவர் மீதும் கடமையாகும்.

قال عبد ا لله بن عمر ﷺ فرض رسول ا لله ﷺ زكاة الفطر من رمضان صا عا مـن تمر او صاعا من شعير علي ا لعبد و الحر و ا لذكـر والانثـي وا لصغـير و ا لكبـير مـن المسلمين

அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள், ரமளானில், ஜகாதுல் ∴பித்ரை ஒரு மரைக் கால் பேரீத்தம் பழம் அல்லது ஒருமரைக்கால் வார்கோதுமையாக வழங்க வேண்டுமென—முஸ்லிம்களில் அடிமை, சுதந்திரன், ஆண் — பெண், சிறுவர், பெரியவர் அனைவர் மீதும் கடமையாக்கி னார்கள்„ நூல் :புகாரி, முஸ்லிம்

கர்ப்பத்தில் உள்ள சிசுவின் சார்பாகவும் இந்தத் தர்மம் வழங்கு வது கடமையாகாது. அதன் சார்பாக நன்மையை நாடி இந்தத் தர்மம் கொடுக்கப்பட்டால் அதில் குற்றமில்லை!அமீருல்மு∴மினீன் உஸ்மான் (ரலி)அவர்கள் கர்ப்பத்திலிருந்த சிசுவின் சார்பாக இந்த ∴பித்ர் தர்மம் வழங்கினார்கள்.

ஒரு முஸ்லிம் தன் சார்பாகவும் இந்தத் தர்மம் வழங்குவது கடமை. மனைவி—மக்கள், உறவினர் என யார் யாருக்கு அவர் செலவுக்குப் பணம் கொடுத்துவருகிறாரோ அவர்களின் சார்பாக வும் இதனை வழங்குவது கடமை. இது—அவர்களால் தங்களது பணத்திலிருந்து இந்தத் தர்மத்தை வழங்கிட இயலவில்லையா னால்தான்! அவர்களால் தங்கள் சார்பாக வழங்கிடமுடியும் என்றால் அவர்களே வழங்கிக் கொள்வதுதான் சிறந்தது! ஏனெனில் அவர்க ளின் விஷயத்தில் அவர்கள்தாம் பொறுப்பாளர்கள் ஆவர்!

பெருநாள் பகல் — இரவு செலவுகள்போக எவரிடம் பணம் மீதமுள்ளதோ அவர் மீது தான் இது கடமை.

ஒரு மரைக்காலுக்கும் குறைவாகவே அவரிடம் மீதமுள்ள தெனில் அதையே வழங்கிடுவார்.ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்: "உங்களால் இயன்ற அளவில் அல்லாஹ்வுக்குஅஞ்சி வாழுங்கள்„ (64 : 16)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

قال النبيﷺ اذا امرتكم بحكم فأتوا منه ما استطعتم

"நான் உங்களுக்கு ஒன்றைக் கட்டளையிட்டேன் எனில் உங்க ளால் முடிந்த வரையில் அதைச் செயல்படுத்துங்கள்„

☐ **இந்தத் தர்மத்தின் தத்துவம் :** இது வெளிப்படையானதாகும். ஏழைகளுக்கு உதவுவது, அவர்களைப் பெருநாட்களில் பிறரிடம் கையேந்திக் கேட்காதிருக்கச் செய்வது போன்ற லட்சியங்கள் அதில் உள்ளன! செல்வந்தர்களின் மகிழ்ச்சியிலும் – சந்தோசத்திலும் ஏழைகளையும் பங்கேற்கச் செய்வதால் அந்நாள் எல்லோருக்கும் பெருநாள் ஆகிறது!

☐ ஈகை, உதவி,பரிவு போன்ற நற்குணங்களை இந்தத் தர்மம் வளர்க்கிறது!

☐ நோன்புக்காலங்களில் ஏதேனும் குறைபாடு, வீணான சொல்–செயல், பாவம் போன்றவை நோன்பாளியிடம் ஏற்பட்டிருந்தால் அவற்றைவிட்டும் அவரை இந்தத்தர்மம் தூய்மைப்படுத்துகிறது!

☐ ரமளான்நோன்பை முழுமையாக நோற்கவும் இரவில் நின்று வணங்கிடவும்முடிந்தஅளவில் நல்லமல்கள்செய்திடவும் அல்லாஹ் அருள் புரிந்தான்.,அதற்காக அவனுக்கு நன்றி செலுத்துவதாகவும் இந்தத் தர்மம் திகழ்கிறது!

عن ابن عباس ﷺ فرض رسول الله ﷺ زكاة الفطر طهرة للصائم من اللغو و الرفث وطعمة للمساكين فمن ادا ها قبل الصلاة فهي زكاة مقبولة ومن اداها بعد الصلاة فهي صدقة من ا لصدقات – ابو داؤد و ابن ماجة

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : «வீணான– பாலுணர்வு தொடர்பான சொல்–செயல்களில்(ஏதேனும் நிகழ்ந்திருந்தால் அவற்றில்) இருந்து நோன்பாளியைத் தூய்மைப்படுத்தவும் ஏழைகளுக்கு உணவாக அமைந்திடவும் ஜகாதுல் ∴பித்ர் தர்மத்தை நபி(ஸல்) அவர்கள் கடமையாக்கினார்கள். ஒருவர் அதனைத் தொழுகைக்கு முன்பே நிறைவேற்றினால் அது ஒப்புக் கொள்ளப்பட்ட ஜகாதுல் ∴பித்ர் ஆகும். தொழுகைக்குப் பிறகு நிறைவேற்றினால் அது ஏனைய தர்மங்களில் ஒன்றே ஆகும்.

நூல் : அபூ தாவூத், இப்னு மாஜா[65]

ஜகாதுல் ∴பித்ருக்காக வழங்கப்பட வேண்டிய உணவுகள் யாதெனில்,எவை மனிதர்களின் உணவாகக் கருதப்படுமோ அவை

[65] தாரகுத்னி அவர்களும் இதனை அறிவித்துள்ளார்கள். ஹாகிம் அவர்கள் ஸஹீஹ் : . என்று சொல்லியுள்ளார்கள்.

யாகும். பேரீத்தம் பழம், வார்க்கோதுமை, அரிசி, காய்ந்த முந்திரி, பால்கட்டி போன்ற– மனிதர்கள் உட்கொள்ளும் உணவு வகைகள் அதில் அடங்கும்.

இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

عن أ بن عمر ﷺ فرض رسول ا لله ﷺ زكاة الفطر من رمضان صاعا من تمـر و صاعـا من شعير

,, நபி(ஸல்)அவர்கள் ரமளானில் ஒருமரைக்கால் பேரீத்தம் பழம் அல்லது ஒருமரைக்கால் வார்க்கோதுமையை ஐகாதுல் ஃபித்ராக வழங்கவேண்டுமெனக் கடமையாக்கினார்கள்,,நூல்:புகாரி, முஸ்லிம்

அந்தக் காலத்தில் வார்க்கோதுமையும் மக்களின் உணவாக இருந்தது. ஆபூ ஸயீத் – அல்குத்ரி (ரலி) அறிவித்துள்ளார்கள்:

كما قال ابو سعيد الخدري ﷺ كنا نخرج يوم الفطر في عهد رسول ا لله ﷺ صاعا من طعام و كان طعامنا السعير و الزبيب والاقط و التمر – روله البخاري

,, நாங்கள், நபி (ஸல்)அவர்களின் காலத்தில் பெருநாள் அன்று ஒருமரைக்கால் உணவை தர்மம் கொடுப்போம். வார்க்கோதுமை, காய்ந்தமுந்திரி, பால்கட்டி, பேரீத்தம் பழம் போன்றவை எங்கள் உணவாக இருந்தன,, நூல்: புகாரி

எனவே கால்நடைகளின் உணவை வழங்குவதுபோதுமாகாது. ஏனெனில் நபி (ஸல்)அவர்கள் ஐகாதுல் ஃபித்ர் எனும் பெருநாள் தர்மத்தை கடமையாக்கியது ஏழைகளின் உணவாகத்தானே தவிர கால்நடைகளின் உணவாக அல்ல!

மேலும் ஆடைகள், விரிப்புகள், பாத்திரங்கள் போன்ற – மனிதர் களின் உணவுப் பொருட்களல்லாத இதரப் பொருட்களை வழங்கு வதும் போதுமாகாது! ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் இதனை உணவுப் பொருட்களாகவே வழங்கவேண்டுமென்று கட்டளை யிட்டுள்ளார்கள். எனவே நபியவர்களே குறிப்பிட்டுக் காட்டியுள்ள ஒன்று மாற்றப்படமாட்டாது!

உணவுக்கான கிரயத்தை வழங்குவதும் போதுமாகாது!ஏனெ னில் இது நபியவர்களின்கட்டளைக்கு முரணானமாகும். நபி(லஸ்) அவர்கள் கூறியதாக ஆதாரப்பூர்வமாகப் பதிவாகியுள்ளது :

قال النبي ﷺ من عمل عملا ليس عليه امرنا فهو رد

நமது மார்க்கத்தின் வழிகாட்டலில்லாத ஓர் அமலை எவர் செய்தாலும் அது ரத்து செய்யப்படக்கூடியதே!,, மற்றோர் அறிவிப்பில் – நமது இந்த மார்க்கத்தில்–அதில் இல்லாத ஒன்றை எவர் ஏற்படுத்தினாலும் அது ரத்து செய்யப்படக்கூடியதே!,, நூல் : புகாரி, முஸ்லிம்

மட்டுமல்ல கிரயத்தைக் கொடுப்பது நபித்தோழர்களின் செயலுக்கும் முரணானது. அவர்கள் ஒருமரைக்கால் உணவைத்தான் ஜகாதுல் ஃபிதர் வழங்கியுள்ளார்கள்.

قد قال النبي ﷺ : عليكم بسنتي و سنة الخلفاء الراشدين المهديين

மேலும் நபி(ஸல்)அவர்கள் சொல்லியுள்ளார்கள் : எனது வழிமுறையையும் எனக்குப்பிறகு நேர்வழியில் நிலைத்துநின்றுவாழும் பிரதிநிதிகளின் வழிமுறையையும்பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள்!,,[66]

மேலும் ஜகாதுல் ஃபித்ர் எனும் பெருநாள் தர்மம், ஒரு குறிப் பிட்ட வகை உணவை வழங்கும் வழிபாடாகும். எனவே அது அல்லாததை வழங்குவது போதுமாகாது,, குறிப்பிட்ட நேரம் அல்லாத வேறு நேரத்தில் வழங்குவது போதுமாகாதது போன்று!

☐ <u>பித்ர் ஜகாத்தின் அளவு</u>: நபியவர்களுடைய மரைக்காலின் அளவை ஒத்த ஒருமரைக்கால் ஆகும். கிராம் கணக்கில் : 2 கிலோ 40 கிராம். நபியவர்களின் மரைக்கால் அளவை அறிய விரும்பினால் 2 கிலோ 40 கிராம் நல்ல கோதுமையை நிறுத்து அதே அளவிலான ஒருபாத்திரத்தில் அதை நிறைத்துப் போடவும். பிறகு அதனை ஒருமரைக்கால் அளவாக வைத்துக் கொள்ளலாம்!

☐ <u>ஜகாதுல் ஃபித்ர் கடமையாகும் நேரம்</u>: சூரியன் மறைந்து பெருநாள் இரவு ஆரம்பமாவதாகும். இந்நேரத்தில்தான் இதனை வழங்குவது கடமையாகும்., யார் யாரெல்லாம் இதனை வழங்குவது கடமையோ அவர்கள் மீது!

---

[66] இதனை இமாம் அஹ்மத், அபூ தாவூத், இப்னு மாஜா, திர்மிதி ஆகியோர் அறிவித்துள்ளார்கள். இது ஹஸன்–ஸஹீஹ் தரத்திலானது என்று திர்மிதி இமாம் சொல்லியுள்ளார்கள். மேலும் அபூ நுஐம் சொல்லியுள்ளார்கள்: இது ஷாம் தேச வாசிகளின் ஸஹீஹ் ஹதீஸ்களில் நின்றும் உள்ள நல்ல ஹதீஸ் ஆகும்.

இதன்படி சூரியன் மறைவதற்கு – ஒரு சில விநாடிகளுக்கு முன்பு – ஒருவர் இறந்து விட்டால் அவர் மீது ஜகாதுல் ஃபித்ர் கடமையாகாது. சூரியன் மறைந்து – ஒருசில விநாடிகளுக்குப் பிறகு ஒருவர் இறந்தாலும் – அவர் சார்பாக இதை வழங்கிவிடு வது கடமையாகும்.

மேலும் சூரியன் மறைந்து ஒருசில விநாடி கழிந்த பிறகு குழந்தை பிறந்தால் அதன் சார்பாக வழங்குவது கடமையாகாது. அதை வழங்குவது ஸுன்னதும் அல்ல! சூரியன் மறைவதற்கு முன்பு குழந்தை பிறந்தால் – ஒருசில விநாடிகளுக்கு முன்பானா லும் சரியே– அதன் சார்பாக ஃபித்ர் ஜகாத் வழங்குவது கடமை யாகும்.

பெருநாள் இரவின் சூரியன் மறையும் நேரமே இந்தத் தர்மம் கடமையாகும் நேரமாகும். இதற்குக் காரணம், அது ரமளான் நோன்பை விடுவதற்காக நேரம் என்பதுதான். மேலும் இந்தத் தர்மம், நோன்பை நிறுத்திக் கொள்வதுடன் சேர்த்துச் சொல்லப் படுகிறது. அதாவது, ஜகாதுல் ஃபித்ர் மின் ரமளான் (ரமளான் நோன்பை முடித்துக் வைக்கும் தர்மம்) என்றே கூறப்படுகிறது! எனவேதான் அந்நேரமே இந்தச் சட்டத்துடன் தொடர்புடையதாகி றது!

☐ <u>நேரம்</u> : இதனை வழங்கும் நேரம் இரண்டு வகை யில் உள்ளது. சிறப்பான நேரம் – ஆகுமான நேரம்.

(1) <u>சிறப்பான நேரம்:</u> இது பெருநாள் தொழுகைக்கு முன்புள்ள காலை நேரமாகும். பின் வரும் அறிவிப்புகளில் கூறப்பட்டுள்ளது :

لحديث ابي سعيد الخدري ﷺ قال كنا نخرج في عهد النبي ﷺ يـوم الفطر صاعـا من طعام – رواه البخاري

அபூ ஸயீத்– அல்குத்ரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நாங்கள் நபி (ஸல்)அவர்களின் காலத்தில் பெருநாள் அன்று ஒரு மரைக்கால் உணவுப் பொருள் வழங்கிக் கொண்டிருந்தோம்,,
நூல் : புகாரி

عن ابن عمر ﷺ ان النبي ﷺ امر بزكاة الفطر ان تؤدي قبل خروج النـاس الي الصلاة – رواه البخاري و مسلم

இப்னு உமர்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:„மக்கள் தொழு கைக்கு கிளம்புவதற்கு முன்பாக ஃபித்ர் தர்மம்வழங்கப்பட வேண் டும் என நபி (ஸல்) அவர்கள் கட்டளை இட்டார்கள்„ நூல் : புகாரி, முஸ்லிம்

ஆகையால்தான் பெருநாள் அன்று தொழுகையைச் சற்றுத் தாமிதமாக நடத்துவதே சிறப்பு என உள்ளது., ஃபித்ரா தர்மம் வழங்கிட நேரம் தாராளமாகக் கிடைக்கவேண்டும் என்பதற்காக!

(1) ஆகுமான நேரம் : இது பெருநாள் தொழுகைக்கு ஒருநாள் அல்லது இரண்டு நாட்களுக்கு முன்பு கொடுப்பதாகும். இப்னு உமர் (ரலி) அவர்களின் மகனார் நாஃபிஉ அவர்கள் அறி விக்கிறார்கள் :

كان ابن عمر ﷺ يعطي عن الصغير و الكبير حتي اذ كـان يعطي، عـن بـني و كـان يعطيها الذين يقبلونها وكانوا يعطون قبل الفطر بيوم او يومين - رواه البخاري

இப்னு உமர் (ரலி) அவர்கள்—சிறியவர், பெரியவர் அனைவர் சார்பிலும் வழங்குபவர்களாய் இருந்தார்கள். எந்தஅளவுக்கெனில், என்னுடைய பிள்ளைகள் சார்பாகவும் கொடுப்பார்கள். இந்தத் தர்மத்தை – யார் பெற்றுக் கொள்கிறார்களோ அவர்களுக்குக் கொடுப்பார்கள். பெருநாளைக்கு ஒருநாள் அல்லது இரண்டு நாட்களுக்கு முன்பே அவர்களுக்கு வழங்கப்பட்டுவிடும்„ நூல் : புகாரி

இந்தத் தர்மத்தைப் பெருநாளைக்குப் பின்னர் வழங்குவது கூடாது. தக்க காரணமின்றி யாராவது அதனைப் பெருநாள்த் தொழுகையை விட்டும் பிற்படுத்தினால் அவரிடம் இருந்து அது ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது! ஏனெனில் அது, நபி(ஸல்) அவர் கள் இட்ட கட்டளைக்கு முரணானதாகும். இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவித்த நபிமொழி முன்னர் சென்றுள்ளது. அதாவது, தொழுகைக்கு முன்பே அதை நிறைவேற்றினால்தான் அது ஒப்புக் கொள்ப்பட்ட ஜகாதுல் ஃபித்ர் ஆகும். தொழுகைக்குப் பிறகு நறைவேற்றினால் ஏனைய தர்மங்களில் ஒருதாமமாகவே அது கருதப்படும்!

தக்க காரணத்திற்காக அதைப் பிற்படுத்த வேண்டியதானால், குற்றமில்லை. எடுத்துக்காட்டாக, பெருநாள் அன்று எதிர்பா ராத விதமாக வெளியூரில் இருக்க வேண்டியதாகிவிடுகிறது! ஃபித்ர்

தர்மத்திற்கான உணவுப் பொருட்கள் எதுவும் அங்கு தனது கைவசம் இல்லை. அல்லது அதைப் பெற்றுச் செல்வதற்கு எவரும் கிடைக்கவில்லை. அல்லது திடீரென பெருநாள் உறுதி செய்யப்பட்டது., அதனால் தொழுகைக்கு முன் வழங்கமுடியாத நிலை! அல்லது அதை வழங்கும் விஷயத்தில் ஒரு மனிதரை நம்பியிருந்து பிறகு அந்த மனிதர் அதை வழங்க மறந்து விடுகிறார்! இத்தகைய நிலைகளில் ஒருவர் பெருநாள் தொழுகைக்குப் பிறகு ஜகாதுல் ஃபித்ர் தர்மத்தை வழங்குவதில் குற்றமில்லை. ஏனெனில் அவரிடம் தக்க காரணம் உள்ளது.

இந்தத் தர்மம் உரிய நேரத்தில் – தொழுகைக்கு முன்னரே – அதற்குத் தகுதியானவரிடமோ அல்லது அவருடைய பொறுப்பாளரிடமோ போய்சேர்ந்திட வேண்டும் என்பது கட்டாயமாகும். ஒருவர், அந்தத் தர்மத்தைக் குறிப்பிட்டதொரு மனிதருக்கென நினைத்திருந்தார்., ஆனால் வழங்கும் நேரத்தில் அவரோ அவருடைய பொறுப்பாளரோ கிடைக்க வில்லையெனில் வேறொருவருக்கு–உரிய நேரத்தில் அதைக் கொடுத்திட வேண்டும்., அவரும் அதற்குத் தகுதியானவராக இருக்க வேண்டும்.

ஏழைகளுக்கு வழங்க வேண்டும். அது அவர் வாழும் பகுதியாக அல்லது முஸ்லிம்கள் வாழும் எந்த ஊராக இருந்தாலும் சரியே! குறிப்பாக மக்கா, மதீனா போன்ற சிறப்புமிக்க இடமாக இருந்தால் அல்லது அங்கு ஏழைகள் அதிகத் தேவையுடையவர்களாக இருந்தால் அங்கு கொடுப்பது ஏற்றமானதாகும்! அவர் தங்கியிருக்கும் ஊரில் இந்தத் தர்மத்தை வாங்குவதற்கு யாரும் கிடைக்கவில்லையெனில் அல்லது அதற்குத் தகுதியானவர் யார் எனும் விவரம் அவருக்குத் தெரியவில்லையெனில் தன் சார்பில் ஒரு பொறுப்பாளரை நியமித்து தகுதியானவர்கள் இருக்கும் இடத்தில் விநியோகிக்க ஏற்பாடு செய்யவேண்டும்!

ஜகாதுல் ஃபித்ர் தர்மம் பெற்றிடத் தகுதியானவர்கள் ஏழைகளும் – நிறைவேற்ற முடியாத அளவுக்குக் கடன்சுமைகள் உள்ளவர்களும் ஆவர். இந்தத் தர்மத்திலிருந்து அவரவரின் தேவைகளுக்கு ஏற்ப வழங்கிட வேண்டும்.

இந்தத் தர்மத்தை ஒன்றுக்கதிகமான ஏழைகளுக்குப் பகிர்ந்தளிப்பதும் கூடும். பலருடைய தர்மங்களை ஒரே ஏழைக்குக் கொடுப்பதும்கூடும்.

ஏனெனில் நபி (ஸல்) அவர்கள், கொடுப்பதற்குரிய கடமை யான அளவை நிர்ணயித்தார்களே தவிர அதை வாங்குபவர்கள் இத்தனைபேர்தான் இருக்கவேண்டும் என்று நிர்ணயிக்கவில்லை!

இதன்படி சிலபேர் தங்களுடைய ஜகாதுல் ∴பித்ரை அளந்து கணக்கிட்டு ஒரு பையில் மொத்தமாகப் போட்டுவிட்டு பிறகு மீண்டும் அளக்காமலேயே அதிலிருந்து அள்ளிக் கொடுப்பார்களே யானால் அது போதுமானதாகும்.

ஆயினும் தாங்கள் கொடுக்கும் தானியத்தின் அளவு என்ன வென்பது தெரியாது என்று ஏழைக்கு அவர்கள் அறிவித்துவிட வேண்டும். ஏனெனில் அதைச் சரியானஅளவு என்று அந்த ஏழை தவறாகப் புரிந்து கொண்டு வாங்கிய தானியத்தை அளந்து பார்க் காமல் தன் சார்பாக அதை அப்படியே பிறருக்கு வழங்கிவிடக் கூடாது!

ஒரு மனிதரிடம் இருந்து ஜகாதுல் ∴பித்ரை வாங்குகிற ஏழை, அதை அளந்து பார்த்து அறிந்துகொண்டாலோ, அல்லது அதை வழங்கியவர்–அதனை நிறைவான அளவுதான் என அறி வித்து அதை இவர் உறுதியாக நம்பினாலோ தன்சார்பாகவோ தன் குடும்பத்தில் ஒருவர் சார்பாகவோ அப்படியே பிறருக்கு வழங்குவது கூடும்!

யா அல்லாஹ்! உனக்கு வணக்கவழிபாடு செய்து வாழ்ந்திட எங்களுக்கு நல்லருள் பரிவாயாக! எந்த முறையில் உன்னை வழி பட்டால் நீ எங்களைப் பொருந்திக் கொள்வாயோ அந்த முறையில் உன்னை வழிபட எங்களுக்கு அருள்புரிவாயாக!

மேலும் எங்களுடைய உள்ளத்தையும் சொற்களையும் செயல் களையும் பரிசுத்தப்படுத்துவாயாக! தீய கொள்கை, தீய சொல் – செயல் ஆகியவற்றில் இருந்து எங்களைத் தூய்மையாக்குயாயாக! நிச்சயமாக நீ பெரும் கொடையாளனாகவும் கண்ணியமிக்கவனா கவும் இருக்கிறாய்!

# المجلس التاسع و العشرون في التوبة

29 வது மஜ்லிஸ்

# பாவமீட்சி தேடல்

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! வணக்கத்திற்குரிய இறைவன் அவன் ஒருவனே என்பதற்கு ஒவ்வொரு பொருளிலிருந்தும் ஆதாரத்தை அவன் நிலைநாட்டினான். தன்னுடைய படைப்பினங்களின் மீது – தனது நாட்டப்படி – அதிகாரத்துடனும் ஆற்றல் கொண்டும் ஆட்சி செலுத்தினான். அவனே இறைபக்தர்களைத் தேர்ந்தெடுத்தான். அமைதியையும் ஈமான் எனும் விசுவாசத்தையும் அவர்களுக்கு வழங்கினான். பாவம் செய்தோர் அனைவர்க்கும் – தனது சகிப்புத்தன்மை மற்றும் கிருபையினால் மன்னிப்பு வழங்கினான். தனது கட்டளையை மீறியவர்களின் ரிஜ்க் – வாழ்வாதாரங்களை அவன் துண்டிக்கவில்லை. இது அவனது கொடையும் கருணையுமாகும். தன்னுடைய கட்டளைகளை வாய்மையுடன் பின்பற்றுபவர்களுக்கு–தன்னோடு நெருங்கிவருதல் எனும் தென்றலை வழங்கி மகிழ்வூட்டினான்.

கணக்குத் தீர்க்கும் (மறுமை) நாளின் கடுமையான துன்பங்கள் குறித்து எச்சரிக்கை செய்தான். இறைதிருப்தியை நோக்கி நடைபோடுபவருக்கு – அவர் செல்லும் பாதையில் பாதுகாப்பளித்தான். இறைநம்பிக்கையாளரைக் கண்ணியப்படுத்தினான்., அவரது உள்ளத்தில் ஈமான் எனும் நம்பிக்கையைப் பதித்தான். தன்னுடைய படைப்பினங்களில் சட்டம் பிறப்பித்தான். சிலவற்றைக் கடமையாக்கினான்., வேறு சிலவற்றைத் தடுத்தான்! பலவீனப்பட்டு வலுவிழந்த சட்டவிதிகளைத் தனது உதவியால் நிலைப்படுத்தினான். பராமுகத்திலும் மறதியிலும் இருந்தவர்களுக்கு நல்லுரை வழங்கி விழிப்பூட்டினான். பாவம் செய்தவர்களைப் பாவமீட்சி தேடுமாறு அழைத்தான்., அவர்களது பாவத்தை மன்னிப்பதற்காக!

மனிதர்களுடன் ஒப்பாகும் நிலையை விட்டும் உயர்ந்தமாண்பு மிக்க இரட்சகன்! கண்ணியமிக்கவன்., தன்னிறைவுடையவன்! உணவு-பானத்தின் எத்தேவையும் இல்லாதவன்! மனிதர் கள்தாம் என்றென்றும் அவன் பக்கம் தேவை உடையவர்களாயும் இரவு - பகல் எந்நேரமும் அவனது அருளைப் பெறவேண்டிய நிர்பந்த நிலையிலும் உள்ளனர்.

அல்லாஹ்வை நான் புகழ்கிறேன். தன் இரட்சனை வணங்கி வழிபடுபவனின் புகழாகும் இது! தன் பாவங்களையும் தவறுக ளையும் அவனிடம் எடுத்துச் சொல்லி மன்னிப்புக் கோருபவனின் புகழாகும் இது!

வணக்கதிற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை., அவன் தனித்தவன்., அவனுக்கு நிகரில்லை என்று சாட்சி சொல் கிறேன். இது வாய்மையான உள்ளம் உடையவனின் சாட்சியாகும். மேலும் முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமையும் அவனுடைய தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சியம் சொல்கி றேன். அவர்கள் இறைக்கட்சியனரில் இருந்து தேர்வுசெய்யப்பட்டவர்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அவர்க ளின் உற்ற தோழரான அபூ பக்ர் மீதும்- எவர் நடந்து செல்லும் வழியில் ஷைத்தான் செல்லமாட்டானோ அப்படிப்பட்டவரான உமர் மீதும் - போரணியில் அல்ல.,(வீட்டில்வைத்துக்கொலை செய்யப் பட்டு) ஷஹீத் ஆன உஸ்மான் மீதும் - போரில் நபியவர்களுக் குத் துணைநின்ற அலீ மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவா னாக! நபியவர்களின் குடும்பத்தினர்-தோழர்கள்- அவர்களின் வழி காட்டலின்படி நேர்வழி பெற்றவர்கள் அனைவர் மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம்அளிப்பானாக!

சகோாரர்களே! அல்லாஹ்விடம் பாவமீட்சி தேடுவது கொண்டும் அவனது அன்பைப்பெறக்கூடிய நற்பணிகள் செய்துஅவன் பக்கம் மீளுவது கொண்டும் ரமளான் மாதத்தை நிறைவு படுத்துங்கள்! ஏனெனில் எந்தமனிதனானாலும் அவனிடம் சிலதவறுகளும் குறை பாடுகளும் இருக்கத்தான் செய்யும்! தவறுகளே செய்யாமல் யாரும் இருக்க முடியாது. ஆதத்தின் மக்கள் அனைவரும் தவறு செய்பவர்கள்தாம்! தவறு செய்பவர்களிலே சிறந்தவாகள் பாவமன் னிப்புத் தேடுபவர்களே!

அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி அவன் பக்கம் மீளுவ தற்கு - அல்லாஹ் தன் திருவேதத்திலும் அண்ணல் நபி (ஸல்)

அவர்கள் தம்முடைய பொன்மொழிகளிலும்ஆர்வமூட்டியுள்ளார்கள்! அல்லாஹ் கூறுகிறான் :

فقال سبحانه : وان استغفروا ربكم ثم توبوا اليه يمتعكم متاعا حسنا الي اجل مسمي

و يؤت كل ذي فضل فضله و ان تولوا فاني اخاف عليكم عذاب يوم كبير

„மேலும் நீங்கள் உங்கள் இரட்சகனிடம் பாவமன்னிப்புக் கோரி அவன் பக்கம் திரும்புங்கள். அப்போது ஒரு குறிப்பிட்ட காலம் வரை உங்களுக்கு அழகான வாழ்வாதாரங்களை வழங்கி இன்புறச் செய்வான். மேலும் சிறப்புக்குரியவர் ஒவ்வொருவருக்கும் அவருடைய சிறப்புக்கேற்ப தன் அருளை வழங்குவான். நீங்கள் புறக்கிணிப்பீர்களாயின் திகிலூட்டக்கூடிய ஒருமாபெரும் நாளின் வேதனை உங்களுக்கு வந்துவிடுமோ என்று நான் அஞ்சுகிறேன்! ,குர்ஆன் (11 : 3)

மேலும் கூறுகிறான் :

قال تعالي : قل انما انا بشر مثلكم يوحي الي انما الهكم اله واحد فاستقيموا اليه و

استغفروه – فصلت ٦

„(நபியே, இவர்களிடம்) கூறும்: நான் ஒரு மனிதன்தான்„ உங்களைப் போன்று! வஹியெனும் இறையருட் செய்தியின் மூலம் எனக்கு அறிவிக்கப்படுகிறது : உங்கள் இறைவன் ஒரே இறைவன்தான் என்று!„ எனவே நீங்கள் அவன் பக்கமே நேராக நிலைகொள்ளுங்கள்! அவனிடம் பாவமன்னிப்புத் தேடுங்கள்!„ குர்ஆன் (41 : 6)

மேலும் அல்லாஹ் கூறுகிறான் :

قال تعالي: و توبوا الي الله جميعا ايها المؤمنون لعلكم تفلحون

„இறைநிம்பிக்கையாளர்களே!நீங்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து பாவமீட்சி மேடி அல்லாஹ்வின் பக்கம் மீளுங்கள், நீங்கள் வெற்றி பெறக்கூடும்! „ (24 : 31)

மேலும் கூறுகிறான் :

قال سبحانه : يا ايها الذين آمنوا تيبوا الي الله توية نصوحا عسي ربكم ان يكفر

عنكم سيآتكم و يدخلكم جنات تجري من تحتها الانهار – التحريم ٨

„ இறைநம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருங்கள்„ தூய்மையான பாவமன்னிப்பாக! விரைவில்

அல்லாஹ் உங்கள் தீமைகளை அகற்றவும் செய்யலாம்., கீழே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும் சுவனங்களில் உங்களைப் பிரவேசிக்கவும் செய்யலாம்! „ (66 : 8 )

மேலும் கூறுகிறான் :

قال تعالى: ان الله يحب التوابين و يحب المتطهرين

“ திண்ணமாக அல்லாஹ்–தீமையிலிருந்துவிலகி பாவமன்னிப்புக் கோருபவர்களையும் தூய்மையை மேற்கொள்பவர்களையும் நேசிக்கிறான்„ ( 2 : 222) – பாவமீட்சி பற்றி பேசுகிற இறைவசனங்கள் ஏராளம் உள்ளன. நபிமொழிகள் வருமாறு :

அகர்ரு பின் யஸார்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் அருளினார்கள் :“மனிதர்களே! பாவமீட்சிதேடி அல்லாஹ் வின் பக்கம் மீளுங்கள். திண்ணமாக நான் ஒருநாளில் நூறு தடவை பாவமன்னிப்புப் கோருகிறேன்!„ நூல் : முஸ்லிம்

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :“நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறக்கேட்டுள்ளேன்: திண்ணமாக ஒருநாளில் எழுபது தடவைக்கும் அதிகமாக நான் பாவமன்னிப்புக் கோருகிறேன்„ நூல் : புகாரி

அனஸ் பின் மாலிக்(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் அருளினார்கள் : அல்லாஹ்வின் ஓர் அடியான் பாவமன்னிப்புக் கோரி அவன் பக்கம்மீளும்போது அதுகுறித்து அல்லாஹ் அதிகஅளவு மகிழ்ச்சியடைபவனாக இருக்கிறான்.அது உங்களில் ஒருவர் அடையும் மகிழ்ச்சியைவிட அதிகமாகும். அவர் ஒரு பாலைவனப் பகுதியில் தன்வாகனத்தின்மீது பயணமாகிக்கொண்டிருந்தார். திடீரென அவரை விட்டும் அது காணாமல் போய்விட்டது! அவருக்குத் தேவையான உணவும் பானமும் அதிலேதான் இருந்தன. இனி அந்தவாகனம் கிடைக்கப் போவதில்லை என அவர் நிராசை அடைந்தார். பிறகு ஒருமரத்தடிக்கு வந்து அதன் நிழலில் ஓய்வாகப் படுத்திருந்தார். தன் வாகனம் கிடைக்குமென்ற நம்பிக்கையே அவருக்கில்லை! இந்த நிலையில் திடீரென அவ்வாகனத்தை அவர் காண்கிறார்„அவர் முன்னால் அது நின்றுகொண்டிருக்கிறது! உடனே அதன் கடிவாளத்தைக் கையில் எடுத்துக் கொண்டு மகிழ்ச்சிப்பெருக்கோடுகூறினார்: யாஅல்லாஹ்! நீ தான் எனது அடிமை„ நான் உன் எஜமானன் என்று!– அதிக அளவுமகிழ்ச்சியினால் அவரது பேச்சுதடுமாறியது!„நூல்: முஸ்லிம்

அடியான் பாவமீட்சி பெறுவது குறித்து அல்லாஹ் மகிழ்ச்சி அடைவதற்குக் காரணம், மன்னிப்பதையும் பிழைபொறுப்பதையும் அல்லாஹ் விரும்புவதேயாகும். அவனுடைய அடியான் அவனை விட்டும் விரண்டோடிய பிறகு மீண்டும் அவனிடம் திரும்பி வருவதை அவன் பெரிதும் நேசிப்பதேயாகும்.

அனஸ் (ரலி) அவர்களும் இப்னு அப்பாஸ் (ரலி)அவர்களும் அறிவிக்கிறார்கள் : நபி(ஸல்)அவர்கள் அருளினார்கள்:„ஆதத்தின் மகனுக்கு (மனிதனுக்கு) ஓர் ஓடை நிறைய தங்கம் இருந்தால் இன்னும் இரண்டுஓடைகள் நிறைய தங்கம் வேண்டுமெனவிரும்புகிறான். மண்தான் அவனது வாயை நிரப்பவல்லது!ஆனால் பாவ மன்னிப்புக் கோருபவர் யாரோ அவரை அல்லாஹ் மன்னித்துவிடுகிறான்" நூல் : புகாரி, முஸ்லிம்

தௌபா - பாவமீட்சி தேடுவதென்பது, அல்லாஹ்வுக்கு மாறு செய்வதை விட்டுவிட்டு கீழ்ப்படிவதன் பக்கம் திரும்புவதாகும். ஏனெனில் அல்லாஹ் ஒருவனே வணக்கவழிபாட்டிற்குத் தகுதியான உண்மையான இறைவன்., வணக்கத்திற்குரிய இறைவனின் முன்னிலையில் உள்ளன்புடனும் கண்ணியத்துடனும் கீழடங்கி பணிவைக் கடைப்பிடிப்பதே வணக்கவழிபாட்டின் எதார்த்தநிலை! ஓர் அடியானிடம் - அவனுடைய இரட்சகனுக்குக் கீழ்ப்படியாத நிலை-முரட்டுப்பிடிவாதம் ஏற்பட்டால் அதிலிருந்து அவன் பாவ மன்னிப்புத் தேடுவதென்பது அல்லாஹ்வின் பக்கம் திரும்பி அவன் முன்னிலையில் அச்சமும் பணிவடக்கமும் கொண்ட ஏழையாக - அவனது வாசலில் நிற்பதாகும்!

தௌபா - பாவமன்னிப்புத் தேடுவது உடனடியாகச் செய்ய வேண்டிய கடமையாகும். அதைப் பிற்படுத்துவதோ தள்ளிப்போடுவதோ கூடவே கூடாது! ஏனெனில் இது அல்லாஹ்வும் அவனுடய தூதரும் இட்ட கட்டளை! அல்லாஹ் - ரஸூலின் அனைத்துக் கட்டளைகளும் விரைவாக -உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டியவையாகும். ஏனெனில் அவற்றைப் தாமிதப்படுத்தினால் எதிர்காலத்தில் எத்தகைய சூழ்நிலை அவனுக்கு எற்படுமென்பதை அடியான் அறியமாட்டான். மரணம் திடீரென அவனைத் தழுவிக் கொள்ளலாம்! அப்போது அவனால் பாவமன்னிப்புத் தேடிட இயலாது!

மட்டுமல்ல பாவம்செய்வதில் பிடிவாதமாக இருப்பது மனத்தைக் கல்லாக்கிவிடும். அல்லாஹ்வை · விட்டும் அடியான் தூர

விலகிச் செல்லவே அது வழிவகுக்கும். ஈமான் எனும் விசு வாசத்தில் பலவீனத்தையும் அது ஏற்படுத்தும். ஏனெனில் ஈமான்– விசுவாசம் என்பது நன்மைகளினால் அதிகரிக்கக் கூடியதாகவும் தீமைகளினால் குறையக்கூடியதாகவும் உள்ளது.

பாவத்தை விடாப்படியாகத் தொடர்ந்து செய்துவந்தால் மனம் அதிலே பழக்கப்பட்டு அதையே விடாப்படியாகப் பற்றிக்கொள்ளும் நிலை உருவாகும். ஏனெனில் மனம் ஒரு காரியத்தில் பழகிவிட் டால் அதை விட்டு விலகுவது அதற்குக் கடினம். அதன் பிறகு பாவச் செயலிலிருந்து விடுபடுவது மனிதனுக்குச் சிரமமாகிவிடும். இப்பொழுது எந்தப் பாவத்தில் சிக்கியுள்ளானோ அதைவிடவும் கடுமையான–வேறுபல பெரும் பாவங்களின் வாயிலை ஷைத்தான் அவன் மீது திறந்துவிடுவான்!

இதனால்தான் அறிவில் சிறந்த ஆன்றோரும் சான்றோரும் சொன்னார்கள் : நிச்சயமாக பாவங்கள் குஃப்ர் எனும் இறைநிரா கரிப்பின் அஞ்சல் ஆகும். பாவங்களில் சிக்குண்ட மனிதன், ஒவ்வொரு நிலையாகக் கடந்துவந்து இறுதியில் இறைநெறியை விட்டும் முற்றாக வழிசறுகிப்போகிறான்!– ஈடேற்றமும் இலகுவும் வழங்குமாறு இறைவனை இறைஞ்சுவோமாக!

அல்லாஹ் கட்டளையிட்டுள்ள பாவமன்னிப்பென்பது தூய்மை யான பாவமன்னிப்புத் தேடலாகும்., பாவமன்னிப்பிற்குரிய நிபந்தனை களை உள்ளடக்கியதாகும்! அந்த நிபந்தனைகள் ஐந்து.

☐ முதல் நிபந்தனை, பாவமன்னிப்புக்கோரிக்கை அல்லாஹ்வுக் கென தூய்மையானதாக இருக்க வேண்டும். அல்லாஹ்வின் அன்பு, அவனுக்குக்கண்ணியமளித்தல், அவனதுநற்கூலியை ஆத ரவுவைத்தல் அவனது தண்டனைக்குஅஞ்சுதல் ஆகியன பாவ மன்னிப்புத் தேடுமாறு தூண்டும்காரணிகளாக இருக்கவேண்டும்!

ஆகவே பாவன்னிப்புத் தேடுவதன் மூலம் உலகியல் ஆதா யத்தை நாடக்கூடாது. மனிதர்களிடத்தில் நெருக்கமான அந்தஸ் தையும் எதிர்பார்க்கக்கூடாது! இவற்றை ஒருவன் நாடினால் அவ னது பாவமன்னிப்புக் கோரிக்கை ஒப்புக்கொள்ளப்பட மாட்டாது. ஏனெனில் இப்படிப்பட்டவன் அல்லாஹ்வை நோக்கித் திரும்ப வில்லை., எந்த நோக்கத்தைத் தனது மனதில் கொண்டுள்ளானோ அந்த நோக்கத்தின் பக்கமே திரும்புகிறான்.

☐ இரண்டாவது நிபந்தனை, தான் செய்தபாவத்தைக் குறித் துக் கவலைப்பட்டு மனம் நொந்தவனாக இருக்கவேண்டும். தாம்

இதனைச்செய்யாமல் இருந்திருக்கக்கூடாதாஎன்று ஏக்கம் கொள்ள வேண்டும். எற்காகவெனில், இத்தைகைய மனநோகல்தான் இறை வன் பக்கம் அவனைத் திருப்பச்செய்கிறது. அவனுக்கு முன்னால் பணிவடக்கம் கொள்ளச்செய்கிறது. தீமை செய்யுமாறு தூண்டிய தனது மனத்தின் மீது கோபம் கொள்ளத் தூண்டுகிறது. இப் படிப்பட்ட பாவமன்னிப்புதான் கொள்கைப் பிடிப்புமிக்க மற்றும் உணர்வுப்பூவமான பாவமன்னிப்பாகும்.

□ மூன்றாவது நிபந்தனை, உடனேபாவத்திலிருந்து முற்றாக விலகிவிட வேண்டும் என்பதாகும். ஹராமான – விலக்கப்பட்ட செயலைச் செய்வதான பாவமாக இருந்தால் உடனே அதனை விட்டுவிட வேண்டும். ஒருகடமையை விட்டுவிட்டதான பாவமாக இருந்தால்–அது ஜகாத், ஹஜ் போன்று களா ச் செய்வது சாத்தி யமான கடமையாக இருக்கும் பட்சத்தில், உடனேஅதனை நிறை வேற்றிட வேண்டும்.

பாவத்தை விடாப்பிடியாகச் செய்து கொண்டு பாவமன்னிப்புத் தேடுவது சரியல்ல! எடுத்துக்காட்டாக, ஒருவன் வட்டியிலிருந்து பாவமீட்சி – தௌபா தேடிவிட்டேன் என்று சொல்கிறான். ஆனால் வட்டிக் கொடுக்கல் – வாங்கலில் தொடர்ந்து ஈடுபடுகிறான் என் றால் அவன் பாவமன்னிப்பத் தேடுவது நிறைவேறாது! மாறாக அல்லாஹ்வையும் அவனுடைய வசனங்களையும் கேலிசெய்வதா கவே அது அமையும்! அல்லாஹ்வைவிட்டு மேலும்தூரமாக விலகிச் செல்லும் நிலையைத்தான் அவனுக்கு அது ஏற்படுத்தும்

அந்தப் பாவம், மக்கள் உரிமை தொடர்பானதாக இருந்தால் அந்த உரிமையை வழங்கி அந்தப் பொறுப்பிலிருந்து விடுபடாத வரை அவனது தௌபா– பாவமீட்சி நிறைவேறாது!

பிறருடைய பொருளைக் கொடுக்க மறுத்தோ அல்லது பறித்தோ ஒருவன் பாவம் செய்திருந்தால் அதனை உரிமையாள ரிடம் ஒப்படைக்காதவரையில் அவனது பாவமன்னிப்புத் தேடல் நிறைவேறாது. இது அவர் உயிருடன் இருக்கும் பட்சத்தில்! அவர் இறந்துவிட்டாலோ அவருடைய வாரிசுகளிடம் அதனை ஒப்படைக்காதவரையில் அவனுடைய பாவமன்னிப்புக் கோரிக்கை நிறைவேறாது. அவருக்கு வாரிசுகள் இல்லையெனில் பைத்துல் மால் எனும் முஸ்லிம்களின் பொதுநிதியில் அதனை ஒப்படைத் திட வேண்டும்.

அந்தப்பொருளின் உரிமையாளர் யாரென அறியவில்லையெனில் அவரது பெயரில் அதனைத்தர்மம் செய்திட வேண்டும். அல்லாஹ் அவரை நன்கு அறிவான்.

ஒருமுஸ்லிமைப் பற்றி புறம் பேசிய பாவமாக இருந்தால் அவரிடம் சென்று அதனைப் பொறுத்துக் கொள்ளுமாறு வேண்டுவது கடமையாகும்.அவரைக்குறித்துப் புறம் பேசியதை அவர் அறியாதிருந்தாலோ அது அவருக்குத் தெரிந்து விடுமோ என இவன் அஞ்சினாலோ இப்படிச் செய்யவேண்டும். இல்லையெனில் அவருக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக்கேட்டுப் பிரார்த்தனை செய்யவேண்டும். மேலும் எந்தச்சபையில் அவரைக்குறித்து புறம் பேசினானோ அந்தச் சபையில் அவருடைய நற்பண்புகளை எடுத்துரைத்துப் புகழாரம் சூட்டிட வேண்டும். ஏனெனில் நன்மைகள் தீமைகளைக் களையக் கூடியவையாகும்!

ஒரு பாவத்தில் பிடிவாதமாக இருந்து கொண்டு பறிதொரு பாவத்திலிருந்து மன்னிப்புத் தேடுவது கூடும்! ஏனெனில் அமல்கள் பல கூறுகளாக உள்ளன. மேலும் ஈமான் எனும் விசுவாசமும் ஏற்றதாழ்வுடையதாய்உள்ளது!ஆயினும் இப்படிப்பட்டவன் தௌபாவின் நிறைவான தன்மைக்கும் தகுதி பெறமாட்டான். பொதுவாக பாவமன்னிப்புத் தேடக்கூடியவர்களின் தகுதிக்கும் நற்புகழுக்கும், உயர் அந்தஸ்துக்கும் இவன் தகுதிபெறமாட்டான். எல்லாப்பாவங்களை விட்டும் விலகி அல்லாஹ்வின் பக்கம் மீளாத வரையில்!

☐ நான்காவது நிபந்தனை எதிர் காலத்தில் மீண்டும் பாவம் செய்யாதிருக்க உறுதி கொள்வதாகும். ஏனெனில் இதுதான் பாவமன்னிப்புத்தேடலின் பலனும் அதைமேற்கொள்பவரின் வாய்மைக்கு அடையாளமும் ஆகும்.

ஒருவன் நான் பாவமன்னிப்புத் தேடிவிட்டேன் என்று கூறுகிறான்.ஆனால்என்றாவது ஒருநாள் மீண்டும்பாவம்செய்ய வேண்டும் எனும் உறுதியுடன் இருக்கிறான்.அல்லது பாவத்திலிருந்துவிலகுவதில் தயக்கம் கொள்கிறான் எனில்அவனதுபாவமன்னிப்பும் நிறைவேறாது. ஏனெனில் இந்தப் பாவமன்னிப்புத் தேடல் தற்காலிகமானது. இதில் இந்த நபர் பொருத்தமான சூழ் நிலைகளுக்காகக்காத்திருந்து ஏதோசெய்கிறார்., அவ்வளவுதான்!பாவம் செய்வதைஇவர் வெறுக்கிறார் என்பதையோ அதைவிட்டுவிட்டு அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிவதன் பக்கம் விரைந்து வருகிறார் என்பதையோ இது காட்டாது.

□ ஐந்தாவது நிபந்தனை, தௌபா ஒப்புக்கொள்ளப்படுவதற்குரிய நேரம் முடிவடைவதற்கு முன்பே பாவமன்னிப்புத் தேடுவதாகும். அதற்குப் பிறகு பாவமன்னிப்புத் தேடினால் அது ஒப்புக்கொள்ளப்படமாட்டாது!

ஒப்புக்கொள்வதற்குரிய நேரம் முடிவடைவது, இரண்டுவகையில் உள்ளது. ஒன்று எல்லோருக்கும் பொதுவானது. இரண்டாவது ஒவ்வொருவருக்கும் பிரத்தியேகமானது.

எல்லோருக்கும் பொதுவானது என்பது சூரியன்மேற்கிலிருந்து உதிப்பதாகும்.சூரியன் மேற்கிலிருந்து உதித்துவந்தால்அப்பொழுது பாவமன்னிப்புத் தேடுவது பயன் தராது.

அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي: يوم يأتي بعض آيات ربك لا ينفع نفسا ايمانها لم تكن آمنت من قبل او كسبت في ايمانها خيرا

„ உம் இறைவனின் சான்றுகளில் சிலவெளிப்படும் நாளில் முன்னரே நம்பிக்கை கொள்ளாதவர்க்கும் அல்லதுநம்பிக்கை கொண்டிருந்தும் அதனுடன் யாதொரு நன்மையும் சம்பாதிக்காதவர்க்கும் அவருடைய நம்பிக்கை எவ்விதப் பயனும் அளிக்காது!„ குர்ஆன் ( 6 : 158)

சான்றுகளில் சில என்பது சூரியன் மேற்கிலிருந்து உதயமாவதாகும். இவ்வாறே நபி(ஸல்)அவர்கள் இதற்கு விளக்கம் அளித்துள்ளார்கள்.

அம்ர் பின் ஆஸ்(ரலி)அவர்களின் மகனார் அப்துல்லாஹ்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن عبد الله بن عمرو بن العاص ﷺ ان النبيﷺ قال : لا تزال التوبة تقبل حتي تطلع الشمس من مغربها فاذا طلعت طبع علي كل قلب بما فيه وكفي الناس العمل – قال ابن كثير : حسن الاسناد

„ சூரியன் மேற்கிலிருந்து உதயமாகாத வரையில் தௌபா–பாவமன்னிப்புக் கோரிக்கை தொடர்ந்து ஒப்புக்கொள்ளப்பட்டு வரும். சூரியன் மேற்கிலிருந்து உதயமாகி விட்டால் ஒவ்வொரு (வரின்) உள்ளத்தின் மீதும் – அதில் எது உள்ளதோ அதனுடன் சீல் வைக்கப்பட்டுவிடும்!பிறகு மக்களுக்கு அவரவரின் அமல்கள்தான்

போதுமானதாக இருக்கும்!„-இப்னு கதீர் கூறுகிறார்கள் : இந்நபி மொழியின் அறிவிப்புத் தொடர் ஆதாரப்பூர்வமானதே!„

அபூ ஹுரைரா (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அருளினார்கள் :

عن ابي هريرة ﷺ قال قال رسـول الله ﷺ مـن تـاب قبـل ان تطلـع الشـمس مـن مغربها تاب الله عليه – رواه مسلم

“சூரியன் மேற்கிலிருந்து உதயமாகத் தொடங்கும் முன்னர் யார் யாரெல்லாம் பாவமன்னிப்புக் கோருகிறார்களோ அவர்களின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்„ நூல் : முஸ்லிம்

ஒவ்வொருவருக்கும் குறிப்பானநேரம் என்பதுமரணம் நெருங்கிடும் நேரமாகும். மரணம் நெருங்கிடும்போது-மரணத்தைக் கண்ணெதிரில் காணும்போது பாவமன்னிப்புத்தேடினால் அது அவருக்குப் பயனளிக்காது! அவரிடம் இருந்து அதுஒப்புக் கொள்ளப்படவும் மாட்டாது! அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي: و ليست التوبة للذيـن يعملـون السيئات حـتي اذا حضـر احدهـم الموت قال اني تبت الان

“எவர்கள் தீயசெயல்கள் புரிந்த வண்ணம் இருந்து- மரணம் நெருங்கும்போது நான் இப்பொழுது மன்னிப்புக் கோருகிறேன் என்று கூறுகிறார்களோ அப்படிப்பட்டவர்களுக்குப் பாவமன்னிப்புக் கிடையாது!„ ( 4 : 18)

அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

عن عبد الله بن عمر بن الخطاب ﷺ ان النبي ﷺ قال : ان الله يقبل توبة العبد مـا لم يغرغر

“உயிர் மூச்சு இழுத்துக் கொண்டிருக்கும் (சக்ராத்) நேரம் வரும் முன்னர் அடியான் பாவமன்னிப்புத் தேடுவதைத் திண்ணமாக அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான் „ நூல்: அஹ்மத், திர்மிதி

பாவமன்னிப்புத் தேடல் என்பது-அதன் எல்லா நிபந்தனைகளும் ஒன்றிணைந்து சரியாக அமையும்போது அல்லாஹ் அதனை ஏற்றுக் கொள்கிறான். மேலும் அந்நபர் எந்தப் பாவத்திலிருந்து மன்னிப்புத் தேடினாரோ அந்தப் பாவத்தை – அது எவ்வளவு

பெரிய பாவமாக இருந்தாலும் சரி- அல்லாஹ் அழித்துவிடுகிறான். அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي : يا عبادي الذين اسرفوا علي انفسكم لا تقنطوا من رحمة الله ان الله يغفر الذنوب جميعا انه هو الغفور الرحيم

"(நபியே,) கூறுவீராக: தங்கள் ஆன்மாக்களுக்குக் கொடுமை இழைத்துக் கொண்ட என்னுடைய அடிமைகளே! அல்லாஹ்வின் கருணை குறித்து நம்பிக்கை இழந்து விடாதீர்கள்!திண்ணமாக அல்லாஹ் எல்லாப் பாவங்களையும் மன்னித்து விடுகிறான். அவன் பெரிதும் மன்னிப்பவனாகவும் கருணையாளனாகவும் இருக்கிறான்" ( 39 : 53 )

இந்த வசனம்-பாவமன்னிப்புக் கோரித் தங்கள் இரட்சகனின் பக்கம் மீண்டு, முற்றிலும் அவனுக்குக் கீழ்ப்படிந்து வாழக்கூடிய மக்கள் விஷயத்தில் இறங்கியதாகும். அல்லாஹ் கூறுகிறான் :

قال الله تعالي: ومن يعمل سوء او يظلم نفسه ثم يستغفر الله يجد الله غفورا رحيما

"ஒருவர் தீய செயல் செய்து கொண்டு அல்லது தனக்குத் தானே அநீதி இழைத்துக் கொண்டு பின்னர் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரினால், அல்லாஹ் மன்னிப்பு வழங்கு பவனாகவும் கருணையாளனாகவும் இருப்பதை அவர் காண்பார்".(4 :110)

ஆகவே தூய்மையான பாவமன்னிப்புத் தேடலை விரைந்து செய்து உங்கள் இறைவன் பக்கம் மீளுங்கள்; மரணம் திடீரென உங்களைப்பற்றிக் கொள்வதற்கு முன்பு இதைச்செய்து விடுங்கள். அல்லாஹ் உங்களுக்குஆயுளில் அருள்வளம்புரிவான்! அவ்வாறில்லாது திடீரென மரணம் உங்களைப் பற்றிக் கொண்டால் உங்களால் ஈடேற்றம் பெற இயலாது போய்விடும்!

யா அல்லாஹ்!தூய்மையான மன்னிப்புத்தேடலை மேற்கொள்ள எங்களுக்கு நல்லருள் புரிவாயாக! நாங்கள் முன்னர் செய்த பாவங்களை எல்லாம் அதன் மூலம் மாய்ப்பாயாக! மேலும் இலகுவான தன் பக்கம் செல்ல எங்களுக்கு வழிவகை செய்வாயாக! கடினமானதை விட்டும் எங்களைத் தூரப்படுத்துவாயாக! எங்களுக்கும் எங்கள் பெற்றோருக்கும் அனைத்து முஸ்லிம்களுக்கும் இம்மையிலும் மறுமையிலும் பாவமன்னிப்பு வழங்குவாயாக! கருணையாளர்களிலெல்லாம் கருணைமிக்கோனே உனது கருணைகொண்டு!

المجلس الثلاثون في ختام الشهر

30 வது மஜ்லிஸ்

# ரமளான் நிறைவடையும் போது. . . !

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே!அவன் தயாள குணமுடையவன்., மாண்புமிக்கவன்., கொடை வழங்குபவன்.,பேருபகாரம் புரிபவன்.,பெருங்கருணையாளன்! அவனே ஒவ்வொரு பொருளையும் படைத்து அவை ஒவ்வொன்றின் விதியையும் நிர்ணயித்தான். ஷரீஅத்– சட்டநெறிகளை அருளினான்., அவற்றை எளிமையாக்கவும் செய்தான்.அவன் நுண்ணறிவுடையவன்!யாவும்அறிந்தவன்.அவனே படைப்புகளை முதன்முறையாகப் படைத்தான்.அவனே அவற்றை இறுதியிலும் படைப்பான்! கோளங்களை இயக்கி அவற்றை ஓடச் செய்தான்.

,,சூரியன் (இறைவனின் வல்லமைக்கான பிறிதொரு சான்றாகும்) அது தனக்குரிய இடத்தை நோக்கி ஓடிக்கொண்டிருக்கிறது. இது, பேரறிவுடையவனும் வல்லமைமிக்கவனுமான இறைவனின் நிர்ணயமாகும். சந்திரனும் (இன்னொரு சான்றாகும்) அதற்கு நாம் பல்வேறு நிலைகளை ஏற்படுத்தியுள்ளோம். எதுவரையெனில், அது (அவற்றையெல்லாம் கடந்து) உலர்ந்து– வளைந்துபோன பேரீச்சங்காம்புபோல் மீண்டும் ஆகிவிடுகிறது! சூரியன் சந்திரனை சென்றடைய முடியாது., மேலும் இரவு பகலை முந்திவிட முடியாது. ஒவ்வொன்றும் தத்தம் சுற்றுவட்டங்களில் நீந்திக் கொண்டிருக்கின்றன!,, அல்குர்ஆன் (36 :38 – 40)

பேருபகாரத்துடன் நேர்வழி காட்டியதற்காக அவனை நான் புகழ்கிறேன். எண்ணற்ற அருட்கொடைகளை வழங்கியதற்காக அவனுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்!

திண்ணமாக வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என்று சாட்சி சொல்கிறேன்.அவன் அரசன்., உயர்ந்தவன்., உன்னதமானவன்! ஆதியும் அவனே., அவனுக்கு முன்பு எதுவுமில்லை! அந்தமும் அவனே., எல்லாவும் அழிந்த பின்பு அவன் மட்டும் எஞ்சியிருப்பான்! அவனே வெளிரங்கமா

னவன்., எதுவும் அவனை மிகைத்ததல்ல! அவனே அந்தரங்கமா னவன்.,அவனுக்கு அப்பால் எதுவும் இல்லை!அவனே ஒவ்வொரு பொருளையும் நன்கு அறிந்தவன்!

முஹம்மத் நபி, அல்லாஹ்வின் அடிமையும் தூதரும் ஆவார் கள் என்றும் சாட்சி சொல்கிறேன். அவர்கள்தாம் இறைத்தூதர்கள் அனைவரினும் சிறப்பு வழங்கப்பட்டுத் தேர்வு செய்யப்பட்டவர்கள்!

நபியவர்கள் மீது அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! உண் மைப்படத்தக்கூடிய உண்மையாளர்கள் அனைவரினும் சிறந்தவ ரான நபித்தோழர் அபூ பக்ர் மீதும் – இறைமார்க்கத்தில் வலிமை மிக்கவர் என்று புகழப்பட்ட உமர் மீதும் – பாவிகளின் கரத்தால் அநியாயமாகக் கொலையுண்ட உஸ்மான் மீதும் – நபியவர்களின் நெருங்கிய உறவினராகத் திகழ்ந்த அலீ மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! நபியவர்களின் குடும்பத்தினர்– தோழர்கள் –அவர்களை வாய்மையுடன் பின்பற்றிவந்தவர்கள் அனைவர் மீதும்–மறுமை நாள் வரையிலும் அல்லாஹ் ஸலவாத் பொழிவா னாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

சகோதரர்களே! திண்ணமாக ரமளான் மாதம் நம்மிடமிருந்து விடைபெறும் காலம் சமீபமாகி விட்டது. அது திரும்பிச் செல் லும் நேரம் நெருங்கிவிட்டது!

திண்ணமாக இந்த மாதம் –அதில் நீங்கள் செய்தஅமல்களின் அடிப்படையில்–உங்களுக்கு சாதகமானவோ பாதகமாகவோ சாட்சி சொல்லக்கூடியதாக உள்ளது!எவர் இந்தமாதத்தில் நல்லஅமல்கள் செய்தாரோ அவர் அதன்பேரில் அல்லாஹ்வைப்புகழட்டும். அழகிய நற்கூலியைப் பெறுவது கொண்டு மகிழ்வு பெறட்டும்!எவர் இந்த மாதத்தில் தீயசெயல்கள் செய்தாரோ அவர் தூய்மையான பாவ மீட்சியாக பாவமீட்சி தேடித் தன் இறைவனின் பக்கம் மீளட்டும்! பாவமன்னிப்புத்தேடுபவரின் பாவமன்னிப்புக்கோரிக்கையை அல்லாஹ் ஏற்று அவர் மீது மீண்டும் கருணை பொழிகிறான்!

திண்ணமாக அல்லாஹ்,இந்தமாதத்தின் இறுதியில்சிலவணக்க வழிபாடுகளை உங்களுக்கு வகுத்துத் தந்துள்ளான். அவை, அல்லாஹ்வின் பக்கம் உங்களுக்கு அதிக நெருக்கத்தை ஏற்படுத் தித்தரும்.! உங்களது இறைநம்பிக்கையில் அதிக வலிமையைக் கொடுக்கும். மேலும் உங்களது வினைச்சுவடியில் அதி அளவு நன்மைகளைப் பதிவு செய்யும்!

ஜகாதுல் ஃபித்ர் எனும் பெருநாள் சிறப்புதர்மத்தை அல்லாஹ் உங்களுக்கு வகுத்துத்தந்துள்ளது பற்றி முன்னர் நாம் விரிவாகக் குறிப்பிட்டுள்ளோம். மேலும் இம்மாதம் நிறைவடையும் போது – சூரியன் மறைந்து பெருநாள் இரவு தொடங்கியது முதல்– பெரு நாள் அன்று அஸர் தொழுகைவரை தக்பீர் சொல்லும் முறையை அல்லாஹ் உங்களுக்குவகுத்தளித்துள்ளான்! அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى: و لتكملوا العدة و لتكبروا الله على ما هديكم و لعلكم تشكرون

“(நோன்பின்) எண்ணிக்கையை நீங்கள் நிறைவாக்குவதற் காகவும் அல்லாஹ் உங்களை நேரிய வழியில் செலுத்தியதன் பொருட்டு நீங்கள் அல்லாஹு அக்பர் (அல்லாஹ் பெரியவன்) எனக் கூறி அவனது மேன்மையைப் போற்றுவதற்காகவும்தான் (இவ்வழி உங்களுக்குக் காண்பிக்கப் படுகிறது) மேலும் நீங்கள் நன்றி செலுத்துவோராயும் ஆகலாம்!„ (2 : 185)

இந்த தக்பீரை இவ்வாறு முழங்க வேண்டும் :

الله اكبر , الله اكبر , لااله الا الله و الله اكبر , الله اكبر و لله الحمد

பொருள் : அல்லாஹ் மிகப் பெரியவன்., அல்லாஹ் மிகப்பெரி யவன்.,வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இல்லை.அல்லாஹ் மிகப்பெரியவன்,அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும்

ஆண்கள் உரத்த குரலில் தக்பீர் சொல்வது ஸுன்னத்– நபி வழியாகும்.மஸ்ஜித்களிலும் வீதிகளிலும் வீடுகளிலும்தக்பீர் முழங்க வேண்டும். இதன் நோக்கம், அல்லாஹ்வின் கண்ணியத்தைப் பிர கடனப்படுத்துவதாகும்.அவனுக்கு வழிபாடு செய்வதையும் நன்றி செலுத்துவதையும் பகிரங்கப்படுத்துவதுமாகும்.

பெண்கள் இந்த தக்பீரை மெதுவாகச்சொல்ல வேண்டும். ஏனெனில் பர்தா அணிந்து உடலை மறைத்துக் கொள்ளும் படியும் குரலைத் தாழ்த்தும் படியும் அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது.

இம்மாதம் நிறைவடைந்தபோது அல்லாஹ்வைக் கண்ணி யப்படுத்துவதற்காகவும் கௌரவிப்பதற்காகவும் எல்லா இடங்களி லும் மக்கள் தக்பீர் முழங்கும் நிலை எவ்வளவு அழகானது!

அல்லாஹு அக்பர்
(அல்லாஹ் பெரியவன்)
அல்ஹமது லில்லாஹ்

(அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்)
லா இலாஹ இல்லல்லாஹ்
(வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத்தவிர வேறில்லை)

என்றெல்லாம் மக்கள் முழங்கும் முழக்கம் இதோ! வான் வெளிகள் எங்கும் நிறைந்து எதிரொலிக்கிறது! அப்பொழுது அவர்களின் உள்ளம் அல்லாஹ்வின் கருணையை எதிர்பார்க்கிறது., அவனது தண்டனைக்கு அஞ்சுகிறது!

பெருநாள் தினத்தன்று அல்லாஹ் தன்னுடைய அடியார்களுக்குப் பெருநாள்த் தொழுகையை விதித்துள்ளான். அது அல்லாஹ்வை நினைவு கூர்வதன் பூரணநிலையாகும்! நபி (ஸல்) அவர்கள் பெருநாள்த் தொழுகையை நிறைவேற்றுமாறு—தம் சமுதாயத்தில் ஆண்கள் பெண்கள் அனைவருக்கும் கட்டளையிட்டார்கள். அவர்களது கட்டளைக்குக் கீழ்ப்படிவது அவசியம். ஏனெனில் அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளான் :

لقوله تعالى: يا ايها الذين آمنوا اطيعوا الله و اطيعوا الرسول و لاتبطلوا اعمالكم

“இறைநம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியுங்கள். அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். உங்களுடைய செயல்களை வீணாக்கிவிடாதீர்கள்! (47 : 33)

நபி (ஸல்) அவர்கள் பெருநாள்த் தொழுகையில் பெண்கள் கலந்து கொள்ளவேண்டுமெனக் கட்டளையிட்டார்கள்., பெருநாள்த் தொழுகை அல்லாத வேறு தொழுகைகளை வீடுகளில் தொழுவதே பெண்களுக்குச் சிறந்தது என்பதுடனே! – இந்தக் கட்டளையானது பெருநாள்த் தொழுகை கட்டாயமானது என்பதற்கு ஆதாரமாகும்.

உம்மு அதிய்யா (ரலி) என்கிற பெண்மணி அறிவித்துள்ளார்கள்:«நோன்புப் பெருநாள்த் தொழுகையிலும் ஹஜ்ஜுப் பெருநாய்த் தொழுகையிலும் கலந்து கொள்வதற்காகப் பெண்களை (வீடுகளிலிருந்து) வெளியே அழைத்துவருமாறு நபி(ஸல்)அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். குடும்பப் பெண்கள், மாதவிடாய்ப் பெண்கள், குமரிப்பெண்கள் அனைவரையும் அழைத்துவருமாறு (கட்டளையிட்டார்கள்) மாதவிடாய்ப் பெண்களோ தொழுமிடங்களை விட்டும் விலகி நிற்பார்கள்! ஆனால் நற்காரியங்களிலும் முஸ்லிம்களின் துஆ (பிரார்த்தனை) களிலும் கலந்த கொள்வார்

கள்!-நான் கேட்டேன்: 'அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருத்திக்கு ஜில்பாப் (துப்பட்டி) இல்லாமலிருக்கலாமே?' அதற்கு நபி (ஸல்)அவர்கள் சொன்னார்கள்: அவளுடைய சகோதரி தனது துப்பட்டியை அவளுக்குஅணிவிக்கட்டும்,, நூல்: புகாரி, முஸ்லிம்

-ஜில்பாப் என்பது பெண்கள் தங்கள் உடலை மூடிக்கொள்கிற முழுநீள அங்கி-பர்தா போன்ற ஓர் ஆடையாகும்.

நோன்புப் பெருநாள் அன்று தொழுகைக்குப் புறப்படுவதற்கு முன்பு பேரீத்தம் பழங்களை ஒற்றைப்படையாக உண்பது ஸூன்னத் - நபிவழியாகும். மூன்றாக, ஐந்தாக அல்லது அதைவிட அதிகமானாலும் அவற்றை ஒற்றை எண்ணாக அமைத்து உண்ண வேண்டும்.

ஏனெனில் அனஸ்(ரலி)அவர்கள் அறிவித்துள்ளார்கள்: நபி(ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாள் அன்று பேரீத்தம் பழங் களை உண்ணாமல் வெளியே புறப்படமாட்டார்கள். அ வற்றை ஒற்றைப்படையக் கணக்கில் உண்பார்கள். ,, நூல்: முஸ்னத் அஹ்மத், புகாரி

பெருநாள்த் தொழுகைக்குச் செல்பவர் வாகனத்தில் போகாமல் நடந்தே செல்ல வேண்டும். நடக்க இயலாமை, தொழும் இடம் தூரமாக இருப்பது போன்ற காரணம் இருந்தாலே தவிர! ஏனெனில் அலீ (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள் :,,பெருநாள்த் தொழுகைக்கு நடந்து செல்வது ஸூன்னத் - நபிவழியாகும்,, நூல் : திர்மிதி - அவர்கள் சொன்னார்கள்: இது ஹஸன் தரத்திலானது.[67]

அழகிய ஆடை அணிவதும் அழகுபடுத்திக் கொள்வதும் ஆண்களுக்கு ஸூன்னத் - நபிவழியாகும். ஏனெனில் உமர் (ர்லி) அவர்கள் கடைத்தெருவில் விற்கப்பட்ட பட்டு ஜுப்பா ஒன்றை வாங்கி அதனை நபியவர்களிடம் கொண்டு வந்தார்கள். அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் இதனை விலைக்கு வாங்குங்கள். பெருநாளைக்கும் தூதுக்குழுவினர் வரும்போதும் இதனை நீங்கள் அணிந்து உங்களை அழகுபடுத்திக் கொள்ளலாம்,, என்று சொன்னார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : எவருக்கு

67 இதன் அறிவிப்பாளர் வரிசையில் ஒற்றைக்கண்ணரான ஹாரிஸ் உள்ளார். ஹதீஸ் கலையில் ஹாபிழ்களாக உள்ளோரில் பெரும்பாலோர் இவரைப் பலவீனப்படுத்தியுள்ளார்கள். அவர்களில் சிலரே இவரை நம்பகத்தன்மையுடையவர் என்று சொல்லியுள்ளனர்.

மறுமைப் பாக்கியம் இல்லையோ அவரது ஆடையாயிற்றே இது!„

– இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் சொன்னதன் காரணம் அது பட்டுத்துணி என்பதே! பட்டாடை அல்லது தங்கத்தினாலான ஆடை எதனையும் ஆண்கள் அணியக்கூடாது. ஏனெனில் இவ்விரண்டும் முஹம்மத் நபி (ஸல்) அவர்களின் சமுதாயத்தில் ஆண்களுக்கு ஹராம் – விலக்கப்பட்டவையாகும்.

ஆனால் பெண்களைப் பொறுத்தவரையில் பெருநாள்த் தொழுகைக்கு அவர்கள் எவ்வாறு செல்லவேண்டுமெனில், நறுமணம் பூசாமல், அலங்காரம் செய்யாமல், ஒப்பனையையும் ஒய்யாரத்தையும் காட்டிக் கொள்ளாமல், முகத்தை மறைத்துக் கொண்டு செல்ல வேண்டும். ஏனெனில் பர்தா அணியுமாறு அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. ஒப்பனையையும் ஒய்யாரத்ததையும் காட்டிக் கொண்டு வீதியில் திரியக்கூடாதென்றும் நறுமணம் பூசக்கூடாதென்றும் அவர்களுக்குத் தடைவித்க்கப்பட்டுள்ளது!

தொழுகைக்காகப் பள்ளிவாசல் மைதானத்தில் திரண்டிருக்கும் மக்கள் கூட்டத்தைக் கண்டு அவன் எதை நினைத்துப் பார்க்க வேண்டுமெனில், மறுமை நாளில் மஹ்ஷர் மைதானத்தில் மக்கள் அனைவரும் அல்லாஹ்வின் முன்னிலையில் – அவனது உயர் சமூகத்தில் ஒன்றுதிரண்டிருப்பதை நினைத்துப் பார்க்கவேண்டும். இந்தப் பொருநாள் கூட்டத்தில் மக்களுக்கு மத்தியிலுள்ள வேறுபாடுகளை அவன் காண்கிறான். இதன் மூலம்–நாளை மறுமையின் பெரிய அளவிலான வித்தியாசத்தை அவன் நினைத்துப் பார்க்க வேண்டும்.

قال الله تعالي: انظر كيف فضلنا بعضهم علي بعض و للاخرة اكبر درجـات واكـبر تفضيلا

அல்லாஹ் கூறுகிறான்:„அவர்களில் சிலருக்கு வேறு சிலரை விட எவ்வாறு நாம் சிறப்பு அளித்துள்ளோம் என்பதைப் பார்ப்பீராக! மேலும் மறுவுலகம்தான் அந்தஸ்துகளாலும் பெரியது„ சிறப்பளிப்பதிலும் பெரியது„ (17 : 21 )

மேலும் இந்த ரமளான் மாதத்தை அடைந்து அதில் தொழுகை, நோன்பு மற்றும் (குர்ஆன்) ஓதுதல், தர்மம் செய்தல் போன்ற இலகுவான வணக்கவழிபாடுகளைச் செய்திட அல்லாஹ் அவனுக்கு அருள்புரிந்துள்ளதைக் குறித்து அவன் மகிழ்ச்சி

அடைய வேண்டும். திண்ணமாக இது உலகை விடவும் அதிலுள்ள அனைத்தைவிடவும் சிறந்ததாகும்!

قل بفضل ابيه و برحمته فبذلك فليفرحوا هو خير مما يجمعون

(நபியே!) கூறுவீராக :"அல்லாஹ் அளித்த சிறப்பையும் அவனது அருளையும் கொண்டே அவர்கள் மகிழ்வடைந்திட வேண்டும். இது அவர்கள் திரட்டிக் கொண்டிருக்கும் (உலகத்துச்) செலவங்களைவிடவும் சிறந்ததாகும்!" (10 : 58)

(உறுதியான) ஈமானுடனும் மறுமைக் கூலியை எதிர்பார்த்தும் ரமளானில் நோன்பு நோற்பதும் தொழுவதும் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்குரிய – குற்றங்களிலிருந்து விடுபடுவதற்குரிய காரணிகளாய் உள்ளன என்பதில் ஐயமில்லை!

ஓர் இறைநம்பிக்கையாளன் நோன்பையும் தொழுகையையும் நிறைவு படுத்தியது குறித்து மகிழ்வடைகிறானெனில் அது, குற்றங்களிலிருந்து அவன் விடுபடுகிறான் எனும் அடிப்படையிலாகும்.

ஆனால் பலவீனமான ஈமான் உடையவன்–நோன்பைப் பூர்த்தியாக்கியது குறித்து மகிழ்வடைகிறானெனில் அதன் காரணம் வேறு! அவன் மீது நோன்பு பாரமாகவும் மனதுக்குக் கஷ்டமாகவும் இருந்தது, இப்போது அதிலிருந்து அவன் விடுபட்டுவிட்டதால் மகிழ்ச்சி அடைகிறான்! இருண்டு மகிழ்ச்சிகளுக்கும் இடையே பெரிய வித்தியாசம் உள்ளது!

சகோதரர்களே! திண்ணமாக ரமளான் மாதம் முடிவடைந்து விட்டாலும் இறைவிசுவாசியின் அமல்கள் மரணம் வரையிலும் தொடர்கிறன்றன, அதற்கு முன் முடிவடைவதில்லை!

قال تعالي: و اعبد ربك حتي يأتيك اليقين

அல்லாஹ் கூறுகிறான் : "மரணம் உமக்கு வரும்வரை உம் இறைவனை வணங்கிவழிபடுவீராக!" (51 : 99)

வேறோர் இடத்தில்,

قال الله عز وجل : يا ايها الذين آمنوا اتقوا الله حق تقاته ولا تموتن الا و انتم مسلمون

" இறைநம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்ச வேண்டிய முறைப்படி அஞ்சுங்கள். மேலும் முஸ்லிம்ளாக இருக்கும் நிலையிலன்றி மரணம்அடைந்திட வேண்டாம்!",(3:102)

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மனிதன் இறந்து விட்டால் அவனுடைய அமல்கள் அனைத்தும் முடிந்து போய்விடுகின்றன. . . . . „ அமல்கள் முடிவடைவதற்கு மரணத்தைத் தவிர பிறதோர் எல்லையை நபி (ஸல்) அவர்கள் நிர்ணயிக்க வில்லை!

எனவே ரமளான் மாதம் சென்றுவிட்டால் நோன்பு எனும் வழிபாட்டை விட்டு ஓர் இறைநம்பிக்கையாளன் தொடர்பற்றுப் போக மாட்டான்! நோன்பு என்பது ஆண்டு முழுவதும் நடைமுறையில் இருந்துவரும் வழிபாடேயாகும். – அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்!

அபூ அய்யூப் – அல் அன்ஸாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:„எவர் ரமளான் மாதம் நோன்பு நோற்று பிறகு தொடர்ந்து ஷவ்வால் மாதம் ஆறு நாட்கள் நோன்பு நோற்றாரோ அவர் காலம் முழுவதும் நோன்பு நோற்றவர்போல் ஆகிறார்! „ நூல் : முஸ்லிம்

ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பது குறித்து நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறினார்கள் : ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பதும் ரமளானோடு ரமளான் நோன்பு நோற்றுவருவதும் காலமெல்லாம் நோன்பிருப்பதாகும்!„ நூல் : முஸ்னத் அஹ்மத், முஸ்லிம்

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :

قال ابو هريرة ﷺ اوصاني خليلي ﷺ بثلاث و ذكر منها صيام ثلاثة ايام من كل شهر

“என் உயிர் நேசரான நபி (ஸல்) அவர்கள் மூன்று வஷயங்களைக் கொண்டு எனக்கு அறிவுரை பகர்ந்தார்கள்„ அவற்றில் ஒன்றாக – ஒவ்வொரு மாதமும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பதைக் குறிப்பிட்டார்கள்!„

– அந்த மூன்று நாட்களும் அய்யாமுல் பீழ் எனும் நிலவுடைய நாட்களாய் இருப்பது சிறந்தது. அவைதாம் பிறை பதிமூன்று பதினான்கு பதினைந்து ஆகிய நாட்களாகும். ஏனெனில் அபூ தர்ரு (ரலி) அவர்கள் கூறினார்கள் :

لحديث ابي ذر ﷺ ان النبي ﷺ قال يا ابا ذر اذا صمت من الشهر فصم ثلاث عشرة و اربع عشرة و خمس عشرة – رواه احمد و النسا ئي

"அபூ தர்ரே! மாதத்தில் மூன்று நாட்கள் நீர் நோன்பு நோற்பீராயின் பதிமூன்று, பதினான்கு, பதினைந்து ஆகிய நாட்களில் நோன்பு நோற்பீராக!„ நூல் : முஸ்னத் அஹ்மத், நஸாயி[68]

அர∴பா நாளில் நோன்பு நோற்பது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்டப்பட்டது. அதற்கு அவர்கள் சொன்னார்கள் : "அது சென்ற மற்றும் நிகழ் ஆண்டுகளின் பாவங்களுக்குப் பரிகாரமாக அமைகிறது„ நூல் : முஸ்லிம்

முஹர்ரம் மாதத்தில் 10 ஆம் நாளின் நோன்பு பற்றி கேட்கப் பட்டது„ அதற்கு அவர்கள் சொன்னார்கள் : அது சென்ற ஆண்டின் பாவங்களுக்குப் பரிகாரமாக ஆகிறது„ நூல் : முஸ்லிம்

மேலும் திங்கள் கிழமையில் நோன்பு நோற்பது பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்குச் சொன்னார்கள் : அது எத்தகைய நாளெனில் அன்றுதான் நான் பிறந்தேன். அன்று தான் என் மீது வஹீ-எனும் இறையருட்செய்தி இறக்கப்பட்டது„ நூல் : முஸ்லிம்

في صحيح مسلم ايضا عن ابي هريرة ﷺ ان النبي ﷺ سئل أي الصيام افضل بعد شهر رمضان ؟ قال : افضل الصيام بعد رمضان شهر الله المحرم

அபூ ஹுரைரைா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது : ரமளான் மாதத்திற்குப் பிறகு எது சிறந்த நோன்பு? அதற்கு நபியவர்கள் சொன்னார்கள் : ரமளான் மாதத்திற்குப் பிறகு சிறந்த நோன்பு முஹர்ரம் மாதத்தின் நோன்பு„ நூல் : முஸ்லிம்

في الصحيحين عن عائشة رضي الله عنها قالت: ما رأيت النبي ﷺ استكمل شهرا قط الا شهر رمضان و ما رأيته في شهر اكثر صياما منه في شعبان وفي لفظ كان يصومه الا قليلا

ஆயிஷா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்:எந்தமாத்திலும் முழு மாதமும் நோன்பு நோற்பவர்களாய் நபி (ஸல்) அவர்களை நான் கண்டதில்லை„ ரமளான் மாதத்திலே தவிர! எந்த மாதத்திலும் –

---

68 இப்னு ஹிப்பான் அவர்களும் இதனை அறிவித்துள்ளார்கள். ஸஹீஹ் தரத்திலானது என்றும் சொல்லியுள்ளார்கள். மேலும் பலஅறிவிப்புச் சாள்றுகளும் இதற்குண்டு„ அவற்றின் மூலம் இது வலிமை பெறுகிறது!

பெரும்பாலான நாட்களில் நோன்பு நோற்பவர்களாய் அவர்களை நான் கண்டதில்லை„ஷஅபான் மாதத்திலே தவிர!„ மற்றோர் அறி விப்பில்–ஷஅபான் மாதத்தில் ஒருசில நாட்களைத்தவிர பெரும்பா லான நாட்களில் நோன்பு நோற்பவர்களாய் இருந்தார்கள் நபி(ஸல்) அவர்கள்„ நூல்: புகாரி, முஸ்லிம்

மேலும் ஆயிஷா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் திங்கள் கிழமைகளின் நோன்பை எதிர்பார்த்துத் தேடிப் பெறுபவர்களாய் இருந்தார்கள்„நூல்: திர்மிதி, நஸாஈ,இப்னு மாஜா, முஸ்னத் அஹ்மத்– அபூ தாவூதில் இந்த ஹதீஸ், உஸாமா பின் ஜைத் (ரலி) அவர்களின் அறிவிப்பாக பதிவுசெய்யப்பட்டுள்ளது.

மேலும் அபூ ஹுரைரா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்)அவர்கள்கூறினார்கள்: திங்கள் மற்றும் வியாழக்கிழமைகளில் (இறைவனின் முன்னால் அமல்கள் எடுத்துக் காட்டப்படுகின்றன. நான் நோன்பாளியாக இருக்கும் நிலையில் என்னுடைய அமல்கள் எடுத்துக் காட்டப்பட வேண்டுமென நான் விரும்புகிறேன்„நூல் : திர்மிதி[69]

ரமளான் மாத இரவின் சிறப்புத் தொழுகை முடிந்து விட்டா லும் திண்ணமாக இரவுத்தொழுகை என்பது ஆண்டு முழுவதும் ஒவ்வோர் இரவிலும் கடைப்பிடிக்க வேண்டிய தீனின் – இறை மார்க்கத்தின் நடைமுறையாக இருந்துவருகிறது.நபி(ஸல்) அவர் களின் சொல், செயல் மூலம் உறுதிசெய்யப்பட்டதாக உள்ளது.

في صحيح البخاري عن المغيرة بن شعبة ﷺ قال : ان كان النبي ﷺ ليقوم او ليصلي حتى ترم قدماه فيقال له فيقول : افلا اكون عبدا شكورا

முகீரா பின்ஷுஅபா(ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்: திண்ண மாக நபி (ஸல்) அவர்கள் தங்களின் இரு பாதங்களும் வீங்குகிற அளவுக்கு தொழுது கொண்டிருப்பார்கள் (மற்றோர் அறிவிப்பில்) இரவில் தொழுது கொண்டிருப்பார்கள் (என உள்ளது) அது குறித்து அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் சொன்

---

69 இது பலீனமான ஹதீஸ். ஆனாலும் இதற்கு வலிமை கூட்டுகிற அறிவிப்புச் சான்று இதற்குண்டு„ ஸஹீஹ் முஸ்லிமில் பதிவாகியுள்ளது : திங்கள் மற்றும் வியாழக்கிழமை தோறும் அமல்கள் (இறைவன் முன்னிலையில்) எடுத்துக் காட்டப்படுகின்றன„

னார்கள்:நான் நன்றி செலுத்துகிறஅடியானாக இருக்கவேண்டாமா? நூல் : புகாரி

عن عبد الله ين سلام ﷺ ان النبي ﷺ قال : ايها الناس افشوا السلام و اطعموا الطعام و صلوا بالليل و الناس نيام تدخلوا الجنة بسلام

அப்துல்லாஹ் பின் ஸலாம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : «மனிதர்களே! ஸலாம் சொல்லும் வழக்கத்தைப் பரவலாக்குங்கள்„ உணவு வழங்குங்கள். இரத்த பந்துக்களுடன் இணைந்து வாழுங்கள்„ இரவில்–மக்கள் தூங்கிக் கொண்டிருக்கும்போது நீங்கள் தொழுங்கள்„ (இவ்வாறு செய்வீர்களாயின்) நீங்கள் நிம்மதியாக சுவனம் புகுவீர்கள்!„நூல் : திர்மிதி–அவர்கள் ஹஸன் ஸஹீஹ் தரத்திலானது என்று சொல்லியுள்ளார்கள்.[70]

في صحيح مسلم عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : افضل الصلاة بعد الفريضة صلاة الليل

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் : நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:«கடமையான தொழுகைக்குப் பிறகு சிறப்பு மிக்க தொழுகை இரவுத் தொழுகையாகும்„ நூல் : முஸ்லிம்

– இரவுத் தொழுகை என்பது வித்ருத் தொழுகை உள்பட நஃபிலான அனைத்துத் தொழுகைளையும் உள்ளடக்கும். இரண்டிரண்டு ரக்அத்தாக தொழுகொண்டிருக்க வேண்டும். அதிகாலை உதய மாகிவிடுமோ என அஞ்சினால் ஒரு ரக்அத் தொழ வேண்டும். அதுவரை தொழுத அனைத்துத் தொழுகைளையும் அது ஒற்றைப் படையாக்கிவிடும். விரும்பினால் – முன்னர் நான்காவது மஜ்லிஸில் விளக்கப்பட்ட முறைப்படியும் தொழலாம்.

في الصحيحين عن ابي هريرة ﷺ ان النبي ﷺ قال : ينزل ربنا تبارك و تعالي الى السماء الدنيا حين يبقي ثلث الليل فيقول : من يدعوني فأستجيب له ؟ من يسألني فأعطيه ؟ من يستغفرني فأغفر له ؟

[70] இமாம் அஹ்மத் அவர்களும் இதனை அறிவித்துள்ளார்கள். பலஅறிவிப்புச் சான்றுகளும் இதற்குண்டு. அவற்றின் மூலம் ஸஹீஹின் தரத்தை இது எட்டுகிறது!

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:"அருட்பாக்கியமும் உயர்வும் உடைய நம்முடைய இரட்சகன் ஒவ்வொரு இரவிலும் – இரவின் மூன்றின் ஒருபகுதி நேரம் எஞ்சியிருக்கும்போது – உலகத்து வானத்திற்கு இறங்கிவருகிறான்.,இவ்வாறு கூறுகிறான்: என்னிடம் பிரார்த்தனை செய்பவர் யாரேனும் உண்டா? நான் அவரது பிர்த்தனையை ஏற்றுக் கொள்ள இருக்கிறேன்! என்னிடம் யாசிப்பவர் எவரேனும் உண்டா? நான் அவருக்குக் வழங்க இருக்கிறேன்! என்னிடம் பாவமன்னிப்பு கோருபவர் எவரேனும் உண்டா? நான் அவரை மன்னிக்க இருக்கிறேன்! „ நூல் : புகாரி, முஸ்லிம்

கடமையான தொழுகைகளுக்கு முன்பும் பின்பும் நிறைவேற்றப்படுகிற 'றவாதிப்' எனும் ஸுன்னத் தொழுகைகள் பன்னிரண்டு ரக்அத்களாகும். ளுஹர் தொழுகைக்கு முன்பு நான்கு., அதற்குப் பின்பு இரண்டு., மஃரிப் தொழுகைக்குப் பின்பு இரண்டு., இஷா தொழுகைக்குப் பின்பு இரண்டு., ஸுப்ஹு தொழுகைக்கு முன்பு இரண்டு!

عن ام حبيبة رضي الله عنها قالت : سمعت النبيﷺ يقول : ما من عبد مسلم يصلي لله تعالي كل يوم ثنتي عشرة ركعة تطوعا غير فريضة الا بني الله له بيتا في الجنة وفي لفظ من صلي ثنتي عشرة ركعة في كل يوم و ليلة بني له بهن بيت في الجنة – رواه مسلم

உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறிட நான் கேட்டேன் :"முஸ்லிமான ஓர் அடியான் கடமையான தொழுகை நீங்கலாக ஸுன்னத்தான பன்னிரண்டு ரக்அத்களைத் தினமும் அல்லாஹ்வுக்காகத் தொழுது வந்தால் அல்லாஹ் அவனுக்கு சுவனத்தில் ஓர் இல்லம் கட்டித் தரச் செய்வான்„ நூல்: முஸ்லிம்– மற்றோர் அறிவிப்பில், தினமும் யார் பன்னிரண்டு ரக்அத்கள் தொழுது வருகிறாரோ அவருக்கு அந்தத் தொழுகைகளின் பயனாக சுவத்தில் ஓர் இல்லம் கட்டப் படுகிறது„ என உள்ளது.

கடமையான ஐங்காலத் தொழுகைளுக்குப் பின்னால் திக்ர் (இறைவனைத் துதி) செய்யுமாறு அல்லாஹ்வும் குர்ஆனில் கட்டளையிட்டுள்ளான். நபி(ஸல்)அவர்களும் அதற்கு ஆர்வமூட்டியுள்ளார்கள்.

قال الله تعالي : فاذا قضيتم الصلاة فاذكروا الله قياما و قعودا و علي جنوبكم

“நீங்கள் தொழுகையை நிறைவேற்றிவிட்டால் நிற்கும் நிலையிலும் உட்கார்ந்திருக்கும் நிலையிலும் படுத்திருக்கும் நிலையிலும் அல்லாஹ்வை நினைவு கூருங்கள்,, குர்ஆன் ( 4 : 103)

நபி (ஸல்) அவர்கள் (தொழுகையில்) ஸலாம் கொடுத்தார்களெனில் மூன்று தடவை பாவமன்னிப்புக் கோருவார்கள். பிறகு தொடர்ந்து அவர்கள் சொல்வார்கள் :

اللهم انت السلام و منك السلام تباركت يا ذا الجلال و الاكرام

(யா அல்லாஹ்! நீ ஈடேற்றம் அளிப்பவன்! உன்னிடம் இருந்தே ஈடேற்றம் உண்டாகிறது. கண்ணியமும் மாண்பும் உடையவனே! நீயே அருட்பேறுகள் உடையவன்,,)

மேலும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் : எவர் ஒவ்வொரு தொழுகைக்குப் பறகும் 33 தடவை ஸுப்ஹானல்லாஹ்( அல்லாஹ்வைத் தூயவன் என்று துதிக்கிறேன் ) என்றும் 33 தடவை அல்ஹம்து லில்லாஹ் (அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்றும் 33 தடவை அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்றும் சொன்னாரோ - இவை 99 தடவைகளாகும் - பிறகு 100 ஆக நிறைவுபடுத்தி -

لا اله الا الله وحده لا شريك له له الملك وله الحمد وهو علي كل شيئ قدير

(வணக்கதிற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர யாரும் இல்லை., அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையும் இல்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரியதே. புகழ் அனைத்தும் அவனுக்கே. அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் கொண்டவன்)

- என்றும் யார் ஓதினாரோ அவருடைய தவறுகள் அனைத்தும் மன்னிக்கப்படுகின்றன., அவை கடலின் நுரை அளவுக்கு இருந்தாலும் சரியே! ,, நூல் : முஸ்லிம்

சகோதரர்களே! வழிபாடுகளை நிறைவேற்றுவதில் நன்முயற்சி செய்யுங்கள். தவறுகளையும் தீமைகளையும் தவிர்த்து விடுங்கள். அப்படிச் செய்தால் இவ்வுலகில் தூயவாழ்வையும் மரணத்திற்குப் பிறகு அதிகமான கூலியையும் நீங்கள் வென்றெடுப்பீர்கள்!

அல்லாஹ் கூறுகிறான் :

قال الله عز وجل : من عمل صالحا من ذكر او انثي وهو مؤمن فلنحيينه حياة طيبة ولنجزينه اجرهم باحسن ما كانوا يعملون

„ஆணாயினும் பெண்ணாயினும் எவர் இறைநம்பிக்கை கொண்டவராய் இருக்கும் நிலையில் நற்செயல் புரிகிறாரோ அவரை (இவ்வுலகில்) தூயவாழ்வு வாழச் செய்வோம். (மறுவுலகிலும்) அத்தகையயோருக்கு அவர்களின் உன்னதமான செயல்களுக்கு ஏற்ப நாம் கூலி வழங்குவோம்„ (16 : 97)

யா அல்லாஹ்! ஈமான் – நம்பிக்கையிலும் நற்செயல் பரிவதிலும் எங்களை உறுதியோடு இருக்கச் செய்வாயாக! தூய வாழ்வு கொண்டு எங்களை வாழச் செய்வாயாக! மேலும் உத்தமர்களின் குழுவில் எங்களைச் சேர்த்துவைப்பாயாக!

و الحمد لله رب العالمين و صلي الله وسلم علي نبينا محمد وعلي آله وصحبه أجمعين